17

வெளியீடு எண் 290.

திருஞானசம்பந்த சுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரத் திருப்பதிகங்கள்

(குறிப்புரைகளுடனும், படங்களுடனும்)

[முதல் திருமுறை]

தருமபுர ஆதீனம்.

உ

குருபாதம்

தருமபுர ஆதீனஸ்தாபகர்

# ஸ்ரீ-ல-ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

# குருபூஜை விழாமலர்

[ விஜய௵ வைகாசி௴ உக-ம் நாள் ]

3—6—53.



தருமபுர ஆதீன ஸ்தாபகர்

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்



நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய ஞானசம்பந்தர்

வெளியீடு எண் 290.

உ

திருச்சிற்றம்பலம்

திருஞானசம்பந்த சுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரத் திருப்பதிகங்கள்

## [ முதல் திருமுறை ]

திருக்கயிலாய பரம்பரைத்
தருமபுர ஆதீனம் 25-வது மகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய
சுவாமிகள் அவர்களின்

ஆணையின்வண்ணம் வெளியிடப்பெற்றது.

1953.



பதிப்பாசிரியர் :

ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள்

இராஜாங்கக் கட்டளை கட்டளை விசாரணை, திருவாரூர்.

குறிப்புரையாசிரியர் :

வித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர்.

தருமபுர ஆதீனக்கல்லூரித் துணைத்தலைவர்.

பதிப்பகம் :

ஞானசம்பந்தம் பிரஸ், தருமபுரம்.

# பொருளடக்கம்

உ

# மதிப்புரைகள்

செந்திலாண்டவன் துணை.

*திருப்பனந்தாள்,*

## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

திருமுறைகள் தெய்வமணங் கமழ்வன; அவை சிவத்தின் மேல் தெய்வம் வேறிலை என்ற உண்மையை விளக்குவன. பன்னிரண்டு திருமுறைகளுள் முதலேழும் வித்தகப்பாடல் முத்திறத்து அடியார்கள் அருளியவை. எங்கள் தருமபுர ஆதீன ஸ்தாபகர் ஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக மூர்த்திகள் "திருமுறைகள் ஓதாய்" என்று பணித்தருளினார்கள். உலகு எளிதில்ஓதி உணர்ந்து உய்தற்பொருட்டு எங்கள் குருஞானசம்பந்தர் வழி வழி எழுந்தருளியுள்ள ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் இத்திருமுறைகளைக் குறிப்புரையுடன் வெளியிட்டருளத் திருவுளம் பற்றியது "வேதநெறி தழைத்தோங்கவும்" "மிகு சைவத்துறை விளங்கவும்" செய்யும். இது திண்ணம். மக்கள் இத்தெய்வப்பனுவலைக் கற்று இத்திருமுறைவழி நின்றொழுகி உள நலமும், உடல் நலமும் பெறுவார்களாக!

வளர்க திருநெறிய தமிழ் !!

வாழ்க குருஞானசம்பந்தர் திருவருள் !!!

செந்திலாண்டவன் துணை

॥ श्री चन्द्रमौलीश्वराय नमः ॥

குடந்தை ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி

## ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகள் அவர்கள்

திருமுறைகளில் ஓரடியாவது தன் நாவினுல் நவிலாத தமிழன் தமிழுலகில் இரான். அவைகளின் பொருளை அறிய வேண்டும் என்னும் அவா ஒவ்வொருவன் உள்ளத்திலும் எழுவது இயற்கை. பக்குவமடைந்த பெரியோர்களோ, திருமுறைகள் எல்லாவற்றிற்கும் பொருள் ஏகமாய்ப் பொதுநடம்புரிகின்ற பெம்மானே எனத் தெளிந்து, எல்லா அவாக்களுமடங்கிய ஆனந்த நிலையில் நிற்பர். சொற்களுடையவும் வரிகளுடையவும் சிறப்புப் பொருள்களை அறிதற்கான அபக்குவிகளின் ஆவலைத்தணிவிக்க இதுகாறும் ஒருங்கே நூல்முகமாய் உதவி கிட்டிலது. நிகண்டுகளையும் ஆராய்ச்சிகளையும் கொண்டு அருள்வாக்குகளுக்குப் பொருளறிய முனையுங்கால், அவற்றின் உண்மைப் பொருள்களினின்று பிறழும் நிலை நேரிடக்கூடும் என்னும் சில பெரியோர்களின் கொள்கை உண்மையேயாயினும் அத்திருமுறைகளை மேலெழுக்காக நோக்குங் காலும், அவைகளில் பதிந்துகிடக்கின்ற சிறப்புப் பொருளாம் மாணிக்கங்களினின்று வெளிவீசும் ஒளிகளின் கொழுந்தையேனும் மக்கள் கண்குளிரக் காணும்படிச் செய்தாலன்றிச் சமயக் கல்வி முறை குன்றிவரும் இக்காலத்துச் சூழ்நிலையில், நமதிளைஞர்களுக்கு நமது அரியபெரிய அருள்வாக்குகளைச் சுவைக்கும் பேறே எட்டாததாகி விடுமோ என்ற அச்சத்தை அகற்ற, இக்காலை, பதிக வரலாறுகளுடனும், அரும்பத வுரையுடனும், பொதுக்கருத்துரையுடனும், கல்வெட்டுக்களின் விவரங்களடங்கிய தலங்களின் குறிப்புக்களுடனும், திருமுறைப் பதிகங்களின் ஒற்றுமைக்கருத்துக் கொண்ட புராண தலமான்மிய ஆராய்ச்சிக் குறிப்புக்களுடனும், தருமை ஆதீனத்தினின்றும் வெளிவரும் திருமுறைப் பதிப்பை மனமார வாழ்த்துகின்றேம்.

# முதல் திருமுறை தல அட்டவணை



தருமபுர ஆதீனம் 25-வது மகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

உ

குருபாதம்

# முகவுரை

---

கவிக்குத் தகுவன கண்ணுக் கினியன கேட்கில்இன்பஞ்
செவிக்குத் தகுவன சிந்தைக் குரியன பைந்தரள
நவிக்கட் சிறுமியர் முற்றில் முகந்துதஞ் சிற்றில்தொறுங்
குவிக்கத் திரைபரக் குங்கொச்சை நாதன் குரைகழலே.

—நம்பியாண்டார்நம்பி.

**உற்ற துணை:**

உலகம் இன்பதுன்பங்களுக்கும், ஒளியிருள்களுக்கும், புண்ணியபாவங்களுக்கும், அறிவு அறியாமைகளுக்கும் இருப்பிடம். இத்தகைய கலப்பான வாழ்வில் மக்கள் களிப்படைவதில்லை. தனித்த இன்பத்தை — ஒளியை — புண்ணியத்தை — அறிவை அவாவுகின்றனர். ஆனால் துன்பம் இன்றி இன்பமும், இருளின்றி ஒளியும், பாவமின்றிப் புண்ணியமும், அறியாமையின்றி அறிவும் சிறப்பதில்லை: சிந்தனைக்குப் புலப்படுவதும் இல்லை: அனுபவத்திற்குப் புலனாவதும் இல்லை ஆதலால் இரண்டுங்கலந்த வாழ்விலேயே உயர்ந்தது சிறக்கின்றது.

**ஏன் இரண்டுங்கலந்த வாழ்வு :**

இறைவன் பரம கருணாநிதி. மக்களனைவரும் 'என்றும் இன்பத்து இருக்கவேண்டும்' என்பதே அவர் திருவுள்ளம். அங்ஙனம் இருந்தும் இன்பமயமாக உலகைப் படைக்காமல்

கலந்த வாழ்வினதாய்ப்படைத்ததில் ஆழ்ந்த கருத்து இருத்தல் வேண்டும். அப்பரடிகள் நீற்றறையை நீரோடையாக அநுபவித்தது போல — பொன்னையும் போகத்தையும் பொய்மாயப் பேய்களாகக் கண்டதுபோல இன்பத்தையும் துன்பத்தையும் சமபுத்திபண்ணுந் தகுதி வரச்செய்ய வேண்டும் என்பதே அக்கருத்து. இத்தகுதி எம்மனோர்க்கு எளிதிற் கைவருவதன்று.

### ஞானிகள் காட்டிய நன்னெறி;

எல்லாரும் இருவினையொப்பு எளிதில் எய்துதற்குத் தோத்திர பாராயணத்தைக் கைக்கொள்ளலாம் என்றனர். தோத்திரங்கள் ஆன்மாக்களாகிய நமக்கு இறைவன் செய்த பரமோபகாரங்களைப் பலகாலும் சொல்லி, கருத்து ஊன்றச் செய்து மனத்தைக் கனியவைக்குங் கருவிகள். மனித மனத்தைத் தெய்வமனமாக்கும் மருந்து; கவலைமனத்தைக் களிப்புமனமாக்கும் குளிகை.

### தோத்திரங்களில் சிறந்தன எவை?

ஏதோ ஒவ்வொருகால் ஒன்றிய மனத்தோடு ஒரு மனிதன் புலமை நிலைமையினின்று புகன்றவற்றைக்காட்டிலும், உலகத்தைப் பண்படுத்துவதற்கென்றே திருவருள் வயத்தால் அவதரித்து, சிந்தையைச் சிவமாக்கி, திருவருளோடு வளர்ந்து, சென்ற சென்ற இடமெல்லாம் திருவருளைக் கண்டு, அது உள்நின்று உணர்த்த உரைக்கப்பெற்ற தோத்திரங்களே மிகமிக உயர்ந்தது என்பதில் ஐயமுண்டோ! ஆதலால், "எனதுரை தனதுரையாக" வந்த தோத்திரங்களாய்ச் சிறந்தன தேவார திருவாசகமாகிய பன்னிரு திருமுறைகளே. அவற்றுள் தேவாரம் என்ற சிறப்புப் பெயருக்குரியன முதல் ஏழு திருமுறைகள். அவற்றுள் முதல் மூன்று திருமுறைகள் திருஞானசம்பந்தப்பெருமான் அருளிச் செய்தவை.

திருஞானசம்பந்தப்பெருமான் அறிவாற்சிவனேயென்பது திண்ணம். அதிலும் முதிர்ந்து விளைந்த சிவபுண்ணிய மேலீட்டால் இளமையிலேயே சிவஞானம் கைவரப்பெற்ற செம்மல். ஆதலால், ஆண்டில் இளைஞரான இவர் திருவாயி லிருந்து தோன்றி முதிர்ந்து விளைந்த சுவையமுதம் முதன் மூன்று திருமுறைகள். அதிலும் திருவருட்பராசத்தி சிவஞானத்தின்னமுதம் குழைத்தருளி 'உண் அடிசில்' என ஊட்ட, உண்டவாய் புலர்வதற்கு முன்னே சிவஞானத்தோடு ஓட்டிவந்த பெருமையையுடையது 'தோடு' என்ற பாடலை முதற்கண் கொண்டுள்ள முதல் திருமுறை. பொதுவாகத் திருமுறைப்பாகுபாட்டில் பண்முறையெனவும் தலமுறை யெனவும் இருமுறை உண்டு. அவற்றுள் பண்முறையாவது பண் ஒற்றுமைபற்றிப் பாடல்களை வரிசைப்படுத்தியது. தலமுறையாவது கோயில் முதலாகத் தலங்களின் முறை பற்றிக் கோக்கப்பெற்றது.

**தலமுறை:**

நமது நாட்டில் சிவபூஜை செய்பவர்கள் தமது ஆன்மார்த்த மூர்த்தியோடு ஒவ்வொருநாளும் ஒவ்வொரு தலத்து மூர்த்தியையும் க்ஷணிகாதிலிங்கங்களில் ஆவாகனஞ் செய்து உடன்வைத்துப் பூசிப்பதும், அந்தந்தத் தலத்துப் பதிகத்தை அன்று பாராயணஞ் செய்வதும் பழக்கம். அதற் குத் தலமுறை மிக்க வசதியளிப்பதாகும்.

**பண்முறை:**

பண் என்பது பாடலின் ஒலி. 'பருந்தும் நிழலும் போலப் பாடலும் பண்ணும்' என்பது பண்டையோர் எடுத்துக் காட்டுரை. ஆகவே பண் என்பது பாடல் வகைகளுக்கும் அவற்றின் சீர் அமைப்புக்கும் ஏற்ப அமைவது. ஆதலால் திருப்பாடல்களைச் சீர் முதலிய யாப்பிலக்கண அமைதி கருதி

ஒருங்கு தொகுத்த பண்முறை தொன்றுதொட்டு வருவதாயிற்று. இந்தப்பண்முறையமைப்பை ஒட்டியே இப்பதிப்பு வெளிவருகிறது.

### பதிப்புக்கள்:

திருமுறையை முதன்முதல் பல ஏடுகளைத் தொகுத்தாராய்ந்து வெளிப்படுத்திய பெருமை திருஞானசம்பந்தம் பிள்ளை யென்னும் தீட்சாநாமம் பெற்ற மதுரை இராமசாமிப் பிள்ளையவர்களுடையது. இடையிலே செந்தில்வேல் முதலியார் போன்ற பல அறிஞர் இத்துறையில் முயன்று திருத்தமாய்ப் பதிப்பித்தனர். அண்மையில் யாழ்ப்பாணத்து வண்ணார் பண்ணை வித்வசிரோன்மணி சுவாமிநாதபண்டிதர் அவர்கள் பலநாட்டு ஏடுகளைத் தொகுத்து ஒப்புநோக்கிச் சிறந்த பாடம் காணப் பெரிதும் முயன்று, பாடபேதக் குறிப்புக்கள் பலவற்றுடன் வெளியிட்டார்கள். பின்னர், கயப்பாக்கம் சதாசிவச் செட்டியார் அவர்கள் திருத்தங்களுடன் கழகப்பதிப்பு வெளி வந்தது. இன்னும் பல பதிப்புக்கள் எத்தனைவந்தாலும் இன்னும் சிறந்த பாடம் காண வழியுண்டு என்று எண்ணத் தக்க வகையில் ஏடுகள் கிடைத்துவருகின்றன. அங்ஙனம் கிடைக்க, சில பாடல்களுக்குத் திருத்தமான பாடங்கள் இப் பதிப்பிலும் வாய்ந்தன. இவற்றையெல்லாம் சேர்த்து நல்லதொரு பதிப்பாக — அழகான பதிப்பாக ஆதீனச் சார்பாக வெளியிடவேண்டும் என்பது எங்கள் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானமவர்கள் திருவுள்ளக்குறிப்பு. பதிப்பழகு படிப்பவர்களின் மனத்தை மிகப்பிணிக்குமல்லவா?

### உரைக்குறிப்பும் வேண்டும்:

பலருக்கும் பயன்படக்கூடிய நிலையில் பொழிப்புரையும், தேவையான சொற்களுக்குக் குறிப்புரையும், செய்யுள் முடிபும், தொனிப்பொருள் நயப்பொருள்களும் எழுதினால்

நலம் என ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் ஆணை தந்தார்கள். அதனைக்கேட்டவுடன் அடியேன் திடுக்கிட்டேன். அருளாளப் பெருமக்களால் இயற்றப்பெற்ற திருமுறைகள் எங்கே! அடியேன் எங்கே! பாடலை அருளியவர் நிலையில் நம் சிந்தையும் உயர்ந்தாலல்லவா உண்மையுரைகாண இயலும்; அரசவேடந்தாங்கியவன் அரசபாவனையில் நிலைத்து நின்றால் அல்லவா பிறர்மனங்கவர நடிக்க இயலும்? என்ற எண்ணங்கள் அடியேன் மனத்துப் படிப்படியாக எழுந்தன. அப்போது நாடகம் பார்க்கவந்த பலருடைய பாவனை நடிப்பவனிடம் சென்று தைக்க அவனும் உண்மையரசனாகி உள்ளங்களிக்க நடிக்கவில்லையா? என்ற சிந்தனை பிறந்தது. சிந்தனை "இரும்பிரத குளிகையினால்" என்ற சித்தியார் திருவிருத்தத்தை நினைவிற்குக் கொண்டுவந்தது. இருபத்தைந்தாவது குருஞானசம்பந்த சுவாமிகள் ஆணை இப்பணியில் அடியேனை ஆட்கொள்ளுகின்றது; அவர்களுடைய பாவனையால் இதற்கேற்ற அருட்பதிவு எளியேனிடமும் உண்டாகும் என்ற உறுதி பிறந்தது. அதனை நிறைவேற்றிக்கொள்ளக் காழிப் பிள்ளை கழலடியையும் பணிந்தேன். அத்தலத்திலேயே "தோடுடைய செவியன்" என்ற முதற்பாடலுக்கு உரை எழுதத் தொடங்கினேன்.

**உரையமைதி :**

சைவத்திற்குத் தேவாரத்திருமுறைகள்போல வைணவத்திற்குரிய மனம் உருக்கும் நூல்கள் திவ்யப்பிரபந்தங்கள். அவற்றிற்குப் பெரியவாச்சான்பிள்ளைபோன்ற வியாக்யானக்காரர்கள் எவ்வளவு முயன்று எத்துணைச் சுவைபட்ட பேருரையைத் தோற்றுவித்திருக்கின்றார்கள். எத்தனையோ இடங்களில் திருப்பாடற்போக்கு, அமைதி, சொல்லாட்சி, சொற்றொடர் ஆட்சி, பொருளாட்சி முதலியன அப்படி அப்படி அமைந்திருக்கின்றனவே. அவற்றையும் ஒத்துநோக்கி எழுதினால் ஏற்புடையதாகுமே என்றஎண்ணம் எழுந்தது. அருளால் அங்ஙனமே இது அமைவதாயிற்று.

**பிற சிறப்புக்கள் :**

ஒவ்வொரு பதிகத்தின் தொடக்கத்திலும், தெய்வச் சேக்கிழார்பெருமான் தெரிவித்த நெறியில் பதிகம் எழுந்த வரலாற்றுமுறை விளக்கப்பெற்றுள்ளன. செந்தில்நாத அய்யர் அவர்கள் எழுதிய தேவார வேதசாரத்தைத் துணையாகக் கொண்டு வேத, உபநிடத, புராணங்களிலிருந்து ஒப்புமைப் பகுதிகள் தேவையான இடங்களில் தரப்பெற்றுள்ளன. சிவஞானபோத மாபாடியத்திலும், வெள்ளியம்பலவாண மாபாடியத்திலும் முதற்றிருமுறைப் பாடல் சிலவற்றிற்கு எழுதிய உரைக்குறிப்புக்களை ஒட்டி அங்கங்கே குறிப்புக்கள் தரப்பெற்றுள்ளன. இங்ஙனம் இவ்வுரை இனிது நிறை வேறியது. முதற்றிருமுறைப் பதிப்பு முற்றுப்பெற்றது. ஏகபாதம் எழுகூற்றிருக்கை முதலியவற்றிற்குப் பழையஉரை அப்படியே எடுத்துக்கொள்ளப்பெற்றது.

**முற்சேர்க்கை :**

இதன் தொடர்புரையாக நூலின் தொடக்கத்தில் தலங்களைப்பற்றிய புராணவரலாறுகளும், மூர்த்தி தலம் தீர்த்தம் மடம் விருட்சம் இவற்றின் பெயர்களும், சிறப்புக்களும், வழிபட்டு நலம்பெற்றோர் வரலாறுகளும் சேர்க்கப்பெற்றுள்ளன. சிறப்பாக, நமது தமிழ் மன்னர்களுடைய தெய்வ பக்தி, திருமுறையன்பு, திருமுறை ஆசிரியர்களிடம் இவர்களுக்குள்ள இணையீடற்ற பக்தி, ஆட்சிச் சிறப்பு, வெற்றி, தோல்வி முதலிய வரலாற்றுக் குறிப்புக்கள், தானச்சிறப்பு இவற்றைக்காட்டும் கல்வெட்டுக் குறிப்புக்களும் சேர்க்கப் பெற்றுள்ளன. இவற்றால் நமது சிவாலயங்களின் தொன்மையையும், நமது தமிழ்மக்கள் தெய்வபக்தியைத் துணைக் கொண்டே தமது புகழையும், வாழ்வையும் வளர்த்துவந்தமையையும் அறியலாம்.

இவ்வண்ணம் இவ்வெளியீடு இத்துணைச்சிறப்புக்களுடன் வெளிவர உறுதுணையாயிருந்தவை, நித்யபாராயணஞ்செய்து வரும் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் தந்த சில நயமான குறிப்புக்களும், ஊக்கவுரையுமே என்பது உறுதி. ஆதலால் தெய்வத்தமிழ் நூல்களை ஒவ்வொரு தமிழ்மக்கள் கரத்திலும் விளங்கச்செய்யவேண்டும் என்ற பெருநோக்குடைய ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களுக்கு அடியேன் "ஆளாய் இனி யல்லேன் எனலாமே!"

அடியேனுடைய எளிய குறிப்புக்களையும் திருக்கண் ணோக்கிச் சிறப்பித்து நல்லாசி வழங்கியருளிய செந்தமிழ் வளர்க்கும் செம்மல் ஸ்ரீகாசிமடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் திருவடி கட்கும், குடந்தை ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீமத் சங்கராச்சாரிய சுவாமிகள் அவர்கள் திருவடிகட்கும் அடியேன் வணக்கம் உரியதாகுக.

இப்பதிப்பு அழகாக வெளிவர ஒப்புநோக்குதல் முதலிய காரியங்களில் முயற்சியுடன் ஒத்துழைத்த புலவர், முத்து. சு. மாணிக்கவாசக முதலியார், வித்துவான் M. ஆறுமுக தேசிகர், வித்துவான் V. S. குருசாமி, வித்துவான் S. திருஞான சம்பந்தன் இவர்கட்கும் என்நன்றி உரித்தாகுக.

இவ்வெளியீட்டிற்கு வேண்டிய சீகாழி, திருவையாறு படங்களைத்தந்த ஆனந்தவிகடன் காரியாலயத்திற்கு நன்றி.

கல்வெட்டுக் குறிப்புக்களில் சிலவற்றைத் தொகுக்க வழி காட்டி உதவிசெய்த அண்ணாமலைப் பல்கலைக்கழக ஆராய்ச்சி விரிவுரையாளர் தி. வி. சதாசிவ பண்டாரத்தார் அவர்கட்கு மிக்க நன்றியுடையனாவேன்.

இங்ஙனம் எல்லாவகையிலும் இவ்வெளியீடு நன்றும் வண்ணம் திருவருள்பாலித்த ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் திருவடிகளை மனமொழிமெய்களால் என்றும் வணங்குவேன்.

குற்றங்களைந்து குணம்பெய்து அடியேனை ஆசீர்வதிக்கச் செந்தமிழ்ப் பேரறிஞர்களை வேண்டிக்கொள்கிறேன்.

பிறவினனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத்
துறவியெனுந் தோற்றோணி கண்டீர்—நிறையுலகில்
பொன்மாலை மார்பன் புனற்காழிச் சம்பந்தன்
தன்மாலை ஞானத் தமிழ்.

தருமபுரம்,
3—4—'53.

வித்துவான், ச. தண்டபாணி தேசிகர்,
துணைத்தலைவர்.
தருமபுர ஆதீனப் பல்கலைக் கல்லூரி.



சீகாழி, ஸ்ரீ தோணியப்பர் விமானம்.

திருத்தோணிபுரத்தில் :




'அலையும் பெருவெள்ளத்து அன்றுமிதந்த தோணிபுரம்.'

உ

குருபாதம்

## முதல் திருமுறையில் வந்துள்ள

# தலங்களின் குறிப்புக்கள்

### 1. சீகாழி

**தலம் :**

*பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், புறவம், சண்பை, காளிபுரம், கொச்சைவயம், கழுமலம், சிரபுரம் என்ற பன்னிரண்டு திருநாமங்களையுடையது. இவற்றின் பெயர்க்காரணங்களைப் பதிகம் அறுபத்துமூன்றில் திருஞானசம்பந்த சுவாமிகளே எடுத்து விளக்கியுள்ளார்கள். அது 'பல்பெயர்ப்பத்து' என அமைக்கப்பட்டுள்ளது. திருக்கழுமல மும்மணிக்கோவையுள் 'வசையில் காட்சி' என்னும் செய்யுளில் இப்பன்னிரண்டு பெயர்களும் பன்னிருயுகத்தில் வழங்கினவாகப் பட்டினத்தடிகளால் உணர்த்தப்பெறுகின்றது. இவையன்றி, சங்கநிதிபுரம் முதலாகப் பதினன்கு பெயர்களும் உள்ளனவாகத் தலபுராணம் சொல்லும்.*

**விசேடங்கள் :**

*புறவாழிக் கடல் பொங்கி எழுந்த பேரூழிக்காலத்தில் இறைவன் அறுபத்துநான்கு கலைகளையும் ஆடையாக உடுத்துப் பிரணவத்தோணியில் அம்மையப்பனுக எழுந்தருளி வரும்போது ஊழியிலுமழியாத இத்தலத்தைக்கண்டு இதுவே மூலமென் றெண்ணித் தங்கினர்.*

இங்கே ஒரு மலை உண்டு. இது இறைவன் ரோமச முனிவருக்காகத் திருக்கயிலைச் சிகரமொன்றைத் தென்திசையில் தோற்றுவித்து, தானும் அம்மையுமாக இருந்து காட்சி வழங்கும் இடம். இதனை 'இருபது பறவைகள் ஏந்திக்கொண்டிருக்கின்றன'. இங்கே குரு, லிங்க, சங்கமமாகிய மூன்று திருமேனியையும் வழிபடலாம். குருமூர்த்தம் தோணியப்பர்; இலிங்கமூர்த்தம் பிரமபுரீசர்; சங்கமமூர்த்தம் சட்டைநாதர். இதுவே திருஞானசம்பந்தப்பெருமான் அவதாரஸ்தலம்.

**சுவாமிகளின் பெயர்கள்:**

சுவாமி பிரமபுரீசுவரர்; அம்மை திருநிலைநாயகி. சுவாமி அம்மன் கோயில்களுக்கிடையில் ஞானசம்பந்தர் ஆலயம் இருப்பது சோமாஸ்கந்தர் நிலையை நினைவூட்டுவது. திருத்தோணிச் சிகரத்துள்ள இறைவர் பெரியநாயகர்; தோணியப்பர் எனவும் வழங்கப்பெறுவர். இறைவி பெரியநாயகி; திருஞானசம்பந்தப் பெருமானுக்குச் சிவஞானப்பால் அளித்தவர் இவரே.

**தீர்த்தங்கள்:**

பிரமதீர்த்தம், காளிதீர்த்தம், கழுமலநதி, விநாயகநதி, புறவநதி முதலிய இருபத்திரண்டு தீர்த்தங்கள் உள்ளன.

**வழிபட்டோர்:**

முருகன், காளி, பிரமன், இந்திரன் முதலியோர்.

**விழாக்கள்:**

ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் அர்த்தயாமத்தில் விசேஷ வழிபாடு நடைபெறும். சித்திரைமாதம் பெருவிழா நடைபெறும். அதில் இரண்டாந்திருநாள் திருமுலைப்பால் திருவிழா. இவ் விழாக்களிற் பெரும்பாலன திருஞானசம்பந்தர் ஐதீகத்தை ஒட்டினவேயாம்.

**இடம்:**

மாயூரம் சென்னைப்பாதையில் உள்ள ஒரு புகைவண்டி நிலயம். தாலூகாவின் தலைநகரம்.

**கல்வெட்டுக்கள் :**

இத்தலத்துக்கு நாற்பத்தேழு கல்வெட்டுக்கள் உள்ளன. அவை இரண்டாங்குலோத்துங்கன் கல்வெட்டுமுதல் வேங்கட தேவராயர் கல்வெட்டுவரையில் பதின்மூன்றுக்கு மேற்பட்ட அரசர் பெருமக்களுடையனவாகக் காணப்படுகின்றன.

இக்கல்வெட்டுக்களால், இத்தலம் இராஜராஜவளநாட்டுத் திருக்கழுமலநாட்டுப் பிரமதேயம் திருக்கழுமலம் என்று பிரிவும் பெயரும் குறிக்கப்பெறுகின்றது. பிரமபுரீசுவரர் திருக்கழுமல முடையார், திருக்கழுமலமுடைய நாயனுர் என்றும், தோணி யப்பரும் அம்மையும் திருத்தோணிபுரமுடையார், பெரிய நாச்சியார் என்றும், சம்பந்தப்பெருமான் ஆளுடையபிள்ளையார் என்றும் குறிக்கப்பெறுகின்றுர்கள்.

ஆளுடையபிள்ளையார் கோயிலில் ஆளுடையபிள்ளையார் வடிவத்தை எழுந்தருளச்செய்தவள் மூன்றுங்குலோத்துங்க னுடைய அடுக்களைப் பெண்டுகளிலே மூத்தவள் இராஜ விச்சாதரி என்பாள் என்பது குறிக்கப்பெற்றுள்ளது. இரண் டாம் இராஜராஜனது கல்வெட்டு, கங்கைகொண்ட சோழ புரத்தாஞெருவன் ஆளுடையபிள்ளையார் திருக்கோயில் முதற் பிராகாரம் திருமதில் எடுக்கப் பொன்கொடுத்தான் என்கின்றது. கல்வெட்டொன்றில் திருநட்டப்பெருமான் ஆளுடையபிள்ளை யார் என வருவது சுட்டுவிரல் நீட்டிக் கூத்தாடுகின்ற குழந்தை யாகிய ஞானசம்பந்தரைக் குறிப்பதாகலாம். பொத்தப்பிச் சோழன் என்பவன் வீரபாண்டியனைவென்று வெற்றிப்பரிசாக அங்கிருந்து நடராஜப்பெருமானைக் கொண்டுவந்து சீகாழியில் கொடுத்தான் எனத் தெரிகிறது. இங்கு, பொன்கொடுத்தும், நிலம்விட்டும் போற்றிய அரசர்கள் வீரராஜேந்திரன், குலோத் துங்கன் II, இராஜராஜன் II, இராஜாதிராஜன் II, குலோத் துங்கன் III, இராஜராஜன் III, கோப்பெருஞ்சிங்கன் III, வீரவிருப்பணமுடையான், வேங்கடதேவராயர், இராமப்ப நாயக்கன், ஆறனூர் இணைச்சியப்ப அகரவல்லவன், விட்டல தேவன் முதலியோராவர்.

## 2. திருப்புகலூர்

**தலம் :**

புன்னாகவனம், சரண்யபுரம், ரத்தாரண்யம் என்பன புராணங்களில் வழங்கும் மறுபெயர்கள். இத்தலத்தின் திருக் கோயில் நாற்புறமும் அகழிசூழ நடுவில் இருக்கிறது. அக்னி பகவான் பூசித்துப் பேறுபெற்ற தலம். திருநாவுக்கரசர் முத்தி பெற்ற தலம். முருக நாயனாருடைய அவதார ஸ்தலம். சுந்தர மூர்த்தி நாயனாருக்குச் செங்கல்லைப் பொன்னாக்கிய திருத்தலம். மேகங்கள் பூசித்த தலம்.

**பெயர்கள் :**

இறைவன் பெயர் அக்னிபுரீஸ்வரர்; இறைவி கருந்தாள் குழலியம்மை. இறைவன் திருநாமம் தேவாரங்களில் 'கோணப் பிரானைக் குறுகக் குறுகா கொடுவினையே' 'கருந்தாள் குழலி யும் தாமும் கலந்து' என்பன அம்மையப்பர், திருநாமங்களை அறிவிக்கும் அகச்சான்றுகள்.

**தீர்த்தம் :**

அக்னி தீர்த்தம். இதற்குப் பாணதீர்த்தம் என்றும் ஒரு பெயருண்டு. முடிகொண்டான் ஆறு கோயிலுக்குத் தென்பக் கத்தில் ஓடுகிறது.

**தல விருட்சம் :**

புன்னை. 'புன்னைப் பொழிற்புகலூர்', 'புன்னாகம் மணங் கமழும் பூம்புகலூர்' என்ற திருமுறைகள் இதற்கு மேற்கோள்.

**விழா :**

சித்திரைச் சதயத்தைப் பத்தாம் நாளாகக்கொண்டு விழா நடைபெறுகிறது. பத்துநாளிலும் அப்பர் சுவாமிகளை ஒட்டிய ஐதீகமே நினைவூட்டப்படுகின்றது. வைகாசி மாதம் பருவ இறுதி யாகப் பிரமோற்சவம் நடைபெறுகிறது. சந்திரசேகரர் விசேஷ மான மூர்த்தி.

**இடம்:**

நன்னிலம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து 3½ மைல் கிழக்கே உள்ளது.

**கல்வெட்டுக்கள்:**

அரசாங்கத்தினர் படி எடுத்த கல்வெட்டுக்கள் 67. அவை இராஜராஜன் I (கி. பி. 985—1014) காலத்திலிருந்து காணப் படுகின்றன. இரண்டாம் பிராகாரம் இராஜராசன் I இராஜ ராஜேந்திரன் I இவர்கள் காலத்திற்குப் பிந்தியதாகும். இக் கோயில் அர்த்தமண்டபத்தைக் கட்டியவன் இறையூர் உடை யான் அரையன் கங்கைகொண்டானை சோழ விச்சாதரப் பல்லவரையன். முதல் பிராகாரத்துத் தென்னங் திருவாயிலுக்கு ராஜராஜன் திருவாசல் என்று பெயர். கற்பக்கிருகத்தைச் சுற்றி யுள்ள நீராழிப் பத்தி மண்டபத்தைத் திருப்பணி செய்தவன் ஆர்க்காடு கிழான் சேதுராயன் என்பவன். இத்தலத்து 'நரலோக வீரன் திருமண்டபம்' என்ற ஒன்று இருந்ததாக ஒரு கல்வெட் டுக் கூறுகின்றது. சிதம்பரம் கோயில் கல்வெட்டில் நரலோகன் என்று கூறப்பட்டவன் கோப்பெருஞ்சிங்கன். அக்காலத்து நூற்றுக்கால் மண்டபம் அவனால் கட்டப்பெற்றது. அதுபோல இத்தலத்தும் நூற்றுக்கால்மண்டபத்தை அவன் கட்டி வைத் திருக்கக்கூடும். திருமதில் திருப்பணி வேளாக்குறிச்சி மகாதேவ பண்டாரத்தின் சிஷ்யரான அருணாசலத் தம்பிரானால் செய்யப் பெற்றது. மூன்றாம் குலோத்துங்கன் காலத்திலும் இக்கோயில் அகழால் சூழப்பட்டிருந்தமை அறியலாம்.

இவ்வூர், முதல்ராசராசன்காலத்தில் க்ஷத்திரியசிகாமணி வளநாடு என்றும், மும்முடிச்சோழ வளநாடு என்றும் முதற் குலோத்துங்கன் காலத்திலும் அதற்குப்பின்பும், குலோத்துங்க சோழவளநாட்டைச் சார்ந்ததெனவும் கூறப்படுகிறது. இது பனையூர் நாட்டுப் பிரமதேயமான திருப்புகலூர் என வழங்கப் பெறுகிறது. இறைவன் கோணப்பெருமான் என்று குறிப்பிடப் படுகிறார். இங்குள்ள அம்பிகை நம்பிராட்டியார் என வழங்கப் படுகிறார். இராஜராஜன் காலத்தில் அம்மைக்கு நிவந்தங்கள் அளிக்கப்பெற்றன. திருநாவுக்கரசு நாயனார் குளிச்செழுந்த நாயனார் எனக் குறிக்கப்படுகிறார். இவருக்கு இராஜராஜன்

காலத்தில் நித்தியபூசைக்கு ஏற்பாடு செய்யப்பெற்றிருக்கிறது. முருகநாயனார் திருமடம் நம்பிநாயனார் திருமடம் என்றும், திருநீலகண்ட யாழ்ப்பாணரைத் தருமபுரத்து நாயனார், யாழ்மூரி நாயனார் என்றும், திருநீலநக்க நாயனாரை நக்கநாயனார் என்றும் கல்வெட்டுக்கள் காட்டுகின்றன.

## 3. திருவலிதாயம்

### தலம் :

இத்தலம் பாடி என இன்று வழங்குகிறது. பாரத்வாஜ மகரிஷி, வியாழன், அநுமான் இவர்கள் வழிபட்டு முத்தி பெற்றதாகத் தலபுராணம் கூறும். சுவாமி பெயர் வலிதாய நாதர்; அம்மை பெயர் தாயம்மை; இங்கேயுள்ள கிணற்று நீர் மிகச் சுவையானது.

### கல்வெட்டுக்கள் :

இத்தலத்தைப் பற்றிய கல்வெட்டுக்கள் 14 உள்ளன. அவற்றில் சுவாமி பெயர் திருவலிதாயமுடைய நாயனார் என வழங்கப்பெறுகிறது. அம்மை பெயர் திருவீதி நாச்சியார் என்பது.[1] இன்ன அரசர் காலத்தது என்று அறியப் பெறாத கல்வெட்டு ஒன்று, திருவெண்காட்டிலிருந்து அழகிய திருச்சிற்றம்பல முடைய நாயனாரை எழுந்தருள்வித்துப் பிரதிஷ்டைசெய்து, அதனைப்பூசிக்க, அந்தணரையும் அங்கிருந்து குடியேற்றி, அவர்களுக்கும் உணவுக்காக ஜயங்கொண்ட சோழமண்டலத்து, புலியூர்க்கோட்டமான சங்கமசோழவள நாட்டு அம்பத்தூர் நாட்டு திருவலிதாயத்தில் நிலம் விட்டதாகக் கூறுகிறது.[2] அதுவும் திருஞானசம்பந்த நாழி என்னும் மரக்காலால் நெல்அளந்துகொடுக்க எழுதியுள்ளது. திரிபுவன சக்ரவர்த்தியான ராஜராஜசோழன் தமது ஆட்சி 28ம் ஆண்டில் க்ஷேத்ரபாலப் பிள்ளையார் கோயிலையும் கட்டி, நிவேதனத்திற்காக நிலமும் விட்டான்.[3] விஜயகண்ட கோபால தேவர் என்பவர் காஞ்சிபுரத்திலிருந்து நடனமாதரைக்

---

1 217 of 1910. 2 214 of 1910. 3 216 of 1910.

கொண்டுவந்து குடியேற்றினர். சுவாமிக்கும் அம்மை திருவீழி நாச்சியாருக்கும் ஆபரணங்களும், பாத்திரங்களும் வழங்கினர்.[1] ராஜராஜன் காலத்தில் சாளுக்கியநாரணன் யாதவராயன் என்பவனால் பாடியைச் சேர்ந்த சிந்தாமணிபுரம் என்னும் இடத்தில் இருவீடுகளும் இரு நந்தவனங்களும் வழங்கப்பட்டன. பரமேஸ்வரமங்கலத்துச் சிலம்பூர்கோட்டத்துச் சிலம் பணிந்தான் மாதவராயனால் விளக்கிற்குப்பொன் வழங்கப்பெற்ற செய்தியும் அறியலாகும்.[2] இவையன்றி, விளக்கு உணவு முதலியவற்றிற்கு நிலமும் காசும் அளித்ததாக ஏனைய கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

## 4. திருவீழிமிழலை

இத்தலம் காத்தியாயன மகரிஷியின் யாகத்தில் தோன்றிய உமாதேவியாரைத் திருமணம் செய்துகொண்டு இறைவன் என்றும் மணக் கோலத்தோடும் இருக்கும்தலம். திருமால் சக்கரம் பெறும்பொருட்டு, நாள் தோறும் ஆயிரம் தாமரைப் பூவைக்கொண்டு அர்ச்சிக்க, ஒருநாள் ஒருமலர்குறைய; அதற்காகத் தமது தாமரைமலர்போன்ற கண்ணைப் பிடுங்கி அர்ச்சித்துச் சக்கரம் பெற்றதலம். திருநாவுக்கரசு சுவாமிகளும் திருஞானசம்பந்த சுவாமிகளும் படிக்காசுபெற்றுப் பஞ்சம் போக்கியதலம். இத்தலத்து வடக்குவீதியில் அப்பர் சம்பந்தர் திருமடங்கள் தனித்தனியே இருக்கின்றன.

**விமானம் :**

விண்ணிழி விமானம், இது விஷ்ணுவால் தாபிக்கப் பெற்றது. மூலத்தானத்துக்குப் பின் பார்வதி பரமேசுவரரது திரு உருவங்கள் உள்ளன. இங்குக் காழிக்கோலத்தைச் சம்பந்த மூர்த்திக்கு இறைவன் காட்டியருளினர்.

**விழா :**

மணக்கோலத்திருவிழா இங்கு சிறப்பாக நடைபெறுகிறது. மணவாளப் பெருமான் திருவடியில் திருமால் கண்ணைப்பறித்து

---

[1] 217 of 1910, [2] 218, 219 of 1910.

அர்ச்சித்த அடையாளம் இன்றும் இருக்கிறது. சுவாமி பெயர் நேத்திரார்ப்பணேசர்; வீழியழகர் எனவும் வழங்கப்பெறுவர். அம்மை சுந்தரகுசாம்பிகை.

**தீர்த்தம் :** விஷ்ணு தீர்த்தம்.

**தலவிருட்சம் :** வீழிச்செடி.

**கல்வெட்டுக்கள் :**

இத்தலத்திலுள்ள கல்வெட்டுக்கள் 68. வீழிமிழலை என்றே இத்தலம் வழங்கப்பெறுகின்றது. முதற் குலோத்துங்கன் காலத்து உலகுய்யக்கொண்ட சோழவளநாட்டுவேணுட்டுப்பிரம தேயம் திருவீழிமிழலை என வழங்கியது. சுவாமி பெயர் வீழிநாதர், வீழிமிழலைநாதர் என்பன. கோயில் பிராகாரத்தில் சிலரால் பிரதிட்டை செய்யப்பெற்ற நின்றருளிய நாயனர், நெறிவார்குழலி நாச்சியார், திருவேட்டீஸ்வரமுடைய மகா தேவர், திருவேகம்பமுடையார்[1] பார்வதீஸ்வரமுடையார்[2], திருத் தண்டூன்றிய மகாதேவர்[3] கோயில்களும் பிரதிட்டிக்கப்பெற்ற இடங்களும் குறிக்கப்பெறுகின்றன. அம்மை காமக்கோட்டம் உடைய நாச்சியார் என்று அழைக்கப்பெறுகிருர்.

திருஞான சம்பந்தருக்கும், திருநாவுக்கரசருக்கும், மாணிக்க வாசகருக்கும் தனித்தனி ஆலயங்கள் அமைந்திருந்தன. முன் னிருவருடைய மடங்களும் வடக்குவீதியில் இருந்தன என்பதும் அறியக்கிடக்கின்றன.[4]

ஆதித்தன் மகனுகிய முதற்பராந்தகன் காலத்திலிருந்து பதி ெனுரு சோழமன்னர்களின் காலத்துக்கல்வெட்டுக்களும், சடா வர்மன் சுந்தரபாண்டியன், வீரபாண்டியதேவன் கல்வெட்டுக் களும் விஜயநகர பரம்பரையைச்சேர்ந்த விருப்பண்ண உடை யார் கல்வெட்டு ஒன்றும், பெயரறியப்பெருதன பதினொன்கு மாக அறுபத்தெட்டுக் கல்வெட்டுக்கள் உள்ளன. அவற்றுள் ராஜேந்திர சோழன் திருவீழிமிழலை வடக்கு வீதியிலுள்ள

---

[1] *417* of *1908*, [2] *418* of *1908*, [3] *436* of *1908*. [4] *392* of *1928*.

திருமயிலாடுதுறை :



ஸ்ரீ மாயூரநாதர் ஆலயம்.

(முன்கோபுரம்)

—பக்கம் - ருஉ.

திருநின்றியூர் :



ஸ்ரீ லக்ஷ்மிபுரீசுவரர் ஆலயம்.

—பக்கம் - ருக.

திருமருகலில் :




விடந்தீர்த்தது.

திருநாவுக்கரசர் திருமடத்திற்கு நிலம்விட்ட செய்தி அறியப் படுகிறது [1]. மூன்றும் ராஜராஜன் திருவீழிமிழலைக் கோயில் மூன்றும் பிராகாரத்தில் திருவாதவூரர் மாணிக்கவாசகர் படிமத்தைப் பிரதிஷ்டைசெய்தான் [2]. சடாவன்மன் சுந்தரபாண்டிய தேவன் திருக்கை கொட்டித் திருப்பதியம் விண்ணப்பிக்க ஏற்பாடுசெய்தான் [3]. முதல் ராஜராஜசோழன் காலத்தில் ஐப்பசி ஓணத்திருவிழா தரிசனத்திற்காகவரும் அன்பர்களுக்கு அன்னம் வழங்கக் காசு அளிக்கப்பட்ட செய்தியும் இவ்விழா மிகச் சிறப்பாக நடைபெற்றமையும் அறிவிக்கும் [4]. முதற் குலோத்துங்கன் தமது ஆட்சி முப்பத்துநான்காம் ஆண்டில் சண்டேஸ்வரப் பிரதிஷ்டை செய்வித்து நித்தியபூசைக்கு ஏற்பாடுசெய்தான் [5]. சிறந்த செய்தியொன்று வாணியின் பாதனை அரிகுலகேசரி விழுப்பரையனால் 'ஸ்ரீ காலகாலன்' என்னும் வாள் வீழிமிழலை நாதர்க்கு வழங்கப்பெற்றது [6].

மாப்பிள்ளைச்சாமி எனப்பெறும் மணவாளத் திருக்கோலப் பெருமான் அழகிய மணவாளப்பெருமான் என்று குறிக்கப் பெறுகின்றார். இந்த மூர்த்தியையும், இராஜேந்திர சோழ அணுக்கப் பல்லவரையர் புதுக்கிப் பிரதிட்டை செய்ததாகத் தெரிகிறது. [7]

## 5. கீழைத்திருக்காட்டுப்பள்ளி

விருத்திராசுரனைக் கொன்ற பழி நீங்கத் தேவேந்திரன் பூசித்துத் தேவலோக ஆட்சியை மீண்டும் பெற்றதலம். இதனை 'இமையோர் பெருமான் நுண்ணறிவால் வழிபாடுசெய்யும்' என இப்பதிகம் நான்காம் பாடல் தெரிவிக்கின்றது. நண்டு பூசித்த விநாயகர் சந்நிதி இருக்கிறது. சுவாமி பெயர் ஆரணியசுந்தரர்; இறைவி பெயர் அகிலாண்டநாயகி. தீர்த்தம் காவிரி.

இந்தத் தலம் திருவெண்காட்டிலிருந்து மேற்கே ஒருகல் தொலைவில் இருக்கின்றது. இத்தலத்தைப்பற்றிக் கல்வெட்டு ஒன்றும் இருப்பதாக அறியக்கூடவில்லை.

---

[1] 402 of 1908, [2] 409 of 1908, [3] 414 of 1908, [4] 422 of 1908, [5] 427 of 1908, [6] 438 of 1908, [7] 444 of 1908.

# 6. திருமருகல்

**தலம் :**

மருகல் என்பது ஒருவகைவாழை. இது கல்வாழையெனவும் வழங்குகின்றது. கருங்கல்தளத்திலேயேவளர்வதால் இப்பெயர்த் தாயிற்று என்கின்றார்கள். அதன் பழத்தை இறைவனுக்கு நிவேதிக்கலாமேயன்றி மக்கள் உண்ணல் ஆகாது; உண்டால் வயிற்றுநோயுண்டாகும் என்பது அவ்வூர்மக்கள் வாய்மொழி. ஆனால் எப்போதும் காய் இருக்குமாம். இந்த வாழை தலவிருட்ச மாதலின் இத்தலத்திற்கு இப்பெயர் வந்தது. கோச்செங்கட் சோழநாயனார் எழுப்பிய எழுபது மாடக்கோயில்களில் இதுவும் ஒன்று. யானையேறாப் பெருங்கோயில்.

பாண்டியநாட்டு வணிகனாகிய தாமன் என்பவன் தன் மக்கள் எழுவரில் ஒருத்தியைத் தன்மருமகனுக்குக் கொடுப்பதாக வாக்களித்தும், அவர்களுக்குப் பருவம்வந்தகாலத்துஒவ்வொருத்தி யாகப் பிறருக்கு மணம் செய்துகொடுத்தே வந்தான். அதனை உணர்ந்த ஏழாமவள் தாய்தந்தையர் அறியாமல் தன் நன்மாம னோடு உடன் போக்கு நிகழ்த்தினாள்; திருமருகலையடைந்து ஒரு திருமடத்தில் இராத்தங்கினாள், அன்றிரவு அந்தச்செட்டிக் குமரனை வினைவயத்தால் பாம்புதீண்டியது. அவன் இறந்தான். அவள் இறைவனைநோக்கி முறையிட்டுப் புலம்பினாள். சுவாமி தரிசனத்திற்காகவந்த திருஞானசம்பந்த சுவாமிகள் திரு உள்ளத்தை இவள் அழுகை ஒலி அருள்சுரக்கச் செய்தது. சுவாமிகள் திருப்பதிகம்பாடி அவனை எழுப்பித்தந்து தம் திருமுன்பே அவர்களுக்குத் திருமணம் முடிப்பித்தனர் என்பது இத்தலத்தைப்பற்றிய சிறந்த நிகழ்ச்சி.

இறைவன் மாணிக்கவண்ணர். இறைவி வண்டுவார்குழலி. ஸ்தலவிருட்சம் வாழை. தீர்த்தம் மாணிக்க தீர்த்தம். இது கோயில் சந்நிதியிலேயே இருக்கிறது. கிழக்குப்பார்த்த சந்நிதி. அம்மன் சந்நிதிக்கு எதிரில் விஷந்தீர்த்த பிள்ளையார்கோயில் இருக்கிறது.

**இடம் :**

நன்னிலம் ரயில்வேஸ்டேஷனிலிருந்து கிழக்கே நான்கு மைல் தூரமுள்ள திருப்புகலூரையடைந்து, அங்கிருந்து மட்சாலை வழியாகக் கிழக்கே மூன்று மைல் சென்றால் இத்தலத்தை யடையலாம்.

**கல்வெட்டு :** அறியக்கூடவில்லை.

## 7. திருச்செங்காட்டங்குடி

**தலம் :**

விநாயகப்பெருமான் கஜமுகாசுரனைக் கொன்றகாலத்து அவன் உடலினின்றும் பெருகிய இரத்தவெள்ளத்தால் இவ்விடம் முழுதும் செந்நிறமாயிற்று. ஆதலால் இத்தலம் செங்காடு, செங்காட்டங்குடி எனப் பெயர்பெற்றது. விநாயகப்பெருமான் கயமுகனைக்கொன்ற கறை நீங்கச் சிவலிங்கப்பெருமானைத் தாபித்து வழிபட்டார். அதனால் 'கணபதீச்சரம்' எனத் திருக் கோயில் வழங்கப்பெறுவதாயிற்று. இவ்வரலாற்றைக் கந்த புராணத்து,

ஏடவிழ் அலங்கல் திண்டோள் இபமுகத் தவுணன் மார்பில்
நீடிய குருதிச் செந்நீர் நீத்தமாய் ஒழுகும் வேலைப்
பாடுற வருங்கான் ஒன்றிற் பரத்தலின் அதுவே செய்ய
காடெனப் பெயர்பெற் றின்னுங் காண்டக இருந்த தம்மா !

மீண்டுசெங் காட்டில் ஓர்சார் மேவிமெய்ஞ் ஞானத் தும்பர்
தாண்டவம் புரியுந் தாதை தன்னுருத் தாபித் தேத்திப்
பூண்டபேர் அன்பிற் பூசை புரிந்தனன் புவியு ளோர்க்குக்
காண்டகும் அனைய தானம் கணபதீச் சரம தென்பர்.

என்ற செய்யுளான் அறியலாம்.

மிகப் பழமையான திருவாத்திவிருக்ஷம் ஒன்று எழுந்தருள் நாயகர் திருமுன்பு இருக்கின்றது. பிராகாரத்தின் கீழ்ப்பக்கத்தில் இத்தலத்து வாழ்ந்த சிறுத்தொண்டர், திருவெண்காட்டு நங்கை,

சீராளன், சந்தன நங்கை இவர்கள் திருவுருவங்கள் இருக்கின்றன. சிறுத்தொண்டர், உத்தராபதியினின்றும் வந்த பைரவ வேடம் தாங்கிய பரமனுக்குத் தம்மகன் சீராளனையே கறிசமைத்திட்டு முத்தியடைந்தனர் என்பது வரலாறு. இந்த அடியார் பெருமகனுர், திருஞானசம்பந்தப் பெருமானும் அப்பமூர்த்திகளும் எழுந்தருளியகாலத்து அவர்கள் நட்பைப்பெற்று அவர்கள் பதிகத்துச் சிறப்பிக்கப்பெறும் தகுதியைப்பெற்றவர். சித்திரைப் பூர்ணிமையில் சிறுத்தொண்டர் திருவமுதுபடைத்த திருவிழா நடைபெறும். அமுதுபடையல் என்றே வழங்குகிறது.

இறைவன் - கணபதீச்சரத்தார். இறைவி - திருக்குழல் நன்மாது. விருட்சம் - திருவாத்தி. தீர்த்தம் - சூர்யதீர்த்தம். பைரவ கோலத்துடன் உத்திராபதியார் எழுந்தருளியிருக்கிருர். இத்தலம், நன்னிலத்தில் இறங்கி கிழக்கே 4-மைலில் உள்ள திருப்புகலூரிலிருந்து திருக்கண்ணபுரம் மட்சாலையில் கிழக்கே 2-மைல் தூரத்தில் உள்ளது.

**கல்வெட்டு :**

முதலாம் இராஜராஜன் முதலாக ஏழு சோழ அரசர் காலத்தனவும், பராக்கிரம பாண்டியன் காலத்ததும், வீரவிருப்பண்ண உடையார் முதலிய இரு விஜயநகர அரசர்கள் காலத்தனவும் ஆகிய கல்வெட்டுக்கள் உள்ளன. அவற்றுல் அறியப்பெறும் சில உண்மைகள்: இத்தலம் கயாமாணிக்க வளநாட்டு மருகல்நாட்டுத் திருச்செங்காட்டங்குடி என அழைக்கப் பெறுகின்றது. முதல் இராஜ ராஜன் காலத்திய கல்வெட்டு [1] மும்முடிச்சோழ வளநாட்டு மருகல்நாட்டுத் திருச்செங்காட்டங்குடி எனக் காட்டுகிறது.

இறைவன் கணபதீச்சரமுடைய நாயனுர் [2] கணபதீச்சரமுடைய நாயர் எனவும், பைரவமூர்த்தி உத்திராபதி நாயகர் எனவும் [3], சீராளர் சீராள தேவர் எனவும், சிறுத்தொண்டர் 'சிறுத்தொண்ட நம்பி' எனவும், விநாயகப்பெருமான் வாதாபி கணபதி [4] எனவும் குறிக்கப்பெறுகின்றனர்.

---

[1] 57 of 1913, [2] 51 of 1913, [3] 71 of 1913, [4] 72 of 1913.

சித்திரைமாதத் திருவாதிரையில் சீராளதேவர்க்குத் திரு விழா நடந்ததாக முதல் இராஜராஜன் காலத்துக் கல்வெட்டுக் [1] கூறுகிறது. மூன்றாங் குலோத்துங்கன் காலத்தில் சிறுத் தொண்டர் மடத்திலிருந்து சீராளப்பிள்ளையை எழுந்தருள் வித்த செய்தி தெரிகிறது [2]. உத்தராபதிநாயனாருக்குச் சித்திரா பௌர்ணிமையில் விழா நடந்தமை மூன்றாம் இராஜராஜன் கல்வெட்டுத் தெரிவிக்கிறது. ஒவ்வொருமாதமும் பரணி விசேட மாகக் கொண்டாடப் பெற்றமை மற்றொரு கல்வெட்டுக் காட்டும் [3]. இந்த விழாவிற்கு விடப்பட்ட நிலம் 'திருவோட்டுக் கட்டளை' எனவழங்கப்பெற்றமை அறிந்து இன்புறுக. சித்திரை, ஐப்பசிப் பரணிகள் மிக விசேஷமானவை; ஆதலால் இவ்விழா வைக்கொண்டாட, கி. பி. 1245-67-ல்வாழ்ந்த மூன்றாம் இராஜேந் திரன் நிலம்விட்டான் [4]. மூன்றாம் இராஜராஜன் ஆட்சி 24-ம் ஆண்டில் அரசகாரியம் பார்ப்பவனான அரசூர் உடையார் திருச் சிற்றம்பலம் உடையானான திருச்சிற்றம்பல உடைய பல்லவ ராயன், உத்தராபதியார் சித்திரா பௌர்ணிமை விழாவிற்கு எழுந்தருளும்போது திருமுத்துவிதான நெறியில் உணவளிக்க ஏற்பாடுசெய்தமை ஒரு கல்வெட்டால் அறியப்படும் [5]. மற்றும் சீராளதேவர் விழாவிற்கு வேளாளன் உலகஞ் சிறியவனான தாப்பிள்ளை மூவேந்த வேளாளனும் [6], விழாவிற்கு வரும் அடியார்களுக்கு அமுதுபடிக்காகத் தாயன் சிற்றம்பலமுடையா னும் [7] நிவந்தம் அளித்தார்கள். விளக்கிற்கும், நிவேதனத் திற்குமாக மற்றும் பலர் வழங்கியிருக்கின்றனர்.

## 8. திருவாலவாய் (மதுரை)

**தலம் :**

இத்தலத்திற்கு மதுரை, நான்மாடக்கூடல், திருவாலவாய், கடம்பவனம், துவாதசாந்தபுரம், பூலோக கயிலாயம், சிவராஜ தானி, கன்னிபுரீசம், ஜீவன்முத்திபுரம், சிவநகரம் எனப் பல பெயர்கள் தலபுராண நூல்களிற் கூறப்பெற்றுள்ளன. இது

[1] 57 of 1913, [2] 66 of 1913, [3] 71 of 1913, [4] 77 of 1913, [5] 69 of 1913, [6] 56 of 1913, [7] 58 of 1913.

பாண்டிய நாட்டின் தலைநகரம். கடைச்சங்கமிருந்து தமிழா ராய்ந்த தலைநகர். சொக்கலிங்கப்பெருமான் 64 திருவிளையாடல் களை இயற்றிய தனி நகரம். மூர்த்தி நாயனார் விபூதி உருத்தி ராக்கம் சடைமுடி என்ற மூன்றனையும் துணைக்கொண்டு மும்மையா லுலகாண்ட தலைநகரம். சைவங்காத்த திருஞானச் செம்மலும், மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும், நெடு மாறநாயனாரும் எழுந்தருளிய இடம். இந்திரன், வருணன், முருகன், விநாயகர் முதலிய தேவர்கள் வழிபட்டுப் பேரின்பம் எய்திய தலம். மணிவாசகப் பெருந்தகை மந்திரியாக இருந்து, வாசகத்தேனை வடித்தெடுத்த திருப்பதி. தருமபுர ஆதீன முதற்பெருங் குரவர் குருஞான சம்பந்த சுவாமிகள் சொக்க லிங்கப் பெருமானைப் பெற்ற இடம். குமரகுருபர சுவாமிகள் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் பாட, அம்மையே இருந்து அதனைக்கேட்கும் ஏற்றம்பெற்ற இடம்.

திருஞான சம்பந்தப்பெருமான் 'கூடலாலவாய்' 'மதுரை யாலவாயிலாய்' எனக் குறிப்பதால் கூடல் மதுரை என்பன தலப்பெயராகவும் 'ஆலவாய்' என்பது கோயிற்பெயராகவும் இருக்கலாமோ என ஐயுற இடமுண்டு. இறைவன் சொக்கலிங்க மூர்த்தி. அம்மை மீனாட்சியம்மை. தலவிநாயகர் சித்திவிநாயகர். தலவிருட்சம் கடம்பமரம். தீர்த்தம் பொற்றாமரை. எழுகடல், வைகை முதலியனவும் உள்ளன. விமானம் விண்ணிழி விமான மாகிய இந்திரவிமானம். இதனை இந்திரன் கொண்டுவந்து வைத்துச் சோமசுந்தரக்கடவுளைப் பூசித்தான். இவ்விமானம் எட்டு யானைகளால் தாங்கப்பெறுவது. மன்று - வெள்ளிமன்று; இரசதசபை என வழங்கும். இங்கே இராசசேகர பாண்டியன் வேண்டுகோளுக்காகப் பெருமான் இடது காலையூன்றி வலது காலைத்தூக்கி மாறியாடினார்.

**மண்டபம் :**

'மண்டபங்கள் நாயன்' என்பது. இதனைச் சாலிவாகன சகம் 1448-ல் சென்னப்ப நாயகர் என்பவர் திருப்பணி செய் வித்தார். இன்னும் சுவாமிகோயிலில் அர்த்த மண்டபம், மகா மண்டபம், மணிமண்டபம், அறுகாற்பீடம் முதலியன இருக் கின்றன. இவற்றைக் கட்டுவித்தவன் குலசேகர பாண்டியன்.

மீனாட்சியம்மன் சந்நிதியில் அஷ்டசித்தி மண்டபம், மீனாட்சி நாயக்கர் மண்டபம் முதலிய மண்டபம் இருக்கின்றன. இவையன்றிக் கல்யாணமண்டபம், ஆயிரக்கால் மண்டபம், வீர வசந்தராய மண்டபம், ஆடிவீதி நிறுதிவீதி மண்டபம், சம்பந்தர் மண்டபம், அறுபத்துமூவர் மண்டபம் முதலியனவும் விளங்குகின்றன. அவற்றுள் ஆயிரக்கால் மண்டபம் சகம் 1494-ல் அரசாண்ட கிருஷ்ண வீரப்ப நாயக்கரது திருப்பணி என்று சொல்லுகிறார்கள். சொக்கநாதப்பெருமான் கோயிலின் திருவாயில் முத்தளத்தின் திருவாயில் என்று சொக்கநாதர் உலா கூறுகிறது.

சொக்கலிங்கப் பெருமானுக்கு அட்டாலைச் சேவகன், அடியார்க்கு நல்லான், அதிரவீசி ஆடுவான், அபிடேகச் சொக்கன், பண்ணிசைச் சொக்கன் முதலான பலபேர்கள் வழங்குகின்றன. அம்மைக்கு அபிஷேகவல்லி, அங்கயற்கண்ணி, தமிழ் அறியும் பெருமாட்டி முதலிய பல நாமங்கள் உள்ளன.

**கல்வெட்டு :**

மதுரை தொன்றுதொட்டே வரலாற்றுடைய தலம். கி. மு. 302-ல் பாடலிபுரத்தில் அரசாண்ட சந்திரகுப்தன் அவையில் செலுக்ஸின் தூதனாகவந்த மெகஸ்தனிஸ் பாண்டியநாட்டையும் மதுரையையும் குறிப்பிடுகிறார். கி. பி. 140-ல் தாலமியும் குறிப்பிடுகிறார். சங்க இலக்கியங்கள் மதுரையின் இயற்கை வளத்தை எடுத்தியம்புகின்றன. உலகப் பொதுநூலாகிய திருக்குறள் அரங்கேறிய இடமும் இதுவே. முதலாம் நெடுஞ்செழியன் முதல் பல பாண்டிய மன்னர்களினுடைய நிகழ்ச்சிகள் குறிக்கப்படுகின்றன.

இத்தலத்தைப்பற்றிய கல்வெட்டுக்களாக சுந்தரேஸ்வர ஸ்வாமி கோயிலிலும், மதனகோபால சுவாமி கோயிலிலும், கூடலழகர் கோயிலிலுமாக முப்பத்தைந்து கல்வெட்டுக்கள் உள்ளன. 17-ல் தாமர சாஸனங்கள் உள்ளன. அவற்றுள் 36 of 1908 கல்வெட்டு பெருமாள் கோயிலில் உள்ளது. 557 முதல் மூன்று கல்வெட்டுக்கள் கூடலழகர் கோயிலைப்பற்றியன. செப்புப் பட்டயங்களில் 6, அந்தணர்களுக்கும் பூந்தோட்டத்துக்குமாக கிருஷ்ணப்பநாயக்கர் ராணி ரங்கம்மாள் இவர்கள் நிலம் அளித்

தமையை அறிவிக்கின்றன. 6 செப்புப் பட்டயங்கள் சேது மன்னர்கள்செய்த அறச்செயல்களை அறிவிப்பன. எனையன சுந்தரேஸ்வரர் கோயிலுக்கும் மீனுட்சியம்மை கோயிலுக்கும் செய்த பல பணிகளை அறிவிக்கின்றன. ஜடாவர்மன் குலசேகர பாண்டியன், மாறவர்மன் சுந்தரபாண்டியன், பராக்கிரம பாண்டியன், வீரபாண்டியன், ஸ்ரீ வல்லபன் முதலிய பாண்டிய மன்னர்கள் திருக்கோயிலுக்கு நிலம் அளித்ததையும் வரி தள்ளுபடி செய்ததையும், வரி வசூலித்துக்கொள்ள உரிமை அளித்தமையும் அறிவிக்கின்றன. 507 of 1907 கல்வெட்டு ஸ்ரீ வல்லபதேவன் காலத்தில் சோமசுந்தரப் பெருமாளுக்கு இருசந்தியிலும் ஏற்பித்தருள நந்தவனம் அமைத்த செய்தி அறிவிக்கப்படுகின்றது. இவள் ஏழுலகம் முழுதுடையாள் எனவும் வழங்கப்படுகிருள். கி. பி. 1572 முதல் 1595 வரை அரசாண்ட வீரப்ப நாயக்கர் கம்பத்தடி மண்டபத்தைக்கட்டிஞர் (35 of 1908). ஒரு செப்புப் பட்டயம் ஞானக்கூத்தரான சத்தியஞான தரிசினிமடத்துக்கு நிலம் விட்டதையும், (160—. ) கல்வெட்டு ஆமர்த்தமடம் நந்திகேஸ்வர சந்தானம் சைவ ஆச்சார்யரான ஞானமூர்த்திக்கு மேலக்குடி நாட்டு வடகரை வாரணவாசி பட்டணத்து அண்ணன் விழுப்பாதராசன் மனம்பிரியான் மடம் என ஒன்றைக் கட்டிப் பத்துமா பூதானம் வழங்கினுன் என்ற செய்தியையும் குறிக்கிறது. நரலோக சூரியன் திருமடம் என்றும், அன்னதான மடம் என்றும் சில மடங்களின் பெயர்கள் குறிக்கப்படுகின்றன.

## 9. திருநள்ளாறு

**தலம் :**

இது அரசிலாற்றுக்கும் வாஞ்சநதிக்கும் நடுவில் இருப்பதால் நள்ளாறு என்று அழைக்கப்படுவதாயிற்று. தர்ப்பாரண்யம், நகவிடங்கபுரம், நளேசுரம் என்பன இதன் மறு பெயர்கள். இது சப்தவிடங்கத் தலங்களுள் ஒன்று.

இறைவன்பெயர் நள்ளாறர்; இறைவிபெயர் போகமார்த்த பூண்முலேயம்மை; விநாயகர் கற்பகவிநாயகர், சொர்ணவிநாயகர்; தியாகர் நகவிடங்கத் தியாகர்; அம்மன் நீலோற்பலாம்பாள்; நடனம் உன்மத்த நடனம். இத்தலத்தில் சனிபகவான் சந்நிதி மிகச் சிறப்புடையது.

# 10. திருஆவூர்ப்பசுபதீச்சரம்

**தலம் :**

இப்பெயரமைப்பால் தலத்தின் பெயர் ஆவூர் என்பதும், கோயிலின்பெயர் பசுபதீச்சரம் என்பதும் அறியலாம். இந்திரன், சப்தரிஷிகள், பசுக்கள் பூசித்த தலம். சுவாமிபெயர் பசுபதீசர். அம்மைபெயர் மங்களநாயகி. தீர்த்தம் பிரமதீர்த்தம்.

இத்தலம் கும்பகோணத்துக்குத் தென்மேற்கே சென்று பட்டீஸ்வரத்தையடைந்து, அங்கிருந்து மீட்டும் தென்மேற்கே எட்டரைமைல் சென்றால் இத்தலத்தை அடையலாம்.

**கல்வெட்டு :**

அரசாங்கத்தாரால் படியெடுக்கப்பட்ட கல்வெட்டு ஒன்று கர்ப்பக்கிருகத்துக்கு மேல்தளம் அடிப்பக்கத்தில் இருக்கின்றது. திரிபுவனச் சக்ரவர்த்தியான III இராஜேந்திர சோழதேவன் மூன்றும் ஆட்சி ஆண்டில் நித்தவிநோத வளநாட்டு ஆவூர்க் கூற்றத்துப் பசுபதீஸ்வரமுடையார் கோயிலுக்கு நிலங்கள் அளித்தமையைத் தெரிவிக்கிறது [1].

# 11. திருவண்ணாமலை

**தலம் :**

நினைக்க முத்திகிடைக்கும் தலம் இத்தலம். இது வடார்க் காடு மாவட்டத்தில் திருவண்ணாமலை தாலூகாவின் தலைநகரம். சூரியன், பிரதத்தராஜன், அஷ்டவசுக்கள், பிரமதேவன், சந்திரன், திருமால், புளகாதிபன் முதலியோர் பூசித்துப் பேறு பெற்ற தலம். வித்தியாதரர்களாகிய இருவர் ஒரு ரிஷியின் சாபத்தால் பூனையாகவும் குதிரையாகவும் இருந்த நிலை இத் தலத்தை வலம் வந்தமையின் மாறின.

இறைவன்பெயர் அண்ணாமலைநாதர்; அருணாசலேசுவரர் என்றும் கூறுவர். இறைவிபெயர் உண்ணாமுலையம்மை;

[1] *181 of 1911.*

அபீதகுஜாம்பாள் என்றும் கூறுவர். விநாயகர் பெயர் ஸ்ரீ சம்பந்தவிநாயகர்; முக்குறுணி விநாயகர் என்றுங் கூறுவர். தலவிருட்சம் மகிழமரம்.

**தீர்த்தம்:**

கோயிலுக்கு உள்ளும் வெளியிலும் மலைப்பகுதியிலுமாக 360 தீர்த்தங்கள் உள்ளன. சிறந்தவை சிவகங்கையும், பிரம தீர்த்தமும், மலைப்பகுதியிலுள்ள அக்னிதீர்த்தமும், இந்திர தீர்த்தமும் ஆகும். இந்திர தீர்த்தத்தில் தெப்ப உற்சவம் நடைபெறும்.

இத்தலத்தில் நடைபெறும் பெரியவிழா கார்த்திகைத் திருவிழாவாகும். இது கார்த்திகை மாதத்தில் கார்த்திகை நாளைத் தீர்த்தமாகக்கொண்டு நடைபெறும். சித்திரைமாதத்தில் சித்திரைநட்சத்திரத்தைத் தீர்த்தமாகக்கொண்டு பிரமோற்சவமும், பங்குனி உத்திரத்தில் திருக்கல்யாணமும் ஆறுநாள் விழாவும், மாசிமகத்தில் வல்லாளன் திருவிழாவும், தைமாதம் திருவூடல் விழாவும், ஆனிவிழாவும், ஆடியில் அம்பிகைவிழாவும், பவித்ரோற்சவம், நவராத்திரி, கந்தசஷ்டி, திருவெம்பாவை உற்சவம், திருவாதிரை முதலியனவும் சிறப்பாகக்கொண்டாடப் பெறுகின்றன.

அயனும் மாலும் அகந்தைகொண்டு, அடிமுடிதேட அன்னமும் வராகமுமாக மாறித் தேடி அயற்சி அடைந்தாராக, அக்னி வடிவாய் நின்று அருள்செய்தவர் அண்ணமலைநாதர். முருகன் தாருகனை வதஞ்செய்து வணங்கிச்சென்ற தலம் பலவற்றுள் இதுவும் ஒன்று. சம்பந்தர், அப்பர், மணிவாசகர் இம் மூவராலும் பாடல்பெற்றது. சுந்தரர் பாடியதாகப் பாடல் இல்லையாயினும் சேக்கிழார் வரலாற்றால் ஊகிக்கவேண்டியுள்ளது. நக்கீரர், பரணர், கபிலர், பட்டினத்தார் ஆகிய இந்நால்வரும் அண்ணமலையைப்பற்றிப்பாடிய பாக்கள் பதினொராந்திருமுறையில் உள்ளன. வச்சிராங்கதன் என்னும் பாண்டியன் தினமும் வலம்வந்து திருப்பணி பல செய்துள்ளான். வல்லாளமகாராஜன் அண்ணமலையை ஆண்டுவந்தான். அருணகிரிநாதர் கோபுரத்திலிருந்து இறக்க எண்ணி வீழ்ந்தபோது முருகன் தோன்றி அருள்செய்தான். குகைநமச்சிவாயர், குருநமச்சிவாயர் முதலானவர்கள் சித்தி பல செய்தனர்.

கோயிலின் வடகிழக்குமூலையில் ஆயிரக்கால் மண்டபம் உள்ளது. கிழக்குப்பக்கத்தில் நுழையும்போதுள்ள உட்கோபுரம் வல்லாளமகாராஜன் கோபுரம் என்று வழங்கப்படுகிறது. வல்லாள கோபுரத்தின் வடகிழக்கு மூலையில் சக்திவிலாஸமும் உள்ளது. மேற்குநோக்கிஉட்சென்றால் கிளிகோபுரம் காணலாம். தலவிருட்சத்திற்கு மேற்கே கல்யாணமண்டபம் உள்ளது.

**கல்வெட்டுக்கள் :**

பதிவுசெய்யப்பட்ட மொத்தக்கல்வெட்டுக்கள் 119. இவை களில் பெரும்பாலன சோழர்காலத்தன. திருவிளக்கேற்றல், திருமஞ்சனம், திருநந்தனவனம், திருவமுது, திருவெழுச்சி, அடியார்க்கு அமுதளித்தல் முதலிய பல அறங்களுக்காக நிலம், பொன், கால்நடை முதலியனவற்றை அளித்தமையை அறிவிக் கின்றன. பாண்டியர், பல்லவர், ஹொய்சளமன்னரான வீரவல் லாளதேவர், விஜயநகரத்துராயர், தஞ்சாவூர் நாயக்கர் மற்றும் வணிகர், வேளாளர் முதலியவர்கள் கல்வெட்டுக்களும் காணக் கிடக்கின்றன.

முதல் இராஜேந்திரனுடைய காலத்தில் (கி. பி. 1038.) திருவண்ணுமலை, மதுராந்தகவளநாட்டுப் பெண்ணை வடகரைத் திருவண்ணுமலை என்றும், மூன்றும் குலோத்துங்கன் (கி. பி. 1179.) காலத்தில் இராஜராஜ வளநாட்டு வாணகோப்பாடி பெண்ணை வடகரை அண்ணுநாட்டுத்திருவண்ணுமலை என்றும், மேற்படிசோழனுடைய 27-ம் ஆட்சி ஆண்டில் (கி. பி. 1204) வாணகோப்பாடிப் பெண்ணை வடகரை அண்ணு நாட்டுத் திருவண்ணுமலை என்றும், விஜயநகர இராயர்கள் காலத்தில் ஜெயங்கொண்ட சோழமண்டலத்துச் செங்குன்றகோட்டத்துப் பெண்ணைவடகரை வாணகோப்பாடி அண்ணுநாட்டுத் தனியூர் திருவண்ணுமலை என்றும் குறிக்கப்பட்டுள்ளது. இதனுல் திருவண்ணுமலையின் உள்ளடங்கிய வளநாட்டுப் பெயர் முதலில் மதுராந்தகவளநாடு என்றிருந்து, பிறகு இராஜ ராஜ வளநாடு என்று மாறி, இறுதியில் ஜெயங்கொண்ட சோழமண்டலம் ஆயிற்றென்றும், இம்மண்டலத்தின் உட்பிரிவாகிய செங்குன்றக் கோட்டத்தினுள் அண்ணுநாட்டுத் தனியூராகக் குறிக்கப் பட்டதென்றும் அறியக்கிடக்கும்.

பல்லவர் காலத்திற்கு முந்திய கல்வெட்டொன்றும் இல்லாமையால், கோயில் செங்கற்சுதை மாடமாக இருந்ததென்றும், மலையின்மேல் அண்ணுமலையார் கோயில்கொண்டிருந்திருக்க வேண்டுமென்றும் யூகிக்கவேண்டியுள்ளது. முதற்பிராகாரத்துச் சுவரில் கங்கைகொண்ட இராஜேந்திரன் கல்வெட்டு (1028) காணப்பெறுவதால், இதற்கு முன்பே கருங்கல் திருப்பணி நடந்திருக்கவேண்டும், முதற்பிராகாரத்து விளங்கும் ஏகாம்பரநாதர் கோயில், சிதம்பரேசர் கோயில் ஆகிய இரண்டின் சுவர்களிலும் கி. பி. பன்னிரண்டாம் நூற்ருண்டுச் சாஸனங்கள் காணப்படுகின்றன. கிளிக்கோபுரத்து 33 கல்வெட்டில் பழைமையுடைய வீரராஜேந்திர சோழனது இரண்டாவது ஆட்சியாண்டின் (கி. பி, 1063) முன்பே கருங்கற் திருப்பணியாயிருக்க வேண்டும். திருக்காமக் கோட்டமுடைய உண்ணுமுலைநாச்சியார் கோட்டம் தனியாக 12ம் நூற்ருண்டில் அமைக்கப்பட்டது. கல்வெட்டுக்களில் திருக்காமக் கோட்டம் எனக் குறிக்கப்பெறும்.

பதின்மூன்ரும் நூற்ருண்டின் நடுப்பகுதியில் எழுந்த கல்வெட்டுக்களில் வீரராகவன் திருமதில், வாணுதிராயன் திருமதில், திருவேகம்பமுடையான் திருமதில் முதலியன குறிக்கப்பட்டுள்ளன. அம்மையப்பன் சந்நிதிக்கு இடையில் மேற்பக்கத்தில் நங்கையாழ் வீ சுவரம் என்னுங் கோயில் பல்லவகுடும்பத்தைச் சேர்ந்த ஒரு அரசியால் (கி. பி. 1269ல்) எடுப்பிக்கப் பதிஞலடிக் கோலால் பதின்மூன்றரைகுழி விற்றுப் பதிஞயிரம் பொற்காசு பெற்றுக் கட்டியபகுதி இன்று இல்லை. கிருஷ்ணதேவராயர் (கி. பி. 1516ல்) ஆயிரக்கால் மண்டபத்தையும், எதிரிலுள்ள திருக்குளத்தையும், பதினொரு நிலையிலுள்ள கோபுரத்தையும், வேறுபல திருப்பணிகளையும் அமைத்தமை அறியப்படுகிறது. பல்லவமன்னனை கோப்பெருஞ்சிங்கனும், அவன் மகன் வேணுவுடையானும் செய்த திருப்பணிகள் மிகப்பல. பூஜைக்கும் திருப்பணிக்குமாக "அண்ணுமலைநாதர் தேவதானப்பற்றுக்களும், அண்ணுநாட்டு நாற்பாக்கெல்லைக் குட்பட்ட நன்செய் புன்செய் ஆக உள்ள நிலத்திற்கு ஆயம் பாடி காவலால் வந்த நெல்லும் காசாயமும் மற்றும் எப்பேர்ப்பட்ட பல்லாயங்களும்" இவன் தானமாக ஈந்தான்.

கல்வெட்டுக்களில் காணப்பெறும் கோயில் அதிகாரிகள் ஸ்ரீருத்திரர், ஸ்ரீமாகேசுரர், ஸ்ரீமாகேசுரக் கண்காணி செய்வார்,

தானத்தார், தானபதி மாகேசுரர், தேவகன்மிகள், கோயிற் கணக்கர், ஸ்ரீகாரியஞ்செய்வார் எனப் பலராவர். இவரில் ஸ்ரீமாகேசுரர், தர்மசாசனங்கள் ஒழுங்காக நடைபெறக் காரியம் பார்ப்பவராவர்.

அண்ணாமலைநாதருக்கும் உண்ணாமுலை அம்மைக்கும் பிச்ச தேவர் முதலிய மூர்த்திகட்கும் திருப்பள்ளிஎழுச்சி, சிறுகாலை சந்தி, உச்சிப்போது, இரவை, அர்த்தசாமம் முதலியகாலங்களில் அமுது முதலியவற்றிற்கு நிலம் அளித்தமை அறியலாம். சில சாஸனங்களில் பிரமநாயனார் பெரியமடத்து முதலியார், வையந் தொழுவார் பெரியமடத்து முதலியார், ஊருக்குப்பெரியமடத்து முதலியார், திருவண்ணாமலை உடையார் திருமுற்றத்தே இராஜேந்திரசோழன்சாலை, காங்கேயன்மடம், அம்மைமடம் முதலியன அறியப்படும் செய்திகள்.

நெய், மிளகு, உப்பு, தயிர், அடைக்காய், வெற்றிலை, சீரகம், வாழைப்பழம், வாழையிலை முதலியன நெல்லளந்து பெறப் பட்டவை. மங்கையர்க்கரசி என்னும் நங்கை தன்னுபரணங்களை விற்ற பொருள்கொண்டும், நெல்லைக்கொண்டும் ஏரிபுதுக்கி உதவினாள் என்ற செய்தி கல்வெட்டால் அறியப்படுகிறது.

## 12. திருமுதுகுன்றம்

நடுநாட்டுத் தலங்கள் இருபத்திரண்டில் இதுவும் ஒன்று. சுவாமிபெயர் முதுகுன்றநாதர்; பழமலைநாதர். அம்மைபெயர் பெரியநாயகி.

**தீர்த்தங்கள் :**

நித்யானந்தகூபம், அக்னிதீர்த்தம், சக்கரதீர்த்தம், குபேர தீர்த்தம் என்பன. மணிமுத்தாறு சிறப்புடையது.

**தலவிருட்சம் :** வன்னிமரம்.

கோயிலின் வடக்குக்கோபுரத்திற்கு நேர்வடக்கேயுள்ள மணிமுத்தாற்றுப் பகுதிக்குப் புண்ணியமடு என்று பெயர். இங்கேதான் இறந்தார்களின் எலும்புகளை இட்டு முழுகுவது

வழக்கம். இங்கே ஆழத்துப்பிள்ளையார் என்பது தலவிநாயகர் திருப்பெயர். முதல் பிராகாரத்திற்குக் கைலாசப் பிராகாரம் என்று பெயர். இந்தப் பிராகாரத்தில் வடமேற்குமூலையில் இருபத்தெட்டு ஆகமக்கோயில் உள்ளது. அம்மை திருமுக மண்டலம் கிழக்குநோக்கியது. அம்மையின் திருநாமம் வட மொழியில் விருத்தாம்பிகை. சுவாமிபெயர் விருத்தகிரீசர். கற்பகமரமே வன்னிமரமாக வந்து பழமலைநாதர் திருக்கோயில் திருப்பணியைச் செய்ததாக வரலாறு. உற்சவமூர்த்திநாமம் பெரியநாயகர். இவர் ஆண்டிற்கு ஒருமுறை மாசிமக விழாவில் 6ந் திருநாள்மட்டுமே எழுந்தருளிக் காட்சிவழங்குவார். பிரமன் படைப்புக்குமுன் சிவபெருமான் தாமே மலைவடிவாகி நிற்கப் பிரமன் அதனையறியாது, பல மலைகளையும் படைத்து, அவற்றை நிலைபெறுத்த இடமின்றி மயங்கச் சிவபெருமான் தோன்றியருளி தானே பழமலையாதலைத் தெளிவித்தார். ஆதலின் முதுகுன்றம் எனவும், பழமலை எனவும் வழங்குவதாயிற்று.

**வழிபட்டவர்கள் :**

சுக்கிராசாரியார், யாக்ஞவல்க்கிய முனிவர், சிகண்டி, கோசிகன், விதர்க்கணசெட்டி, விபசித்து முனிவர், அகத்தியர், சுவேதமன்னர், நாதசர்மா, அநவர்த்தினி முதலியோர். சுந்தர மூர்த்தி சுவாமிகள் திருப்பதிகம்பாடிப் பன்னீராயிரம் பொன் பெற்று அதனை மணிமுத்தாற்றிலிட்டுத் திருவாரூரில் பெற்ற அற்புதம் நிகழ்ந்த இடம். இத்தலத்தில் விழாநிகழ ஏற்பாடுகள் செய்தவர் கச்சிராயமன்னர். துறவுபூண்டு உண்மை ஞானியான கன்னடநாட்டு மன்னர் ஒருவர்க்காக இறைவனே தண்ணீர்ப் பந்தல் வைத்துக்காத்ததாகவும், அம்மை அவருக்குப் பாலளித்துக் குமாரதேவர் எனத் திருநாமம்சூட்டி அழைத்ததாகவும், குமார தேவர்க்காக அம்மை பாலாம்பிகையாகி அமுதுபடைத்ததாகவும் வரலாறு. கி. பி. 11ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த இலிங்காரெட்டியாரும், அவர் மகன் அண்ணாமலைரெட்டியாரும் திருப்பணிசெய்து கி. பி. 1623ல் கும்பாபிஷேகம் செய்தனர்.

**கல்வெட்டுக்கள் :**

இராஜகேசரிவர்மனை குலோத்துங்கசோழன் காலத்தில் இத்தலம் விருதராஜபயங்கர வளநாட்டு மேற்காநாட்டு இருங் கோளப்பாடியின் ஒருபகுதியான மருவூர்க்கூற்றத்துத் திருமுது

குன்றம் எனக் குறிக்கப்பெற்றுள்ளது. சுவாமிபெயர் முதுகுன்றுடைய நாயனுர் எனவும், திருமுதுகுன்றத்துடையார் எனவும் வழங்கப்பெறுகின்றது. கோப்பெருஞ்சிங்கன் சுவாமிக்கு ஒரு மாங்காய்மாலையும், விளக்குக்குப் பொன்னும், ஆடுகளும், பசுக்களும் அளித்தான்[1]. இராஜராஜன், பரகேசரிவர்மன், குலோத்துங்கன் இவர்களும் பசுக்களையும், பொன்னையும், நிலத்தையும் அளித்தனர்.

இராஜகேசரிவர்மனை குலோத்துங்கனது காலத்து, ஆளப்பிறந்தான் ஏழிசைமோகனுன குலோத்துங்கசோழ காடவராதித்தன் இறைவற்கு ஸ்நபனமண்டபம் கட்டினுன்[2]. புக்கண் உடையார், ரங்கப்பநாயகர், செவ்வப்பநாயகன் இவர்கள் காலத்திய நிபந்தங்களும் மிகுதியாக உள்ளன. சகம் 1545ல் கச்சிராயன் என்பவன் குகை காவலனுக்கு நான்கு கலம் நெல் கொடுக்க ஏற்பாடுசெய்திருந்தான். ரங்கப்பமாவைராயர் என்பவர் அரியலூர் சந்தைப்பேட்டையில் மூட்டை ஒன்றுக்கு அல்லது ஆள் தூக்கக்கூடிய கைமூட்டை இரண்டுக்கு ஒருகாசு விழுக்காடு வரிவாங்கிக்கொள்ள உரிமைவழங்கியிருக்கிறுர். கி. பி. 16ம் நூற்றுண்டினனுன செவ்வப்பநாயகன் நான்கு இராசகோபுரங்களையும் கட்டியதாகச்சொல்லுவர். கி. பி. 1602ல் முத்துக்கிருஷ்ணப்பராயர் என்பவர் திருமுதுகுன்றமுடையார்க்குப் பஞ்சாவரணப் பிராகாரம் கட்டிவைத்ததாகத் தெரிகின்றது. அப்பிராகாரம், புறமதிலுக்கு வெளியிலிருந்து முகமதியர் கலகத்தில் இடிந்துபோனதாகக்கூறுவர். தென்னுற்காடு ஜில்லா கலெக்டராக இருந்த ஹைட்துறை கைலாசப்பிராகாரத்திற்குத் தளவரிசை போட்டதால் இன்றும் அது ஹைட் தளவரிசையென வழங்குகின்றது.

---

[1] 134, 135 of 1900. [2] 137 of 1900.

## 13. விசலூர்

இத்தலம் பண்டாரவாடை திருவிசநல்லூர் என்று வழங்கப் படுகிறது. விசலூர் என்ற பெயரோடு தஞ்சை ஜில்லாவில் வேறு இரண்டு ஊர்களும் உள்ளன. இது திருவிடைமருதூர் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கே வேப்பத்தூர் மார்க்கத்தில் நான்குமைலில் உள்ளது. சுவாமிபெயர் யோகானந்தீசுவரர். அம்மைபெயர் சாந்தநாயகி. தீர்த்தம் சடாயுதீர்த்தம். இறைவன் புராதனேசுவரர், வில்வாரண்யேசுவரர் எனவும் பெயர் பெறுவர். அம்மை சௌந்தரநாயகி எனவும் வழங்கப்படுவர். ஜடாயு வழிபட்டுப் பேரின்பம் எய்திய தலம்.

**கல்வெட்டுக்கள் :**

அரசியலார் படியெடுத்த கல்வெட்டுக்கள் மொத்தம் 94 உள்ளன. இத்தலம் கி. பி. 985—1013-ல் அரசாண்ட முதல் இராஜகேசரி வர்மன் காலத்து அவனிநாராயண சதுர்வேதி மங்கலத்தைச் சேர்ந்ததென்றும், 1011–1043-ல் அரசாண்ட இராஜேந்திர சோழதேவன் காலத்து வடகரை இராஜேந்திர சிம்மவளநாட்டு மண்ணிநாட்டுப் பிரம்மதேயமான வேப்பத்தூர் சோழமார்த்தாண்ட சதுர்வேதி மங்கலத்தைச் சேர்ந்தது என்றும் தெரிகிறது. சுவாமிபெயர் சிவயோகநாதர் எனவும்[1], உமாமகேசர்க்கு ஆண்டநாயகர் எனவும்[2] கல்வெட்டுக்கள் பெயர் கூறுகின்றன. இத்தலத்துக் கல்வெட்டுக்களால் குறிக்கப் படுகின்ற சோழமன்னர்கள் பன்னிருவர். பாண்டியர் ஒருவர். விஜயநகர கிருஷ்ணதேவராயர் ஒருவர். இவர்களில் கி. பி. 862 முதல் 894 வரை ஆண்ட பாண்டிய மன்னனாகிய வரகுண பாண்டியனது 38-ம் ஆண்டின் நிகழ்ச்சி ஒன்று குறிக்கப் பெறுவதால் இக்கோயில் அதற்குமுன்பே கற்றிருப்பணியாகச் செய்யப்பெற்றமை தெளிவு.[3]

I பராந்தகன் கி. பி. 907-முதல் 947-வரை ஆட்சி நடத்தியவன். இவனுடைய ஆட்சி 16ம் ஆண்டில் விளக்கீட்டிற்காக ஆடுகள் விடப்பட்டன. பொன்னும் கொடுக்கப்பெற்றன[4], இவன் மதுரைகொண்ட பரகேசரி வர்மன் எனக் குறிக்கப்படு கின்றான்.

---

[1] 338 of 1907. [2] 346 of 1907. [3] 17 of 1907.
[4] 23 of 1907.

பராந்தகன்II காலத்தில் விளக்குக்காகப் பொன்னும் ஆடுகளும், அபிஷேகத் திரவியங்கட்காக நிலமும் அளிக்கப் பெற்றன. செம்பியன் காரைக்காடு உடையானும்[1] பராந் தகப் பல்லவராயன் என்பவனும் விளக்கிற்காக ஆடுகளும்[2] பணமும் அளிக்கப்பெற்றன. இவன் தருமங்களில் விளக்கிற்காக அளித்தமையே பெரிதும் காணப்படுகின்றன. விசலூர் உடைய நாயனார்க்குத் திருமஞ்சனநீர் காவிரியிலிருந்து கொண்டுவர நிலம்விட்டான். இதில் திருவிசலூர் மகாதேவ பட்டாரகர் என இறைவன் திருநாமம் குறிக்கப்படுகின்றது[3]

முதல் இராஜராஜன் கி. பி. 985 முதல் 1013 வரையில் ஆண்டவன். இவன் காலத்தில் கோவில் விளக்குக்குப் பணம் கொடுக்கப்பட்ட செய்திகள் குறிக்கப்படுகின்றன. கிராமங் களின் நிலவிற்பனைகளும் பொறிக்கப்பெற்றுள்ளன. இவனு டைய அரசி ஒருத்தி பொன்னளித்திருக்கின்றாள்[4]. திருமஞ் சனத்தில் இடப்பெறுகின்ற ஸ்நான திரவியங்களுக்காகவும், பிராமண போஜனத்திற்காகவும் பொன்னளித்திருக்கிறாள். மிகச் சிறப்பாக இவன் ஆட்சி 29ல் அரசன் துலாபாரம் புக்குத் தானம் செய்தான் என்றும், அரசி தந்திசத்தி விடங்கியாரான லோகமாதேவியார் ஹேமகர்ப்பதானம் செய்தாள் என்றும் குறிக்கப்பெறுகின்றன[5]. பிச்சுதேவன் என்னும் அரசகாரியம் பார்ப்பான் கருப்பக்கிருகப்பணிக்காகநிலம்விட்டமைதெரிகிறது.

இராஜேந்திரன். இவன் கி. பி. 1011 முதல் 1043 வரை ஆண்டவன். இவன்காலத்திய கல்வெட்டுக்கள் பதின்மூன்று உள்ளன. அவற்றால், திருவிசலூர் உடைய மகாதேவர்க்குத் தங்கக் கச்சை அளித்ததும், சிதாரிக்காக நறும்புகையிட நிலம் அளித்ததும், விளக்கிடப் பணமும் நிலமும் ஆடுகளும் அளித்த தும் அறிவிக்கப்பெறுகின்றன[6]. அவனுடைய மனைவியான அரசியொருத்தியால் அபிஷேகத்திற்கு வெள்ளிக்கலசம் ஒன்று அளிக்கப்பெற்றது[7]. இவன் தனது மூன்றாவது ஆண்டில் திருவிசலூர் மாதேவர் கோயிலையும், கோபுரத்தையும் திருப்பணி செய்தான். இவன் மனைவியான நக்கன் செம்பியன் மாதேவியாரால் விளக்குக்கு ஏற்பாடு செய்யப்பெற்றது.

---

[1] 9 of 1907. [2] 18 of 1907. [3] 35 of 1907. [4] 19 of 1907.
[5] 42 of 1907. [6] 1, 15, 338, 339 of 1907. [7] 340 of 1907.

இவனுக்கு உருத்திரன் அருள்மொழியான பிருதி மகாதேவி என்றொரு மனைவியும் இருந்தனர்[1]. இவனுக்கு அத்தையும், முதல் இராஜராஜன் மூத்த சகோதரியும், பல்லவராயர்வந்தியத் தேவர் மனைவியுமான குந்தவ்வைதேவியார் பழையாறையில் இருக்கும்போது நிலம் அளித்தார் என்ற செய்தியை அறிவிக்கும் கல்வெட்டு சரித்திர ஆராய்ச்சியாளர்க்குப் பெருவிருந்தாவது[2].

குலோத்துங்கன் III. இவன் கி. பி. 1178 முதல் 1218 வரை யாண்டவன். இவனுடைய ஆட்சி பதினெட்டாம் யாண்டில் நிலவிற்பனையைப்பற்றிக் கூறுகிறது. அதில் வேம்பத்தூர் எதிரிலிச்சோழச் சதுர்வேதி மங்கலமான வேம்பத்தூர் என அழைக்கப்பெறுகின்றது, ஏனைய முதல் மூன்று கல்வெட்டுக்கள் அரசாங்க நில அளவைமுறைகளையும் நிலவிற்பனையையும் அறிவிப்பன.

தென்னண்டைப் பிராகாரத்தில் உள்ள கருப்பக்கிருகத்தின் வடக்குச்சுவரில் அந்த மண்டபத்தைக் கட்டினவனுன ஆனந்த சிவன் என்பவனுடைய உருவம் இருக்கிறது. அதில் ஒரு பகுதியைச் சுவர் மறைத்துவிட்டது,

## 14. திருக்கொடுங்குன்றம்

இது பிரான்மலை என இக்காலத்து வழங்குகின்றது. திருக்கோயில் அடிவாரத்தில் உள்ளது. மகோதர மகரிஷியும், நாகராஜனும் வழிபட்ட தலம். அருணகிரிநாதர் திருப்புகழ்பெற்ற சுப்பிரமணியத் தலமாகும். மலைமேல் வைரவச்சந்நிதி மிக விசேஷம். சுவாமி சந்நிதியில் திருக்கல்யாணக்கோலம் சிறப்பான காட்சி. தேவசபா மண்டபம் என்ற ஒரு மண்டபம் இருக்கின்றது.

இறைவன்பெயர் கொடுங்குன்றீசர். தேவியார் குயிலமுத நாயகி. தேவாரம் 'தேனிற் பொலிமொழியாள்' எனக் குறிப்பிடுகின்றது. இத்தலம் அம்மைநாயக்கனூர் புகைவண்டி நிலையத்திலிருந்து வடகிழக்கே 16 மைலில் உள்ளது.

---

[1] 349 of 1907. [2] 350 of 190,

**கல்வெட்டுக்கள் :**

இத்தலத்தைப் பற்றியனவாக இருபத்தொரு கல்வெட்டுக்கள் அரசியலாரால் 1903-ம் ஆண்டில் படியெடுக்கப் பெற்றுள்ளன. அவற்றுள் எட்டுக் கல்வெட்டுக்கள் ஆராய்ந்து முடிவுகட்டப் பெற்றன. ஏனையவை அறியப்பெறுதன. நான்கு கல்வெட்டுக்கள் குலசேகர பாண்டியனுடைய ஆட்சி 10, 13-ம் ஆண்டுகளில் நிகழ்ந்தவை. இவற்றை இங்ஙனம் வரையறுத்து எழுதியவர் ஸெவல்பாதிரியார்.

இத்தலத்தில் சுந்தரபாண்டியன் மண்டபம் (இது கருப்பக் கிருக வாயிலில் உள்ளது.) ஆறுகால் மண்டபம்[1], லக்ஷ்மீ மண்டபம்[2] முதலிய மண்டபங்களும் விசுவநாதர் கோயில்[3], சுப்பிரமணியசுவாமி கோயில்[4] முதலியனவும் கோயிலுக்குள் இருக்கின்றன. பிரான்மலைக் கிராமத்தில் ஸ்ரீ சொக்கநாதர் கோயில் உள்ளது.[5] இறைவன் மங்கைநாதர்[6] எனவும், கொடுங்குன்றமுடைய நாயனர்[7] எனவும் நல்லமங்கைபாகர் எனவும்[8] குன்றுண்டநாயனர் எனவும்[9] குறிப்பிடப்பெறுகின்றார்.

பாண்டிய மன்னர்களில் சுந்தரபாண்டியன் I, ஷை II. பராக்ரம பாண்டியன், குலசேகர பாண்டியன், வீரபாண்டியன் இவர்கள் விளக்குக்காகப் பசுக்களும், பொன்னும், சேவார்த்திகட்கு உணவிற்கும், விளக்குத் தண்டு செய்தற்குமாகப் பொன்னும் நிலமும் அளித்த செய்திகளை அறிவிக்கின்றன; பல கட்வெட்டுக்கள். கி. பி. 1251–1264-க்குள் ஆண்ட கோனேரின்மைகண்டான் காலத்தில் துவராபதி வேளார், பிரபாவ புரந்தரன் ஆகிய இருவரும் நிலம் அளித்தனர். இத்தலம் சாளுவ அரசனகிய இம்மடி நரசிங்கராயர் காலத்தில் பிரான் மலைச்சீமை என்றும், திருமலைநாட்டுப்பகுதியான பிரான்மலை என்றும் குறிக்கப்பெறுகின்றது. திப்பரசரையன் நன்மைக்காகக் கேரளசிங்க வளநாட்டு இப்புலி நாயகர் நிலம் அளித்தார். இங்கு ஒரு வியாபாரிகள் சங்கம் இருந்ததாகவும் கல்வெட்டுக் கூறுகிறது[8].

---

1 *144* of *1903*, 2 *142* of *1903*, 3 *146* of *1903*, 4 *152* of *190*, 5 *154* of *1903*, 6 *138* of *1903*, 7 *140* of *1903*, 8 *154* of *1903*, 9 *202* of *1924*.

1924-ம் ஆண்டில் படியெடுக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் 16. அவற்றுள் ஐந்து, பாண்டியர்கள் காலத்தன. ஏனையவை விசய நகர அரசர்கள் காலத்தன. சடாவர்மன் வீரபாண்டியன் ஆட்சி 9-ம் ஆண்டில், திருஞானம்பெற்றபிள்ளையார் படிமத்தை எழுந்தருள்வித்துக் கேரளசிங்க வளநாட்டுக் குலசேகரன் பட்டினத்து அருவியூரானான கொடுங்குன்றமுடையான் ஒருவன் பூசைக்கு நிபந்தமும் அளித்தான்[1]. குலசேகர பாண்டியன் காலத்தில் கீழ்வேம்புநாட்டு இராசவல்லிபுரத்துக் கொன்றைசேர் முடியானும், திருநெல்வேலியுடையானும் விளக்குக்கு ஆடுகள் அளித்தனர்[2]. கண்ணமங்கலமான திருவெங்கா உடைய நல்லூர்; அமோகமங்கலமான முதலி நாயகநல்லூர் உடையான் இருவரும் அர்த்தயாம பூசைக்கு நிலம் அளித்தனர். அந்தப் பூசைக்குத் தாழ்வுசெய்யாதான் சந்தியென்று பெயர்[3]. காரைக்குடியான் ஒருவன் மங்கைநாயகர் வசந்த உற்சவத்திற்காக வாணராயநல்லூரை இறையிலிசெய்து அளித்தான்[4]. விஜய நகர அரசர்கள் வேதபாராயணத்திற்காகவும்[5]. உற்சவத்திற்காகவும்[6]. கானூர் முதலிய இடங்களை யளித்தனர்.

## 15. திருநெய்த்தானம்

இத்தலம் திருவையாற்றிற்கு மேற்கே ஒருமைல் தூரத்தில் உள்ளது. திருவையாற்று சப்தஸ்தான க்ஷேத்திரங்களில் ஏழாவதுதலம். இங்கே கலைமகள் வழிபட்டுப் பேறுபெற்றாள். சுவாமிபெயர் நெய்யாடியப்பர். அம்மைபெயர் பாலாம்பிகை. 'இளமங்கையம்மை' எனத் தேவாரம் குறிப்பிடுகின்றது.

தீர்த்தம்: காவிரி. கிழக்குப்பார்த்த சந்நிதி. இப்போது தில்லைஸ்தானம் என வழங்குகின்றது. வடமொழியில் கிருதஸ்தானமாயிற்று. இறைவற்குப் பசுநெய் அபிஷேகிப்பது வழக்கம்.

**கல்வெட்டுக்கள் :**

இத்தலத்தில் அரசியலார் படிஎடுத்தவண்ணம் 51 கல்வெட்டுக்கள் உள்ளன. அவற்றுள் இத்தலம் ராஜாதிராஜன்

---

[1] 208 of 1934, [2] 194 of 1924, [3] 202 of 1924, [4] 203 of 1924, [5] 207 of 1924, [6] 196 of 1924.

காலத்தில் ராஜராஜவளநாட்டுப் பைங்காநாட்டுத் திருநெய்த் தானம் எனக் குறிக்கப்படுகின்றது. இத்தலத்து பராந்தகன் I முதலாக ஐந்து சோழ அரசர்களின் தானங்களைக் குறிக்கும் நிகழ்ச்சிகளும், நந்திவர்மன் தானநிகழ்ச்சிகளும் குறிக்கப்பெறு கின்றன. செம்பியன் ஈக்காட்டு வேளானான பரிசைகிழான் மறவன்நக்கன் என்பவன் 13 கழஞ்சு பொன்னைக் கோயில் விளக்கிற்காகக் கொடுத்தான்[1]. கூத்தன் அருள்மொழியான வானவன் பேரரையன் நிலத்தை 25 கழஞ்சு பொன்னுக்கு நங்கை வரகுணபெருமானார் வாங்கி விளக்கிற்காக வைத்தாள்[2]. சாமரகேசரி தெரிஞ்ச கைக்கோளர், விக்ரமசிங்க தெரிஞ்ச கைக்கோளர் இருவராலும் பைங்காநாட்டுக் கீழப்பிலாறு கிராமத்தில் நிலம் அளிக்கப்பெற்றது. முற்கூறிய சாமரகேசரி தெரிஞ்ச கைக்கோளருள் ஒருவனான மல்லன் ஆரியனால் நிவந்தம் விடப்பெற்றது. கோயில் காரியத்தலைவனான காமக் கோடநல்லூர் ஆயனால் இரு பொன்பட்டங்கள் கடவுளுக்குக் கொடுக்கப்பெற்றன[3]. சோழப் பெருமானடிகளுடைய காமக் கிழத்தியான நங்கை கூத்தப்பெருமானார் 30 கழஞ்சு பொன்னை விளக்குக்காக வைத்தார். அதனைத் திருநெய்த்தானச் சபையார் சுவாமிக்கு ஸ்நபன மண்டபங்கட்டப் பயன்படுத்தி விட்டனர். அதற்குப் பதிலாகக் கோயில் நிலங்கள் சிலவற்றை ஏற்பாடு செய்தனர். வளவர்கோன் பேரரையன் என்பவனும், செம்பியன் தமிழ வேளான் விக்கணன் மனைவி கடம்பமாதேவியும், தென்னவன் பிரதிமாராசனான கட்டி ஒற்றியூரான் பராந் தகனும், இளங்கோ வேண்மான் மனைவியான வரகுணப் பெருமானாரும் விளக்கிற்காகப் பொன்னும், நிலமும் அளித்தனர். முண்டங்குடி உடையானான கண்ணங்குடி நாராயணன் நைவேத்யத்திற்கு நெல்லளித்தான். இது அளித்தகாலம் பராந்தகன் I காலம். மேளக்காரன், தேவதாசி, வாணிகன் இவர்கள் தருமமும் விளங்கின என்பதை மூன்று கல்வெட்டுக் கள் குறிப்பிக்கின்றன[4]. கோப்பரகேசரியான பராந்தகன் I-க்கு மாமியார் முள்ளூர் நங்கையென்று தெரிகிறது[5].

---

[1] *276* of *1911*, [2] *277* of *1911*, [3] *283* of *1911*, [4] *22, 33, 36* of *1895*, [5] *45* of *1895*.

## 16. திருப்புள்ளமங்கை

தேவர்கள் அமுதங் கடைந்தபோது உண்டான விடத்தை அமுதுசெய்த இடம் ஆதலின் ஆலந்துறை எனத் திருக்கோயில் வழங்கப்படுகிறது. தலம் திருப்புள்ளமங்கை. இன்று பசுபதி கோயில் எனவும் வேளாளப் பசுபதிகோயில் என அடைமொழி சேர்த்தும் வழங்குகிறது. பிரமன் பூசித்ததலம். புள்ளமங்கை என்பதற்கேற்பக் கோபுரத்தில் கழுகுகள் எப்பொழுதும் வசித்துவருகின்றன. 'பொந்தின் இடை தேனூறிய' என்னும் அருளார் வாக்கிற்கியையப் பொந்துகளில் எல்லாம் தேனடைகள் காணப்படும். திருச்சக்கரப்பள்ளியின் சப்தஸ்தலங்களில் இதுவும் ஒன்று.

இறைவன் ஆலந்துறைநாதர், இறைவி அல்லியங்கோதை. பசுபதிநாதர் எனவும் வழங்கும். தீர்த்தம் காவிரி. அய்யம் பேட்டை ஸ்டேஷனிலிருந்து மேற்கே இரண்டுமைல் சென்று, வடக்கே கால்மைல்சென்றால் இத்தலத்தை அடையலாம்.

**கல்வெட்டு:**

அரசியலாரால் 1921ல் படியெடுக்கப்பட்ட 546 முதல் 559 வரையுள்ள பதின்மூன்று கல்வெட்டுக்கள் உள்ளன.

## 17. திருஇடும்பாவனம்

இடும்பன் பூசித்துப் பேறுபெற்ற தலமாதலின் இப்பெயர் பெற்றது. இடும்பனது தலைநகரமாகிய குன்றளூரும் அருகாமையில் இருப்பது அறியத்தக்கது. இங்கு வெண்மைநிறமுடைய 'வெள்ளை விநாயகர்' விசேஷமானது. இறைவரது மணவாளக் கோலம் மூலத்தானத்தின் பின்புறம் அமைந்துள்ளது. அகத்தியர்க்குக் காட்சிகொடுத்த தலம்.

சுவாமிபெயர் சற்குணநாதர்; அம்மைபெயர் மங்களநாயகி. தீர்த்தம் சமுகபுஷ்கரணி. இத்தலம் பாண்டிஸ்டேஷனிலிருந்து நான்குகல் தெற்கே சென்றால், முத்துப்பேட்டை வேதாரணியம்

மட்சாலை சந்திக்குமிடத்திலிருந்து, மேற்கே கால்மைலில் உள்ளது. இத்தலத்தைப் பற்றியதாகக் கல்வெட்டொன்றும் அறியக்கூடவில்லை.

## 18. திருநின்றியூர்

திருமகள் வழிபட்டு நிலைபேறு எய்திய தலம். சோழன் ஒருவன் திருவிளக்கிட்டுத் தினந்தோறும் வழிபட்டுவந்தான். அவன்கொண்டுவந்த திரி ஒருநாள் நின்றுவிடவே, சிவலிங்கத்தினின்றும் ஒரு சோதி தோன்றி, அவன் வழிபாட்டிற்கு இடையூறுண்டாகாமல் உதவியது. அதனால் திரிநின்றவூர் ஆயிற்று. அது இப்போது திருநின்றவூர் என வழங்குகின்றது என்பது செவிவழிச்செய்தி. பரசுராமன் நின்றியூரை இறைவற்கும், பக்கத்திலுள்ள 360 வேலி நிலத்தை வேதியர்கட்கும் அளித்து வழிபட்டான் என்பது புராணவரலாறு. இதனையே சுந்தரர் தேவாரம் தக்கேசி மூன்றும்பாடல் குறிப்பிடுகிறது. அடுத்த பாடலில், பசு பால்சொரிந்து அபிஷேகித்துவந்ததாகவும் ஒரு வரலாறு குறிக்கப்பெற்றுள்ளது. இது மாயூரமிருந்து சீகாழி செல்லும் கற்பாதையில் சுமார் ஆறுமைல் தூரத்தில் உள்ளது

சுவாமிபெயர் லக்ஷ்மிபுரீசுவரர்; மகாலட்சுமிநாதர். அம்மைபெயர் உலகநாயகி. தீர்த்தம் நீலதீர்த்தம். (இது அபிதான சிந்தாமணி கூற்று) மகாலக்ஷ்மிதீர்த்தம் எனவும் வழங்கும்.

**கல்வெட்டு:**

இத்தலத்தைப்பற்றிய கல்வெட்டு ஒன்றே உள்ளது. 1921ம் ஆண்டில் படியெடுக்கப்பெற்றுள்ளது. திரிபுவன சக்ரவர்த்தி இராஜராஜதேவர்க்கு ஆண்டு 15வது கும்பரவி அட்டமி ஞாயிறு மூலநக்ஷத்திரம் என்று தொடங்குகிறது.[1]

## 19. திருச்சிவபுரம்

தனபதி அரசன் தன் சாபவிமோசனத்திற்காக ஒரு பிராமணக் குழந்தையை வாங்கித் தந்தையும் தாயும் பிடிக்கச் சோமவார சிவராத்திரியில் அறுத்து அபிஷேகிக்க, அம்பாள்

[1] 538 of 1921. மீனரவி என்றும் பாடம் உண்டு.

வெளிப்பட்டு, அந்தக்குழந்தைக்கு அநுக்கிரகித்தார் என்பது செவிவழிச் செய்தியான வரலாறு. வெள்ளைப்பன்றியாகி திருமால் வழிபாடுசெய்த தலம். சுவாமிபெயர் சிவபுரநாதர். அம்மைபெயர் சிங்காரவல்லி. தீர்த்தம் சந்திரபுஷ்கரணி. கார்த்திகைச் சோமவாரங்களில் தீர்த்த விசேஷம். கடைசி சோமவாரத்தில் உற்சவம். அரசியலார் 1927 ல் படியெடுத்த 272 முதல் 282 எண் உள்ள 10 கல்வெட்டுக்கள் உள்ளன.

## 20. திருமறைக்காடு

இத்தலம் இன்று வேதாரண்யம் என வழங்குகின்றது. வேதங்கள் வழிபட்டமையால் இப்பெயர் பெற்றது. ஆதிராமர் இங்குவந்து, அணைகட்டி, இலங்கைசென்று, இராவணவதஞ் செய்தனர். பின்னர் அப்பழிநீங்கப் பூசித்தார். ஆதலால் ஆதிசேது எனவும் வழங்கும். பிரமதேவர் பூசித்து இறைவன் வாயிலாகவே வேதோபதேசம் பெற்றுச் சிருட்டித்தொழில் கைவரப்பெற்றனர். விஸ்வாமித்திரர் பூசைசெய்து பிரமருஷி யாயினர். பிந்திய இராமர் பூசித்து வீரகத்திதோஷம் நீங்கப் பெற்றார். தென்திசையைச் சமப்படுத்த இறைவன் ஆணையால் வந்த அகத்தியமுனிவர்க்கு, இறைவன் மணவாளத் திருக்கோலங் காட்டிய தலம். சுவாமிக்குப் பின்புறம் கருப்பக்கிருகத்துள் ளேயே மணவாளப்பெருமான் திருவுருவம் இருக்கிறது. நெய் யுண்ணவந்த எலி, அபுத்தி பூர்வமாகவே திரியைத்தூண்ட, அதனால் மறுபிறப்பில் அவ் எலி மாவலிச்சக்ரவர்த்தியாகிப் பேறுபெற்ற தலம். இதனைத் திருக்குறுக்கைத் தேவாரத்து அப்பர் சுவாமிகள் " திருமறைக் காடுதன்னில் '' என்னும் திருப் பாடலில் விளக்கியிருக்கிறார்கள்.

**மூர்த்திகள் :**

இறைவன்பெயர் வேதாரண்யேசுவரர்; தேவாரம் 'மறைக் காட்டுறையும் மணாளன்' எனக் குறிக்கின்றது. அம்மைபெயர் யாழைப்பழித்த மொழியம்மை; வீணாகானவிதூஷணி எனவும் வழங்குவர். தலவிருட்சம் வன்னி. சப்தவிடங்கத் தலங்களுள் ஒன்றாதலின் தியாகேசமூர்த்தி எழுந்தருளியிருக்கின்றார். அவர் பெயர் புவனிவிடங்கர். நடனம் ஹம்ச நடனம்.

**தீர்த்தம் :**

மணிகர்ணிகை, வேதபூஷண தீர்த்தம், வேதாமிருதம் (கடல்) முதலியன.

சம்பந்தசுவாமிகளும், அப்பமூர்த்திகளும் இத்தலத்திற்குத் தரிசனத்திற்காக எழுந்தருளியபோது, வேதங்கள் பூசித்த காலத்து அவை அடைத்த நேர்க்கதவம் திறக்கப்படாமலே வழக்காறற்றிருக்க, அப்பர் திறக்கவும், சம்பந்தர் அடைக்கவும் பாடி அற்புதம் நிகழ்த்திய தலம். சுந்தரமூர்த்திகள் சேரமான் பெருமாளோடு எழுந்தருளி வழிபட்டதலம். இங்கு, கோடி தீர்த்தம், ஆதிசேது மிக விசேடமானது. உருத்திரகோடி என்னும் இடத்திலும் கடலாடுவதுவழக்கம். அது புதை சேற்றுக் கடலாதலின் மிக எச்சரிக்கையாக இருத்தல்வேண்டும். அழகான கோடியக்காடு உண்டு. கோடிக் குழகர்கோயில் விசேடம்.

தலவிநாயகர் சிந்தாமணி விநாயகர். இராவணன் வழிபட்ட விநாயகர் வீரஹத்தி விநாயகர். துர்க்கை சந்நிதி விசேடமானது. வேதாரண்யம் விளக்கழகு என்று ஒரு பழமொழி இத்தலத்தைப் பற்றி வழங்கிவருகிறது. அதனாலே பராந்தகச்சோழர் முதலிய பலர் விளக்குத் தருமமே செய்திருக்கிறார்கள்போலும்.

இத்தலம் திருத்தருப்பூண்டியிலிருந்து பிரியும் வேதாரண்யம் தொடர்ச்சியில் இருக்கிறது.

**கல்வெட்டுக்கள் :**

இத்தலத்திலுள்ள கல்வெட்டுக்களை அரசியலார் கி. பி. 1904 ம் ஆண்டில் படியெடுத்திருக்கின்றார்கள். மொத்தம் 89 கல்வெட்டுக்களும், ஒரு செப்புப்பட்டயமும் இருக்கின்றன. அவற்றுள் சோழமன்னர்கள் காலத்தன எண்பத்திரண்டு. ஏனையவற்றுள் ஒன்று தஞ்சை துளஸாமகாராஜாவின் மகனை பிரதாபசிம்ம மகாராஜாவினது. மற்றவை இரண்டும் விஜயநகர அரசன் பிரபுடதேவ மகாராய, தேவமகாராயர் என்பவர்களுடையன. ஒன்று இன்னாரது என்று அறியப்பெறாத செப்புப் பட்டயம். சோழர்காலத்துக் கல்வெட்டுக்கள் முதற்பராந்தகன் முதல் குலோத்துங்கன் III வரை உள்ளன. அவற்றுள் முதற்

பராந்தகன்செய்த விளக்கீடுகள்பற்றிய தருமம் 38 கல்வெட்டுக்களால் அறிவிக்கப்பெறுகின்றன.

இத்தலம் உம்பளநாட்டுக் குன்னூர்நாட்டுத் திருமறைக்காடு எனக் குறிக்கப்பெறுகின்றது [1]. முதற் பராந்தக சோழன் காலத்துக் கல்வெட்டுக்கள் அனைத்தும் அவனுடைய ஆட்சி 5 ம் ஆண்டுமுதல் 34-ம் ஆண்டுவரை ஆண்டுகள்தோறும் விளக்குவைக்க ஆடுகளும், நிலமும், பொன்னும் அளித்தமையை அறிவிக்கின்றன [2]. இராஜராஜதேவனும், பரகேசரி இராஜராஜனும், குலோத்துங்கன் I குலோத்துங்கன் III இவர்களும் விளக்குக்கு நிலமும் ஆடுகளும் அளித்திருக்கின்றனர். இராஜேந்திரன் III காலத்தில் ஆட்சி 16-ம் ஆண்டில் நிலம்விட்ட செய்தி அறியப்பெறுகின்றது [3]. இராஜராஜன் III காலத்தில் சிங்களதண்டநாயகனால் கோடிக்குழகர்கோயில் சீரணோத்தாரணம் செய்விக்கப்பெற்றது [4]. கி. பி. 1496-ல் அர்ச்சகருக்குச் சில உரிமைகள் வழங்கப்பெற்றன என்று செப்புப் பட்டயம் கூறுகிறது.

## 21. திருக்கோலக்கா

இத்தலம் திருத்தாளமுடையார்கோயில் என வழங்குகிறது. திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருமுலைப்பால் உண்டருளிய மறுநாள், இத்தலத்திற்கு எழுந்தருளிக் கையினால் தாளம் இட்டுப் பாடினர். அப்போது இறைவன் திருவருளால் திருவைந்தெழுத்து எழுதப்பெற்ற பொற்றாளம் இவர் கைவந்தருளப்பெற்றது. சுவாமிபெயர் சப்தபுரீசுவரர். அம்மை பெயர் ஓசைகொடுத்தநாயகி. கிழக்குப்பார்த்த சந்நிதி. கோயில் வாயிலில் அழகான தீர்த்தம் இருக்கிறது. சீகாழி திருமுலைப்பால் அன்று மாலை சம்பந்தசுவாமி இங்கு எழுந்தருளுவர்.

இத்தலம் சீகாழி ரயில்வேஸ்டேஷனுக்கு அருகில் $\frac{1}{4}$ மைல் தூரத்தில் இருக்கிறது.

---

[1] 415 of 1904. [2] 433 to 436, 444 to 459. 463 to 469, 478 to 488 of 1904. [3] 460 of 1904. [4] 501 of 1904.

# 22. திருச்செம்பொன்பள்ளி

இத்தலம் செம்பொனார்கோயில் என இக்காலத்து வழங்கப் பெறுகின்றது. இந்திரன் விருத்திராசுரனைக் கொல்வதன் பொருட்டுப் பூசித்து வழிபட்டான். அதனால் இந்திரபுரி எனவும் வழங்கப்பெறும். முருகப்பெருமான் தாரகாசுரவதத்தின் பொருட்டுப் பூசித்தமையின் ஸ்கந்தபுரி எனவும் வழங்கும். அகஸ்தியர் வழிபட்டுப் புருஷார்த்தங்களைப்பெற்றார். பிரமன் பூசித்துப் படைப்புத்தொழில் கைவரப்பெற்றான். இரதி பூசித்துத் தன் பதியாகிய காமனையடைந்தாள். நாககன்னியர்கள் வழிபட்டு நல்ல கணவரை அடைந்தனர். இந்திரன், தக்ஷன் யாகத்தில் கலந்துகொண்ட குற்றத்திற்குப் பரிகாரந்தந்தருளிய தலமும் இதுவே. வசிஷ்டர், திக்பாலகர்கள், காவிரி, சமுத்திரம் முதலியவர்களும் பூசித்துப் பேறுபெற்றனர். வீரபத்ரர் தக்ஷ யாகத்திற்காக அவதரித்த தலமும் இதுதான். இத்தலத்திற்கு அருகாமையில் ஓடும் காவிரியில் இட்ட எலும்புகள் பூமரங் களாய் இறைவனுக்குச் சாத்தப் பயன்பெறும்.

சுவாமிபெயர் சுவர்ணபுரீசுவரர். அம்மைபெயர் சுகந்தவன நாயகி; மருவார்குழலி. தலவிருட்சம் வன்னி. தீர்த்தம் இந்திர தீர்த்தம், காவிரி முதலியன. கிழக்குப்பார்த்த சந்நிதி. அம்மை தென்பக்கத்தில் மேற்குமுகமாக எழுந்தருளியிருக்கின்றார்.

இத்தலம் மாயூரம் தரங்கம்பாடி கிளைப்பாதையில் உள்ளது. இது ஒரு ஸ்டேஷன்.

**கல்வெட்டுக்கள் :**

இத்தலத்தைப்பற்றியனவாக 6 கல்வெட்டுக்கள் உள்ளன. அவை 1925 ல் படியெடுக்கப்பட்டுள்ளன. இராஜாதிராஜன் ஆட்சி ஐந்தாமாண்டில் திருவாலங்காடுடையார்க்கு விளநகரான நித்தவிநோத சதுர்வேதிமங்கலத்து விளநாட்டுச்சபையார் நிலம் விட்ட செய்தியை அறிவிப்பது. அதேயாண்டில் இராஜாதி ராஜ வளநாட்டு திருஇந்தளூர் நாட்டு மணற்குடியான உத்தம சோழ சதுர்வேதிமங்கலத்துச் சபையார், செயங்கொண்டசோழ மண்டலத்து ஆக்கூர்நாட்டு ஆக்கூரான இராஜேந்திரசிம்ம சதுர்வேதிமங்கலத்து மேல்பாதி அபிமானநல்லூரில் அரசற்கு,

நன்றாக, வழிபடவருவார்க்கு உணவிற்காக நிலம் வழங்கப்பெற்றுள்ளது[1]. மூன்றாங்குலோத்துங்கன் காலத்து இராசேந்திர சிங்க நாடாகிய ஆக்கூரில் தூண்டாவிளக்கெரிக்க நாற்பது பொற்காசுக்கு நிலம் வாங்கி உழவரிடம் ஒப்படைக்கப்பட்டது. 6-ம் ஆண்டில் அரசியலில் சிறந்த செய்தி ஒன்று அறிவிக்கப்படுகிறது. சிங்களவர்களைத் துணைக்கொண்டு பாண்டியர்கள் படையெடுத்துவந்த படையேறு கலகத்தில் செம்பொன்னார் கோயிலிலுள்ள தேவடியாரும் கோயில் நியாயத்தாருமாகச் சேர்ந்து எல்லாத் திருவுருவங்களையும் திருவிடைக்கழி இளையபிள்ளையார் கோயிலில் கொண்டுபோய்வைத்துப் பாதுகாத்தனர். மேலும் அவ்வாண்டில் பெரிய புயற்காற்றடித்திருக்கின்றது. அதனால் தப்பாதவேதியன் திருவாசல் வடக்குச்சுவரும் தேரடி இரண்டும் வீழ்ந்தன[2]. இன்னார் என்று அறியப்படாத இராசகேசரி வர்மன் ஆறும் ஆண்டில் பூசைக்கும் பணிக்குமாகத் தலைச்செங்காட்டுச் சபையார் ஒருவனிடமிருந்து நிலம் வாங்கி அரசற்கு நன்றாக அளித்தனர். இதில் இராசசுந்தரன்வீதி என்ற ஒரு தெருப்பெயர் குறிப்பிடப்படுகின்றது[3]. சரபோஜிராசா கலி 4821-ல் செம்பொன்னார் கோயிலுக்குத் தலைச்சங்காடு சபையார் கிராமங்களின் நன்மைக்காக ஆண்டுக்கு ஒருமுறை வரியோடுகூட தறிகளின் உற்பத்தியளவையொட்டி ஆயம் வசூலித்துக்கொள்ளவும் காவேரிப்பட்டினம் அய்யாவையனும் தாண்டவராய முதலியாரும் வசூலிப்பாளராயிருக்கவும் ஆணை தரப்பட்டுள்ளது[4].

## 23. திருப்புத்தூர்

இத்தலம் திருப்புத்தூர் எனவும், கோயில் திருத்தளி எனவும் வழங்கும். அப்பர் சுவாமிகள் 'திருப்புத்தூரில் திருத்தளியான் காண்' என அறிவிப்பார்கள். உமாதேவியும், இலக்குமியும் பூசித்துப் பேறுபெற்ற தலம். இறைவன் அம்மை சந்நிதிகளுக்கு இடையில் பைரவர் சந்நிதி இருக்கிறது. பைரவர் சிறப்புடையவர். ஆனந்தக்கூத்தப் பெருமான், சிவகாமியம்மை

---

[1] 172, 173 of 1925. [2] 170, 171 of 1925. [3] 174 of 1925. [4] 175 of 1925.

திருவுருவங்கள் கற்சிலையாலான கண்கவரும் வனப்பின. விஷ்ணுவுக்கும் சந்நிதி உண்டு.

சுவாமி பெயர் புத்தூரீசர்; ஸ்ரீதளிநாதர். அம்மை சிவகாமி அம்மையார். தீர்த்தம் திருத்தளித் தீர்த்தம், சிவகங்கை முதலியன. தலவிருட்சம் கொன்றை. இத்தலம் பிரான்மலையி லிருந்து தென்கிழக்கே 15 மைல் தூரத்திலுள்ளது.

**கல்வெட்டுக்கள் :**

அரசியலாரால் 1908ம் ஆண்டில் படியெடுக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் 51 உள்ளன.

இறைவன் திருப்பெயர் திருக்கற்றளிப்பட்டாரர்;[1] ஸ்ரீதளி பரமேஸ்வரர்,[2] திருத்தளி உடைய பரமேஸ்வரர். திருத்தளி ஆண்ட நாயனார்[3] என வழங்கப்பெறுகின்றார். அம்மை திருக்காமக் கோட்டமுடைய நாச்சியார்[4] திருப்பள்ளியறை நாச்சியார் எனவும் வழங்கப்படுகின்றார். இவர்களேயன்றிக் கோயிலுக்குள்ளே கைலாசமுடைய நாயனார்[5] அகஸ்தீஸ்வரம் உடையார்[6] கோயில்களும் இருந்தனவாக அறியப்படுகின்றன. பைரவர் கோயில் மிகப் பிரசித்தமானது[7].

விஜயநகரத்தை அரசாண்ட வீரப்பிரதாப அச்சுததேவ மகாராயர் நன்மைக்காகப் பெரியராமப்ப நாயக்கரால் பைரவ ருக்கு நிலம் அளிக்கப்பட்டதாகத் தெரிகிறது. இதைப்பற்றிய குறிப்புக்கள் விஜயநகர அரசர்கள் கல்வெட்டுக்களில் இதற்கு முந்தியதில் இல்லை.

கைலாசமுடைய நாயனார் கோயில் தேவரடியாளான ஒருத்தி திருநாவுக்கரசு நாயனார் படிவத்தைப் பிரதிஷ்டை செய்யவும், நைவேத்தியத்திற்காகவும் பொன் அளித்த செய்தி யைத் திரிபுவன சக்கரவர்த்தி விக்கிரமபாண்டியன் 12-ம் ஆட்சி யாண்டு கல்வெட்டொன்று காட்டுகின்றது.[8] கோவில் அடியாளுக்கிருந்த அடியார் பக்தி என்னே! திருஞானசம்பந்தர்

[1] 90 of 1908, [2] 93 of 1908, [3] 99 of 1908, [4] 123 of 1908, [5] 114 of 1908, [6] 130 of 1908, [7] 121 of 1908, [8] 117 of 1908.

திருமடமும்[1] திருத்தொண்டத்தொகைத் திருமடமும்[2] சைவமடம் ஒன்றும் இருந்தன. இவற்றுள் திருஞானசம்பந்தர் திருமடத்தில் ஸ்ரீகண்ட சிவாசாரியர் இருந்ததாகவும் சோழ தேசத்தில் இருந்த நிலத்தைவிற்று அவர்க்குக் கொடுக்கப்பட்ட தென்றும் அதே கல்வெட்டு அறிவிக்கின்றது. இக்கல்வெட்டு மாறவர்மன் சுந்தரபாண்டியன் I (கி. பி. 1214-35) காலத்தது.

இவையன்றிக் கிராம தேவதைகளாக அங்காளம்மன் கோயில்[3], நின்ற நாராயணப்பெருமாள்கோயில்[4] இவைகளும் திருப்புத்தூர் கிராமங்களில் இருந்தனவாகக் குறிக்கப்படு கின்றன. பெருமாள்கோயில், திருத்தளிஉடையார்கோயிலிலேயே இருந்ததாகக் குறிக்கப்படாமை ஊன்றி அறிதற்குரியது.

இத்தலத்து நிகழ்ச்சிகள் யாவும் பாண்டியர் காலத்துக் கல்வெட்டுக்களாகவே பெரும்பாலும் அமைந்திருக்கின்றன. ஸ்ரீவல்லபபாண்டியன் காலத்தில் ராஜேந்திரசோழ கேரளனை நிச்சலராஜனால் கேரளசிங்க வளநாட்டில் விளக்கிற்காக 50 ஆடு கொடுக்கப்பட்டிருக்கிறது.[5] அரசனாலேயே 25 பசுக் களும் ஒரு காளையும் ஒரு விளக்கிற்காகக் கொடுக்கப்பட்டிருக் கின்றன.[6] சோழ தேசத்தில் கயாமாணிக்க வளநாட்டு மருகல் நாட்டுப் புத்தனூரில் வசித்த ஒருவர் 25 பசுக்களையும் ஒரு காளையையும் விளக்கிற்காகக் கொடுத்தார்[7]. காளிங்கராயன் வேண்டுகோளுக்காக இரண்டு கிராமங்கள் அளிக்கப்பட்டன. உலகமுழுதுடையாள் என்னும் அரசியால் மடப்பள்ளி திருப்பணிசெய்யப்பட்டது.[8]

**பராக்கிரம பாண்டியன் :**

இவன் காலத்திய கல்வெட்டுக்கள் 4 உள்ளன. அவற்றுள் இவன் ஆட்சிப் பதினோராம் ஆண்டில் புறமலைநாட்டுப் பொன் னமராவதியான ராஜேந்திரசோழ நிஷதராயன் என்பவனால் திருத்தளி உடையார் கோயில் உற்சவத்திற்காக நெல்

---

[1] 129 of 1908. [2] 116 of 1908. [3] 138 of 1908. [4] 140 of 1908. [5] 93 of 1908. [6] 108 of 1908. [7] 109 of 1908. [8] 115 of 1908.

அளிக்கப்பட்டது.[1] திருப்புத்தூர்ச் சபையார்கூடி நர்லோக வீரன் சந்தி என்னும் விழாவிற்காக நிலம்விற்றுக் கொடுத்த வரலாறு அறிவிக்கப்படுகிறது[2]. ஓர் அந்தணனால் திருப் பள்ளி அறை நாச்சியார் நிவேதனத்திற்காகப் பொன் அளிக் கப்பட்டது. உய்யவந்தான் கண்டிதேவனான காங்கேயன் என்பவனால் கோயிலுக்கு அளிக்கப்பட்ட சாசனங்கள் பட்டிய லாகக் குறிக்கப்பட்டிருக்கின்றன.

## குலசேகர பாண்டியன் :

நியமம் என்னும் ஊரான் ஒருவனால் விளக்குத்தண்டுக் காகப் பொன்னும், தேனுற்றுப்பாசன வசதியும்செய்து கொடுக் கப்பட்டதாக அறியப்படுகிறது. அதிசயப் பாண்டியநல்லூரான குட்டக்குடியில் கண்டன் உய்யவந்தானான காங்கேயனால் திருப் பதியம் விண்ணப்பிப்பார்க்கு இறையிலியாக அளிக்கப்பட்டது. இந்த நிலம், வீரகுணப் பெருமாள் என்பவரால் திருப்புத்தூர் திருத்தளியிலுள்ள கூத்தாடு தேவரான நடராஜ தேவருக்கு அளிக்கப்பட்டிருந்தது. அதே கோயிலிலுள்ள சைவமடம் ஒன்றிற்குத் திருவாலந்துறை உடையானான திருக்கொடுங் குன்ற முடையான் நிஷதராஜனால் சில வரிகள் வசூலித்துக் கொள்ள உரிமை அளிக்கப்பட்டது. திருப்புத்தூர் மூலபரிஷத் என்னும் சபையார் மதுரைசென்று கோயில் நிலங்களுக்கு வரிகட்டி வரவேண்டியதற்காக வழிப்பயணச் செலவான ஒரு குறிப்பிட்ட தொகையைத் தள்ளுபடிசெய்து கொடுத்திருக் கிறான்.

கைலாசமலைநாதர் கோயில் திருவிழாவிற்காகச் சம்வத்சர வாரியமாக வரி தள்ளுபடி செய்யப்பட்டமை குறிக்கப்பட் டுள்ளது. தயாபஞ்சகம் என்றழைக்கப்படும் மண்டபத்தில் மூலச்சபையார் கூடிச் சில கொடுக்கல் வாங்கல்கள் செய்த செய்தியும், திருத்தொண்டத் தொகையான் திருமடமும் குறிக் கப்படுகின்றன. சோழபாண்டிய வளநாட்டு குலசேகரநாட்டுப் பிராமணி ஒருவனால் கோயிலில் நான்கில் மூன்றுபங்கு விளக்கு களைப்போட பொன் வழங்கப்பட்டது. கண்டிய தேவரால் திருக்காமக் கோட்டமுடைய நாச்சியாரை மருந்து சாத்திப்

[1] 94 of 1908, [2] 98 of 1908.

பிரதிஷ்டைசெய்யத் தம்முடைய நிலக்குடிவார உரிமை விற்றுக் கொடுக்கப்பட்ட செய்தி அறியப்படுகிறது.[1] கோயில் கணக்கர்களால் தவறிழைக்கப்பட்ட கோயில் நிலங்களைத் திரும்பவும் அளந்துகட்டி மீண்டும் கோயிலுக்கே உரிமையாக்கியதாக இவனுடைய 23-ம் ஆண்டுக் கல்வெட்டு அறிவிக்கிறது. தேவரகண்டன் மனைவியான அவனிமுழுதுடையாளால் திருமஞ்சன தீர்த்தத்திற்காக நான்கு தண்ணீர்ப் பானைகள் அளிக்கப்பட்டன.

**மாறன்சடையன் :**

இவன் காலத்தில் 40 கழஞ்சு பொன் அளிக்கப்பட்ட செய்தி அறிவிக்கப்படுகிறது[2]. நாகராஜதேவன் I (கி. பி. 9851-1013) திருப்புத்தூர் சபையார் உறங்காப்புளி அடியில்கூடி ஏதோ தீர்மானித்ததாகத் தெரிகிறது. சிதிலமாதலின் முழுவரலாற்றுக் குறிப்பும் தெரியவில்லை[3].

**வீரபாண்டியன் :**

திருத்தொண்டத் தொகைத் திருமடத்திற்குத் திருப்புத்தூர்ச் சபையார்கூடி இறையிலிசெய்ததை அறிவிக்கிறது. தயாபஞ்சகம் என்னும் மண்டபத்தைத் திருப்பணிசெய்த வரலாறும் குறிக்கப்படுகிறது. தேனூற்றுப் பாசனமான கொறைக்குடியான் அவையன் பெரிய நாயனுரான விசயாலய தேவனுல், யவனர்கள் ஆக்கிரமித்த கோயிலைவென்று திரும்பவும் பெற்றுப் புனிதப்படுத்தப்பட்டது. இது நடைபெற்ற நாள் 2-8-1339 திங்கட்கிழமை என்று எபிகிராபிகா இண்டிகா பகுதி 11. பக் 138 கூறுகிறது 2-12-1339-ல் அவையன் சொரக்குடி மாளவச்சக்ரவர்த்தியினுல் பாடிக்காவல் உரிமைகள் விற்கப்பட்டன. சில கோயில் நிலங்கள் அர்ச்சகருக்கு மான்யமாக அளிக்கப்பட்டன[4].

விஜயநகர அரசரான கிருஷ்ணப்பதேவமகாராஜன் காலத்து சகம் 1432-ல் பாண்டி மண்டலத்து கேரளசிங்க வளநாட்டுக்

---

[1] 123 of 1908, [2] 90 of 1908, [3] 105 of 1908, [4] 128 of 1908.

கிராமங்களான நாரணமங்கலம், காரையூர் என்ற இரண்டையும் நரசிம்மராய செல்லப்பரது சந்திக்காகக் கோயிலுக்கு அளித்தான். அவை இரண்டும் இப்பொழுது செல்லப்பாபுரம் என்று வழங்கப்படுகின்றன. அச்சுததேவ மகாராயர் காலத்தில் அருவியூர் நகரமான குலசேகரப்பட்டினத்தான் ஒருவனால் விளக்கிற்காக நிலம் அளிக்கப்பட்டிருக்கிறது [1]. வயிரவருக்குப் பெரிய ராமப்பநாயகருக்கு நன்மை உண்டாக நிலம் அளிக்கப் பட்டது. கிருஷ்ணராயர் காலத்து வீரநரசிம்மராய நாயக்கரான செல்லப்பர் நன்மைக்காகத் திருப்புத்தூர் உடையான் சிங்கம நாயக்கனால் நிலம் வழங்கப்பட்டது [2]. நாகமநாயக்கர் மகனை விசுவநாதநாயக்கர் நன்மைக்காக ஒரு கிராமம் (வரகுண புத்தூர்) வழங்கப்பட்டது. இவையன்றி நின்ற நாராயண பெருமாள் கோயிலுக்கும் அங்காளம்மன் கோயிலுக்கும் நிபந்தங்கள் அளிக்கப்பட்டிருப்பதை அறிவிப்பன மூன்று கல்வெட்டுக்கள். இங்ஙனம் திருப்புத்தூர்க்கோயில் பல பாண்டிய மன்னர்களுடைய சமய உணர்ச்சிக்கு அரணாக இருந்தமை அறிந்து இன்புறுதற்குரியது.

## 24. திருப்புன்கூர்

இது புன்கமரத்தைத் தலவிருட்சமாகக்கொண்டதாகலின் திருப்புன்கூர் எனப்படுவதாயிற்று. வடமொழியில் காஞ்சாரண்யம் என வழங்கும். இத்தலத்திற்குப் பக்கத்திலுள்ள ஆதனூரில் அவதரித்த திருநாளைப்போவார் என்னும் நந்தனார் பக்திக்காக நந்தியை விலகும்படிச்செய்த தலம். இவர் வெட்டிய திருக்குளம் ஒன்றும் இருக்கின்றது. இதற்கு வடக்கே உள்ள திருப்பெருமங்கலத்தில் வசித்த ஏயர்கோன் கலிக்காமநாயனார் திருக்கோயிலைப் புதுக்கிப் பல திருப்பணிகளைச் செய்திருக்கிறார். கலிக்காமர் வேண்டுகோளுக்காக இறைவன் 12வேலி நிலங்களைப் பெற்றுக்கொண்டு மழைபெய்வித்து உலகை உய்வித்தார். இதனைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தம்பதிகத்து "வையகம் முற்றும் மாமழை" என்ற பாடலால் குறிப்பிடுகின்றார்கள். இச்செய்தி கோயில் திருப்பணியர் விருத்தத்திலும் கூறப் படுகிறது.

---

[1] 112 of 1908, [2] 91 of 1908.

இறைவன்பெயர் சிவலோகநாதர்; இறைவிபெயர் சொக்க நாயகி; தீர்த்தம் கணபதிதீர்த்தம்; விருட்சம் புன்கமரம். இத் தலம் வைத்தீஸ்வரன்கோயிலிலிருந்து மேற்கே 1¾ மைலில் உள்ளது.

**கல்வெட்டுக்கள் :**

411 முதல் 415 வரையிலுள்ள ஐந்து கல்வெட்டுக்கள் உள்ளன. 1918-ல் படியெடுக்கப்பட்டன. இறைவன் சிவலோக முடையநாதர் என்று வழங்கப்படுகின்றார்[1]. இராசராசன் ஆட்சி 11ம் ஆண்டில் சிவலோகமுடையார் கோயிலிலேயே வடக்கு இரண்டாம் பிராகாரத்து விக்கிரம சோழீச்சுர முடைய நாயனார் கோயிலைக்கட்ட விக்கிரம சோழனை வயநாட்டரையன் மருதூர் உடையான் நிலமளித்து இருக்கிறான்[2]. கோப்பெருஞ்சிங்கன் 2ம் ஆண்டில் இத்தலம் இராசாதிராச வளநாட்டு திருவாலிநாட்டுத் திருப்புன்கூர் எனக் குறிப்பிடப்பெற்றுள்ளது. பாண்டிய குலாசனி வளநாட்டுக் கீழையூர்நாட்டுக் குறிச்சியான் ஒருவன் சிவலோகமுடைய மாதேவர் திருமஞ்சனத்திற்கும் திருமாலைக்குமாக நிலமளித் திருக்கிறார்[3]. ஏனைய கல்வெட்டுக்கள் விளக்கிற்காக நிலமளித்த செய்தியை அறிவிப்பன.

## 25. திருச்சோற்றுத்துறை

அருளாளர் என்னும் அந்தண அன்பர்க்கு அட்சயபாத்திரம் அளித்துப் பஞ்சகாலத்தில் அடியார்களுக்கு அன்னமிட்டுக் காத்த தலம். கௌதம முனிவர் தவஞ்செய்து முத்திபெற் றமையால் கௌதமாஸ்ரமம் என்று வழங்கப்படும். இந்திரன், சூரியன் முதலியோர்கள் வழிபட்டு உய்ந்தனர். சூரியன் வழிபட்ட செய்தியை "செங்கதிரோன் வணங்கும் திருச்சோற்றுத்துறை நாதன்" என்னும் நேரிசையால் அறியலாம். திருவையாற்று சப்தஸ்தான ஸ்தலங்களில் ஒன்று. இறைவன்பெயர் தொலையாச் செல்வர். இறைவியின்பெயர் ஒப்பிலாம்பிகை. வடமொழியில்

[1] 411 of 1918. [2] 412 of 1918. [3] 411 of 1918.

ஓதவனேஸ்வரர், அன்னபூரணி எனவும் வழங்கப்படும். தீர்த்தம் காவிரி. இத்தலம் தஞ்சாவூரிலிருந்து திருவையாற்றுக்குப் போகும்வழியில், திருக்கண்டியூரிலிருந்து 1½மைல் தென்கிழக்கில் இருக்கிறது.

**கல்வெட்டு :**

இத்தலத்தைப்பற்றியதாக அரசியலார் படி எடுத்த கல்வெட்டுக்கள் 12-ம்; M. S. S. எடுத்தன 27-ம்; வி. ரங்காச்சாரியா M. A. அவர்கள் எடுத்தது 25-ம் ஆக 64 கல்வெட்டுக்கள் உள்ளன.

இவை பராந்தகன், இராஜராஜன் I, இன்னுன் என்று கணித்தறியமுடியாத கோராஜகேசரி, பரகேசரி, கோநேரின்மை கொண்டான், குலோத்துங்கன் காலத்தன. இவை பெரும்பாலும் சிதைவுற்றிருத்தலின் நிகழ்ச்சிகளை நன்கு அறிந்து கொள்ளக் கூடவில்லை. ஆயினும் விளக்குகளுக்காகவும், நிவேதனத்துக்காகவும், விழாவிற்காகவும் நிலமும் பொன்னும் அளித்த செய்திகள் குறிக்கப்படுகின்றன.

ஒரு கல்வெட்டு நடனமாதிற்குச் சர்வமான்யம் விட்ட செய்தியைத் தெரிவிக்கிறது. நலமல்லூர் தேவர் என்பவர் தொலையாச் செல்வருக்கு விளக்குத்தண்டு செய்ய நிலமளித்த செய்தி தெரிகிறது. கடவுள் தொலையாச்செல்வர் என்றும், திருச்சோற்றுத்துறை நாயனுர் என்றுங் குறிப்பிடப்படுகிருர்.

## 26. திருநறையூர்

தலத்தின் பெயர் திருநறையூர். ஆலயத்தின் பெயர் சித்தீச்சரம். சித்தர்கள் வழிபட்டுப் பேறுபெற்ற இடமாதலின் இப்பெயர்பெற்றது. இறைவன் சித்திநாதர். அம்மை அழகம்மை. பிள்ளையார் ஆண்டபிள்ளையார். இங்கு வழிபட்டுய்ந்தோர் குபேரன், தேவர்கள், கந்தருவர்கள் ஆகியோர். தீர்த்தம் பிரம தீர்த்தம். இது கோயிலுக்கு வடபால் உள்ளது. தேன்சித்தி தீர்த்தம் என்ற ஒன்றும் உள்ளதென்பர்.

இத்தலம் கும்பகோணத்திலிருந்து திருவாரூருக்குச் செல்லுகின்ற கற்பாதையில் தென்கிழக்கே 5½ மைல் தூரத்தில் உள்ளது.

**கல்வெட்டு :**

இத்தலத்தில் அரசியலார் படியெடுத்த கல்வெட்டுக்கள் 24 உள்ளன. அவற்றுள், முதல் இராஜராஜன் காலமுதல் குலோத்துங்கன் III காலம் வரையிலுள்ள சோழமன்னர்களின் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. கி. பி. 1118 முதல் 1135 வரை ஆண்ட விக்ரமனே இத்தலத்தில் மிக ஈடுபாடுடையவன் என்பது தெரிகின்றது. இங்குக் குறிக்கப்பெற்ற அரசர்கள் இராஜராஜன் I, வீரராஜேந்திரன் II, குலோத்துங்கன் I, II, III, விக்ரமசோழன், இராஜராஜன் II, இராஜாதிராஜன் II.

இவைகளில், இவ்வூர் க்ஷத்திரிய சிகாமணி வளநாட்டுத் திருநறையூர் நாட்டுத் திருநறையூர் எனவும், அருண்மொழித் தேவவளநாட்டுத் திருநறையூர் எனவும், விக்கிரமன் முதற் குலோத்துங்கன் இவர்கள் காலத்துக் குலோத்துங்க சோழவள நாட்டுத் திருநறையூர் எனவும் பஞ்சவன் மாதேவியான சதுர்வேதி மங்கலத்துத் திருநறையூர் எனவும் குறிக்கப்பெற்றுள்ளது.

சுவாமிபெயர் சித்தநாதேஸ்வரமுடையதேவர் எனவும் சித்தநாதேஸ்வரமுடையார் எனவும் வழங்கும்[1]. இங்குள்ள பிக்ஷாடனதேவர் சிறப்புடையார். இவருக்குத் திருநறையூர்ச் சிவப்பிராமணர் ஒருவர் 30 காசு பொன்னை நிவேதனத்திற்காக அளித்தார்[2]. இங்கு வழிபாட்டிற்காகவரும் சிவயோகிகட்கு உணவுக்காக மண்ணிநாட்டுக்கருப்பூர் உடையான் ஒருவர் நிலம் விட்டார். இத்தலத்துள்ள பிடாரிகோயிலுக்கு நிலம்விட்ட செய்தியும் குறிக்கப்படுகின்றது[3]. ஏனைய கல்வெட்டுக்கள் விளக்குக்காகவும் நிவேதனத்திற்காகவும் பலர் நிலமும் பொன்னும் அளித்ததை அறிவிக்கின்றன.

[1] 156 of 1908, [2] 161 of 1908, [3] 175 of 1908.

# 27. திருக்குரங்கணில்முட்டம்

இது தொண்டைநாட்டுத் தலங்களில் ஒன்று. குரங்காகிய வாலியும், அணிலும், காகமும் வழிபட்டதால் இப்பெயர் பெற்றது. முட்டம்—காகம். இறைவன் திருநாமம் வாலி வழிபட்டதைக் காட்டும் சான்று. காக்கைமடு காக்கை வழிபட்டதைக் காட்டுவது. மூன்றின் உருவங்களும் ஆலயவாயிலில் அமைக்கப் பட்டிருக்கின்றன.

இறைவன் திருநாமம் வாலீசுவரர்; இறைவி திருநாமம் இறையார்வளையம்மை. இதனையே "இறையார் வளையாளை ஓர்பாகத்தடக்கி" எனப் பதிகம் அறிவிக்கிறது. தீர்த்தம் வாலி தீர்த்தம். இத்தலம் காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர்கோயிலிலிருந்து தெற்கே ஆறுமைல் தூரத்தில் பாலாற்றின் தென்கரையில் இருக்கிறது.

**கல்வெட்டுக்கள் :**

இத்தலத்தைப்பற்றியனவாக 6 கல்வெட்டுக்கள் உள்ளன. அவை கோநேரின்மைகொண்டான், குலோத்துங்கன், ராஷ்டிரகூட கன்னரதேவன், கிருஷ்ணதேவராயர் இவர்கள் காலத்தன. அவற்றுல் இத்தலம் காளியூர்கோட்டத்து இருகழிநாட்டு மாவண்டூர்ப்பற்றத்துப் பல்லவபுரமான திருக்குரங்கணில் முட்டம் என்று குறிப்பிடப்படுகிறது[1]. கடவுள் திருக்குரங்கணில் முட்டமுடைய நாயனூர் என்றும், கொய்யாமலரீசுவர தேவர் என்றும் குறிப்பிடப்படுகிறூர். பூஜா விருத்திக்காகச் சகம் 1451-ல் கிருஷ்ணதேவ மகாராயர் பல்லவபுரங் கிராமத்தை அளித்தார்[2]. ராஷ்டிரகூட கன்னரதேவன் ஸ்ரீ பலிபூஜைக்காக நிலம் அளித்தான். சம்புவராயரால் சத்திமங்கலமாகிற அம்ம நல்லூர் கிராமத்தை நிபந்தமாகவிட நீறணிந்தான் சேதுராயனுக்கு உத்தரவிட்டான்[3].

---

1 290 of 1902. 2 295 of 1902. 3 291 of 1902.

## 28. திருவிடைமருதூர்

இத்தலம் மத்தியார்ச்சுனம் எனவும் வழங்கப்பெறும். வடக்கே ஸ்ரீ பர்ப்பதமாகிய மல்லிகார்ச்சுனமும், தெற்கே அம்பாசமுத்திரத்திற்கு அருகாமையிலுள்ள திருப்புடைமருதூ ராகிய புடார்ச்சுனமும் விளங்க இவற்றின் இடையில் இது விளங்குதலின் இப்பெயர்பெற்றது. அர்ச்சுனம் - மருது. இம் மூன்றுதலங்களுமே மருதைத் தலவிருட்சமாகக் கொண்டிருப்பது அறியத்தக்கது. இது காவிரிக்குத் தென்கிழக்கில் உள்ள தலம். வழிபட்டோர் உமாதேவியார், விநாயகர், முருகன், விஷ்ணு, காளி, இலக்குமி, சரஸ்வதி, வேதங்கள், மூன்றுகோடிஉருத்திரர், பன்னிரு சூரியர், வசிஷ்டர், அயிராவணமென்னும் யானை, சிவ வாக்கியர், கபிலர், அகஸ்தியர், வரகுணதேவர், பட்டினத்தடிகள் முதலியோர்.

வரகுணதேவ பாண்டிய மன்னனுக்குப் பிரமகத்தி நீங்கிய தலம். இப்பிரமகத்தி இரண்டாங் கிழக்கோபுரத்து வாயிலில் வலப்பக்கத்தில் இருக்கின்றது. கிழக்குவாயிலில் பட்டினத் தடிகளும் மேற்குவாயிலில் பத்திரகிரியாரும் எழுந்தருளி இருந்தனர். அம்மை மௌனமாய் இருந்து தவஞ்செய்த மூகாம்பிகைசந்நிதி, அம்பாள்கோயில்வாசலில் தனியே இருக் கிறது. பெரியபிராகாரத்திற்கு அஸ்வமேத பிராகாரம் எனப் பெயர். அதனை வலம்வரின் அஸ்வமேதயாகம் செய்தபலன் சித்திக்கும் என்பது மரபு. பேய்பிடித்தவர்களும் பைத்தியம் பிடித்தவர்களும் வலம்வந்தால் அவை நீங்குகின்றன என்பது இன்றும் கண்கூடு. இத்தலம் மகாலிங்கத்தலமாக இதனைச்சுற்றி சிதம்பரம் நடராஜர் சந்நிதியாகவும், ஆலங்குடி தட்சணா மூர்த்தி சந்நிதியாகவும், சூரியனார்கோயில் நவக்கிரகங்களின் சந்நிதியாகவும், திருவலஞ்சுழி விநாயகர் சந்நிதியாகவும், சுவாமி மலை முருகன் சந்நிதியாகவும், சீகாழி வயிரவர் சந்நிதியாகவும், சேய்ஞலூர் சண்டேசுவரர் சந்நிதியாகவும் விளங்குகிறதென்பர். இத்தலத்துத் தைப்பூசவிழா மிகச் சிறந்தது. காவிரி அயிரா வணத்துறையில் சுவாமிசென்று தீர்த்தம் அருளுவர்.

**கல்வெட்டுக்கள் :**

இத்தலத்தைப் பற்றிய கல்வெட்டுக்கள் 149. அவை பராந்தகன் I (கி. பி. 905 - 947) குலோத்துங்கன் III வரையி

லுள்ள சோழபரம்பரையினர் காலத்திலும் வரகுணன், சுந்தர பாண்டியன் முதலிய பாண்டியமன்னர்கள் காலத்திலும் வெட்டப்பட்டகல்வெட்டுகள். இவற்ருல் அறியப்படும் சிறந்த நிகழ்ச்சிகள் இத்தலம் உய்யக்கொண்டசோழவளநாட்டு, திரைமூர்நாட்டு திருவிடைமருதூர் எனவழங்கப்படுகிறது. பரகேசரி வர்மனை முதல் இராஜேந்திரன் மூன்றுமாண்டில் ஏகநாயகன் திருவாசலுக்கு விளக்குப்போட ஆடுகள் அளித்தமை அறியப்படுகிறது[1]. இதனுல் மகாலிங்க சுவாமிக்கு ஏகநாயகர் என்ற பெயருண்மை அறியப்படும்.

இத்தலத்து எழுந்தருளியுள்ள சோமாஸ்கந்தர் ஆடல் விடங்கதேவர் என்று அழைக்கப்படுகிருர்[2]. இத்தேவர் இங்க நாடு பல்லவராயனுல் பிரதிஷ்டை செய்விக்கப்பட்டவர். முதல் பராந்தகன் முப்பத்தேழாம் ஆட்சியாண்டில் திருவாதிரை, சதயம், அமாவாசை இந்தநாட்களைக்கொண்டாட மான்யம் விட்டிருக்கிருன். திருவிடைமருதூர் மூலஸ்தானம் தெற்குப் பக்கத்திலுள்ள பூர்ணகணபதி கருப்பக்கிருகத்திற்கு 8 இலைக் காசு கொடுத்தான்[3]. இதனுல் மூலஸ்தானக் கணபதி பூர்ண கணபதி என வழங்கப்பட்டமை அறியலாம். தைப்பூச விழாவைப்பற்றிச்[4] சில கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன. மகாலிங்க சுவாமிக்குச் செண்பகப்பூ நித்தியம் சாத்தி வருவதற்காகத் திருவெண்காடு பிச்சனுல் நிபந்தம் அளிக்கப்பட்டது[5]. சோழன் இராஜகேசரிவர்மன் காலத்தில் (கி. பி. 985—1113) 10-வதாண்டில் 278-ம் நாளில் அரசி பஞ்சவன் மாதேவியாரால் உமாசகிதருடைய தங்க உருவம் அமைக்கப்பட்டது[6]. திருக்காமக்கோட்டமுடைய நாச்சியாருக்கு இராஜகேசரிவர்மன் ஒன்பதாமாண்டில் (கி. பி 994) நம்பிராட்டியார் பஞ்சமாதேவியாரால் ஒன்பது கழஞ்சு பொன் அளிக்கப்பட்டது[7].

பல கல்வெட்டுக்களால் திருமஞ்சனம் கொண்டுவர மண் குடங்கள் அளிக்கப்பட்டமை அறியப்படுகின்றது. இதனுல் அபிஷேகத்திற்கு மண் குடங்களினுலேயே தீர்த்தம்கொண்டு

---

[1] 200 of 1907. [2] 212 of 1907. [3] 239 of 1907. [4] 246, 248 of 1907. [5] 247, 260 of 1907. [6] 254 of 1907. [7] 279 to 286 of 1907.

வந்தமை அறியலாம். விக்கிரமசோழன் 5-ம் ஆண்டில் மாணிக் கக்கூத்தர் கோயில் குறிக்கப்படுகிறது இது நடராஜர் கோயிலோ இல்லையோ என்பது அறியக்கூடவில்லை. சோழர்கள் காலத்துச் சமயாசாரியரிடம் உள்ள அன்பைவிளக்கும் அறி குறியாக அமைந்த அடையாளங்கள் பல. அவற்றுள் ஜெயங் கொண்ட சோழவளநாட்டின் திருவழுந்தூர் நாட்டின் விக்கிரம சோழன் ஆறலூரிலுள்ள வாணதிராயன் என்பவன் ஆளுடைய பிள்ளையார் படிவத்தை அமைக்கப் பணங்கொடுத்தான் [1].

மேலும் ஆளுடையபிள்ளையார், ஆளுடையநம்பி இவர்க ளுடைய படிவத்திற்காக நிவேதிக்க வரியில்லாத நிலத்தை உய்யக்கொண்டான் வளநாட்டில் இருமரபுந்தூய பெருமாள் சதுர்வேதி மங்கலத்தில் அளித்தான் [2]. விக்கிரம பாண்டியன் சாந்திவிழா என்ற ஒன்று விக்கிரமபாண்டியன் காலத்தில் கொண்டாடப்பட்டதாக அறிவிக்கிறது [3]. சிறப்பில் சிறப்பாக நாலாவது பிராகாரத்திலுள்ள மூகாம்பிகைபிடாரி, யோகிருந்த பரமேஸ்வரி என வழங்கப்படுகிறார் [4].

ஏனைய கல்வெட்டுக்கள் விளக்கீட்டுக்காக அரசனும் அரசியும் நிலமும், பொன்னும், ஆடும் அளித்தமை அறிவிப்பன.

## 29. திருஅன்பிலாலந்துறை

அன்பில் என்பது தலப்பெயர். ஆலந்துறை என்பது கோயில் பெயர். பிரமதேவர், வாகீச முனிவர் முதலியோர் பூசித்த தலம். இது கொள்ளிடக்கரையில் உள்ளது திருஞானசம்பந்தப் பெருமான் இத்தலத்தெழுந்தருளியிருந்தபோது, கொள்ளிடம் நீர்ப்பெருக்காய் இருந்ததாகவும், இக்கரையில் இருந்தே பாடிய தாகவும், இறைவன் ஆணையின்வண்ணம் விநாயகர் காதைச் சாய்த்துக் கேட்டதாகவும் ஒரு கர்ணபரம்பரைச் செய்தியுண்டு. அதற்கேற்ப தலவிநாயகர் திருவுருவம் முடிசாய்த்துச் செவி சாய்த்துக் கேட்கின்ற பாவனையில் அமைந்திருக்கிறது.

---

[1] *289* of *1907*. [2] *309* of *1907*. [3] *313* of *1907*. [4] *307* of *1907*.




திருவையாறு, ஐயாறப்பர் கோயில் தோற்றம்.

திருவையாறு :



ஆலயத்திற்குள் சூர்ய புஷ்கரணி தீர்த்தம்.

இறைவன்பெயர் சத்யவாகீசர்; இறைவியின்பெயர் சௌந்தரநாயகி. சத்தியலோகவாசியாகிய பிரமனும், வாகீசரும் பூசித்தமையால் சத்தியவாகீசர் எனப்பட்டார்போலும். தீர்த்தம் கொள்ளிடநதி.

**கல்வெட்டுக்கள் :**

இத்தலத்தைப்பற்றியனவாக 1902-ல் படியெடுக்கப்பட்டவை பதின்மூன்று கல்வெட்டுக்களும், 1938 ல் எடுக்கப்பட்டவை ஆறும் உள்ளன. அவற்றில் ஏழு கல்வெட்டுக்கள் திருமால் கோயிலில் உள்ளவை. ஏனையவை சத்தியவாகீசரைப் பற்றியன. கல்வெட்டுக்களில் இறைவன்பெயர் பிரமபுரீசுவரர் என வழங்கப்படுகிறது. மாறவர்மன் குலசேகரபாண்டியன், மூன்றும் இராஜேந்திரசோழன், ஹொய்சள வீரராமநாததேவர், மதுரைகொண்ட பரகேசரிவர்மன், இராஜராஜதேவன் முதலியவர்கள் காலத்தனவாகக் காணப்படுகின்றன. இவையெல்லாம் பெரும்பாலும் நிபந்தம் அளிக்கப்பெற்றமையை அறிவிக்கின்றன *.

## 30. திருவையாறு

இத்தலம் ஐயாறு, பஞ்சநதம், பூலோககயிலாயம் என வழங்கப்பெறும். ஐந்து தெய்விக ஆறுகள் தம்முட் கலப்பதால் வந்த பெயர் என்று நூல்கள் கூறும். ஐந்து ஆறுகளாவன: சூரியபுஷ்கரிணி, சந்திரபுஷ்கரிணி, கங்கை, பாலாறு, நந்திவாய்நுரை, நந்திதீர்த்தம் என்பன.

கோயிலுக்குக் காவிரிக்கோட்டம் என்பது திருமுறைகளில் வழங்கும் பெயர், 'காவிரிக்கோட்டத்து ஐயாறுடைய அடிகளோ' என்பது அதற்குப் பிரமாணம். இதற்குக் காவிரிக்கரைக் கண்ணதாகிய ஐயாறு எனப் பொருள்காண்பாரும் உளர். சுவாமி அம்மன் சந்நிதிகள் கிழக்குப்பார்த்தவை. சோமாஸ்கந்தர் கோயில் தனியாக இருக்கின்றது. ஜபேசம் என்னும் முக்திமண்டபம், நூற்றுக்கால் மண்டபம், உற்சவ மண்டபம் முதலிய சிறந்த மண்டபங்கள் உள்ளன.

* 595 to 601 of 1902.

இறைவன்பெயர் ஐயாறப்பர். செம்பொற்சோதீசுவரர் என்பது திருமுறைகள் வழங்கும் பெயர். இன்றும் ஐயாறுடைய அடிகள், ஐயாற்றின்பெருமான் எனவும் அவை வழங்குகின்றன. புராணத்தில் கைலாயநாதர், ஐபேசர், பிரணதார்த்திஹரர் எனவும் வழங்கப்பெறுவர். இறைவிபெயர் அறம்வளர்த்தநாயகி, திரிபுரசுந்தரி, தருமாம்பிகை என வழங்கும். வல்லபைவிநாயகர், ஓலமிட்டவிநாயகர். ஆதிவிநாயகர் முதலான விநாயக வடிவங்களும், வில்வேள்நாயனுர் என்ற வில்லேந்திய சுப்பிரமணியர் வடிவமும் உள்ளன. இங்குள்ள தட்சிணுமூர்த்தித் திருவுருவம் தனிச்சிறப்புடையது. திருவடியில் ஆமையை மிதித்திருப்பது அறிந்து இன்புறுதற்குரியது. இவருக்கு அரிகுரு சிவயோக தட்சிணுமூர்த்தி என்பது பெயர். ஆட்கொண்டார் சந்நிதி மிக விசேஷமானது. எப்போதும் குங்குலியப்புகை கமழ்ந்து கொண்டேயிருக்கும்.

தீர்த்தங்கள் காவிரி, சந்திரபுஷ்கரிணி, சூரியபுஷ்கரிணி, தேனுமிர்த தீர்த்தம், நந்திதீர்த்தம் முதலியன. தலவிருட்சம் வில்வம்.

ஐயாறப்பர் ஆதிசைவவேடந்தாங்கித் தன்னையே பூசித்துக் கொண்டார். இதனைத் திருவாசகம் "ஐயாறதனிற் சைவனுகியும்" எனக் குறிப்பிடுகிறது. இதனை ஆத்மபூஜை என்பர். திருநந்திதேவர் சிலாதர்க்கு மகனுக அவதரித்த தலம். அகத்தியர் பூசித்துக் கயிலைபெற்ற தலம். சுசரிதன் என்னும் அந்தணச் சிறுவன் இறுதியெய்தாதவண்ணம் இறைவன் ஆட்கொண்டார் திருமேனிதாங்கிக் காத்தனர்.

முதன்முதல் பிரியவிருதன் திருப்பணிசெய்தான். அடுத்துக் கரிகாலன் திருப்பணிசெய்தான். அடுத்து வேங்கிநாட்டு விமலாதித்தன் இதனைப் புதுக்கினுன். முதல் இராஜராஜன் மனைவி உத்தர கயிலாயத்தைப் புதுக்கி ஓலோகமாதேவீச்சரம் எனத் தன் பெயரை இட்டாள்.

சித்திரையில் திருவிழா நடைபெறுகிறது. அதில் 5-ம் திருநாள் ஆத்மபூஜை. சித்திரைப் பூர்ணிமையில் சப்தஸ்தானத் திருவிழா நடக்கும். நந்தியும், அவர் மனைவியான சுயம்பிரகாச அம்மையாருடன் எழுந்தருளுவர்.

**கல்வெட்டுக்கள் :**

இக்கோயில் முதன்முதல் பல்லவகாலப் படைப்பாக இருக்கலாம் என்பது துவாரபாலகர், கொடுங்கை, தூண் இவற்றைக்கொண்டு துணிகின்றனர். மூன்றும் பிராகாரத்துக் கீழ்க்கோபுரம் விக்ரமசோழன் திருப்பணி. கி. பி. 1381-ல் செந்தலைக் கருப்பூர் கச்சிவீரப்பெருமான் மகனல் கோயில் திருமதில் மண்டபம் சீர்திருத்தப்பெற்றன. மேலக்கோபுரம், முதல் பிராகாரத்துத் திருமாளிகைப்பத்தி, மூன்றும் பிராகாரத் துத் தெற்குக் கோபுரம், இடைமருதூர் ஆனையப்ப பிள்ளை யாலும், அவர் தம்பி வைத்யநாத அண்ணன் என்பவராலும் எடுப்பிக்கப்பெற்றன. காவிரி பூசப்படித்துறை கட்டியவர்களும் இவர்களே. படித்துறைக்கு அவர்கள் வைத்த பெயர் கல்யாண சிந்து என்பதாம்.

அம்மை பெயர் திருக்காமக்கோட்டத்து ஆளுடைய நாச்சியார், உலகுடைய நாச்சியார் என்பன.

இத்தலம் முதல் ராஜராஜன் காலத்து ராசேந்திர சிங்க வளநாட்டுப் பொய்கைநாட்டுத் திருவையாறு எனவும், மூன்றுங் குலோத்துங்கன் காலத்தில் புவனமுழுதுடையான் வளநாட்டுப் பொய்கை நாட்டைச் சேர்ந்ததாகவும், சடாவர்மன் சுந்தர பாண்டியன் காலத்து, இராசராஜ வளநாட்டுப் பொய்கைநாட் டைச் சேர்ந்ததாகவும் குறிக்கப்பெறுகின்றது. இது இன்ன கூற்றத்தைச் சார்ந்தது எனக்குறிக்கப்பெருமையின் தனியூராக இருக்கலாம் எனத் தெரிகிறது.

ஓலோகமாதேவீச்சரம்; இது உத்தரகைலாசம் எனவும் வழங்கும். இதனைக்கட்டியவர் முதலாம் இராசராசனது மனைவியாராகிய தந்திசத்திவிடங்கியாரான ஓலோகமாதேவி யார். ஆதலால் இக்கோயில் கி. பி. 1006-ல் கட்டப்பெற் றிருக்கலாம். இங்குள்ள சோமாஸ்கந்தர்க்கு ஓலோக வீதி விடங்கர் எனப்பெயர். இதில் சித்திரைப் பெருவிழா, சதயவிழா கொண்டாடப்பெற்றன.

தென்கயிலாயம்: இதனைத் திருப்பணிசெய்தவர் முதலாம் ராஜேந்திரன் மனைவியான பஞ்சவன்மாதேவியார். இறைவன் பெயர் பஞ்சநதிவாணன். இறைவி அஞ்சலை.

பராந்தகன் I விளக்குப்பல இட்டுவரவும் பொன், வெள்ளி விளக்குகள் வைக்கவும், நிபந்தங்கள் அளித்தான்,* இராஜ ராஜன் I, இராஜேந்திரன் I, இராஜாதிராஜன் I, பரகேசரி இராஜேந்திரன், இவர்கள் தருமங்களும் பல உள்ளன.

## 31. திருப்பனையூர்

இங்கு, சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு இறைவன் நடன தரிசனம் காட்டியருளினூர். பராசரமுனிவர் பூசித்துப் பேறு பெற்றூர் கரிகால்வளவன் இங்கு வளர்ந்தான் என்றும், அவனுக்கு விநாயகர் துணை இருந்தார் என்றும் சொல்லப் படுகிறது.

இறைவன்பெயர் சௌந்தரநாதர். இறைவிபெயர் பெரிய நாயகி. தீர்த்தம் அமுதபுஷ்கரணி; இது மகாலட்சுமி தீர்த்தம் எனவும் வழங்கும். விநாயகர் துணையிருந்த பிள்ளையார். தலவிருட்சம் பனைமரம்.

நன்னிலம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கே கரை மார்க்கமாக ஒரு மைலில் இருக்கிறது.

## 32. திருமயிலாடுதுறை

இத்தலம் இன்று மாயூரம் என்று வழங்குகிறது. அம்மை மயில் உருக்கொண்டு இறைவனை வழிபட்ட தலம். இங்கு அம்மையின் வேண்டுகோளுக்காக இறைவன் மயில் உருக் கொண்டு தாண்டவமாடினூர். இதற்குக் கௌரீதாண்டவம் என்று பெயர். இறைவன் பெயர் மாயூரநாதர். கல்வெட்டுக் களும் தேவாரமும் மயிலாடுதுறையார், மயிலாடுதுறையரன் எனக் குறிக்கின்றன. இறைவியின் பெயர் அஞ்சல்நாயகி, அபயாம்பிகை என்பன. தீர்த்தம் காவிரியில் இடப தீர்த்தத் துறை விசேடம். துலாமாதம் முழுவதும் இங்கு நீராட்டுவிழா நடைபெறும்.

---

* 223 to 227, 231 to 236 of 1844.

சென்னை திருச்சி நேர்வழியில் ஒரு சந்திப்பு. கோயில், சந்திப்பிலிருந்து கிழக்கே 2 மைல் தூரத்திலிருக்கிறது. மாயூரம் டவுன் நிலையத்திலிருந்து ½ மைல் தூரம்.

**கல்வெட்டுக்கள் :**

இத்தலத்தைப்பற்றிப் படியெடுக்கப்பட்டதாகப் பதினாறு கல்வெட்டுக்கள் உள்ளன. பணிசெய்த அரசர்கள் குலோத்துங்கன் I, இராசாதிராசன் II, குலோத்துங்கன் III, இராஜராஜன் III, சடையவர்மன் சுந்தரபாண்டியன் இவர்களாவர். இக்கல்வெட்டுக்களால் நிலம் பொன் அளிக்கப்பெற்றமை அறியப்படுகின்றன. இறைவன் திருமயிலாடுதுறை உடையார் [1] எனவும் குறிக்கப்பெறுவர். இக்கல்வெட்டுகளில் ஐந்துபோக ஏனையவை ஐயாறப்பரைப்பற்றியன. இத்தலத்து ஐயாறப்பர் கோயில் தனியே மாயூரநாதர் கோயிலுக்குத் தென்மேற்கில் உள்ளது. இந்த ஐயாறப்பர் ஜயங்கொண்டசோழவளநாட்டுத் திருவழுந்தூர்நாட்டு குலோத்துங்கசோழன் குற்றாலமாகிய திருவையாறுடையார் எனக் குறிக்கப்பெறுவர் [2]. இத்தலத்து விக்கிரமசோழன் திருமடம் என ஒன்றிருப்பதாகக் குறிக்கப் பெறுகின்றது [3]. முதற் குலோத்துங்கன் சுங்கம்தவிர்த்த சோழன் எனப்படுகிறான். ஐயாறப்பர் கோயில் ஐயாறப்பரைப் பிரதிஷ்டை செய்ததுபோன்ற சிறந்த நிகழ்ச்சிகள் அறிவிக்கப் படுகின்றன [4].

## 33 திருவேட்களம்

இத்தலம் மூங்கில்வனம் எனவும் கூறப்பெறும். அர்ச்சுனனுக்குப் பாசுபதம் கொடுத்த தலம். பாசுபதாஸ்திரம் ஏந்திய இறைவன் திருவுருவமும், அர்ச்சுனன் தவநிலையைக் காட்டும் திருவுருவமும் இருக்கின்றன. இறைவன் வேடனாகவந்து அர்ச்சுனனுக்கு அருள் வழங்கினார் என்பது வரலாறு. இதனை 'வேடனார் உறைவேட்களம்' என்ற அப்பர்வாக்கும் நன்கு விளக்கும்.

---

[1] 372 of 1907. [2] 380 of 1907. [3] 376 of 1907. [4] 377 of 1907.

இறைவன் பெயர் பாசுபதேஸ்வரர், இறைவியின் பெயர் நல்லநாயகி. கோயிலுக்கெதிரில் தீர்த்தம் உண்டு. புதிய திருப்பணி. திருஞானசம்பந்த சுவாமிகள் சிதம்பரத்தில் இருப்பதற்கு அஞ்சி, இத்தலத்திலேயேதங்கிச் சிதம்பரத்தைத் தரிசித்தனர் என்பது பெரியபுராண வரலாறு.

இத்தலம் சிதம்பரத்திற்குக் கிழக்கே இரண்டு மைலில் உள்ளது. இப்போது அண்ணுமலைப்பல்கலைக்கழகம் விளங்குமிடமும் இதுவே.

**கல்வெட்டு :**

சகம் 1488-ல் (கி. பி. 1556-ல்) சிதம்பரேஸ்வர சிவகாமி கோயிலுக்குத் திருவேட்களங் கிராமத்தை அச்சுதப்பநாயக்கர் அளித்த வரலாறு அறியப்படுகிறது *.

## 34. திருவாழ்கொளிபுத்தூர்

இன்று திருவாளபுத்தூர் என வழங்குகிறது. தேவாரத்தில் வாழ்கொளிபுத்தூர் எனவும், வாள்ஒளிபுற்றூர் எனவும் வழங்கப்பெறுகின்றது. திருமால் மாணிக்க லிங்கத்தைத் தாபித்து வழிபட்டார். வடமொழியில் அரதனபுரம் என வழங்கும். வண்டு, அருச்சுனன் பூசித்த தலம். அர்ச்சுனன்செய்த பூசைக்கு உகந்தபெருமான் அவன் வாளைப் புற்றில் ஒளித்துவைத்திருந்து, மீட்டும் அவன் அத்திருபுரி திரும்பும்போது அளித்தார் என்பது வரலாறு. இதனுலேயே வாள்ஒளிபுற்றூர் ஆயிற்று என்பது புராணம். "உன்கரவாள் நின்ற வாகையின் அயல்புற்றொளித்தான்" என்பது தலபுராணப் பாடற்பகுதி. இறைவன் திருமேனி மாணிக்கமாதலின் வாள்ஒளிபுத்தூர் என்பது இங்ஙனமெல்லாம் மாறிற்றோ என்று எண்ணவும் இடமுண்டு. வாள் ஒளி - மிக்க ஒளி.

* 259 of 1913.

# 35. திருப்பாம்புரம்

பாம்பு புரம் என்பது பாம்புரம் என மருவியது. நாகராஜன் பூசித்த தலம். ஆதிசேடனுடைய மூலவிக்கிரகமும் உற்சவ விக்கிரகமும் கோயிலில் உள்ளன. இறைவன் பாம்புரேஸ்வரர். இறைவி வண்டார்குழலி. தலவிருட்சம் வன்னி. தீர்த்தம் ஆதிசேஷ தீர்த்தம்.

**இடம் :**

பேரளத்திலிருந்து மேற்கே 3 மைல் தூரத்தில் உள்ளது.

**கல்வெட்டுக்கள் :**

இத்தலத்தைப்பற்றிய கல்வெட்டுகள் 15 உள்ளன. அவை இராஜராஜன், இராஜேந்திரன், திரிபுவனவீரதேவன், குலோத்துங்கன் III, சுந்தரபாண்டியன், சரபோஜி மன்னர்கள் காலத்தன. இத்தலம் உய்யக்கொண்டார் வளநாட்டுத் திருப்பாம்புரம் என வழங்கப்படுகிறது. இறைவன் திரும்பாம்புரமுடையார் [1] எனவும், இறைவி மாமலையாட்டியாள் [2] எனவும், விநாயகப் பெருமான் இராஜராஜப்பிள்ளையார் [3] எனவும் வழங்கப்படுகின்றனர்.

இராஜராஜதேவன் காலத்தில் சோழியதரையவேளான் தாமோதரையனுல் கோயில் 2-ம் பிராகாரத்தில் மண்டபங் கட்டவும் இதனைப் பராமரிக்கவும் நிலமளிக்கப்பட்டது [4]. வசந்தமண்டபத்தை சரபோஜி மன்னனுடைய பிரதிநிதியான சுபேதார் ரகுபண்டிதராயன் கட்டினுன். கி. பி. 1209ல் திருப்பாம்புரத்தில் கடும்பஞ்சம் நிலவியது. ஒரு பொற்காசுக்கு 3-படி நெல் விற்றது. பஞ்சத்தால் வாடிய ஒரு வேளாளன் தன்னுடைய இரண்டு பெண்களை நூறு பொற்காசுக்குக் கோயிலுக்கு அடிமையாக விற்றுன். [5].

---

[1], [2] *90* of *1911*, *90* of *1911*, [3] *91* of *1911*, [4] *99* of *1911*, [5] *86* of *1911*.

# 36. திருப்பேணுபெருந்துறை

**தலம் :**

இது திருப்பந்துறை என இன்று வழங்குகிறது. அம்மை, முருகன், பிரமன் இவர்கள் பூசித்ததலம். இறைவன் சிவானந்தர். அம்மை மலையரசி. தீர்த்தம் மங்கள தீர்த்தம். விருட்சம் வன்னி. முருகனுக்கு ஊமை நீங்கியதாக வரலாறு.

**இடம் :**

கும்பகோணத்திலிருந்து தென்கிழக்கே ஏழுமைல் தூரத்தில் இருக்கிறது.

**கல்வெட்டு :**

அரசியலார் 1932-ல் படியெடுத்த கல்வெட்டுக்கள் ஐந்து உள்ளன. மதுரைகொண்டபரகேசரி 22 ம் ஆண்டுக் கல்வெட்டில் திருநறையூர்நாட்டுக் கிராமமான பேணுபெருந்துறை எனவும், இறைவன்பெயர் பேணுபெருந்துறைமகாதேவர் எனவும் குறிக்கப்பெற்றுள்ளன [1]. இராஜராஜன் ஆட்சி 14 ம் ஆண்டில் பாண்டியகுலாசனிவளநாட்டு ஆர்க்காட்டுக்கூற்றத்து அரைசூராள் ஒருத்தியால், அமாவாசையில் சுவாமி அம்மன் பெரியதேவர் அஸ்திரதேவர் வீதிஉலாபோதவும், அரிசிலாற்றில் தீர்த்தங்கொடுக்கவும் நிலமளித்தாள் [2]. வீரபாண்டியன் ஆட்சி 6 ம் ஆண்டில், நல்லுடையான் வழுதூரானல் சுவாமி படிமம் செய்துகொடுக்கப்பெற்றது [3].

---

[1] 185 of 1932, [2] 137 of 1932, [3] 138 of 1932.

# 37. திருக்கற்குடி

இத்தலம், இன்று உய்யக்கொண்டான் மலையென வழங்குகிறது. நந்திவர்ம பல்லவனால் திருப்பணி செய்விக்கப்பெற்றமையின் நந்திவர்ம மங்கலம் எனக் கல்வெட்டுக்கள் வழங்குகின்றன. மேற்குநோக்கிய சந்நிதி. அம்மன் சந்நிதிகள் இரண்டு.

இறைவன் பெயர் உச்சிநாதர். முத்தீசர், கற்பகநாதர், உச்சீவநாத சுவாமி, உய்யக்கொண்ட நாயனார், விழுமியார். ஆள்வார் விழுமியதேவர், விழுமியநாயனார் எனக் கல்வெட்டுக்களிலும், புராணங்களிலும் வழங்கப்பெறுகின்றன. அம்மை அஞ்சனாட்சி, தீர்த்தங்கள் பொன்னொளி ஓடை, குடமுருட்டி, ஞானவாவி, எண்கோணக் கிணறு, நாற்கோணக்கிணறு என்பன. மார்க்கண்டர் வழிபட்டு அருள்பெற்ற தலம். முனிவர்கட்குக் குருமூர்த்தியாக இருந்து பெருமான் விழுமிய நூல்களை உபதேசித்த தலம். கரனும், ஈழநாட்டரசனும் வழிபட்ட தலம்.

**கல்வெட்டுக்கள் :**

இத்தலம் இராஜராஜன் காலத்து, பாண்டிய குலாசனி வளநாட்டு ராஜாஸ்ரய சதுர்வேதி மங்கலத்துக் கற்குடி எனவும்[1], குலோத்துங்கன் காலத்து, இராஜமகேந்திர வளநாட்டு உறையூர்க் கூற்றத்துப் பிரமதேயமான ஷை சதுர்வேதி மங்கலத்துக் கற்குடி எனவும்[2] முதல் இராஜேந்திரன் காலத்து கேரளாந்தக வளநாட்டு உறையூர்க் கூற்றத்துக் கற்குடியெனவும்[3] மல்லிகார்ச்சுன மகாராஜா காலத்து இராஜகம்பீர வளநாட்டுப் பிரமதேயமான உய்யக்கொண்டான் திருமலையெனவும்[4] வழங்கப்பெறுகின்றது.

தருமம் ஆற்றிய மன்னர்கள் முதற்பராந்தகன், கண்டராதித்தன் மனைவி, பராந்தகன் மாதேவ அடிகளாராகிய செம்பியன் மாதேவியார், உத்தமசோழன், இராஜராஜன் I, பரகேசரி இராஜேந்திரன் I, வீர இராஜேந்திரன், குலோத்துங்கன் I,

---

[1] 455 of 1908. [2] 460 of 1908. [3] 461 of 1908. [4] 474 of 1908.

மல்லிகார்ச்சுன மகாராஜா, மயிலைத் திண்ணன் முதலியோர், இவர்கள் அளித்தன; பெரும்பாலும் விளக்கிற்காகப் பொன்னும், ஆடும், நிவேதனத்திற்கு நிலமும் ஆம்.

## 38. திருப்பாச்சிலாச்சிராமம்

பாச்சில் கூற்றத்து ஆச்சிராமமாதலின், பாச்சிலாச்சிராமம் என வழங்கப்படுகிறது. கல்வெட்டுக்களில் கொள்ளிடத்தின் வடபகுதி பாச்சில் கூற்றம், வடகரை மழபாடி நாடு, இராஜாதிராஜ வளநாடு எனப் பல பகுதிகளால் வழங்கப்பட்டதாகத் தெரிகின்றது. கொல்லிமழவன் புதல்விக்கு உற்ற முயலகன் என்னும் நோயைத் திருஞானசம்பந்த சுவாமிகள் நீக்கியருளிய தலம். இங்குள்ள நடராஜர் திருவுருவிலும் முயலகன் உருவம் இல்லாமை அறியத்தக்கது. திருவடியின்கீழ் அதற்குப்பதில் ஒரு பெரும்பாம்பிருக்கிறது. சுந்தரமூர்த்திசுவாமிகள் 'இவரலாதிலையோ பிரான்' என இகழ்ந்துபேசிப் பொருள் மிகப் பெற்ற தலம். இறைவனே ஒரு வைசியன் பெண்ணை மணஞ்செய்துகொண்ட தலம்.

இறைவன்பெயர் மாற்றறிவரதர், சமீவனேசுவரர்; அம்மையின்பெயர் பாலசௌந்தரி; தீர்த்தம் அன்னமாம் பொய்கை, சிலம்புநதி. பொய்கை, அம்பாள் கோயிலுக்கு எதிரில் இருக்கின்றது. இதன்கரையில் தலவிருட்சமாகிய வன்னிமரம் இருக்கின்றது. சிலம்புநதி ஊருக்கு வடக்கில் ஓடுகின்றது. அது பங்குனியாறு என்றும், அமலையாறு என்றும் சொல்லப்படும்.

கோயிலுக்கு எதிரில் மிக உக்கிரதேவதைகளான தேரடிக் கருப்பண்ணசாமியும், மதுரைவீரன் கோயிலும், அடைக்கலங்காத்தான்கோயிலும் இருக்கின்றன. பார்வதி, பிரமன், இலக்குமி, அகத்தியர் முதலியோர் வழிபட்டதலம். வைகாசி மாதம் பெருவிழா நடக்கும். திருச்சி விழுப்புரம் குறுக்குப்பாதையில் உத்தமர்கோயில் ஸ்டேஷனிலிருந்து 4½ மைல் தூரத்தில் உள்ளது.

**கல்வெட்டு :**

1891 ம் ஆண்டில் எடுக்கப்பெற்ற 34 எண்ணுள்ள கல்வெட்டு ஒன்றுள்ளது. ஏனைய எடுக்கப்பெறவில்லைபோலும்.

இது ஹொய்ஸள மன்னன் வீரசோமேஸ்வரன் காலத்தது. இதனுல் இக்கோயிலுக்குப் பதினுயிரக்கலம் அரிசி கிடைத்த தாகத் தெரிகின்றது. இவன் கி. பி. 1253-ல் சமயபுரத்தைத் தலைநகராகக்கொண்டு ஆண்டுவந்தான். சோழ அரசர்களில் குலோத்துங்கன் விளக்கு எரிக்க நிபந்தம் அளித்திருக்கிருன்.

## 39. திருவாலங்காடு

நடராஜப்பெருமான் நடனஞ்செய்யும்சபை ஐந்தனுள் இது ரத்தினசபையாகும். இறைவன் காளியை ஊர்த்துவ தாண்டவத்தால் தோற்கச்செய்த தலம். இதனைத் தேவாரம் 'ஆடினுர் காளிகாண ஆலங்காட்டடிகளாரே' என்றுசொல்லும். பதஞ்சலி கார்க்கோடகன் என்ற பெயரோடும், வியாக்கிரபாதர் முஞ்சி கேசர் என்றபெயரோடும் எப்பொழுதும் நடனதரிசனம்செய்வர். கைலைக்குத் தலையாலே நடந்துசென்ற காரைக்காலம்மையார், என்றும் திருவடிக்கீழ் ஆனந்த தாண்டவ தரிசனத்தோடு அமர்ந்திருக்கின்ருர். திருஞானசம்பந்தசுவாமிகள், அம்மையார் தலையாலே நடந்த தலமென்று மிதித்தற்கு அஞ்சிப் புறம்போக, இறைவன் கனவில் 'பாட மறந்தனையோ' என்று கேட்டுப் பாடல்பெற்ற தலம். இங்கே வாழ்ந்த வேளாளர்கள் பழயனூர் நீலிக்குக்கொடுத்த வாக்குப்படி உயிர்கொடுத்து, உண்மையை நிலைநாட்டினுர்கள். இதனைத் 'துஞ்ச வருவாரும்' என்னும் பதிகத்தில் ஞானசம்பந்த சுவாமிகள் விளக்கியுள்ளார்கள்.

சுவாமிபெயர் தேவரசிங்கப்பெருமான். ஊர்த்துவ தாண்டவேஸ்வரர். அம்மைபெயர் வண்டார்குழலி. தீர்த்தம் முத்தி தீர்த்தம். தலவிருட்சம் பலா.

திருவாலங்காடு ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே 3-மைலில் உள்ளது.

**கல்வெட்டு :**

அரசியலார் படியெடுத்த கல்வெட்டுக்கள் 52 உள்ளன. இத்தலம் வடகரை மணவிற்கோட்டத்து மேல்மாலை பழையனூர் நாட்டுத் திருவாலங்காடு என்றும், ஜெயங்கொண்ட

சோழமண்டலத்து மேல்மாலையாகிய பழையனூர் நாட்டுத் திருவாலங்காடென்றும் வழங்கப்படுகின்றது. பெருமான் திருவாலங்காடு உடைய நாயனுர் எனக் குறிப்பிடப்படுகிருர். இத் தலத்துள் ஏதோ ஒரு மண்டபத்தை, மூன்ரும் குலோத்துங்கன் காலத்தில் இருந்த அம்மையப்பன் பழியஞ்சிய பல்லவராயன் கட்டினுன்[1]. நடராஜப்பெருமான் திருவரங்கில் அந்தம் உற நிமிர்ந்தருளிய நாயனுர் எனக் குறிப்பிடப்படுகிருர். இவருக்கு இலத்தூர்நாட்டு அரும்பாக்கத்துக் குன்றத்தூர்க் கோட்டத்து அறநிலை விசாரகன் திரைலோக்கிய மன்னன் வத்ஸராஜன் என்பவன் விளக்குக்காக நிலமளித்தான்[2]. அம்மை வண்டார் குழலி நாச்சியார் எனவும், பிரமராம்பாள் எனவும் குறிப்பிடப் படுகிருர்[3].

ஏனைய கல்வெட்டுக்கள் நிலம் விற்றதையும், தண்ட நாயகருக்கு உத்தரவிட்டதையும் அறிவிப்பன. 477, 476 என்ற விஜயநகர அரசர் கல்வெட்டுக்கள் இம்மடி தர்மசிவாச் சாரியர், பொன்னம்பல சிவாச்சாரியார். அனந்தசிவாசாரியார், இவர்களுக்கு விழா நடத்த உத்திரவு அளித்துப் பொன் கொடுத்ததை உணர்த்துகின்றன. பராந்தகசோழன் I கால முதல் விஜயநகர அரசர் காலம்வரையுள்ள இக்கல்வெட்டுக் களால் இத்தலத்தின் தொன்மையை அறியலாம்.

## 40. திருவதிகை

இது அட்ட வீரட்டங்களுள் ஒன்று. முப்புரங்களை எரித்த தலம். கருடன், பிரமன், விஷ்ணு, பஞ்சபாண்டவர்கள் பூசித் துப் பேறுபெற்றனர். பல்லவ அரசன் திருநாவுக்கரசரை நீற்றறையில் இட்ட தலமும் இதுவே. இது இப்போது ஓடை யாக இருக்கிறது. சக்கரதீர்த்தம் என வழங்குகிறது. குணத ரேச்சுரம் என்ற ஒரு கோவிலும் உண்டு. அது குணதர பல்லவனுல் பாடலிபுரத்துக்கோவிலை அழித்துக் கட்டப்பெற்ற தென்பது வரலாறு. திருஞானசம்பந்த சுவாமிக்குத் திருநடங் காட்டியருளிய தலம். சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குச் சித்தவட

[1] 468 of 1905, [2] 482 of 1905, [3] 495 of 1905.

மடத்தில் திருவடி தீட்சை அளித்த இடமும் இதுவே. மெய் கண்டதேவர் மாணுக்கராகிய மனவாசகங்கடந்தார் உண்மை விளக்கம் செய்தருளிய தலமும் இதுவே, இறைவன் பெயர் திருவதிகை வீரட்டானேசுவரர். திரிபுராந்தகேசுவரர். அம்மை திரிபுரசுந்தரி. தீர்த்தம் கெடிலம், ஆலகங்கை, சக்கரதீர்த்தம் என்பன. தலவிருட்சம் சரக்கொன்றை, இத்தலம் பண்ணுருட்டி ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கே ஒரு மைலில் உள்ளது.

**கல்வெட்டு :**

இத்தலத்தில் படி எடுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் 34. இவற்றில் ஏழு கல்வெட்டுக்கள் சாரநாராயணக் கோவிலைப் பற்றியவை. ஏனையவை திருவதிகை வீரட்டானமுடையார் கோவிலில் உள்ளவை. அவற்றுள், தெள்ளாற்றுப்போர் எறிந்த நந்திபோத்தரையன் விளக்குக்காக வைத்த நிபந்தம்[1], கோப் பெருஞ்சிங்கன் விளக்கிற்காகப் பசுவுங்காளையும் அளித்தமை[2], பரமேஸ்வரப் போத்தரையன் பொன்னளித்தமை ஆகிய பல்லவ பரம்பரை நிகழ்ச்சிகள் அறிவிக்கப்படுகின்றன. அவ்வாறே சோழர்களில் குலோத்துங்கன் I, II, III, இராஜேந்திரசோழன், பராந்தகன் இராஜாதிராஜன் II முதலிய சோழ அரசர்களும், விக்கிரமபாண்டியன், வீரபாண்டியன் முதலிய பாண்டிய மன்னர்களும் காளிங்கராயன், காடவராயன், கங்கபல்லவன் முதலியோர்களும் உணவிற்காகவும், நிவேதனத்திற்காகவும், விழாவிற்காகவும் நிலம் அளித்தமையைக் காட்டும் கல்வெட்டுக்கள் பல.

சகம் 1235-ல் சேர அரசனுன ரவிவர்ம வீரராஜ குலசேகர தேவனுல் கோயில் முழுவதும் தூய்மைப்படுத்தப்பட்ட செய்தி தெரிகிறது[3]. வாகீசமடம் என்ற பெயருடன் ஒன்று இத்தலத் திருந்திருக்கவேண்டும். இதற்குக் குலோத்துங்கன் I தன்னுட்சிக் காலத்தில் நிலம் அளித்துள்ளான்[4].

---

[1] 36 of 1903, [2] 47 of 1903, [3] 34 of 1903, [4] 49 of 1903.

## 41. திருச்சேய்ஞலூர்

முருகன் திருக்கைலையில் இருந்து, சூரசம்மாரத்தின் பொருட்டு, வீரமகேந்திரத்திற்கு எழுந்தருளியபொழுது, வழி நடையில் இங்குவந்து சிவபூசை செய்தருளினுர் என்பது கந்த புராண வரலாறு. சண்டேஸ்வர நாயனர் திருஅவதாரஞ் செய்தருளியதலம். இவ்வரலாறு இவ்வூர்ப் பதிகத்து ஏழாம் பாடலில் விளங்கக்காணலாம். சண்டேஸ்வரார் அவதாரஸ்தலம் என்று சம்பந்த சுவாமிகள் சிவிகையினின்றும் இறங்கி நடந்து சென்றுவழிபட்டார்கள் என்று பெரியபுராணங்கூறும். முருகன் வழிபட்ட தலமாதலின் சேய் நல்லூர் என்பது சேய்ஞலூர் என்ருயிற்றுப்போலும். இத்தலம் இக்காலத்துச் சேங்கனூர் என வழங்குகிறது.

சுவாமிபெயர் சத்தகிரீஸ்வரர். அம்மைபெயர் சகிதேவியார். தீர்த்தம் மண்ணியாறு.

இது கும்பகோணத்திலிருந்து திருப்பனந்தாள் செல்லும் மார்க்கத்தில் 9½-மைல் தூரத்தில் இருக்கின்றது.

**கல்வெட்டு:** 89 of 1932 ல் எடுத்த ஒன்றே உள்ளது.

## 42. திருவலிவலம்

இது வலியன் பூசித்த தலமாதலின் இப்பெயர்பெற்றது. வலியன் என்பது கரிக்குருவி. சூரியனும், காரணரிஷியும் பூசித்துப் பேறுபெற்றனர். சுவாமிசந்நிதி கட்டுமலைமேல் இருக்கின்றது. கோயிலைச்சுற்றிக் கிழக்குப்பக்கந்தவிர அகழி சூழ்ந்திருக்கிறது. மாடக்கோயிலுள் ஒன்று. சுந்தரமூர்த்திநாயனர், திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் 'சொல்லியவேசொல்லி ஏத்துகப்பான்' என இருவர் பாடல் உண்மையும் எடுத்துக் காட்டுகிருர்.

சுவாமிபெயர் மனத்துணைநாதர். அம்மைபெயர் மாழையங் கண்ணி. தலவிருட்சம் புன்னை. தீர்த்தம் காரணர் கங்கை. திருவாரூருக்குத் தென் கிழக்கே 7-மைல் தூரத்தில் இருக்கிறது.

**கல்வெட்டுக்கள் :**

படியெடுத்தன ஒன்பது உள்ளன. இராசேந்திரன் III காலத்தன மூன்று. குலோத்துங்கன் காலத்தன இரண்டு. இராசராசன் III காலத்தன இரண்டு. சுந்தரபாண்டியன் காலத்தன இரண்டு. இத்தலம் அருமொழித் தேவ வளநாட்டு வலிவலக் கூற்றத்து உபயகுல சுத்த சதுர்வேதி மங்கலமான வலிவலம் என்று வழங்கப்பட்டது.[1] இறைவன் மனத்துள் தேவர் என்றே கல்வெட்டுக்களில் அழைக்கப்படுகிறார். உடையார் மனத்துள் நாயனாரது கோயில் காரியம் பார்ப்பார் சிலரால் தேவப்பெருமான் திருமடத்து எதிர் ஒப்பிலாதார் சோமநாத தேவ முதலியாருக்கு நிலம் மாற்றிக் கொடுக்கப்பட்டது.[2] இந்தத் திருமடம் மனத்துள் நாயனார் கோயிலுக்குத் தெற்குப் பக்கத்தில் இருக்கிறது.[3] தென் விடங்கலூர், குலோத்துங்க சோழ நல்லூர் திரிச்சூலம், பொன்வேய்ந்த பெருமாள் நல்லூர் முதலிய கிராமங்கள் பலவேறு காரியங்களுக்குத் தானமாக அளிக்கப்பட்டமை அறியப்படுகின்றன. திருமூலதேவர் திருமடத்தில் இருந்த கோயில் அர்ச்சகர் ஒருவருக்கு நிலம் விற்கப்பட்டது என்பதால் திருமூலதேவர் மடம் என்பது ஒன்று இருந்தமை புலனாகும்.[4]

## 43. திருச்சோபுரம்

இது இப்பொழுது தியாகவல்லி என வழங்குகிறது முதற் குலோத்துங்கன் மனைவி மூவருள் பட்டத்து மனைவியாகிய தியாக வல்லியால் திருப்பணி செய்யப் பெற்றமையின் இப்பெயர் பெற்றது போலும். அகஸ்தியர் பூசித்த தலம். சமீபகாலம் வரையில் கடற்கரை மணலால் மூடப்பட்டு மேடாய் இருந்தது. ஒருதுறவி கருப்பக்கிருகத்தின் கல்ஸ்தூபி மணலில் காணப்படத் தோண்டி, ஊரவர் உதவியைக்கொண்டு வெளிப்படுத்தினார். பரிவாரங்களுடன் ஆலயம் முழுவதும் மணலிலிருந்து தோண்டப்பட்டது. சில அறிகுறிகளால் நகரமே புதையுண்டிருக்க வேண்டுமென்று தெரிகிறது.

---

[1] *110* of *1911*, [2] *108* of *1911*, [3] *109* of *1911*, [4] *116* of *1911*.

சுவாமிபெயர் சோபுரநாதர். அம்மைபெயர் சோபுரநாயகி. தீர்த்தம் பரம தீர்த்தம். இது ஆலப்பாக்கம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே 1½ மைல் தூரத்தில் இருக்கிறது. கானலாற்றைத் தோணியால் கடந்து செல்லவேண்டும். மணற்பாதை.

**கல்வெட்டு :**

கல்வெட்டு ஐந்து உள்ளன. இங்கே நர்த்தனகணபதி கோயில் இருந்ததாகவும், அதற்குச் சுந்தர பாண்டியன் நிலம் அளித்ததாகவும் அறியப்படுகிறது. *. இராஜராஜ தேவர், சாரிபுத்த பண்டிதர், மாறவர்மன் சுந்தரபாண்டியன் I, கோநேரின்மைகண்டான், சுந்தரபாண்டிய தேவர் இவர்கள் பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன.

## 44. திருநெடுங்களம்

திருநெட்டான்குளம் என இக்காலத்து வழங்கும். வங்கிய சோழன் பூசித்துப் பேறுபெற்ற தலம். சுவாமி நித்தியசுந்தரர். தேவி ஒப்பிலாநாயகி, தீர்த்தம் சுந்தரதீர்த்தம். தொண்டைமான்பட்டி ஸ்டேஷனிலிருந்து தெற்கே 2 மைல் தூரத்தில் உள்ளது.

**கல்வெட்டு :**

இத்தலத்தைப்பற்றிய கல்வெட்டுக்கள் 34 உள்ளன. அவை சுந்தரபாண்டியன் காலத்தன மூன்றும், கரிகாலன் காலத்தது ஒன்றும், ஸ்ரீவல்லபதேவனது ஒன்றும், ராஜகேசரிவர்மன் காலத்தன ஒன்பதும், 3-ம் ராஜராஜன் கல்வெட்டு இரண்டும், ஹொய்ஸள வீரராமநாததேவரது ஒன்றும், திரிபுவன வீரதேவனுடையன இரண்டும், பரகேசரிவர்மனென்றுமட்டும் குறிப்பன மூன்றும், விஜயநகர அரசர்களுடையன ஐந்தும், நாயக்க மன்னரது ஒன்றும் ஏனைய அறியப்படாதனவுமாக அமைந்தன.

* *114 of 1904.*

இத்தலம் சுந்தரபாண்டியன் காலத்து பாண்டிய குலபதி வடகரைநாட்டுத் திருநெடுங்களம் என்றும்[1], இராஜராஜ தேவன் III காலத்து பாண்டியகுலாசனி வளநாட்டு வடகாவிரி நாட்டுப் பிரமதேயம் தியாகவல்லி சதுர்வேதி மங்கலமான திரு நெடுங்களம் என்றும் குறிக்கப்படுகிறது. இறைவன் திருநெடுங் களமுடைய நாயனர்[2], நெடுங்களமுடையார், உலகாண் டேஸ்வரமுடையார்[3], களந்தை நாயகர்[4], திருநெடுங்கள முடைய தம்பிரானர்[5], நிழலார் சோலை வளமுடையநாயனர்[6] திருநெடுங்களத்து ஆள்வார்[7] என்றெல்லாம் வழங்கப்படுகிறார்.

இவ்வரசர்கள் அனைவரும் கோயிலுக்குப் பொன்னும், நெல் லும், நிலமும் அளித்த செய்தி அறிவிக்கப்படுகின்றன. அரசர் களேயன்றி, அரசருடைய தண்டல் நாயகர்களும், அரசகாரியம் பார்ப்பவர்களும், மனைவியார்களும் அறம் செய்துள்ளனர். ராஜகேசரிவர்மன் மூன்றுமாண்டில் உறையூர் உடையான் ஒருவனால் லோகசுந்தரத் திருப்படிமம் பிரதிஷ்டை செய்யப் பட்டது[8], பிள்ளையார் கணபதி கோயிலுக்கு விளக்கீடு செய்வித்தான் ராஜகேசரிவர்மன் I (கி. பி. 985—1013). பித்தளையால் செய்யப்பட்டு பொன்முலாம் பூசப்பட்ட மத்தளி ஒன்றைக் கம்பன் மணியனுன விக்கிரமசிங்கன் மூவேந்த வேளாளன் என்பான் ஸ்ரீபலி உபயத்திற்காகச் செய்து கொடுத்தான்[9]. இக்கோயிலில் முழுக்குடி அரசன் வல்லப தேவன் ரங்கமண்டபம் கட்டிக்கொடுத்தான்[10].

## 45. திருவூத்தூர்

இது திருவத்தூர் என வழங்குகிறது. இறைவன் தேவர் களுக்கும், முனிவர்களுக்கும் வேதத்தை அருளிச்செய்தமையால் இப்பெயர் பெற்றது. சம்பந்தசுவாமிகள் எழுந்தருளியபோது கோயிலைப் பராமரித்துவந்த சிவனடியார் ஒருவர் கோயில் நிலங் களில் பனைவைத்து வளர்த்தார். அவை ஆண்பனையாயின. சமணர்கள் பரிகசித்தனர். அதைக்கண்டு இவர் வருந்திச் சுவாமி

[1] 627 of 1909, [2] 667 of 1909, [3] 579 of 1909, [4] 692 of 1909, [5] 693 of 1909, [6] 793 of 1909, [7] 682 of 1909, [8] 682 of 1909, [9] 691 of 1909, [10] 692 of 1909.

களிடம் விண்ணப்பித்தார். திருஞானசம்பந்தர் பதிகம்பாடி திருக்கடைக்காப்பில் 'குரும்பை ஆண்பனை ஈன்குலை ஓத்தூர்' என்று அருளியபோது அவை பெண்பனையாயின. ஆலயத்தில் பனை உருவம் பிரதிஷ்டிக்கப்பட்டுப் பூசிக்கப்பட்டு வருகிறது. சிவாலயத்துள்ளேயே ஆதிகேசவப்பெருமாள் சந்நிதியும் இருக்கிறது.

சுவாமி வேதநாதர். அம்மை இளமுலைநாயகி. தீர்த்தம் சேயாறு (வேததீர்த்தம்). அச்சிறுபாக்கம் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கே 18 மைலிலும், காஞ்சிபுரத்திலிருந்து மேற்கே 18 மைலிலும் இருக்கிறது.

**கல்வெட்டு:**

இத்தலத்தைப்பற்றிய கல்வெட்டுக்கள் 29 உள்ளன. அவற்றுள் இராஜாதிராஜன், குலோத்துங்கன், இராஜேந்திரன், பொத்தப்பிச்சோழன், ராஜராஜன் I. III. விக்கிரமசோழன் ஆகிய சோழ அரசர்கள் காலத்தனவும், சுந்தரபாண்டியன், வீரபாண்டியன் காலத்தனவும், கோப்பெருஞ்சிங்கன் காலத்தனவும், ராஷ்டிரகூட கன்னரதேவன் காலத்தனவும் ஆக அமைந்துள்ளன.

இறைவன் பெயர் வேதபுரீஸ்வரர் எனவும், ஓத்தூர் உடைய நாயனுர் எனவும் வழங்கும். கோயில்வழிபாட்டிற்கும் நிவேதனத்திற்கும், அர்ச்சகர்க்கும் நிலமளித்த செய்திகளும், பூந்தோட்டத்திற்கு நிலமளித்த செய்திகளும் அறிவிக்கப்படுகின்றன. விளக்கிற்காகப் பசுக்கள்வாங்கி விடப்பட்டமையைத் தெரிவிக்கின்றன. சிறப்பாக, விளையாட்டாக வேட்டைக்குச் சென்ற ஒருவன் எய்த அம்பு குறிதவறி ஒரு மனிதன்மேல் பட்டுவிட, அதற்காகத் திருஓத்தூர் சபையாரைக்கூட்டி குற்றத்தைக்கூறி, சபை விதித்தவண்ணம் குற்றத்தண்டமாகக் கோயிலுக்கு 16 பசுக்களை வாங்கிக்கொடுத்து விளக்கிடச் செய்தான்.*, விக்கிரமசோழன் (கி. பி. 1118—35) காலத்து வெள்ளம்புகுந்து விளைச்சலழிந்ததால் குடிகளுக்கு வரிகட்ட முடியாமல்போக இரண்டாயிரம்குழி நிலத்தை 25 காசிற்கும்,

* 77 of 1900.

4450 குழி புன்செய்யை 20 காசிற்கும் கோயிலுக்கு விற்று இறையிலிசெய்தான்[1], மூன்றும் குலோத்துங்கன் பொன் ஆபரணங்கள் அளித்திருக்கின்றான். அதேகோயிலில் சிதம்பரேஸ்வர ஆலயம் ஒன்று இருப்பதாக அறியப்படுகிறது[2]. கேதாரிநாதர் மடம் என்ற ஒன்று குறிப்பிடப்படுகிறது[3].

## 46. திருஅம்பர்மாகாளம்

இத்தலம் கோயில்திருமாகாளம் என வழங்கும். அம்பன் அம்பாசுரன் இருவரையும்கொன்ற காளி பாவந்தீர இறைவனை இத்தலத்துப் பூசை செய்தாள். மாகாளரிஷியும் பூசித்த தலம். காளிகோயில் தெற்குப் பிராகாரத்தில் உள்ளது. வைகாசி மாதத்தில் சோமாசிமாறர் யாக உற்சவம் நடைபெறும். சிறிய உருவமுடைய பாணலிங்கம். குவளை சாத்தப்பட்டுள்ளது. இறைவன் காளகண்டேசுவரர். இறைவி பட்சநாயகி. தீர்த்தம் மாகாளதீர்த்தம். சோமாசிமாறநாயனர் யாகஞ்செய்த தலம். இத்தலம் பேரளம் திருவாரூர் மார்க்கத்திலுள்ள பூந்தோட்டம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே 1½ கல் தூரத்தில் உள்ளது.

**கல்வெட்டுக்கள் :**

இத்தலம் முதற்குலோத்துங்கன் காலத்து உய்யக்கொண்டார் வளநாட்டு அம்பர் நாட்டு அம்பூர்திருமாகாளம் என வழங்கப்பட்டது[4]. இராஜகேசரிவர்மனை குலோத்துங்கன் காலத்து, பூபாலகுலவல்லி வளநாட்டு அம்பர்நாட்டு அம்பர் மாகாளம் எனவும்[5] வழங்கப்பட்டது. இறைவன் திருமாகாளம் உடையார்[6], திருமாகாளத்து மகாதேவர்[7] என வழங்கப்படுகிறார். இக்கோயிலுக்கு முதற்குலோத்துங்கன் காலத்து நுளம்பராசன் வேண்டுகோளுக்காக மாத்தூர் திருச்சிற்றம்பலநந்த ராசனால் புரவுவரி விளாகம் என்ற கிராமம் கோயிலுக்களிக்கப்பட்டது[8]. மேலும் அவனது ஆட்சி 42-ம் ஆண்டில் வேதந்தூர் என்ற கிராமத்தை அம்பர் உதயமார்த்தாண்டன் அளித்திருக்கிறான்[9].

---

[1] 87, 88, [2] 100, [3] 98 of 1910, [4] 93 of 1910, [5] 107 of 1910, [6] 107 of 1910, [7] 116 of 1910, [8] 94 of 1910, [9] 95 of 1910.

சேக்கிழான்வேளான் திருவாய்க்குலமுடையான் எயினிகுடி கிராமத்தை அளித்தான். முன்னரே அதை அனுபவித்துவந்த காணியாளரைத் தள்ளிவிட்டுப் புதிதாகப்பயிர்செய்ய ஏற்பாடு செய்தான். விக்கிரமசோழன் காலத்தில் (கி. பி. 1118 of 35) நிலமளித்த செய்தி அறியப்படுகிறது. சிறப்பாக ஆட்கொண்ட நாயகனையும் அம்மையையும் கோயிலுக்கு வார்த்துக்கொடுத்து, திருவமுதுக்கு க்ஷத்திரிய சிகாமணி வளநாட்டுப் பனையூர் நாட்டுச் சிறுவேலூரானுன அமுதன் திருச்சிற்றம்பலமுடையான் உதயமார்த்தாண்ட மூவேந்த வேளான் நிலமுமளித்தான். அதே அம்மைக்கு மற்ருேர் சிறுவேளூர் உடையான் நிலமளித்திருக்கிருன். இந்த ஆட்கொண்ட நாயகர் என்பது சோமாஸ்கந்தரின் பெயர்போலும். இவரைப்பற்றி விக்கிரமசோழன் காலத்து கல்வெட்டும் அறிவிக்கிறது [1]. இறைவனுக்கு முத்துக் கழுத்தணி, வைரமுடி இவற்றைக் காரிபுலியனுன சோழ மாராயன் அளித்தான், விக்கிரமசோழன் திருமாளிகைப் பத்தியைக்கட்டினுன் [2]. மற்றும் விளக்கிற்காகவும், விழாவிற்காகவும் பொன்னும், நிலமும் அளித்த செய்தியை அறிவிக்கின்றன. முதுபகவர் என்ற கோயிலொன்று குறிப்பிடப் படுகிறது [3].

உமாபரமேஸ்வரி காளி அம்மையாக இருத்தல்வேண்டும். இதனை அமைத்தவன் விக்கிரமசோழன். பூசைக்கும் அமுதுக்குமாக நிலம் வழங்கியிருக்கிருன். இராஜேந்திரசோழனும் அக்கோயிலுக்கு நிலம் வழங்கினுன் [4].

## 47. திருவல்லம்

இத்தலம் இப்பொழுது திருவலம் என வழங்கப்படுகிறது. வில்வாரண்யதலம், தீக்காலி என்பான் பூசித்துப் பேறுபெற்றமையன் தீக்காலி வல்லம் எனவும் வழங்கும். நவக்கிரகங்களும், வல்லாளனும் பூசித்துப் பேறுபெற்றனர். சுவாமி வல்லநாதர். இறைவி வல்லாம்பிகை. தீர்த்தம் கௌரிதீர்த்தம். இத்தலம் திருவல்லம் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே ½ மைலில் உள்ளது.

[1] 108 of 1910, [2] 99 of 1910, [3] 111 of 1910, [4] 100, 101 of 1910.

**கல்வெட்டுக்கள் :**

கோப்பரகேசரியான ராஜேந்திரசோழன் (கி. பி. 1050–62) 3 ம் ஆண்டில் உத்தியோகஸ்தன் ஒருவனிடமிருந்து 25 கழஞ்சு பொன்வாங்கித் தீட்சதரிடங் கொடுத்தான்[1]. அதேயாண்டில் வாணபுரத்திலுள்ள பேரவையோர் சங்கரதேவன் மகனை வைதும்ப சோமநாதனுக்கு 1000 குழி நிலம் விற்றதையும் அவர்கள் அதைத் திருவைய ஈஸ்வரருக்கு உரிமையாக்கியமையும் குறிக்கிறது[2]. 4-ம் ஆண்டில் முதல் இராசராசன் உத்தியோகத்தனை ஈராயிரவன் பல்லவராயனால் இராசராசேஸ்வரர் கருப்பக்கிரகம் கட்டப்பட்டது. 2 விளக்கிற்காக 2000 குழி நிலமும் அளிச்கப்பட்டது[3].

கோராஜகேசரி வர்மனை இராஜமகேந்திரன் காலத்து 2-ம் ஆண்டில் படைத்தலைவனொருவன் திருவல்லம் பேரவையிலிருந்து 800 குழி நிலம்பெற்று அதைக் கோயிலுக்குக் கொடுத்தான். அதன் விலை 64 காசு (22 கழஞ்சு 8 மஞ்சாடி)[4]. குலோத்துங்கன் 23-ம் ஆண்டில் ஒரு கங்கதலைவனால் வீரசோழன் மனைவியான தன்னுடைய மகளுக்கு நன்றுண்டாக விளக்குப் போடப்பட்டது[5]. மூன்றும் குலோத்துங்கன் 8-ம் ஆண்டில் திரிசூலக்காசு கோயிலுக்களிக்கப்பட்டது[6] 34 ம் ஆண்டில் கங்க அரசியான அரியபிள்ளையால் இரண்டு விளக்கு தானம் செய்யப்பட்டன[7]. கோராஜகேசரிவர்மன் I, 7-ம் ஆண்டில் இறைவி திருவுருவம் செய்யவும் ஒரு விளக்குக்கும் ஒரு பிராமணனால் 1700 குழி நிலமும் தூய்நாட்டில் மந்திரம் பேரவையினின்றும் 1700 குழி நிலமும் வாங்கப்பட்டன[8]. 26-ம் ஆண்டில் 4-ம் விக்கிரமாதித்தனிடமும் 3-ம் ஜயசிம்மனிடமும் வெற்றிபெற்றமையும், கோயிலுக்கு விளக்குபோடப்பட்டமையும் தெரிகிறது[9]. 7-ம் ஆண்டில் மதுராந்தக கண்டராதித்தன் கோயிலுக்கு வந்தமையும் 1000 குடங்களால் அபிஷேகித்தமையும், வருமானத்தை ஆராய்ந்தமையும் குறிக்கப்பட்டுள்ளது[10].

---

[1] 75 of 1889, [2] 92 of 1889, [3] 299 of 1897, [4] 5 of 1890, [5] 300 of 1897, [6] 301 of 1897, [7] 303 of 1897, [8] 8-a of 1890, [9] 9 of 1890, [10] 10 of 1890.

கோராஜ இராஜகேசரிவர்மன் I, 16-ம் ஆண்டில் 700 குழி நிலம் சங்கரதேவனுக்கு விற்றமையும் அவன் அதைத் திருவைய ஈஸ்வரருக்களித்தமையும் தெரிகிறது [1]. கோராசகேசரிவர்மன் இராசராசதேவன் 20-ம் ஆண்டில் 90ஆடுகள் தானம்செய்தான். 3-ம் ஆண்டில் தூய்நாட்டிலுள்ள குக்கனூர் கிராமத்தின் வருவாய்களைத் .திருவல்லம் கோயிலுக்குக் கொடுத்தான் [2]. மகாவலி வாணராயனது பொன்படு குட்டத்திலுள்ள சில நிலங்களை ஒருவன்வாங்கி விளக்கிற்காகவும் படையலுக்காகவும் கொடுத்தான் [3]. வாணவித்தியாதரன் காலத்து விளக்கெரிக்க 20 கழஞ்சு பொன் கொடுக்கப்பட்டது [4]. விக்கிரமாதித்தன் I வேண்டுகோளின்படி மூன்று கிராமங்கள் (விடேல் விடுகு விக்கிரமாதித்த சதுர்வேதிமங்கலம்) தானம்செய்யப்பட்டன [5]. வாணராயனது சகம் 810-ல் எட்கூரிலுள்ள ஒரு பார்ப்பனனால் காரநாட்டிலுள்ள வன்னிப்பேடு கிராமத்தாரிடம் 25 கழஞ்சு பொன் கொடுக்கப்பட்டு அதன் வட்டியிலிருந்து விளக்குப் போடப்பட்டது [6].

சோழபூபன் மகனை வீரசம்பன் சகம் 1236-ல் அர்த்த மண்டபம் ஞானமூர்த்தி என்ற பெயருடைய துறவியாலும் பிருதா அரசனாலும் கட்டப்பட்டது. மேலும் கருப்பக்கிருகமும் கட்டப்பட்டது. (வீரசம்பன் படைத்தலைவனா? ஒருநாயகனா? ஊகிக்க வேண்டியுள்ளது) [7]. வாணவித்தியாதர ராஜன் என்கிற வாணராயன் விளக்கிற்கு நெய்யிட 25 கழஞ்சு பொன் வழங்கினான் [8]. விசயகண்ட கோபாலதேவன் மூன்றாமாண்டில் அழகிய பல்லவன் காலத்து 3-ம் இராசராசன் நிலமணியக்காரர் $\frac{1}{16}$ பாகவரியையும் $\frac{1}{8}$ பாகவரியையும் தள்ளியமை தெரிகிறது [9]. ராஷ்டிரகுப்த அமோகவர்ஷனன் I மருமகன் காலத்து பொற் கொல்லன் ஒருவன் கோயிலுக்கு நிலம் தானம் செய்தான் [10].

---

[1] 11 of 1890, [2] 1415 of 1890, [3] 12 of 1890, [4] 298 of 1897, [5] 1-a of 1890, [6] 1-b of 1890, [7] 3 of 1890, [8] 77 of 1889, [9] 79 of 1889, [10] 76 of 1889.

## 48. திருப்பருப்பதம்

இத்தலம் பருப்பதம் எனவும், ஸ்ரீசைலம் எனவும் வழங்கும். அர்ச்சுனக்ஷேத்திரங்கள் மூன்றனுள் இது ஒன்று. மல்லிகார்ச்சுனம் எனவும் வழங்கப்பெறும். திருநந்திதேவர் இறைவனைத் தாங்க மலையுருவாகத் தவஞ்செய்த தலம். இத்தலத்திற்குச் செல்லும்வழி மிக அருமையானது. இதனைச் சுந்தரமூர்த்தி தேவாரம் 'செல்லல் உறவரிய சீபருப்பதமலை' என்று எடுத்துக் காட்டுகிறது. சுவாமி பருப்பதநாயகர். இறைவி பருப்பத நாயகி. தீர்த்தம் பர்வததீர்த்தம்.

இத்தலம் கர்னூல் ஜில்லாவைச் சேர்ந்தது. நந்தியால் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே 60 மைல் தூரத்தில் உள்ளது. 40மைல் தூரம் மலைகளின்மேல் ஏறியும் இறங்கியும் செல்லுதல் வேண்டும்.

**கல்வெட்டுக்கள் :**

விஜயநகர அரசனை வீரப்பிரதாப வீரநரசிங்கராயன் இங்கு வந்து வழிபட்டிருக்கிறான். ஒரு பருவதையன் என்பானும் அவன் மனைவியும் இங்குவந்து 'சித்தபுரம்' என்னுமிடத்தில் ஒரு குளம் வெட்டி நந்தவனம் அமைத்தனர். கிருஷ்ணதேவ ராயனுடைய மந்திரியான சந்திரசேகர அமாத்யா என்பவன் கல்யாணமண்டபத்தைக் கட்டிப் பொற்கலசம் ஸ்தாபித்தான். மல்லிகார்ச்சுன கோயிலுக்கு முன்புறத்தில் ஒருமண்டபங் கட்டினான். நந்தீஸ்வரத்திற்கும், பிருங்கீஸ்வரத்திற்கும் பொன்னாலேயே திருவுரு அமைத்துக்கொடுத்தான். அந்த மண்டபத்தில் தமராசா என்பவன் கிருஷ்ணதேவராயர் சந்திரசேகரஅமாத்யா இவர்களுடைய கற்சிலைகளை அமைத்தான். கோயில் செலவுகளுக்காகச் சிவபுரம் என்னும் ஊரைத் தானமாக வழங்கினான். பொற்கிண்ணமும், வெள்ளிப்பீடமும் அளித்தான். நந்தியைப் பிரதிஷ்டைசெய்து அதற்கு முன்பக்கத்தில் பொற்றூண் ஒன்றை நிறுவினான். வீரப்பிரதாப அச்சுதராயன் காலத்தில் மல்லப்பநாயுடு என்பவன் பிரமராம்பா அம்மைக்கு ஒருமணியும் சரிகையாடையும் அளித்தான். விஜயராயமகாராயன் மகளும், பாண்டியபெருமாள்தேவனின் மனைவியுமாகிய லெட்சும்மாள்ஜி ஆயி என்பவள் தினசரி ஐந்து ஜங்கமர்களுக்கு உணவளிக்க

நிலம் வழங்கினாள். சாளுவ அரசனான பதமல்லப்பன் ஒருவனும் வெட்டியிருக்கிறான். காகதீய அரசனான பிரதாபருத்திரதேவ மகாராஜர் காலத்தில் அவனுடைய முதல் மந்திரி உச்சிக்கால வழிபாட்டிற்காக கமநாட்டில் நிலம் வழங்கியிருக்கிறார். ஜன மாதா பண்டபத்திற்கருகில் ஒரு கோயிலையும் கட்டியிருக்கிறார். அன்னப்பஜயன் என்பவன் மல்லிகார்சுன தேவர்க்கும் பிரமராம்பா தேவிக்கும் நைவேத்திய நிபந்தங்களை அளித்ததோடு முகமண்டபங்கட்டுவித்தான். தென்னண்டைமதில் பிராகாரத்தைப் பழுதுபார்த்தான். இரும்புத் தூண்களை நிறுத்தித் தெற்குக் கோபுரத்தையும் பழுதுபார்த்தான். பயிராகிஸந்தகி என்பவன் தன் மனைவியின்பெயரால் பூந்தோட்டத்திற்கு நிலம் அளித்துள்ளான். இவையன்றி நந்திநாதர், பிருங்கிநாதர் முதலியவர்களை வழிபடுகிறவர்களுக்கு வீடுகள் கட்டி அளித்த செய்தியும், செங்கையன் என்பார் சந்தனக்கல் வைத்ததும் அறியப்படுகின்றன. பிரதானகங்கைக்கு இரண்டாம் விதரிகரனின் மனைவியான கடம்பவித்தலம்பா படிக்கட்டு கட்டினாள். வித்தலேஸ்வரருக்கு ஒரு உருவச்சிலை வழங்கினாள். இந்தத் தருமங்களைச்செய்ய இறைவன் அவட்குக் கனவில்வந்து அருளியதாகக் குறிப்பிடுகிறாள். மேலும் சந்திரசேகரன் வீரபத்திரதேவர் கோபுரத்தையும், தூண்களையும், பொற்கலசங்களையும் அமைத்திருக்கிறான் உதயகிரி அப்பனையங்காரு நந்தித் தூணிலிருந்து துர்க்காதேவிகோயில் வரையில் படிக்கட்டுகளைக் கட்டுவித்தான். கொண்டபட்டி என்பவன் கோயில் முழுமையும் புதுப்பித்திருக்கிறான். இவையன்றிப் பல அன்பர்கள் பொற்றூண்கள் அமைத்தும், படிக்கட்டமைத்தும், முகமண்டபங்கட்டியும் பணிசெய்தார்கள் என்று தெரிகிறது.

## 49. திருக்கொடிமாடச்செங்குன்றூர்.

இத்தலம் திருச்செங்கோடு, திருச்செங்குன்றூர், நாகாசலம் என வழங்கப்பெறும். மேலவீதியிலிருந்து பார்த்தால் மலை, நாகம்போல் தோன்றுவதால் நாககிரி எனப்பட்டது. சுப்பிரமணியசுவாமி சந்நிதி தனியே அமைந்துள்ளது. சுவாமி சந்நிதி மேற்குப்பார்த்தது. முருகன் சந்நிதி கிழக்குப்பார்த்தது. விஷ்ணுகோயில் கோயிலுக்குள்ளேயே தனியேயிருக்கிறது.

சுவாமி அர்த்தநாரீஸ்வரர். அம்மை பாகம்பிரியாள்; அர்த்த நாரீஸ்வரி. விஷ்ணுக்கு ஆதிகேசவப்பெருமாள் என்றுபெயர். அர்த்தநாரீஸ்வரர் பாதத்தில் ஒரு சிறு ஊற்று இருக்கிறது. இது விறல்மிண்ட நாயனுருடைய அவதாரஸ்தலம். தீர்த்தம் பிரமதீர்த்தம் முதல் 16 தீர்த்தங்கள் உள்ளன.

இத்தலம் சங்ககிரிதுர்க்கம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே 6 மைல்தூரத்தில் இருக்கிறது. ஈரோட்டிலிருந்து பஸ் மூல மாகவும் இத்தலத்தை அடையலாம்.

**கல்வெட்டு:**

பரகேசரி வர்மனுன முதலாம் இராஜராஜன், மதுரை கொண்ட முதற் பரகேசரிவர்மன், சுந்தரபாண்டிய தேவன், சொக்கப்பநாயக்கன், சொக்கலிங்கநாயக்கன், மைசூர் கிருஷ்ண ராஜ உடையார் முதலிய அரசர்களின் கல்வெட்டுக்கள் இங்குக் காணப்படுகின்றன. அவற்ருல் அறியப்படுவன பெரும் பாலானவை அந்தணர்களுக்கு அன்னமும், யாத்திரிகர்களுக்கு உணவும், விளக்கிற்கு நெய்யும் அளிக்கப்பட்ட நிபந்தங்களே யாகும். 192 முதல் 194 வரையிலுள்ள கல்வெட்டுக்கள் சுப்பிர மணியப் பிள்ளையார்கோயிலைப்பற்றி அறிவிக்கின்றன. கி. பி. 1660 முதல் 1682 வரை அரசாண்ட விஸ்வநாத சொக்கலிங்கர் காசிவிசுவேசர் கோயிலையும் கோபுரத்தையுங் கட்டினுர்.

## 50. திருப்பூவணம்

இது பிரமன் பூசித்த தலம். 'நான்மறையோன் கழலே சென்றுபேணி ஏத்த நின்ற தேவர்பிரான் இடமாம்' என்பது சம்பந்தர்தேவாரம். பொன்னனையாள் என்னும் தாசிக்காகச் சொக்கலிங்கப்பெருமான் சித்தர்வடிவாக எழுந்தருளி ரசவாதம் செய்து சோமாஸ்கந்தர் திருவுருவத்தை அமைக்க அருள் செய்தனர் என்பது திருவிளையாடற்புராணத்துட் காணப்படும் வரலாறு.

இத்தலம் என்றும் தமிழ்நாட்டு மூவேந்தர்களும் ஒருங்கு கூடி வழிபடும்தலமாக இருந்தது என்பதனை 'முன்சேர் தென்னர் சேரர் சோழர்கள் தாம் வணங்கும் திருப்பூவணம்' என்னும்

சம்பந்தசுவாமிகள் வாக்கும், 'உதியருடன் வன்றொண்டர் தாமிருந்த இடங் கெழுமி வளவனூர் மீனவனூர் வளம்பெருக மற்றவரோடும் அளவளாவிய விருப்பால் அமர்ந்து கலந்து இனிதிருந்தார்' என்னும் சேக்கிழார் திருவாக்கும் சான்றாகும்.

இறைவன் பூவணநாதர். இறைவி மின்னமமை. மின்னனை யாளம்மை என்றும் வழங்குவதுண்டு. விருட்சம் பலா. தீர்த்தம் வைகை. மதுரைக்குக்கிழக்கே 12 மைல் தூரத்தில் இத்தலம் இருக்கிறது. இது ஒரு ஸ்டேஷன்.

**கல்வெட்டு :**

கோநேரின்மைகொண்டானது எட்டாம் ஆட்சியாண்டில் புஷ்பவனேஸ்வரர் கோயிலுக்கு நிலம் வழங்கினான். குலசேகர தேவன் தனது 25 ஆம் ஆட்சி யாண்டில் தினந்தோறும் வேத பாராயணஞ் செய்ய 1008 பிராமணர்களுக்கு உணவிற்காக நிலம் அளித்தான். ஒரு செப்பேடு ராஜகெம்பீர சதுர்வேதி மங்கல சடைக்கு 25 காசுகள் வழங்கியதை அறிவிக்கிறது.

## 51. திருமாற்பேறு

இத்தலம் ஹரிசக்ரபுரம் எனவும் வழங்கும். திருமால் ததீசி முனிவருடன் போர்செய்ய அவர் சக்கரம் வாய்மடிந்து போயிற்று. சலந்தரனைக் கொன்ற சக்கரம் சங்கரனிடத் திருப்பதையறிந்த திருமால் இத்தலத்திற்குவந்து இறைவனை ஆயிரந்தாமரைகொண்டு அர்ச்சிக்க, இறைவன் ஒரு நாள் ஒரு மலரை மறைத்துவிட்டார். திருமால் அதற்குப்பதிலாகத் தம் கண்ணையிடந்து அர்ச்சிக்க, சுதரிசனம் என்னும் சக்கரத்தை ஈந்தார். கண் இடந்து அர்ச்சித்தமைக்காக பதுமாக்ஷன் என்னும் பெயரையும் கொடுத்தார். சோமனும் பூசித்துப் பேறுபெற்ற தலம். இச்செய்தி 'மன்னி மாலொடு சோமன் பணிசெயும் மன்னுமாற் பேறடிகளை' என்னும் தேவாரத்தானும், 'பெருமாற் றின்படைவேண்டி நற்பூம்புனல் வருமாற்றின் மலர் கொண்டு வழிபடும் கருமாற்கின்னருள் செய்தவன்' என்னும் திருக்குறுந்தொகையானும் அறியப்படும். இறைவன்பெயர் மால்வணங்கீசர், மணிகண்டேசர். இறைவி கருணைநாயகி,

அஞ்சனாக்ஷியம்மை, தீர்த்தம் பாலாறு. இத்தலம் பளூர் ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கே 2 கல் தொலைவில் உள்ளது.

**கல்வெட்டுக்கள் :**

ஜயங்கொண்ட சோழமண்டலத்திலுள்ள காமக்கோட்டத்தின் பகுதியான வல்ல நாட்டிலுள்ள திருமாற்பேறு[1] என்று ராஜகேசரிவர்மன் திரிபுவனச்சக்ரவர்த்தி குலோத்துங்க சோழன்காலத்தில் குறிக்கப்பட்டுள்ளது. இறைவன் பெயர் கல்வெட்டுக்களில் திருமாற்பேறுடையார், ஆளுடையார், உத்தம சோழீஸ்வரமுடையார், அவிமுக்தீஸ்வரமுடையார் என்று வழங்கப்படுகின்றன. இத்தலத்தில் அக்கினீஸ்வரக் கோயில் ஒன்று தனியே இருந்திருக்கவேண்டும். இக்கோயிலுக்குக் கண்டராதித்தனால் ஐம்பெருங்குழு ஏற்படுத்தி நிலங்களைக் கவனிக்கவும், படையலுக்கு நெல்கொடுக்கவும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன[2]. இங்குள்ள விஷ்ணு கோயிலிலுள்ள இறைவன் பெயர் கோவிந்தபதியில் நின்றருளிய பெருமானடிகள் என்பது[3]. இது தண்டகநாட்டின் ஜில்லாவான தர்மக்கோட்டத்தின் பிரிவான வல்லநாட்டில் கோவிந்தபதியிலுள்ள கோயிலிலுள்ள நின்றருளிய பெருமான் ஆகும்[4]. மாற்பேறுடையார் கோயிலைக் கட்டவும், சுற்றுமண்டபத்தை முற்றுப்பெறச் செய்யவும் விராட அரசன் அனையமான் என்கிற மண்டலாதித்யனால் தானம் கொடுக்கப்பட்டது[5]. உத்தமசோழீஸ்வரமுடையார் உருவம் தயார்செய்ய சேதிராயன் என்பவனால் நிலம் தானம் செய்யப்பட்டது[6]. உமாபத்தராகியார் (அதிசுந்தர தேவதேவியார்) உருவம் தயார்செய்ய சோழன் ராஜகேசரிவர்மனால் நிலம் தானம்செய்யப்பட்டது[7]. மணவாளப்பெருமாள் உருவம்செய்யவும், ஆபரணம் தயார்செய்யவும் பரகேசரிவர்மன் ராசேந்திர சோழன் ஆட்சியில் ஆவன செய்ததைத் தெரிவிக்கின்றது[8]. கோயிலில் அனையமான் பரமண்டலாதித்தன் ஒரு மண்டபம் கட்டியுள்ளான்[9]. நம்மாழ்வார் திருவாய்மொழியின் வரிகள் கருப்பக்கிருகத்தின் மேற்குச் சுவரில் காணப்படுகின்றன[10]. மணவில்கோட்டத்தின் பகுதியான மேல்பழுங்கூர்

---

[1] *271* of *1906*, [2] *283* of *1906*, [3] *303* of *1906*, [4] *314* of *1906*, [5] *267* of *1906*, [6] *277* of *1906*, [7] *284* of *1906*, [8] *321* of *1906*, [9] *323* of *1906*, [10] *326* of *1906*.

நாட்டில் சிறியளூரில் கோவிந்தபதி ஆழ்வார் கோயில் ஒன்று உள்ளது[1]. தோழனூர் தந்தையால் கோவிந்தபதி ஆழ்வார்மீது ஒரு திருப்பதியம் பாடப்பட்டுள்ளது[2].

சோழன் இராசகேசரிவர்மன் காலத்தில் வைஷ்ணவர்களில் 18 நாட்டை குறிக்கப்படுகிறகின்றது. மேலும் வண்டல்படிந்த நிலங்களைப்பற்றியும் பாலாற்றில் வெள்ளம்வந்ததைப்பற்றியும், இதற்குச் செப்பனிட 1000 கூலிகள் நியமிக்கப்பட்டு ஒவ்வொருவருக்கும் 12 கோல் நிலம் கொடுக்கப்பட்டதுபற்றியும் அறிவிக்கப்படுகின்றன[3]. மற்றைய கல்வெட்டுக்கள் விளக்கிற்கு, பிராமணஉணவிற்கு, அபிடேகத்திற்கு பொன், நிலம், பசுக்கள், குடங்கள் முதலியன கொடுக்கப்பட்டதைத் தெரிவிக்கின்றன.

## 52. ஊறல்.

இத்தலம் தக்கோலம் என வழங்கப் பெறும்.நந்திதேவரது வாயினின்றும் நீர் சுரப்பதாலும், இறைவனது திருவடியினின்றும் நீர் சுரப்பதாலும் ஊறல் என்று வழங்குவதாயிற்று. சம்வர்த்தமுனிவர் பூசித்துப் பேறு பெற்றதலம். இக்கோயிலையடுத்து மதிலோரத்தின் கிழக்கே உள்ள கங்காதரர் சந்நிதியில் மேற்குப் பிராகாரத்தில் விருஷபவாயில் அகோராத்ரம் தீர்த்தம் வருவது ஸ்தல மகிமையைவிளக்கும். இறைவன் உமாபதீஸ்வரர், ஜலநாதேஸ்வரர். இறைவி உமையம்மை. தீர்த்தம் பார்வதி தீர்த்தம். விசயநகர அரசர்களால் நந்திதீர்த்தம் என்றழைக்கப்பட்டது. தக்கோலம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே ஒருகல் தொலைவில் இத்தலம் உள்ளது.

**கல்வெட்டுக்கள் :**

கல்வெட்டில் ஜலநந்தீஸ்வரர் என்று வழங்கப்பெறும். இராஜகேசரிவர்மன் ஆட்சியில் கங்கமன்னன் பிருதிவிபதியால் வெள்ளிப்பாத்திரம் தானம் செய்யப்பட்டது[4]. அவன் மனைவி அருள்மொழி நங்கையால் கோதானம் செய்யப்பட்டது[5].

[1] 326 of 1906, [2] 333 of 1906, [3] 322 of 1906, [4] 5 of 1197, [5] 7 of 1197.

கோ பார்த்திவேந்திர வர்மன் ஆட்சியில் துர்க்கைச்சிலைக்கு விளக்குகள் அளிக்கப்பட்டுள்ளன [1]. திரிபுவனச்சக்ரவர்த்தி குலோத்துங்கன் ஆட்சியில் திருக்காளத்திதேவன் என்கிற யாதவனால் நிலம் தானம் செய்யப்பெற்றுள்ளது [2]. மற்றவை விளக்கிற்கும், மற்றச்செலவுகளுக்கும் பொன், பணம், நிலம் ஆடுகள் நெல் முதலியன வழங்கியதைத் தெரிவிக்கின்றன.

## 53. இலம்பையங்கோட்டூர்

இங்கு அரம்பாதியர் பூசித்துப் பேறுபெற்றனர். அரம்பையங்கோட்டூர் என்பது இலம்பையங்கோட்டூர் என மருவியது. இறைவன் சந்திரசேகரர். இறைவி கோடேந்து முலையம்மை. தீர்த்தம் சந்திரதீர்த்தம். இத்தலம் திருவிற்கோலத்தினின்றும் தென்மேற்கே இரண்டு மைலில் உள்ளது.

கல்வெட்டு :

பாண்டியன் கோநேரின்மை கொண்டான் திரிபுவனச் சக்ரவர்த்தி ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் ஆட்சியில் மணவிற்கோட்டத்தின் பகுதியான கான்றூர் நாட்டிலுள்ள இலம்பையங்கோட்டூர் என வழங்கப்பெறும் [3], திரிபுவனச்சக்ரவர்த்தி திரிபுவன வீரதேவனது ஆட்சியில் கான்றூர் நாட்டிலுள்ள சதுர்வேதிமங்கலம் இலம்பையங்கோட்டூர் எனவும் வழங்கப்பெறும் [4]. இறைவன்பெயர் இலம்பையங்கோட்டூர் உடைய நாயனார் என்பது [5].

ராஜாதிராஜதேவன் காலத்தில், தேவநாயகசுவாமிகோயில், சிவபாதசேகர மூவேந்தவேளானால் கட்டப்பட்டுள்ளது [6]. மற்றவை விளக்கிற்கு நெல். பொன், ஆடுகள், நிலங்கள் முதலியன தானங்கொடுக்கப்பட்டதை அறிவிக்கின்றன.

---

1 14 of 1197, 2 16 of 1197, 3 232 of 1910
4 234 of 1910, 5 234 of 1910, 6 231 of 1910.

# 54. திருவிடைச்சுரம்

இத்தலம் மலைகளின் இடையில் கற்சுரத்தில் அமைந் தமையின் இப்பெயர் எய்தியது. சனத்குமாரமுனிவர் பூசித்துப் பேறுபெற்ற தலம். மூலலிங்கம் ஸ்வரூபத்தில் பிரதிபலிக்கக் கூடிய மரகதலிங்கம். சம்பந்தமூர்த்திகள் தூரத்தே எழுந்தரு ளும்போது திருமேனிச் செம்மைகண்டு "விடைச்சுரமேவிய இவர் வணம் என்னே" என்று வியந்துள்ளார். இறைவன் இடைச்சுரநாதர், ஞானபுரீசுரர். இறைவி இமய மடக்கொடி யம்மை.

திருக்கழுக்குன்றத்திலிருந்து 3-மைல் சென்று அங்கிருந்து வடக்கே திருப்போரூர்சென்று இரண்டுமைலில் வடக்கே திரும்பினால் அரைமைலில் உள்ளது.

**கல்வெட்டு:**

சோழ அரசன் குலோத்துங்க சோழதேவன் ஆட்சியில் ஜயங்கொண்ட சோழ மண்டலத்திலுள்ள களத்தூர் கோட் டத்தின் பகுதியான வளநாட்டிலுள்ள திருவிடைச்சுரம் என்று [1] குறிக்கப்பட்டுள்ளது. இறைவன் பெயர் திருவிடைச் சுரமுடைய நாயனார்; திருவிடைச்சுரம் உடையார் என்றும், வழங்கப்பெறும். இங்கு ஜனனபுரீஸ்வரர் கோயில் ஒன்று உள்ளது. மேலும் கோவர்த்தன அம்பாள் திருக்காமக் கோட்ட முடைய பெரிய நாச்சியார் உருவம் நிறுவ, பெருந்தண்டிலத்தி லுள்ள கருப்பக்கிரகம் கட்டப்பட்டதையும் கூறுகிறது [2]. இந்த இறைவி கருப்பக்கிருகத்திற்கு விளக்குப்போட ஆவன செய்யப் பட்டுள்ளது [3]. மகாமண்டலேஸ்வர குமார ஜலகராஜ திரு மலையதேவ மகாராயரால் விளக்குக்காகவும் படையலுக்காகவும் நிலம் கொடுக்கப்பட்டது [4]. பிள்ளையார் நீலங்கநாயனாரைப் பற்றி [5] விவரிக்கின்றது.

மற்றவை விளக்கிற்காகவும் மற்றவற்றிற்காகவும் பொன் நிலம் ஆடுகள் பசுக்கள் இவைகள் அளிக்கப்பட்டமையை அறிவிக்கின்றன.

---

[1] 335 of 1908. [2] 346 of 1908. [3] 347 of 1906. [4] 337 of 1908. [5] 342 of 1908.

## 55. திருக்கழுக்குன்றம்

கழுகுகள் பூசித்துப் பேறுபெற்றமையின் கழுக்குன்றம் எனப்பெறும். முதல்யுகத்து சாபமெய்திய சண்டன் பிரசண்டன் என்னும் கழுகுகளும், இரண்டாம் யுகத்து சம்பாதி ஜடாயு என்னும் கழுகுகளும், மூன்றும் யுகத்து சம்புகுத்தன் மாகுத்தன் என்னும் கழுகுகளும், நான்காம்யுகத்து சம்பு ஆதி என்னும் கழுகுகளும் பூசித்து முறையே பேறுபெற்றன. வேதங்கள் மலை யுருவாய்ச் சுவாமியைத் தாங்கலின் வேதகிரி எனவும் வழங்கும். வடதேசத்தினர் பட்சி தீர்த்தம் என்பர். இன்னும் இரண்டு பட்சிகள் தினந்தோறும் அன்னத்தையும் உண்டு வலம்வரு கின்றன. 12 ஆண்டுக்கொருமுறை சங்கு பிறத்தலின் சங்கு பிறந்த குளம் என்னும் மகிமையைப்பெற்றுள்ளது. மாணிக்க வாசக சுவாமிகளுக்கு இறைவன் குருமூர்த்தி வடிவமாய்த் தரிசனங்கொடுத்த தலம். இவரன்றி நந்தி, இந்திரன், கோடி ருத்திரர் முதலியோர் பூசித்துப் பேறுபெற்றனர். இறைவன் வேதபுரீஸ்வரர். இறைவி பெண்ணினல்லாளம்மை. மலைச் சொக்கநாயகி. அடிவார இறைவன் பெயர் பக்தவத்ஸலர். இறைவி திரிபுரசுந்தரி. தீர்த்தம் சங்கு பிறந்த குளம். சங்க தீர்த்தம், பட்சி தீர்த்தம்.

இத்தலம் செங்கற்பட்டிலிருந்து தென்கிழக்கே 9 மைலில் உள்ளது.

**கல்வெட்டுக்கள் :**

பாண்டியமன்னன் ஜடாவர்மன் என்கிற திரிபுவன சக்ர வர்த்தி வீரபாண்டியதேவன் காலத்தில் செயங்கொண்ட சோழ மண்டலத்தில் களத்தூர் கோட்டத்துத் திருக்கழுக்குன்றம் என்றும்[1], சோழர் காலத்தில் களத்தூர் கோட்டத்தில் களத்தூர் நாட்டிலுள்ள உலகளந்த சோழபுரம் என்றும் வழங் கப்பெறும். இறைவன் திருக்கழுக்குன்றமுடைய நாயனார்[2], என்று வழங்கப்படுவர். சண்முகப் பிள்ளையார் குறிக்கப்பட் டுள்ளார்[3]. இராஷ்டிரகூட அரசன் கன்னரதேவன் காலத்தில்

---

[1] 59 of 1909. [2] 61 of 1909. [3] 62 of 1909.

கருப்பக்கிருகத்தின் முன் மண்டபங்கட்ட ஈசானசிவா இடமிருந்து ஒருபட்டி நிலம் வாங்கப்பட்டது [1]. இராஜராஜபுரத்தில் வசிக்கும் ஒருவர் 10 காசுகள் கொடுக்கத் தான்வாங்கின நிலத்தை 63 நாயன்மாரில் ஒருவரான நமிநந்தியடிகள் பிதாவிடம் கொடுத்துள்ளார்கள் [2]. பக்தவத்சலக் கோயில் குன்றத்தின் மேலுளதாக [3] இரண்டு கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன. கோயிலைப் பழுதுபார்க்க விஜயநகர அரசன் பிரதாப புக்கராயர் நிலம் தந்துள்ளார். மேலும் தன் பெயராகிய புக்கராயன் சந்தி விழாவிற்காகவும் நிலம் தானம் செய்யப்பட்டுள்ளது [4]. ஆயிரப்பிரிவிலுள்ள மக்களால் திருமலை ஆளுடைநாயனுர் கோயிலுக்கு நிலம் தானம்செய்யப்பட்டது [5]. களத்தூர் பிரிவிலுள்ள மக்களால் அதே கோயிலுக்கு காளிங்கராயன் சந்தி விழாவிற்காக நிலம் தானஞ்செய்யப்பட்டுள்ளது [6]. மாறவர்மன் திரிபுவனச் சக்ரவர்த்தி வீரபாண்டியதேவன் காலத்தில் ஒரு நபரால் சண்முகப் பிள்ளையார் கர்ப்பக்கிருகத்திற்கு விளக்குப்போட பசுக்கள் தானஞ்செய்யப்பட்டுள்ளன [7]. விஜயநகர அரசன் வீரவிஜய பூபதிராயரது ஆட்சியில் அரசனுடைய அதிகாரியான நாகேஸ்வரமுடையான் விழாவிற்காக வரியைத் தள்ளுபடி செய்துள்ளான் [8]. 17-ம் நூற்றுண்டின் மத்தியில் டச்சுக்கார ஆபீசர்களைப்பற்றிய அடையாளச் செய்திகள் குன்றின் ஒருகால்மண்டபத்தின் கீழ்த்தாழ்வாரத்தில் 8 சுவர்களின்மேல் பொறிக்கப்பட்டுள்ளன [9]. இவையன்றி விளக்கு முதலானவற்றிற்குப் பொன், நிலம், ஊர், ஆடுகள், பசுக்கள், முதலிய அளிக்கப்பட்ட செய்திகளும் அறியப்படுகின்றன.

## 56. திருக்கானூர்

உமாதேவியார் சிவயோகத்து எழுந்தருளியிருந்தபோது இறைவன் செந்தீவண்ண ராகத் திருவுருக்காட்டிய தலம். இதனை அப்பர்சுவாமிகள் 'கானூரில் பரமனைய பரஞ்சுடர்' என்பார்கள். சுவாமி செம்மேனிநாதர். அம்மை சிவயோகநாயகி.

---

[1] 170 of 1894. [2] 179 of 1894. [3] 189 of 1894. 57 of 1909. [4] 57 of 1909. [5] 58 of 1909. [6] 59 of 1909. [7] 62 of 1909. [8] 63 of 1909. [9] 66 to 73 of 1909.

தீர்த்தம் கொள்ளிட நதி. இது பூதலூர் ஸ்டேஷனிலிருந்து வடக்கே இரண்டு மைல் தூரத்தில் உள்ளது.

**கல்வெட்டுக்கள் :**

இத்தலம் வடகரை ராஜராஜவளநாட்டுப் பொய்கையூர் நாட்டு பணிபதிமங்கலமாகிய கரிகாலசோழ சதுர்வேதி மங்கலத்துத் திருக்கானூர் என்று குறிக்கப்படுகிறது. சுவாமி பெயர் இட்சுபுரீஸ்வரர் என்று கல்வெட்டுக் குறிப்பாளர் எழுதுகிறார். கி. பி. 1268—1308 ஆண்ட மாறவர்மன் குலசேகரதேவன் ஏதோ நிபந்தம் அளித்திருக்கிறான். பெரிய நப்பனுன உத்தம சோழ நாடாள்வான் கிராமக் காவலாக இருந்தான். ராஜாதிராஜதேவனுடை நான்காம்ஆண்டுக்கல்வெட்டொன்றில் கரிகாற் சோழீசுரமுடைய மகாதேவர் கோயில் ஒன்று குறிக்கப்படுகிறது. இங்கே திருமேற்கோயில் என்னும் விஷ்ணு கோயில் இருந்ததைக் குறிப்பிடுகிறது.*

## 57. திருப்பரங்குன்றம்

இது முருகனது ஆறு படைவீடுகளில் ஒன்று. முருகன் தெய்வயானையைத் திருமணம் செய்துகொண்ட தலம். முருகன் வழிபட்ட தலம். சுவாமி பெயர் பரங்கிரிநாதர். அம்மை ஆவுடைநாயகி. தீர்த்தம் சரவணப்பொய்கை. மலைமேல் காசிதீர்த்தம் என்ற ஒன்று இருக்கிறது. அதில் பலரக மீன்கள் பார்ப்போர் கண்ணைக்கவரும். நக்கீரர் வாழ்ந்த நன்னகரம். இத்தலம் மதுரைக்குத் தென்மேற்கில் நான்கு மைல் தூரத்தில் உள்ளது.

**கல்வெட்டு :**

இத்தலத்துக் கல்வெட்டுக்களாக செவல் பாதிரியார் குறிப்பவை பதினொன்று. ஆனால் அவைகள் தெளிவும், வரலாற்று விளக்கம் உடையன அல்ல. கி. பி. 1843-ல் வீரசிம்மநாயுடு என்பவன் மரபில் வந்த மங்கம்மாள் கோயிலுக்குச் சிறிது தானம் வழங்கினாள். சுந்தரபாண்டியதேவன், வீரநாராயண

* 164 of 1911.

குளத்திற்குக் கீழ்ப்புறமிருந்த அம்பாண்டியபுரமாகிய புளிங் குன்றூர் கிராமத்தைப் பூசைக்கும் பணிக்கும் அளித்தான். அதில் கடவுள் பெயர் சுந்தரபாண்டீஸ்வரமுடையார் என்று குறிக்கப்படுகிறது. முகம்மதிய அரசாங்கத்தின் திவானுயிருந்த ராஜகோபாலராயர் ஐரோப்பியர் படை மதுரையில் புகுந்து, கோயிலை அழித்து முன்னேறிக்கொண்டிருந்தபோது. வயிராவி முத்துக்கருப்பன் குமாரன் குட்டி என்பவன் எதிரிப்படைகளைத் தடுப்பதற்காகக் கோபுரத்திலிருந்து கீழே விழ, அவன் பரம்பரையினருக்கு இறையிலியாகச் சில நிலங்கள் அளித்த செய்தி அறியப்படுகிறது.

## 58. திருப்பழனம்

இது திருவையாற்று ஸப்தஸ்தானத் தலங்களுள் ஒன்று. அப்பூதி அடிகளுடைய அவதாரத்தலமாய திங்களூர் இதற்கு அண்மையில் இருப்பதால் இங்கு வழிபட வந்த அப்பர் அடிகள் இத்தலப் பதிகத்து அப்பூதிநாயனுர் திருப்பெயரை அமைத்து அருளிச்செய்தார்கள். விடந்தீர்த்த பதிகமாகிய "ஒன்று கொலாம்" என்ற பதிகநிகழ்ச்சிக்கு இடமானதலம் இது. இறைவன் பெயர் ஆபத்சகாயர். அம்மையின் பெயர் பெரிய நாயகி. தீர்த்தம் காவிரி. இது திருவையாற்றிற்குக் கிழக்கே இரண்டுமைல் தூரத்தில் உள்ளது.

**கல்வெட்டு :**

இத்தலத்தைப்பற்றிய கல்வெட்டுக்கள் 29 உள்ளன. இவைகளும் முதற்பராந்தகன் காலமுதற்கொண்டே தொடங்குகின்றன, இவற்ருல் அரசர்களும் அரசியர்களும், அவர்களது தோழிமார்களும், தண்டத் தலைவர்களும் விளக்கிற்காக நிலமும் நெய்யும், பொன்னும் வழங்கியமை அறியலாம். திரிபுவன வீரதேவனுன மூன்ரும் குலோத்துங்கன் சிந்திநல்லூரில் உள்ள நிலங்களை 15500 காசுகளுக்கு விற்று அதைக் கோயிலுக்குக் கொடுத்தான். இராஜராஜன் மூன்று காணி ஒரு முந்திரி நிலம் அளித்தான் என்பதால் அரசர்களின் அன்பின் நுணுக்கம் அறியப்பெறுகிறது. கோ இராஜகேசரிவர்மன் காலத்தில் ஒரு வேளாளன் கல்மண்டபம் ஒன்றை எழுப்பித் தந்தான்.

# 59. திருப்பராய்த்துறை

இத்தலம் இந்திரன், குபேரன், சப்தரிஷிகள் இவர்களால் பூசிக்கப்பெற்றது. அகண்ட காவிரித்துறையில் உள்ளது. இதனை அப்பர் சுவாமிகள் 'பரக்குநீர்ப்பொன்னி மன்னுபராய்த் துறை' என்று அருளுவார்கள். இறைவன் பெயர் பராய்த்துறை நாதர். தேவியார் பெயர் மயிலம்மையார், தீர்த்தம் காவிரி. விருட்சம் பராய். விருட்சத்தால் இத்தலத்திற்குப் பெயராயிற்று. திருச்சி ஈரோடு பாதையில் ஸ்டேஷன் உண்டு.

**கல்வெட்டு :**

மதுரைகொண்ட கோப்பரகேசரி வர்மரான முதற்பராந்தகன் காலத்திய கல்வெட்டுக்கள் மிகுதியாக உள்ளன. இன்னாரது என்றறியமுடியாத இராஜகேசரிவர்மன் காலத்திய கல்வெட்டுக்களும் சில உள்ளன. அவையன்றிச் சுந்தரபாண்டியதேவர், கோநேரின்மைகொண்டான். கிருஷ்ணதேவ மகாராயர் கல்வெட்டுக்களும் இன்னாரென்று அறியமுடியாத சில கல்வெட்டுக்களும் உள்ளன. எல்லாமாக அரசியலார் படியெடுத்த கல்வெட்டுக்கள் 83. அவற்றால் அறியப்படும் கோயிலைப்பற்றிய உண்மைகள். கோயிலுக்கு விளக்கு எரிக்க ஆடும், பொன்னும் நிலமும் அளித்த செய்திகளாகும்.

சுந்தரபாண்டியதேவன் தன்னுடைய ஆட்சி ஒன்பதாம் ஆண்டில் தங்க ஆபரணங்கள் அளித்தான் [1]. குலோத்துங்கன் கருப்பக்கிருகத்துக்குப் பொன்வேய்ந்தான் [2]. சோமாஸ்கந்தர் கோயில் முன்மண்டபம் சிறைமீட்டான் திரிவிக்ரம உதயனால் கட்டப்பெற்றது [3]. தலவிநாயகருக்கு ஏகாம்பர உதயன் ஆட்சியில் நிலம் வழங்கப்பெற்றது [4]. இறைவன் திருப்பராய்த் துறை மகாதேவர், பராய்த்துறை பரமேசுவரன் [5] என்று வழங்கப்பெறுகிறார். இத்தலம் உத்தமசீலிச் சதுர்வேதி மங்கலத்துத் திருப்பராய்த்துறை என்று குறிக்கப்படுகிறது. இங்கே தக்ஷிணாயன புண்ணியகாலத்தும் சங்கராந்தியிலும் நீராட்டு விழா நடைபெற்றதாகத் தெரிகின்றது.

---

[1] 267 of 1903, [2] 268 of 1903, [3] 280 of 1903, [4] 282 of 1903, [5] 570 of 1903, 566 of 1903.

## 60. திருநாகைக்காரோணம்

இது சப்தவிடங்க ஸ்தலங்களில் ஒன்று. அதிபத்தநாயனுர் அவதரித்த நம்பியாங்குப்பம் திருக்கோயிலுக்கு வடகிழக்கில் ஒருமைல் தூரத்தில் இருக்கிறது. சிவபெருமான் புண்டரீக மகரிஷியை உடலோடு ஏற்றுக்கொண்ட தலமாதலின், காரோணம் எனப் பெயர்பெற்றது. ஆதிசேடன் பூசித்த தலமாதலின் இப்பெயர்பெற்றது. அவன் பூசித்த திருக்கோயில் மேற்கே ஒருமைல் தூரத்தில் நாகநாதர் கோயில் என வழங்குகிறது. முத்திமண்டபம் என்ற ஒன்று இங்கு உள்ளமை தனிச்சிறப்பு.

இறைவன் பெயர் காயரோகணேஸ்வரர். ஆதிபுராணர் என வழங்குதலும் உண்டு. அம்மை கருந்தடங்கண்ணி. வடமொழியில் நீலாயதாக்ஷி என வழங்கும். தலவிருட்சம் மா. விநாயகர் மாவடி விநாயகர், நாகாபரணப் பிள்ளையார். தியாகர் திருவுரு தனியே உண்டு. பாராவாரதரங்க நடனம். தீர்த்தம் புண்டரீக தீர்த்தம், காகதீர்த்தம் முதலியன.

இது திருவாரூர் நாகை கிளைப்பாதையில் கடற்கரையோரமாக உள்ள தலம்.

**கல்வெட்டு :**

இத்தலத்தைப்பற்றிய கல்வெட்டுக்கள் மிகச் சிலவே. இவ்வாலயத்தைப்பற்றியனவாக ஒன்றும் இல்லை. நாயக்க மன்னர்கள் டச்சுக்காரர்களுக்கு இந்நகரை வழங்கிய வரலாற்றுக்குறிப்பும் இதில் காணப்பெறுகிறது.

## 61. திருநல்லூர்

இத்தலம் கோச்செங்கட் சோழனுல் திருப்பணி செய்யப்பெற்ற மாடக்கோயில்களுள் ஒன்றை உடையது. திருநாவுக்கரசு சுவாமிகள் திருச்சத்தி முற்றத்திலே 'பூவார் அடிச்சுவடு என்மேல் பொறித்துவை' என்று விண்ணப்பஞ்செய்ய, இறைவன் 'நல்லூருக்குவா! உன்னுடைய நினைப்பை முடிக்கின்ருேம்' என்று அருள இங்கு எழுந்தருளினுர். திருவடி சூட்டப்

பெற்றூர். அதனை அமைத்துத் திருத்தாண்டகத்து ஓதுதலைக் காண்க. திருவாறையில் அவதரித்த அமர்நீதிநாயனூர் இத் தலத்தில் திருமடங்கட்டிச் சிவனடியார்களுக்குக் கந்தை கீள் கோவணங் கொடுத்துவந்தார். மறைந்துபோன சிவபெருமானது கோவணத்திற்காக தானும் உரிமையும் உடைமையுமெல்லாம் துலை ஏறி, அத்துலையே விமானமெனக்கொண்டு சிவபதம் அடைந்தார். இதனை அப்பர் சுவாமிகள் "நாட்கொண்ட" என்ற பாடலில் (7-ம் பாட்டு) விளக்கி அருளுகிறூர்கள்.

பிருங்கி வண்டுருபமாகப் பூசித்ததால் திருமேனி முழுவதும் தொளைகள் உள்ளன. அகத்தியருக்குக் திருமணக்கோலம் காட்டிய தலமாதலால் அகத்தியலிங்கமும், கல்யாண சுந்தரக் கோலமும் கருப்பக்கிருகத்தில் இருக்கின்றன. சுவாமி பொன் வண்ணத் திருமேனியோடு விளங்குகிறூர். ஒருநாளைக்கு ஐந்து வர்ணமாய் தோன்றுவதாக ஐதீகம். இங்கு சாலிக்கிராமத்தால் செய்யப்பெற்ற சுப்பிரமணியர் விக்கிரகம் ஒன்றுண்டு. சுவாமி பெயர் பெரியாண்டேஸ்வரர், கல்யாண சுந்தரேஸ்வரர், பஞ்சவர்ணேசர் என்பன. இறைவிபெயர் பர்வதசுந்தரி, கல்யாணசுந்தரி என்பன. தீர்த்தம் சப்தசாகர தீர்த்தம்.

சுந்தரப்பெருமாள் கோயிலுக்குத் தெற்கே இரண்டுமைலில் உள்ளது.

**கல்வெட்டு :**

இத்தலம் ஹொய்சள அரசரான வீர ராமநாததேவரின் 23-வது ஆட்சியில் நித்தவிநோத வளநாட்டு நல்லூர்நாட்டுப் பஞ்சவன் மாதேவி சதுர்வேதி மங்கலமாகிய திருநல்லூர் என்று வழங்குகிறது.

இறைவன் திருநல்லூர் நாயனூர் என்று வழங்கப்படுகிறூர். இத்தலவிநாயகர் அகம்படிவிநாயகர் என்று குறிக்கப்படுகிறூர். நாராயணன்மேகவீரன் என்பவன் ஒரு மண்டபங்கட்டினுன். ஏனைய கல்வெட்டுக்கள் நிவேதனத்திற்கு நெல்லும், நிலமும். விளக்கிற்குப் பொன்னும் பூந்தோட்டத்திற்கும், பூக்கட்ட நிலமும் பொன்னும் அளித்த செய்தியை அறிவிக்கின்றன. இராஜேந்திர சோழதேவனின் 5-ம் ஆண்டுக் கல்வெட்டொன்று கோயிலில் அடித்தளம் அமைக்க நிலம் வழங்கியதைத் தெரிவிக்கின்றது.

## 62. சிதம்பரம்

**தலம் :**

இத்தலம் கோயில் என வழங்கப்படுகின்றது. தில்லை, சிதாகாசக்ஷேத்திரம், பெரும்பற்றப்புலியூர் என்பன இதன் மறுபெயர்கள். மைத்ரேய உபநிஷதம் "இருதாயாகாச மயம் கோசம் ஆனந்தம் பரமாலயம்" எனக் குறிப்பிடுகின்றது. திருமந்திரத்தில் திருவம்பலச்சக்கரம், திருக்கூத்து, சிதம்பரம் முதலியன குறிப்பிடப்படுவதால் இதன்தொன்மை விளங்கும். கிஸ்ட் லிச் பேராசிரியர் கி. பி. 5 ம் நூற்றுண்டுமுதல் 10, 11 வரையில் கட்டப்பட்டுள்ள கட்டடங்கள் இங்கு இருக்கின்றன என்கிறார்.

**மூர்த்திகள் :**

திருமூலட்டானேசுரர், உமையம்மை, முக்குறுணிவிநாயகர், கற்பகவிநாயகர், பாண்டியநாயகம், அம்மன், நவலிங்கம், துர்க்கை முதலியன மிக விளக்கம் வாய்ந்தவை. வைஷ்ணவத்தில் திருச் சித்திரகூடம் எனவழங்கும். பெருமாள் தில்லைக்கோவிந்தராசர். தாயார் புண்டரீகவல்லித்தாயார். ஐந்து சபைகளுள் இது கனகசபை. இத்தலத்திலேயே ஐந்து சபைகள் உண்டு. அவை சிற்சபை (இது நடராசப்பெருமான் இருக்குமிடம்), ராஜசபை (ஆயிரக்கால் மண்டபம்), கனகசபை (சிற்சபைக்கு முன்னுல் உள்ள பகுதி), நிருத்தசபை (நடராசப்பெருமானின் கொடி மரத்திற்கருகிலுள்ளது), தேவசபை (பேரம்பலம்.) என்பன.

இத்தலத்து சிறப்புடைக் கடவுள் ஆனந்த நடராசர். அதனுடைய திருமேனி முழுவதும் பஞ்சாக்கரவடிவம். அவருடைய திருக்கூத்து ஓரேகாலத்தில் ஐந்தொழிலையும் ஆற்றுவது.

**தீர்த்தங்கள் :**

சிவகங்கை, பரமானந்தகூபம். புலிமடு, வியாக்கிரபாத தீர்த்தம், ஆனந்ததீர்த்தம், நாகசேரி, பிரமதீர்த்தம், சிவப் பிரியை, திருப்பாற்கடல் முதலியன. இறைவன் ஊர்த்துவ தாண்டவமாடத் தோற்ற காளியின் கோயில் இந்தச் சிவப் பிரியைத்தீர்த்தத்தின் கீழ்கரையில், சிதம்பரத்தின் வட எல்லையில் இருக்கிறது.

தலவிருட்சம் ஆல். இது இன்று இல்லை. தில்லைவனம் என்ற பெயரால் தலவிருட்சம் தில்லை என்பாருமுளர்.

இடம் சென்னை திருச்சி நேர்பாதையில் பிரபலமான ஸ்டேஷன்.

**கல்வெட்டுக்கள் :**

சிதம்பரம் ஒரு தனியூராக அரசன் நேர்பார்வையில் இருந்துவந்தது. இதனைச்சூழ பதினான்கு சிற்றூர்கள் இருந்தன வாகக் குறிக்கப்பட்டுள்ளன. இத்தலத்தின் பழையபேர் சிற்றம் பலம்[1]. புலியூர், பெரும்பற்றப்புலியூர், பொற்புலியூர், தில்லை, தில்லையூர், கோயில் என்று கல்வெட்டுக்களில் வழங்கப்படுகிறது[2] தில்லையின் தேவகாரிய கண்காணிப்பாளர்களே சோழநாடு முழுமைக்கும் தேவாலயக் கண்காணிப்பாளராக இருந்துவந் தனர். சோழமன்னர்களுக்கு முடிசூட்டும் உரிமை தில்லை தேவ காரிய குழுவினர்க்கே இருந்தது.

கல்வெட்டுக்களில் மிகப் பழமையானதாகிய இராஜேந்திர சோழ தேவனுடைய 24 ம் ஆண்டுக் கல்வெட்டும், குலோத்துங்க சோழ தேவனுடைய 47 ம் ஆண்டுக் கல்வெட்டும் கனகசபையை யும் திருமூலட்டானத்தையும் பிரிக்கும் சுவரில் உள்ளன.

கனகசபையைச் சுற்றியுள்ள பிராகாரம் விக்கிரமசோழன் திருமாளிகை என்றும், திருமூலட்டானத்தைச்சேர வருகின்ற இரண்டாம் பிராகாரம் குலோத்துங்கசோழன் திருமாளிகை என்றும், அதற்கும் வெளியிலுள்ள மூன்றும் பிராகாரம் இராசாக்கள் தம்பிரான் திருமாளிகை என்றும் வழங்கப் பட்டன. இவற்றுள் குலோத்துங்க சோழன் திருமாளிகை என்ற பெயரும், விக்கிரமசோழன் திருமாளிகை என்ற பெயரும் மேற்குறித்த சுவரிலுள்ள கல்வெட்டுக்களிலேயே காணப்படு கின்றமையின், விக்கிரமனே தன் தந்தையாகிய குலோத்துங்கன் பெயரால் உட்பிராகாரத்தையும், தன்பெயரால் இரண்டாம் பிராகாரத்தையும் செய்திருக்கவேண்டுமென்று தெரிகிறது.

---

[1] A. R. for *1914*. Para. *13*. [2] A. R. *117–1888*.

சம்பந்தர் முதலிய மூவர் காலத்திலேயே இத்தலம் சிறப்புற்றிருக்கவும், அவர்கள் காலத்திய பல்லவ வேந்தர்களின் கல்வெட்டொன்றும் இதில் காணப்பெறுமை குறிப்பிடத்தக்கது.

சிதம்பரத்தைப்பற்றிய கல்வெட்டுக்கள் 271 உள்ளன, அவைகளுள் பெரும்பாலன கோப்பெருஞ்சிங்க அரசனைப் பற்றியும், ஜடாவர்மன் சுந்தர பாண்டியனைப்பற்றியும் கூறுவனவாகும். மற்றும் சோழமன்னர்களாகிய ராஜேந்திரன் முதல் இராஜராஜன் III முடிய உள்ள பலருடைய கல்வெட்டுக்களும், விஜயநகர மன்னர்களின் கல்வெட்டுக்களும் நாயக்க மன்னர்களின் கல்வெட்டுக்களும் இருக்கின்றன.

இவைகளுள் பெரும்பாலனவற்றில் நந்தவனப் பணிகளே அறிவிக்கப்பட்டுள்ளன. மிகச் சிலவற்றுள் பூசை வழிபாட்டுக்குரிய நிபந்தங்கள் குறிக்கப்பட்டுள்ளன. அறச்சாலைகளைப் பற்றியும், அக்கிரகாரங்கள் அமைப்பதைப்பற்றியும், திருப்பாவாடை போடுவதைப்பற்றியும் தெரிவிக்கின்றன சில கல்வெட்டுக்கள்.

விக்கிரமசோழனது காலம்வரையில் கோயிற் சார்பாக நடைபெற்ற சாசனங்களெல்லாம் திருப்புலியூர்ச் சண்டேசுவர தேவநாயனார் பெயராலேயே நடைபெற்றுவந்தன. இவன் காலத்துக்குப் பிறகு கோயில் கண்காணிப்புச் சபையின் பெயராலேயே நடைபெற்று வந்திருக்கின்றன.

அரசாங்கத் தலைமை அதிகாரிகளும், உள்நாயகத்தார்களும், ஸ்ரீகாரியஞ் செய்வார்களுமாகப் பலர் மேற்கூறிய சபையின் அங்கத்தினர்களாக இருந்து கோயிற்காரியங்களை மேற்பார்வை செய்து வந்துள்ளார்கள்.

சிதம்பரம் திருக்கோயிலைக் கண்காணித்தவர்களாக 1. தொண்டைமான் 2. திருவையாறுடையான் 3. மதுராந்தகப் பிரமராயன் 4. தில்லையம்பலப் பேரரையன் 5. விழிஞத்தரையன் 6. இராசராசவிழுப்பரையன் 7. சித்தரையன் 8. வில்லவரையன், 9. அங்கராயன் 10. சிங்களராயன் 11. விஜயராயன் 12. மூவேந்தரையன் 13. வாணதரையன்

14. வயல்நாட்டரையன் 15. பொத்தப்பிச்சோழன் 16. காரணை விழுப்பரையன் 17. குருகுலராயன் 18. மழவராயன் 19. காடு வெட்டி 20. வயிராதிராயன் 21 விலாடராயன் 22. விக்ரம சோழப்பிரமராயன் 23. விளநாடுடையான் 24. நிகரில்சோழப் பல்லவரையன் 25. குலோத்துங்க சோழவாணகோவரையன் 26. எதிரில்சோழவேளான் 28. நரசிம்மவர்மன் 28. பாண்டிய ராயன் 29. மலையப்பிராயன் 30. வேணுடையான் என்பவர்கள் குறிக்கப்படுகிறார்கள்.

கிழக்கு, தெற்கு, மேற்குக் கோபுரங்களை முடிசூடிய மன்னர்கள் கட்டியதாகவும், வடக்குக்கோபுரத்தைக் கடவுள் தானே கட்டிக்கொண்டாரென்றும் S. I. I. 374—1913. கல் வெட்டுப் பாட்டொன்று அறிவிக்கிறது. இவ்வடக்குக் கோபு ரத்தைக் கிருஷ்ணதேவராயன் தொடங்கி நிலைமட்டம் வரை யிலோ, அல்லது அதற்கு மேலுமோ நிறுத்தியதாகவும், அச்சுத தேவராயன் இதனை முற்றுப்பெறுவித்ததாகவும் கல்வெட்டுக் களில் யூகிக்க இடந்தருவதால். கடவுள் தானே கட்டிக் கொண்டார் என்று கல்வெட்டு உபசாரமாகக் கூறுகிறது போலும். தெற்குக்கோபுரம் கோப்பெருஞ்சிங்கனால் கட்டப் பட்டது. இவனுக்கு அழகிய சிங்கன் என்ற மற்றொரு பெயரு முண்டாதலால் இக்கோபுரம் சொக்கசீயம் என்று குறிக்கப் பட்டுளது. இதனைத் தெற்கில் சொக்கச்சீயன் திருநிலை யேழு கோபுரத்திருவாசல் திருப்பணிக்கு உடலாகத் தொண்டை நாட்டு ஆத்தூரில் நிலம்விட்டதாகவரும் ஆத்தூர் முத்தீசுர முடையார் கல்வெட்டும், கச்சிஏகம்பமுடையார் கல்வெட்டும் தெரிவிக்கின்றன [1].

மேலைக் கோபுரத்தைத் திருப்பணி செய்த சிற்பிகள் விருத் தகிரிசேவகப் பெருமாளும் அவன் மகன் விச்வமித்துருவும், திருப்பிரைக்குடையாசாரி திருமருங்கனும், அவன் சகோதரன் சாரணாசாரியும் ஆவார்கள் எனக் கல்வெட்டுக் காட்டுகிறது [2]. இன்னும் அதிலேயே கீழ்ப்புறச் சுவரில் காமதேவன், அகத் தியன், சீதேவி, தேவேந்திரன், கணேசன், துர்க்கை இவ்வுருவங் களும், வடபுறச்சுவரில் ருத்ரதேவர், ராகு கேதுக்கள், நாரதன்,

[1] S. I. I. Vol VIII 51. [2] S. I. I. 17 - 1916.

அளகேசன், சந்திரன், கிரியாசக்தி, சனி, வாயு இவ்வுருவங்களும் மேல்புறச் சுவரில் [1] க்ஷேத்ரபாலப் பிள்ளையார், கங்காதேவி, தன்வந்தரி, திரிபுரசுந்தரி, சுக்கிரன், வைஜயன், நாகன், யமுனை. பத்ரகாளி, ஆதிசண்டேசர் இவ்வுருவங்களும், தென் சுவரில் புதன், நிருதி, ஞானசக்தி, அக்னிதேவன். இவ்வுருவங்களும் இருப்பனவாக அறிவிக்கிறது. [2]

தேவாரம் பாடிய மூவர் முதலிகளாகிய ஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவருக்கும் தனித்தனியே ஆலயங்கள் இருந்தனவாகக் கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன.

வடக்குக் கோபுரத்தை யடுத்துத் திருத்தொண்டைத் தொகையீச்சரம் என்ற ஒன்று குறிப்பிடப்படுகிறது. இதில், திருத்தொண்டத்தொகையில் பாராட்டப்பெற்ற தனி அடியார் அறுபத்துமூவரும், தொகையடியார் ஒன்பதின்மருமாக உள்ள பெருமக்களில், தனியடியார்களுக்குத் தனித்தனித் திருவுருவம் அமைக்கப்பெற்றமைபோலத் தொகையடியார்களாகிய கூட்டத்தினருக்குத் தனித்தனி உருவம் அமைக்கமுடியாமையின், ஒவ்வொரு தொகுதிக்கும் ஒவ்வொரு இலிங்கத் திருமேனியாக எழுந்தருளச் செய்திருக்கிறது. முத்தியடைந்த பெருமக்களை உருவம் தெரிந்தால் உருவமமைத்தும், உரு அமைக்க முடியாததற்குச் சிவலிங்கந் தாபித்தும், அதுவுமில்லையானுல், பீடங்கள் அமைத்தும் வழிபடலாம் என்று ஆகமங் கூறுகிறது. ஆதலால், உருவம் அமைக்கமுடியாத தொகையடியார்களைச் சிவலிங்கத் திருமேனி வாயிலாக வழிபடவேண்டித், திருத்தொண்டத் தொகை யீச்சரம் என்ற இக்கோயிலை அமைத்து உள்ளார்கள். அன்றியும், தொண்டத்தொகை பாடிய சுந்தரர் வடக்குவாயில் வழியாக வந்தாரென்பதும் ஊன்றிக் கருதத்தக்கது. இவ்வாலயம் நவலிங்கம் கோயில் என இப்பொழுது வழங்கப்படுகிறது.

மூர்த்திகளின் திருநாமங்கள்: பொன்னம்பலக் கூத்தன், [3] பொன்னம்பலநாதன், [4] ஆனந்த தாண்டவப் பெருமாள்

---

[1] இது தல விநாயகராகிய கற்பக விநாயகரைக் குறிப்பதாகும். [2] S. I. I. *1916* of *17, 48.* [3] A. R. *622* of *1888,* [4] A. R. *352* of *13.*

நாயனார், [1] அழகிய திருச்சிற்றம்பலமுடையார், [2] ஆளுடைய நாயனார், [3] சிதம்பரேசுவரர், தில்லைநாயகத் தம்பிரானார் முதலாகிய பலபெயர்களால் குறிக்கப்படுகிறார். திருச்சிற்றம் பலக்கோவையில் மாணிக்கக்கூத்தன் என்றும் இறைவன்பெயர் வழங்கப்படுகின்றது. அதற்குப் பேராசிரியர் மாணிக்கம்போலும் கூத்தினை உடையான் என்று உரைகண்டார். ஆனாலும், அது இரத்தின சபாபதியாகிய மரகத நடராஜரைக் குறிப்பது என்பது தெளிவு.

அம்மை சிவகாமசுந்தரி என்றும், திருக்காமக்கோட்ட முடைய பெரிய நாச்சியார் என்றும் வழங்கப்படுகிறார். சிவகாம சுந்தரி என்பது சிற்சபையில் இறைவன் இடப்பாகத்தில் எழுந் தருளியிருக்கும் அம்மையைக் குறிப்பதாகும். முக்குறுணி விநாயகர் முகக்கட்டணத்து விநாயகர் எனவும், [4] குலோத் துங்கசோழ விநாயகர் எனவும் கல்வெட்டுக்களில் குறிப்பிடப் படுகின்றார். முகக்கட்டணம் என்பது முகப்பு. தில்லைக்குத் தெற்குக்கோபுரமே சிறந்த பெருவாயில். அவ்வழியாகவே நடராஜப்பெருமானை வழிபடச் செல்கின்றவர்கள் செல்வது முறையாம். நடராஜப்பெருமானின் திருமுன்பும் இதுவே. ஆதலால் முகப்பிலிருக்கும் பிள்ளையார் முகக்கட்டண விநாயகர் எனக் குறிப்பிடப்படுகிறார். முகக்கட்டணமென்பது முக்கண மாகி - முக்கணம் முக்குணியாகப், போலி இலக்கண அறிவு அதனை முக்குறுணி யாக்கிவிட்டது. அதன்மேல் உருவத்தின் பெருமையையொட்டி, முக்குறுணி அரிசிக்கு ஒரே மோதகம் செய்து நிவேதிக்கப்படுவதால் இப்பெயர் உண்டாயிற்றென்ற செவிவழிச் செய்தியும் கிளைத்துவிட்டது.

'விக்கிரமசோழன் தெற்குத் திருவீதியில் வடபக்கத்துச் செங்கனிவாயான் திருநந்தவனத்து எழுந்தருளியிருக்கும் திரு ஞானசம்பந்தப் பிள்ளையார் பண்டார உடலிட்டும்' என்ற குறிப்பு காணப்பெறுவதால் விக்கிரமசோழன் திருவீதியில் திருஞான சம்பந்தருக்குத் தனியாகக் கோயில் இருந்தமை

---

[1] E. P. 1 of 1914, [2] S. I. I. 280 of 13, [3] S. I. I. 332 of 13, [4] S. I. I. 365 of 13.

தெற்றெனப் புலப்படும். மேலைக்கோபுரத்தை யடுத்து, திருநாவுக்கரசருக்குத் தனிமடமிருந்ததாகக் காட்டப்பெறுகிறது. முருகன், 'சுப்பிரமணியப் பிள்ளையார்' என்று ஒரு கல்வெட்டில் குறிக்கப்பெறுகிறார்.

கற்பகவிநாயகர், க்ஷேத்திரபாலப் பிள்ளையார்' என்றும், 'குலோத்துங்கசோழவிநாயகர்' என்றும் குறிப்பிடப்படுகின்றார்.

தில்லைக்காளி, 'தில்லைவனமுடைய பரமேசுவரி' என்று குறிப்பிடப்படுகின்றார்.

**விழாக்கள் :**

தில்லையில் திருவானித் திருநாளும், மார்கழித் திருவாதிரைத் திருநாளும் சிறப்பாகக் கோப்பெருஞ்சிங்கன் காலத்து முன்பிருந்தே நடைபெற்றுவந்தன.[1] மாசிமாதத்தில் ஒரு திருவிழா நடந்ததாகத் தெரிகிறது. அதில் திருத்தொண்டத்தொகை விண்ணப்பம் செய்யப்பெற்று வந்தது.[2] ஏனைச் சிவதலங்களில் அம்மைக்கு ஆடிப்பூரவிழா நடைபெற்று வருவதுபோல, இங்கு ஐப்பசிப்பூரவிழா நடைபெற்று வருகிறது.[3] மாசிமக நட்சத்திரத்தன்று நடைபெறும் கடலாட்டு விழாவும் குறிப்பிடப்படுகின்றது. 'திருப்புதியது விழா' என்று ஒன்று காணப்படுகின்றது. அதில் அம்மைக்குப் புதிய ஆடை சாத்தியதாகக் குறிப்பிடப்பெற்றுள்ளது. திருப்புடவையிடுவிழா என்றும் அது வழங்கப்பெற்றுப் பின் திருப்புதியதுவிழா என்று வந்திருக்கலாமோ என்று கருத இடமுண்டு.[4] அன்றி, திருப்பாலிவளத்திருநாள் என்று ஒருவிழா குறிப்பிடப்பட்டுள்ளது. அது ஐப்பசிப்பூரத் திருநாளைக் குறிப்பதாகுமோ? என ஐயந்தருகிறது. இதில் அம்மை நீராடி, வெள்ளணி அணிந்து, பயறு முதலிய நவதானியங்களின் முளையைத் தன் மடியில் தரிக்கும் நாளாதலின் பாலிவளத்திருநாள் எனப்பட்டதுபோலும். (பாலி-நவதானிய முளை)[5] வசந்தத்திருநாள் என்பது பெருமான் வசந்த உற்சவம் கொண்டாடக் குலோத்துங்கன் தோப்புக்கு எழுந்தருளியதாகத் தெரிகிறது.[6] திருக்கண்சாத்தும் திருநாளும், பெருமான் பரிவார நாயன்மார்களுக்குத் திருவருள்

---

[1] Vol. IV. *223*. [2] Vol. IV. *223*. [3] *360* of *13*. [4] *269* of *13*.
[5] Vol. IV. *43*. [6] Vol. IV. *43*.

நோக்கம்செய்யும் திருநாளாகும் என அக்கல்வெட்டே குறிப்பிடுகிறது.

இந்த ஒன்பது விழாக்களையுமன்றி 'எதிரிலிசோழன் சிவபாதசேகரன் சித்தத்துணைப் பெருமாள்விழா' என ஒன்று குறிப்பிடப்படுகின்றது. சிவபாதசேகரன் என்பது முதல் இராஜராஜனுக்கு வழங்கியபெயர். எதிரிலி என்பது முதற் குலோத்துங்கனுக்கு வழங்கியபெயர். ஆகவே தன்னுட்களில் தன் குலமுதல்வனுகிய இராஜராஜன் வரையில் இருந்த சோழ மன்னர்கட்குச் சித்தத்துணையாகவே இருந்துவந்த நடராஜப் பெருமானுக்கு நடந்த பெருவிழாக்களையே இது குறிப்பிட்ட தாகுமென ஊகிக்கலாம். இதுவன்றித் தைப்பூசத்தில் பாவாடையிட்டுப் பெரிய பூசவிழா ஒன்று நடத்தியதாகவும் தெரிகிறது. இத்தகைய திருவிழாக்கள் கல்வெட்டுக்களிலிருந்து அரிய வருகிறது என்பது சிந்திக்கத் தக்கதொன்று.

கிழக்கோபுரத்தின் வாயிலின் வலப்பக்கத்தில் காணப் பெறும் கல்வெட்டு, சோழகுலவல்லியால் நாயன்மார்களுடைய பாமாலையைப் பாராயணம் செய்விப்பதற்காக நிபந்தம் விட்டதை அறிவிக்கிறது. முதலாம் இராஜேந்திரன் காலத்தில் மாசித்திருவிழாவில் அழகிய திருச்சிற்றம்பலமுடைய நாயனுர் சந்நிதியில் திருத்தொண்டத்தொகை பாராயணம் செய்வாருக்கு நிலம்விட்டதாக உள்ளது. சம்பந்தர் முதலிய மூவருக்கும், தெற்கு, மேற்கு, வடக்கு ஆகிய கோபுரங்களைச்சார இராஜாக்கள் தம்பிரான் திருமாளிகைத் திருவீதியில் தனித் தனியே திருக்கோயில்கள் இருந்ததாகவும், அவற்றுள் சம்பந்தப் பிள்ளையார் திருக்கோயில் பொன்வேயப் பெற்றிருந்ததாகவும் கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன. இதனுல் திருமுறைகளுக்கும், திருமுறைகளைப் பாடியருளிய சமயாசாரியர்களுக்கும் எவ்வளவு சிறப்பு சிதம்பரத்திலிருந்தது என்பதை ஊன்றிநோக்க வேண்டும்.

அப்பூதியடிகள் நாவுக்கரசர்மீதிருந்த பற்றினுல் நிலம் புலம் எல்லாவற்றிற்கும் அவர்பெயரிட்டு வழங்கியதுபோல, அரசர்கள் ஆனந்தக் கூத்தர்மீதிருந்த பற்ருல், குடிநீருக் கல்லுக்கும், மரக்காலுக்கும் ஆடவல்லான் என்று பெயரிட்டு வந்தனர். சிற்றூர்களுக்குத் தில்லைவிடங்கன், கூத்தனூர்,

கோயிற்பூண்டி, சபாநாயகபுரம், தில்லைநாயகபுரம், நடராஜ புரம் என்றும், ஓடை நீர்நிலை முதலியவற்றிற்குக் கூத்தாடு நாயகன் திருவோடை, ஆளுடையநாயகன் திருவோடை என்றும் பெயரிட்டிருந்தனர். தம்மிடம் அரசகாரியம் பார்ப்பாருக்குத் தில்லையம்பல பல்லவராயன், திருச்சிற்றம்பல முடையான் நக்கன், இளைய திருச்சிற்றம்பலமுடையான், தில்லையம்பலப் பேரரையன் என்றும் பெயர் வைத்திருந்தமை அரசர்கட்கு உள்ள அன்பின் முதிர்ச்சியை எடுத்துக்காட்டும் தக்க சான்றுகளாம்.

இத்தலத்திற்குப் பணிசெய்த மன்னர்களில் பல்லவர்களில் இரணியவர்மன், கோப்பெருஞ்சிங்கன் முதலியோர்களும் பாண்டியர்களின் மாறவர்மன் சுந்தரபாண்டியன், ஜடாவர்மன் சுந்தர பாண்டியன், மாறவர்மன் வீரபாண்டியன், விக்கிரமபாண்டியன் குலசேகரன் முதலியோர் குறிக்கப்படுகிறார்கள். சோழமன்னர்களில் முதல் பராந்தகன் முதல் மூன்றும் இராஜராஜன்வரையிலுமாகப் பதின்மர் குறிப்பிடப் படுகிறார்கள். இவர்களில் இரணியவர்மனும், முதற்பராந்தகனும், மணவில் கூத்தன் காளிங்கனும், அனபாயன் முன்னோர்களும் அனபாயனும் பல காலங்களில் பொன் வேய்ந்தார்கள் என்று கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன. இன்னும் விஜயநகர அரசர்களும். நாயகர் அரசர்களும், சேர அரசர்களும் திருப்பணிகள் மிகச்செய்துள்ளார்கள், இவற்றின் விரிவையும் விளக்கத்தையும் எமது சிதம்பரம் என்னும் நூலில் பரக்கக்காண்க.

## 63. திருக்கோளிலி

ஆதியில் பிரமன் சிருட்டித்தொழிலைப்பெறவேண்டிப் பூசித்தான். அதனால் பிரமதபோவனம் என வழங்கப்பெறும். இது சப்த விடங்கத் தலங்களுள் ஒன்று. இங்கே எழுந்தருளியுள்ள தியாகர் அவனி விடங்கர். நவகோள்கள் பூசித்துப் பேறு பெற்றமையால் கோளிலி என வழங்கப் பெறுகிறது. இன்று திருக்குவளை என வழங்குகிறது.

இறைவன் பிரமபுரீசுவரர். அம்மை வண்டமர்பூங்குழலாள். தியாகர் ஊழிப்பரன். அவனிவிடங்கத்தியாகர். விநாயகர் தியாக

விநாயகர். முருகன் சுந்தரவடிவேலன். சுந்தரமூர்த்திகளுக்குக் குண்டையூர்கிழார் தந்த நெல்மலையைப் பூதங்களைக்கொண்டு திருவாரூரில் சேர்ப்பித்த அற்புதத்தலம்.

தீர்த்தம் முத்திநதியாகிய சந்திரநதி, மணிகர்ணிகை, இந்திரதீர்த்தம், அகத்தியதீர்த்தம், விநாயகதீர்த்தம், சக்தி தீர்த்தம் என்பன. விருட்சம் தேற்றுமரம்.

**வழிபட்டவர்கள் :**

பிரமதேவர், திருமால், இந்திரன், அகத்தியன், முசுகுந்தன், பஞ்சபாண்டவர்கள், நவகோள்கள், ஓமகாந்தன் முதலியோர்.

**விழாக்கள் :**

மாசிமகத்தில் நெல் திருவிழா, மார்கழிமாதத்தில் ஆருத்ரா தரிசனம். கார்த்திகை ஞாயிற்றுக்கிழமைகளில் தீர்த்தம்.

**இடம் :**

இத்தலம் நாகப்பட்டினம் தாலுக்காவில் திருவாரூர் அறந்தாங்கிப் பாதையில் திருநெல்லிக்காவல் நிலையத்திலிருந்து கிழக்கே 7 மைல் தொலைவிலும், நாகப்பட்டினமிருந்து திருத்தருப்பூண்டி செல்லும் கற்பாதையில் கீழையூரிலிருந்து மூன்று மைலிலும் இருக்கிறது.

**கல்வெட்டு :**

இங்குள்ள கல்வெட்டுக்கள் 19. இத்தலம் இராஜேந்திர சோழவளநாட்டு இடையளநாட்டு வெண்டாழை வேளூர்க் கூற்றத்திற்கு உட்பட்டதாயிருந்தது. வடவல்லத்து இருள் குடியான் இந்திராபதிநல்லூர் உய்யவந்தான் சிய்யாழிப் பிள்ளையான ஜெயதுங்கவன்மன் மகாமண்டபந் தொடங்கிக் கீழைவாசல்வரையில் திருப்பணிசெய்தான். இத்திருப்பணி ஜடா வர்மன் சுந்தரபாண்டியன் காலத்ததாகும். இந்தக்கோயிலில் சிவன்படரில் (செம்படவர்) ஒருவனான ஆலன் என்பான் அதிபத்தநாயனார் படிவத்தை எழுந்தருளுவித்தான்.

## 64. திருச்சிராப்பள்ளி

இத்தலம் மிக விளக்கமானது. மலைக்காட்சியின் முதலிடமாக உள்ளது. காவிரிக்குத் தென்கரையில் அமைந்தது. கலா சாலைகளும், கல்லூரிகளும் நிறைந்து எல்லாவிதமான அறிவுத் துறையிலும் வளர்ச்சிக்குரிய இடமாக இருக்கிறது.

சரித்திர காலத்திலும் கி. மு. 2-ம் நூற்றுண்டுக்கு முன்பிருந்தே விளங்கிவருவது. சோழர் தலைநகரங்களில் ஒன்ருகிய உறையூரைத் தன்னகத்துக்கொண்டு விளங்குவது.

**பெயர்க்காரணம் :**

திரிசிராப்பள்ளி என்பதற்குத் திரிசிரன் என்னும் அரக்கன் பூசித்துப் பேறுபெற்றதனுல், இப்பெயர்பெற்றது என்று புராணங்கூறும். இம்மலைக்கே மூன்று சிகரங்கள் உள்ளன. அதனுல் திரிசிரர்ப்பள்ளி யெனப்பெற்றது என்று செவிவழிச் செய்தி நிலவுகிறது. இந்தப் பொருள்களில் வழங்கிய திரிசிரப் பள்ளி திரிசிராப்பள்ளி ஆதற்கு என்ன விதியுண்டு என்பதை யறிஞர்கள் ஆய்ந்து முடிவுகாண்பார்களாக.

நமது சமயாசாரியப் பெருந்தகையார்கள் ‘சிராப்பள்ளிக் குன்றுடையானை’, ‘சிராப்பள்ளிச் செல்வன்’ ‘சிரகிரி’ எனவே வழங்குகின்ருர்கள். திரிசிரா என்பதில் திரி என்பது மூன்று என்ற பொருள்குறித்த சொல்லாயின் அதனை விடுத்துச் சிராப்பள்ளி என்று வழங்கியிரார்கள். ஆதலால் அவர்கள் காலத்தில் திரு என்பதை யடைமொழியாகக் கொண்டதே சிராப்பள்ளி என்பதற்கு வேறு பொருள் இருந்திருக்கவேண்டும் என்பதனைக் கருத இடந்தருகின்றது.

“சிராப்பள்ளி” என்றதன் பெயர்க் காரணத்தைப்பற்றி நமது சரித்திரப் பேரறிஞர் தி. வி. சதாசிவப் பண்டாரத்தார் அவர்கள் செந்தமிழில் எழுதிய சுருக்கக் கருத்து இங்கே தரப் பெறுகின்றது :—

சிராப்பள்ளிக் கோயில் கட்டியவன் கி. பி. 7-ம் நூற்றுண்டில் நமது அப்பரடிகளை வருத்திச் சைவனுன முதல் மகேந்திர வர்மனே. அவன் இத்தலத்து எட்டு ஸ்லோகங்கள் அடங்கிய

கல்வெட்டு ஒன்று அமைத்திருக்கிறான். அதில் தான் சைவனானதையும் [1] திருவதிகையில் அமண் பள்ளிகளை யிடித்துக் குணபரேச்சுரம் கட்டியதையும் குறிப்பிடுகின்றான். குணபரன் என்பது மகேந்திரவர்மனையே குறிக்கும் பட்டப்பெயர். இதனைச் சிராப்பள்ளியிலும், செங்கற்பட்டு வல்லத்திலும் உள்ள குகைக்கோயிற்கல்வெட்டுக்கள் வலியுறுத்தும். அதைப்போலவே சிராப்பள்ளியாகிய இவ்விடத்தும் அமணப்பள்ளி ஒன்று பெரியதாக இருந்தது. அதனை இடித்தே இந்தக் கோயிலைச் சைவனான மகேந்திரவர்மன் கட்டினான் [2].

உச்சிப்பிள்ளையார் கோயிலின் பின்பாகத்தில் இன்றும் சமண முனிவர்களுடைய கற்படுக்கைகளைக் காணலாம். அவற்றில் அந்தந்த படுக்கையிலிருந்த அமணமுனிவர் பெயர்கள் குறிக்கப்பெற்றுள்ளன. அவைகள் 5-ம் நூற்றாண்டின் நிகழ்ச்சிகள். அவர்களில் ஒருவர் சிரா என்னும் பெயருடையவர் என்று ஒரு கற்படுக்கை யறிவிக்கிறது. ஆதலால் பள்ளி கோயிலானாலும், பெயர்போகாமல் சிராப்பள்ளி எனவே வழங்குகிறது.

**ஊர்ப்பெயரும் - கோயிற் பெயரும்.**

ஊர்ப்பெயர் சிற்றம்பர். கோயிற்பெயர் சிராப்பள்ளி. இதனை நன்கு விளக்குவது, இராஜராஜன் I ஆட்சியாண்டு 16ல் வெட்டப்பெற்ற விக்கிரமசிங்க மூவேந்த வேளான் விளத்தூர் நாட்டில் நிலம் வாங்கி அதனை உறையூர்க் கூற்றத்துச் சிற்றம்பரிலுள்ள சிராப்பள்ளிக் கோயிலுக்கு அளித்தான் என்ற கல்வெட்டுப் பகுதியாம். வரகுணபாண்டியன் 11-ம் யாண்டுக் கல்வெட்டும் இதனையே குறிக்கிறது. இன்னும் சில பகுதிகளிலும் சிற்றம்பர், சிற்றம்பர்நகர், சிற்றம்பர் பதியென இத்தலம் வழங்கப்பெறுகின்றது. ஆதலால் ஊர் சிற்றம்பர் எனவும், கோயில் சிராப்பள்ளி எனவும் வழங்கிவந்தமை தெளிவு.

---

[1] S. I. I. Vol. I No. 33, 34. [2] S. I. I. Vol. I No. 33.

**மூர்த்தி :**

இறைவன் பெயர் திருமலைக்கொழுந்தர், தாயுமானவர், செவ்வந்திநாதர் எனவும், அம்மையின் பெயர் மட்டுவார்குழ லம்மை எனவும் வழங்கும். வடமொழிவாணர் மாதுருபூதேஸ் வரர், சுகந்த குந்தளாம்பிகையெனக் கூறுவர். கல்வெட்டுக்களில் இறைவன் திருமலைப்பெருமான் அடிகள் என்ற பெயரால் குறிக்கப்பெறுகின்றனர். உச்சிப்பிள்ளையார், மாணிக்கவிநாயகர் ஆலயங்களும், மௌனமடம் முருகன் கோயிலும் மிகச்சிறப் புடையன.

**தீர்த்தங்கள் :**

காவிரி, சிவகங்கை, நன்றுடையான், தீயதில்லான், பிரம தீர்த்தம் முதலியன உள்ளன. அவற்றுள் 'நன்றுடையான்' 'தீயதில்லான்' என்ற தீர்த்தங்கள் ஞானசம்பந்தர் தெய்வ வாக்கிலும் திகழ்வன. இவையன்றித் தெப்பக்குளம் ஒன்றுண்டு. அது 16-ம் நூற்றாண்டில் அரசாண்ட விஸ்வநாத நாயக்கர் வெட்டுவித்தது.

இது மேருவின் சிகரங்களில் ஒன்று. ஆதிசேடனுக்கும், வாயுதேவனுக்கும்நடந்த சொற்போட்டியால் பிரிந்த சிகரங் களில், ஒன்று திருக்காளத்தி, மற்றொன்று திரிகோணமலை, மற் றொன்று திரிசிராமலை என்று புராணம் கூறும்.

கருவுயிர்க்க வருந்திய இரத்தினவதியின் நிறைந்த அன்பிற் கிரங்கிப் பெருமானே தாயாக எழுந்தருளிப் பணிபல புரிந்து பாதுகாத்தார். ஆதலால் தாயுமானார் ஆயினர்.

செவ்வந்திப்பூவைத் திருடிய சிவத்திரவியாபகாரியான பூவாணிகனைக் கண்டிக்காத பராந்தகனது அரச அநீதியைக் கண்டு, சாரமாமுனிவர் வேண்டுகோட்படி பெருமான் மேற்குப் பக்கமாக உறையூரைப் பார்க்கத் திரும்பினார். மண்மாரியால் நகர் அழிந்தது. மன்னன் அழிந்தான். மன்னன் மனைவி கருவுற் றிருந்தாள். காவிரியில் வீழ்ந்தாள். அந்தணன் ஒருவன் பாது காத்தான். கரிகாலன் பிறந்தான். கருவுற்ற ஆதித்தசோழன் மனைவியாகிய காந்திமதிக்கு இறைவன் தானேதோன்றிக் காட்சி

கொடுத்து, தான்றோன்றீசர் என்ற திருநாமம்பெற்ற வரலாறு களும் புராணங்களில் பேசப்படுகின்றன.

இங்கு குகைகள் உள்ளன. இவை மகேந்திரன் காலத் தனவே என்பது குறிப்பிடப்பட்டது. ஒன்று மலைமேலுள்ளது. மற்றொன்று அடிவாரத்திலுள்ளது. மலைமேலுள்ள கோயில் களிலேயே கல்வெட்டுக்கள் மிகுதியாக உள்ளன. வடமொழியி லமைந்த எட்டு ஸ்லோகங்கள் மகேந்திரவர்மனது மதமாற்றத் தையும் அதனால் அவன் செய்த சிவப்பணிகளையும் தெரிவிக் கின்றன. அவற்றில் கல்தச்சராலே இந்த அரசனுடைய புகழ் விரிந்து நீடித்திருக்கவேண்டும் என்ற செய்தி தெரிவிக்கிறது ஒரு ஸ்லோகம். இத்தலத்தைப்பற்றிய கல்வெட்டுக்களும், செப்புப் பட்டயங்களும் நிரம்ப உள்ளன. அவற்றுள் காலத் தால் முற்பட்டது கி. மு. 2-ம் நூற்றாண்டில் எழுந்த பிராமி எழுத்தால் எழுதப்பட்ட கல்வெட்டாகும்[1].

அவற்றிலிருந்து தொடர்ச்சியாகப் பல கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. அவை பல்லவ கிரந்தத்தாலும், தமிழாலும் ஆக்கப்பெற்றன.

**இராஜகேசரிவர்மன் :**

இவன் ஆட்சி பதினாறும் ஆண்டில் சாகுபடிக்குக் கொண்டு வரப்படாத நிலங்களைக் குறைந்தவிலையாக ஐந்து கழஞ்சுக்கு விற்று, நிலம் விளைச்சலுக்குவந்த பிறகு, நிலம் வாங்கியவர்கள் திருவிழாக்காலங்களில் சித்திரைத் திருநாளில் ஒன்பது நாட் களுக்குப் பன்மாகேசுவரர்களுக்கும் உணவு இடும்படி உத்தர விட்டான்.[2]

**பாண்டியன் மாறன் சடையன் :**

இவன் ஆட்சி 4-ம் ஆண்டில் நிலமளித்திருக்கிறான். இதில் இறைவன் திருமலைப் பெருமான் என்றழைக்கப்படுகிறான்.[3] வேங்கடதேவ மகாராயர் சகம் 1351 வீரப்ப நாயக்கருடைய மேன்மைக்காக நிலமளித்தார். மதுரை விஜயரங்க சொக்கநாத

---

1 139 of 1938, 2 985 of 1013. 3 413, 414 of 1904.

நாயக்கருடைய காலத்தில் நரசபந்துலு என்னும் தன்வந்தரி வைத்தியருக்கு இறையிலியாக நிலமளிக்கப்பட்டது.[1]

அவ்வாறே திருமலையப்பராயத் தொண்டைமான் மகனும், திருமலைராயத் தொண்டைமான் பேரனுமான இராஜா விஜய ரகுநாததொண்டைமான் சகம் 1772-ல் கி. பி. 1805-ல் ஓராண்டிக்கோடி கிராமத்தை தேனும்பட்டணம் இருளப்ப முதலியாரிடம் அளித்து, திருச்சிராப்பள்ளியில் அறச்சாலைநடத்த ஏற்பாடுசெய்தான் நல்லப்ப காலாட்க தோழராலும், ரங்கப்ப காலாட்க தோழராலும் அளிக்கப்பட்ட தேவதானங்களை அறிவிக்கும் செப்புப் பட்டயங்கள் உள. கல்வெட்டுக்களில் சிறப்பாகக் குகைக்கோயில் பின்சுவரில் திரிசிராமலை அந்தாதியொன்று எழுதப்பெற்றுள்ளது. அது 103 பாடல்களை உடையது. அதில் 104-ம் பாடலாக "மாட மதுரை மணலூர் மதில்வேம்பை, யோடமர் சேய்ஞலூர் குண்டூரின்—நீடிய, நற்பதிக்கோன் நாரா யணன்சி ராமலைமேல், கற்பதித்தான் சொன்ன கவி" என்றதால் நாராயணன் என்பவன் கல்வெட்டுவித்தான் என்று குறிப்பிடப்படுகிறது.

## 65. திருப்பாற்றுறை

இத்தலத்துப்போந்த மார்க்கண்டேய முனிவர் சிவபூசைக்குப் பால் இல்லாமையால் வருந்தியபோது சிவபெருமான் அருளினால் பால் பெருகியது ஆதலால் இப்பெயர் எய்தியது.

இறைவன்பெயர் திருமூலநாதர், மூலநாதேசுவரர்; இறைவியின்பெயர் மோகநாயகி, மேகலாம்பிகை; தீர்த்தம் திருக்குளம்.

இடம் திருவானைக்காவிலிருந்து கிழக்கே ஐந்துமைலில் உள்ளது.

**கல்வெட்டுக்கள் :**

இத்தலத்தைப்பற்றி அரசியலாரால் படியெடுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் பதினறு உள்ளன. அவை முதற்பராந்தகன்

[1] E. P. R. *1911* Page *90*.

பரகேசரிவர்மனை விக்கிரமசோழன், இராஜராஜன், இராஜேந்திரசோழதேவன் காலத்தன. அவற்றால் இத்தலம் கொள்ளிடத்துத் தென்கரைநாட்டுப் பிரமதேயமான உத்தமசீலி சதுர்வேதிமங்கலத்துத் திருப்பால்துறை என விக்கிரமசோழன் காலத்துக் குறிப்பிடப்படுகிறது.[1] இறைவன் திருப்பால்துறை மகாதேவர்[2] என்றும் திருப்பால்துறை நாயனார் என்றும்[3] திருப்பால்துறை உடையார்[4] என்றும் வழங்கப்படுகிறார். கல்வெட்டுக் குறிப்பாளர் ஆதிமூலேஸ்வரர் என்று அழைக்கிறார். தலம் திருப்பாலத்துறை என இக்காலத்து வழங்குகிறது. கோயிலுக்கண்மையில் திருநாவுக்கரசர் திருமடமும்[5] ஆண்டார் எம்பிரானார் மடம் எனப்பெரிய லிங்கிய சந்தானத்து மடமும்[6] திருவானைக்கா திருஞானசம்பந்தர் மடமும்[7] நாற்பத்தெண்ணாயிரவர் திருமடமும்[8] இருந்தனவாகக் குறிக்கப்பட்டுள்ளன. அவற்றிற்கு அரசர்கள் நிலம் வழங்கிய செய்தியும் குறிக்கப்படுகின்றன.

ஏனைய கல்வெட்டுக்கள் திருக்கோயிலுக்கு விளக்கிற்காக நிலமும் பசுவும் ஆடும்விட்ட செய்தியை அறிவிப்பன. இவையன்றி கோயிலுக்கு வடபக்கத்தில் காக்கும் நாயகன்மடம் என்ற ஒன்று இருந்ததாகவும் அதற்கு மும்முடிச் சோழமங்கலத்துச் சபையார் நிலமளித்ததாகவும் தெரிகிறது.[9] திருப்பனம்பூதூர் பரமேஸ்வரருக்கு அரிகுலகேசரிதேவரால் உத்தமசீலி சதுர்வேதி மங்கலத்து நிலம்விட்ட செய்தியும் அறியப்படுகிறது.

## 66. திருவேற்காடு

இங்கு வேல் தலவிருட்சமாதலின் இப்பெயர் எய்தியது. இங்குள்ள இறைவன் அகத்தியருக்கு மணக்கோலங்காட்டியருளினார். சுப்பிரமணியர், சூரசம்மாரத்தின்பின் பூசித்த தலம்.

இறைவன்பெயர் வேற்காட்டுநாதர், வேதபுரீசுவரர்; இறைவியின்பெயர் வேற்கண்ணியம்மை; தீர்த்தம் வேலாயுததீர்த்தம்; விருட்சம் வேல்.

---

[1] *575 of 1908*, [2] *575* of *1908*, [3], [4] *582*, [5] *583*, [6] *584*, [7] *585*, [8] *586*, [9] *582*.

சென்னைக்கு மேற்கே 13 மைலில் உள்ள ஆவடி ஸ்டேஷனிலிருந்து தெற்கே பூவிருந்தவல்லிக்குப் போகும்வழியில் 3½ மைல் சென்று, கிழக்கேயுள்ள காடுவெட்டி யாற்றைக்கடந்தால் இத்தலத்தை யடையலாம்.

## 67. திருக்கரவீரம்

இத்தலம் கரையபுரம் எனவழங்கும். கௌதமர் பூசித்துப் பேறுபெற்ற தலம். கரம் (கழுதை) பூசித்த காரணத்தால் கரவீரம் என்ருயது.

இறைவன் கரவீரநாதர். இறைவி பிரத்தியட்சமின்னம்மை. தீர்த்தம் அனவரத தீர்த்தம்.

இத்தலம் திருவாரூருக்கு மேற்கே ஏழு மைலில் உள்ளது.

## 68. திருத்தூங்கானைமாடம்

இத்தலம் பெண்ணுகடம் எனவும் திருக்கடந்தைநகர் எனவும் வழங்கும். பெண் (தேவகன்னியர்) ஆ (காமதேனு) கடம் (வெள்ளையானை) ஆகிய இவர்கள் பூசித்துப் பேறுபெற்றதாதலின் இப்பெயர் எய்தியது. ஆலயத்தின் பெயர் தூங்கானைமாடம். அப்பரடிகள் ' பொன்னுர் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம்'' என்றேத்தித் தம்முடைய தோளின்மேல் சூலக்குறியும் இடபக்குறியும் பெற்றதலம். இங்கவதரித்த கலிக்கம்பநாயனுர், ஒருநாள் தன் பணியாளனே சிவனடியாராகவர தம்மனைவி அவருக்கு நீர்வார்க்கத் தாழ்த்தமையை யறிந்து மனைவியின் கரத்தை வாள்கொண்டு வெட்டி வீடுபெற்ருர். மெய்கண்டதேவரின் தகப்பனுர் அச்சுத களப்பாளர் வாழ்ந்த தலமும் இதுவே.

சுவாமிபெயர் சுடர்க்கொழுந்துநாதர். அம்மை கடந்தை நாயகி. தீர்த்தம் கெடிலநதி.

விருத்தாசலத்திற்கும் திருச்சிக்கும் இடையிலுள்ள ஸ்டேஷன்.

**கல்வெட்டுக்கள் :**

பரகேசரிவர்மனுன இராஜேந்திரன் காலத்தில் வடகரை இராஜாதிராஜ வளநாட்டு மேற்காநாட்டுப் பிரமதேயமான முடிகொண்ட சோழ சதுர்வேதி மங்கலத்துத் திருத்தூங்கானை மாடம் என்று குறிக்கப்பட்டுள்ளது. இறைவன் நாமம் திருத் தூங்கானைமாடமுடைய மகாதேவர் எனவும்[1] திருத்தூங்கானை மாடமுடைய நாயனுர்[2] எனவும் நல்ல பெண்ணுகடத்திலுள்ள வீற்றிருந்த பெருமாள்[3] எனவும் திருத்தூங்கானை மாடத்துக் கடவுள்[4] எனவும் வழங்கப்படுகின்றனர். இவையன்றி கோயிலுள் கோச்செங்கணேஸ்வரமுடையார் கோயிலும்[5] மதுராந்தக ஈச்சரமுடையார் கோயிலும்[6] தனிமையாகப் பள்ளிகொண்ட பெருமாள் கோயிலும்[7] இருந்திருக்கின்றன.

இராஜகேசரிவர்மனுன குலோத்துங்கன் காலத்து வடகயி லாயமுடைய மகாதேவர்க்கு விருதராச பயங்கர வளநாட்டு மேற்காநாட்டு முடிகொண்ட சோழ சதுர்வேதி மங்கலத்துச் சபையாரால் நிலம் தானம் வழங்கப்பட்டது. திருத்தூங்கானை மாடமுடைய மகாதேவர் கோயிலுக்கும் கோச்செங்கணேஸ்வர முடையார் கோயிலுக்கும் முடிகொண்டசோழ சதுர்வேதி மங்கலத்து தேவதானமான கிராமத்தைச் சேரிசபையார் இறை யிலிசெய்தனர். குலோத்துங்கன் தன் பிறந்தநாளாகிய மாதபூச விழாவை நடத்தவும், கோயில் நாட்பூசைக்காகவும் நிலமளிக்க உத்தரவிட்டான். மேலும் மதுராந்தகேஸ்வரமுடையார் கோயிலி லுள்ள இரு சிவப்பிராமணர்களுக்கு உணவளிக்கப் பணம் வழங்கப்பட்டது. பரகேசரிவர்மனுன இராஜேந்திரன் காலத்து திருத்தூங்கானை மாடமுடைய மகாதேவர் கோயிலுக்குத் தூண்டா விளக்கெரிக்கப் பசுக்கள் வழங்கப்பட்டன. தென்கரை நித்தவிநோத வளநாட்டுக் கிழார்கூற்றத்துக் கீழநல்லூர் உடைய ஒருவன் பசுக்கள் அளித்த செய்தி குறிக்கப்பட்டுள்ளது. கடவுளுக்கு நீராட்டவும் பார்ப்பனர்களுக்கு அன்னமளிக்கவும் ஸ்ரீராமன் ஸ்ரீதரரான பவித்திர மாணிக்கச்சேரி உடையான் ஒருவனுல் ஏற்பாடுசெய்யப்பட்டது. இராஜகேசரி வர்மனுன ராஜராஜன் முத்திரையிடப்பட்ட அளவைகளால் வியாபாரிகள்

[1] 235 of 1929, [2] 247 of 1929, [3] 250 of 1929, [4] 255 of 1929
[5] 238, [6] 239, [7] 273.

பொருள்களை அளக்கவும் சில வரிகளைக் கோயிலுக்களிக்கவும் ஏற்பாடுசெய்தான்[1] 249-வது கல்வெட்டால் மூவாயிரவன் கோல் என்ற நீட்டலளவை (15 அடியால்) நிலமளந்த செய்தி தெரிகிறது. பரகேசரிவர்மனான விக்கிரமன்காலத்துப் அரையன் ஆதித்ததேவன் தேவர்கள்நாதன் என்ற மரக்காலைப் பயன் படுத்தியுள்ளான்.[2] குலசேகரன் காலத்துப் பொன்பேத்தி அம்பலத்தாடி அழகனால் மண்டபமும், முகப்பும் கட்டப் பட்டன. அரசன் மந்திரியான மையிருஞ்சோலை மண்டபங் கட்டியுள்ளான்.

விஜயநகர தேவமகாராயர் காலத்தில் நைவேத்தியத்திற்கும் திருப்பணிக்கும் பள்ளிகொண்டபெருமாள் கச்சிராயருடைய மகனான ஏகாம்பரநாதன் சில கிராமங்களை இறையிலிசெய்தார். தேவராஜமகாராஜா சகம் 1356-ல் 18-ப் பற்றுச்சபையாரால் வீதிகளுக்கு இறையிலிசெய்து திருமடை விஜயத்திற்காகவும் நல்ல பெண்ணுகடத்துப் பெருமாளுக்கும் திருமாறன் பாடியி லுள்ள தாகந்தீர்த்தருளிய நாயனுருக்கும் விழாசெய்வதற்காக பெரியநாட்டான் இறையிலிசெய்தார். விக்கிரமன் காலத்தில் அமாவாசையில் சுவாமி உலாவரவும் விளக்குக்கு நெய் இடவும் ஏற்பாடுசெய்யப்பட்டது. ஏனையவை விளக்கு முதலானவற் றிற்கு நிலம், பொன், பசுக்கள், நெல் முதலியன அளித்தமை குறிக்கப்பட்டுள்ளது.

## 69. திருப்பல்லவனீச்சுரம்

இத்தலம் காவிரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரம் எனப் பெயர்பெறும். பல்லவராசன் பூசித்துப் பேறுபெற்ற தலம். இயற்பகைநாயனுரும், பட்டினத்துப்பிள்ளையும் அவதாரம் செய்தருளிய தலம்.

இறைவன் பல்லவனேசுவரர்; இறைவி சௌந்தரநாயகி; தீர்த்தம் காவிரி சங்கமதீர்த்தம்.

இடம் சீகாழிக்குத் தென்கிழக்கே 10 மைலில் உள்ளது.

---

[1] 244 of 1929, [2] 270.

## 70. திருஈங்கோய்மலை

தற்காலம் திருவிங்கநாதமலை என மருவி வழங்குகின்றது. அகத்தியர் ஈ உருவாய்ப் பூசித்துப் பேறுபெற்றமையின் இப் பெயர் எய்தியது. காவிரித் தென்கரையில் உள்ள கடம்பந் துறையைக் காலையிலும், திருவாட்போக்கியை நண்பகலிலும், இத்தலத்தை மாலையிலும் ஒரேநாளில் பூசித்தால் பலன் பெருகும். 'காலைக் கடம்பர் மத்தியானச் சொக்கர் மாலைத் திருவிங்கநாதர்' என்பது பழமொழி. கோயில் சிறிய குன்றின் மேல் அமைந்துள்ளது.

இறைவன் மரகதாசலர்; இறைவி மரகதவல்லி; தீர்த்தம் அமிர்ததீர்த்தம்.

இடம் திருச்சி ஈரோடு சேர்க்கையிலுள்ள குழித்தலை ஸ்டேஷனில் இறங்கி வடக்கே அகண்டகாவிரியைக் கடந்தால் இத்தலத்தை யடையலாம்.

**கல்வெட்டு :**

திரிபுவனச்சக்ரவர்த்தி வீரதேவனது 36-ம் ஆண்டில் இராஜ ராஜவளநாட்டுத் திருவாலிநாட்டுத் திருவீங்கோய்மலை என வழங்கப்பட்டது. இறைவன்பெயர் திருவீங்கோய்ஊருடையார் என்று கல்வெட்டுக் கூறும். இக்கோயிலில் ஆளுடைய பிள்ளையார்க்கும், திருநாவுக்கரசுதேவர்க்கும், ஆலாலசுந்தரப் பெருமானுக்கும், நக்கீரதேவர்க்கும், திருப்படிமாற்றுக்கும், விஞ்சநத்துக்கும் வடகரை இராஜராஜ வளநாட்டு மலை ஸ்ரீ ஜயங்கொண்டசோழ சதுர்வேதிமங்கலத்துப் பெருங்குடி மகா சபையார் நிலம் விற்றுக்கொடுத்தனர்.

## 71. திருஅச்சிறுபாக்கம்

வண்டியின் அச்சு இற்றகாரணத்தால் இப்பெயர் எய்தியது. சிவபெருமான் திரிபுரதகனஞ்செய்யும் பொருட்டுத் தேவர்கள் அமைத்த தேரில் எழுந்தருளும்போது, தேவர்கள் விநாயகரை வணங்காமையின் அச்சு முறிந்தது என்பதும், பாண்டிய னொருவன் கங்கை மணலை வண்டியில் கொண்டு வரும்போது,

இத்தலத்து வந்ததும் வண்டி மேற்கொண்டும் செல்லாமையின் ஊக்கிச்செலுத்த அச்சுமுறிந்தது அவன் அசரீரியினால் செய்தியறிந்து ஆலயத்திருப்பணி அமைத்தான் என்பதும் வரலாறு. கண்ணுவர் கௌதமர் பூசித்துப் பேறுபெற்றனர்.

இறைவன் பாக்கபுரேசுரர். இறைவி சுந்தரநாயகி, தீர்த்தம் வேததீர்த்தம். விருட்சம் கொன்றை.

இடம் சென்னைக்குத் தெற்கே 59 மைல் தூரத்தில் உள்ளது.

**கல்வெட்டுக்கள் :**

இத்தலம் இராஜேந்திர சோழவளநாட்டைச் சேர்ந்ததாகக் குலோத்துங்கன் காலத்துக் கல்வெட்டுக் கூறுகிறது. இத்தலத்திறைவன் அக்ஷேஸ்வரர். கல்வெட்டுக்களில் அச்சுக்கொண்டருளிய தேவர் [1] என வழங்கப்படுகிறார். திருபுவன சக்ரவர்த்தி கோனேரின்மைகண்டான் காலத்தில் ஆட்கொண்ட நாயகன் சேதிராயனால் ஒரு சிலை தயாரிக்கப்பட்டது. இது இன்னார் சிலை என்று அறியக்கூடவில்லை. [2] இராஜகேசரிவர்மன் குலோத்துங்கன் I 5-ம் யாண்டில் குலோத்துங்கன் உருவச்சிலை செய்து வைக்கப்பெற்றது. [3] ஏனைய கல்வெட்டுக்கள் கோயிலுக்கு விளக்கிற்காக ஆடுகளும், பொன்னும், திருவமுதிற்காக நிலமும்விட்ட செய்தியை அறிவிப்பன, குலோத்துங்கசோழன் III ஆட்சி 12-ம் ஆண்டில் பாண்டியநாட்டைக் கைக்கொண்ட சேங்கணி அம்மையப்பன் வைரங்கள் வழங்கினான். [4] கங்கன் என்பவனால் அர்ச்சனாபோகமாக நிலம் அளிக்கப்பெற்றுள்ளது [5].

## 72. திருநல்லம்

இத்தலம் கோநேரிஇராஜபுரம் என வழங்கும். இத்தலத்தில் நடராசருடைய விக்ரகம் பிரபலமாய் இருக்கிறது.

---

[1] 241 of 1901. [2] 235 of 1901. [3] 247 of 1901. [4] 239 of 1901. [5] 108 of 1934.

சுவாமி உமாமகேசுவரர்; அம்மை மங்களநாயகி; தீர்த்தம் சக்திதீர்த்தம்.

இடம் திருவிடைமருதூருக்குத் தென்கிழக்கே 6 மைலில் உள்ளது.

**கல்வெட்டுக்கள் :**

இக்கோயிலை மதுராந்தகதேவனுன உத்தமச்சோழன் தாயும் கண்டராதித்தன் மனைவியுமான செம்பியன்மாதேவியார் கருங் கற் பணியாகக் கட்டினுள்[1]. இறைவன் திருநல்லமுடையார், திருநல்லமுடையமகாதேவர் என[2] வழங்கப்பெறுவர்[3]. ராஜ கேசரிவர்மனுன ராஜராஜன் காலத்தில் கோயிலில் திருப்பதியம் ஓத இருவரால் பூங்குடி கிராமத்தில் நிலம் விடப்பெற்றது[4]. உடையபிராட்டியார் உத்தரவின்படி சாத்தன் குணபட்டனை அரசாணசேகரனுல் கோயில் கட்டப்பெற்றது[5]. ராஜராஜன் காலத்தில் தெரிஞ்ச கைக்கோளர்களில் ஒருவனுன நக்கன் நள்ளாற்றடிகளால் கடவுளின் வெள்ளி விக்ரகம் ஒன்றும், சண்டேசுவரர் செப்பு விக்ரகமும் செய்விக்கப்பெற்றன. இன் னரது என்று அறியப்பெருத கல்வெட்டு ஒன்று செம்பியன்மா தேவி கண்டராதித்தன்பெயரால் இத்திருக்கோயிலைத் திருப்பணி செய்தான் என்கின்றது[6]. இங்கே கைலாசமுடையமகாதேவர்[7], ஆதித்தேஸ்வரமுடைய மகாதேவர்[8] கோயில்களும் தனித்து இருந்தனவாக அறியப்படுகின்றன. உத்தமசோழ விண்ணகரம் என்ற விஷ்ணு ஆலயமும் குறிக்கப்பெறுகின்றது[9]

இவையன்றித் திருநல்லமுடையார்கோயில் தெற்குப்பக்கத் துப் பிராகாரத்தில் புகழாபரண மண்டபம் என்ற ஒன்று இருந்ததாகவும், அதில் பிள்ளையாரை பிரதிட்டைசெய்யக் குலோத்துங்கன் III காலத்தில் நிலம் அளிக்கப்பெற்றது என்றும் வரலாறு விளங்குகின்றது[10]. திட்டைவிழுமியான்

---

[1] *450* of *1908*. [2] *628* of *1909*. [3] *450*, *624* of *1908*. [4] *624* of *1909*. [5] *626* of *1909*. [6] *635* of *1909*. [7] *653* of *1909*. [8] *644* of *1909*. [9] *655* of *1909*. [10] *662* of *1909*.

பிள்ளையடியாரால் சண்டேசுவரர்கோயில் திருப்பணி செய்விக்கப்பெற்றது *. ஆதனூர் விஜயநட்டரையனை அருமொழித் தேவனால் திருநடைமாளிகை கட்டப்பெற்றது.

ஏனைய கல்வெட்டுக்கள் திருமஞ்சனத்திற்கும், பூமாலைக்கும், நந்தவனத்திற்கும், அமுதுக்கும், விளக்கிற்கும் செய்த பணிகளை அறிவிப்பன. இத்தலத்தாற்றெரியும் அரசர்களும், தண்டத் தலைவர்களும், அரசகாரியம் பார்ப்பாரும், வெற்றிக் குறிப்புக்களும் பல.

## 73. திருவடுகூர்

வடுகனாகிய வைரவர் பூசித்துப் பேறுபெற்றதாதலின் இப்பெயர் எய்தியது. தற்காலம் ஆண்டார்கோயில் என வழங்குகிறது.

இறைவன் பெயர் வடுகூர்நாதர். இறைவியின் பெயர் வடுவகிர்க்கண்ணியம்மை. தீர்த்தம் பெண்ணைநதி.

இடம் பாண்டிச்சேரிக்கு மேற்கே 10 மைலில் உள்ள சின்னபாபு சமுத்திரம் இறங்கி, மேற்கே 2 மைல் சென்றால் இத்தலத்தையடையலாம்.

## 74. திருஆப்பனூர்

தற்பொழுது திரு ஆப்புடையார் கோயில் எனப்பெறும். சோழாந்தகன் என்னும் பாண்டியமன்னன் பொருட்டுச் சிவபெருமான் ஆப்பினிடத்துத் தோன்றினமையால் இப்பெயர் பெற்றது. நடராசர் சிவகாமி இருவர்களின் உருவம் சிலையிலும் செம்பிலும் செதுக்கப்பட்டுள்ளது.

இறைவன்பெயர் ஆப்பானூர்க்காரணர், ஆப்பானூரீசுரர், திருவாப்புடையார். இறைவியின் பெயர் அம்பிகையம்மை, குரவங்கமழ் குழலம்மை. தீர்த்தம் இடபதீர்த்தம்.

இடம் மதுரை ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே ஒரு மைலில் உள்ளது.

---

* 658 of 1909.

## 75. திருஎருக்கத்தம்புலியூர்

இராஜேந்திரபட்டினம் எனவழங்கும். எருக்கினைத் தல விருட்சமாக உடைய புலியூராதலின் இப்பெயர்பெற்றது. திருநீலகண்ட யாழ்ப்பாணநாயனார் அவதார ஸ்தலம்.

இறைவன் பெயர் நீலகண்டர், இறைவியின் பெயர் நீலமலர்க்கண்ணியார். விருட்சம் எருக்கு.

இடம் விருத்தாசலத்திற்குத் தெற்கே 7 மைலில் உள்ளது.

## 76. திருஅன்னியூர்

பொன்னூர் எனவழங்கும். வருணன்பூசித்துப் பேறுபெற்ற தலம்.

சுவாமி பெயர் ஆபத்சகாயேசுரர். அம்மையின் பெயர் பெரியநாயகியம்மை. தீர்த்தம் வருணதீர்த்தம்.

இடம் மாயூரம் தாலூகாவில் நீடூர் ஸ்டேஷனிலிருந்து மேற்கே மூன்று மைலில் இருக்கிறது.

## 77. திருக்கண்ணார்கோயில்

குறுமாணக்குடி எனவழங்கும். கௌதம முனிவரால் சாபம்பெற்ற இந்திரன் பூசித்துச் சரீரத்திலுள்ள குறிகள் அனைத்தையும்கண்களாக மாற்றிக்கொண்டமையால் இப்பெயர் எய்தியது. வாமனமூர்த்தியும் பூசித்துப் பேறுபெற்றமையின் குறுமாணக்குடி என்ற மறுபெயரும் உண்டாயிற்று.

இறைவன் பெயர் கண்ணாயிரநாதர். இறைவியின் பெயர் முருகுவளர்கோதை. இந்திரதீர்த்தம்.

இடம் வைத்தீஸ்வரன் கோயிலுக்குத் தென்கிழக்கே 1½ மைலில் உள்ளது.

## 78. திருப்பாதாளீச்சரம்

பாமணி, பாம்பணி என வழங்கும். சர்ப்பபுரம் எனவும் பெயர் உண்டு. தனஞ்சயன் என்னும் பாம்பு பூசித்துப் பேறுபெற்ற தலம். அம்முனிவருடைய திருவுருவம் கோயிலில் உள்ளது.

இறைவன் பெயர் நாகநாதர், சர்ப்பபுரீசுவரர்; இறைவியின் பெயர் அமிர்தநாயகி; தீர்த்தம் நாகதீர்த்தம்.

இடம் நீடாமங்கலம் ஸ்டேஷனிலிருந்து 8 மைல் தூரத்தில் உள்ள ராஜமன்னார் கோயிலுக்கு வடக்கே 1½ மைலில் உள்ளது.

**கல்வெட்டு :**

இத்தலத்தைப்பற்றியதாக ஆறு கல்வெட்டுக்கள் உள்ளன. இத்தலத்திறைவன் திருப்பாதாளீச்சரம் உடையார். செல்வத் திருவாரூர் வாகீசப்பெருமான் வடகீழ்மடத்து முதலியார் பிள்ளையின் நிலங்கள் இக்கோயிலுக்குக் கொடுக்கப்பட்டன. இதில் ஆலாலசுந்தரர் திருமடமும் குறிக்கப்படுகின்றது. இத்தலம் சுற்றவேலி வளநாட்டுப் பாம்பணிகூற்றத்துப் பாமணி என இராஜராஜன் காலத்து அழைக்கப்படுகின்றது. இவையன்றி ஸ்ரீபூதிவிண்ணகர ஆழ்வார்க்கு விளக்கிற்காகவும், வழிபடவருவார்க்கு உணவிற்காகவும் பொன்னும் ஆடும் வழங்கப்பெற்றன*.

## 79. திருக்கடைமுடி

இத்தலம் கீழூர் எனப் பெயர்பெறும். காவிரியின் கடைமுடியாதலின் இப்பெயர் பெற்றதுபோலும். பிரமன் பூசித்துப் பேறுபெற்ற தலம்.

சுவாமிபெயர் கடைமுடிநாதர். அம்மையின் பெயர் அபிராமியம்மை. தீர்த்தம் கருணைதீர்த்தம்.

---

* 169 to 174 of 1926.

இடம் மாயூரமார்க்கத்தின் காவிரியின் வழியிலுள்ள திருநனிபள்ளிசென்று வடமேற்கே காவிரியைக் கடந்தால் ஒரு மைலில் உள்ளது.

**கல்வெட்டு :**

கடைமுடி என்பது கீழூராயின் கல்வெட்டொன்றுமில்லை. சேது சமஸ்தான வித்துவான் மு. இராகவையங்காரவர்கள் தமது ஆராய்ச்சித் தொகுதியில் சிறந்ததோர் ஆராய்ச்சி வெளியிட்டுள்ளார்கள். அதன் சுருக்கமாவது தஞ்சாவூர் ஜில்லாவில் கோவிலடி எனவழங்கும் பேரூருக்குப் பக்கத்தில் கிழக்கே 1½ மைலில் திருச்சி சன்னம்பூண்டி என்ற கிராமம் உள்ளது. அங்கே உள்ள இறைவர் சடையர், சடேஸ்வரர் என்று வழங்கப்படுகிறார். அங்கேயுள்ள சாஸனங்கள் தெள்ளாறு எறிந்த மூன்றும் நந்திவர்மன், அவன் மகன் கோவிஜய நிருபதுங்க வர்மன், முதற்பராந்தகன் இவர்கள் காலத்தன. அவற்றுள் முதற்பராந்தகன் காலத்துக் கல்வெட்டுக்களில் ஒன்றே ஒன்று திருச்சடைமுடி மகாதேவர் எனக் குறிப்பிடப்படுகிறது. ஏனைய இறைவன் பெயரைத் திருக்கடைமுடிமகாதேவர் என்றே குறிப்பிடுகின்றன. ஒன்பது பத்தாம் நூற்றுண்டுகளில் அதாவது ஏழாம் நூற்றுண்டினரான திருஞானசம்பந்தர் காலத்திற்கு அணிமையில் திருக்கடைமுடி இப்பொழுது வழங்கும் சென்னப்பூண்டி என்றே விளங்கினமை யறியலாம். திருச்சடைமுடி என்பது திருப்பேராகிய கோவிலடிக்கு வழங்கிய பெயராதலைப் பிற கல்வெட்டுக்களும் எடுத்துக் காட்டுகின்றன. ஆதலால் கீழூர் கடைமுடியன்று என்பர்.

சென்னம்பூண்டி கடைமுடியைப்பற்றியனவாக 22 கல்வெட்டுக்கள் உள்ளன. தென்கரை இடையாற்றுநாட்டு திருக்கடைமுடி எனக் குறிக்கப்பெற்றுள்ளது*. நிருபதுங்கவர்மன் காலத்து அரசி ஒருத்தி விளக்கிற்காகப் பொன் அளித்தாள். முதற்பராந்தகன் பணிகள்யாவும் விளக்கிற்காக ஆடுகள் அளித்தமையே. வீரநாராயண மூவேந்த வேளான் முதலான அரசியல் தலைவர்களும் நிபந்தங்கள் அளித்துள்ளார்கள்.

---

* 284 of 1901.

# 80. திருஇராமனதீச்சரம்

இராமன் பூசித்துப் பேறுபெற்றனராதலின் இப்பெயர் எய்தியது.

இறைவன் பெயர் இராமநாதர். இறைவியின் பெயர் சரிவார்குழலி. தீர்த்தம் இராமதீர்த்தம்.

இடம் திருப்புகலூரிலிருந்து முடிகொண்டான் ஆற்றைக் கடந்து, கண்ணபுரம்சென்று கிழக்கேசென்றால் இத்தலத்தை அடையலாம்.

**கல்வெட்டுக்கள் :**

இத்தலம் திருக்கண்ணபுரம் கல்வெட்டுக்களிற்சேர்த்தே அரசியலாரால் படியெடுக்கப்பெற்றுள்ளது. ஐந்து கல்வெட்டுக்கள் உள்ளன. இறைவன் இராமனதீச்சரமுடையார் என வழங்கப்பெறுவர். குலோத்துங்கசோழன் இக்கோயில் பூசைக்காகவும், அமுதுபடிக்காகவும் நிலம் அளித்தான். இந்நிலம் பின்னர் சிவபாதசேகரமங்கலம் என்று வழங்கப்பெற்றது. கோயிலைத் திருப்பணிசெய்தவனும் இவனே [1]. பின்னர் திருமலை தேவமகாராயரின் (சகம் 1397) விக்ரமாதித்தன் என்னும் அரசகாரியம் பார்ப்பவன் கோயிலைப் பழுதுபார்த்திருக்கிறான். பூசைக்கும், அமுதுக்கும் நிலம் அளித்திருக்கின்றான் [2]. கோனேரின்மைகண்டான் (யார் என்று அறியக்கூடவில்லை) காலத்தில் அர்ச்சகர்க்குள் உரிமைப்போர் நிகழ்ந்திருக்கின்றது. அதனை நீக்கி, திருமன்னுசோழ பிரமராயனுக்கும், மானவரையனுக்கும் பூசை உரிமைகள் வழங்கப்பெற்றன [3]. தனியூரான தில்லையிலிருந்த மாகேஸ்வரர்களால் இக்கோயில் நிலம் பஞ்சத்தால் விளையாதுபோக, இராஜராஜபாண்டிமண்டலம், வீரசோழமண்டலம், நடுவில்நாடு, ஜெயங்கொண்டசோழமண்டலம் முதலியவற்றில் உள்ள கோயில்களிலிருந்து நெல்லும் பொன்னும் கொடுத்துதவும்படி உத்தரவிட்டிருக்கின்றனர். இது கோயில் நிர்வாகத்தின் தனிச் சிறப்பைக் குறிப்பதாகும் [4].

---

[1] 533 of 1922, [2] 534, [3] 536, [4] 537 of 1922.

## 81. திருக்கள்ளில்

திருக்கள்ளம் எனப் பெயர் பெறும். பிருகு முனிவர் பூசித்துப் பேறு பெற்ருர்.

சுவாமியின் பெயர் சிவானந்தர். அம்மையின் பெயர் ஆனந்தவல்லி. தீர்த்தம் ஸ்ரீ நந்தி தீர்த்தம்.

இடம் சென்னையினின்றும் புழலேரியையடைந்து வடக்கே ஒருமைல் சென்று பின் 3 மைலிலுள்ள அத்திப்பேட்டுச் சத்திரமடைந்து குசஸ்தல ஆற்றைக்கடந்தால் வடகரையில் 6 மைலில் உள்ளது.

## 82. திருப்பறியலூர்

இப்பொழுது பரசலூர் என வழங்கும். அஷ்டவீரட்டத்தில் ஒன்று. தக்கன்செய்த யாகத்திற்குப் போந்த மாயன்முதலிய விண்ணவர்களின் வேதனையைத் தீர்த்த தலம்.

இறைவன் பெயர் வீரட்டேசர். இறைவியின் பெயர் இளம் கொம்பனையாள். தீர்த்தம் சிவகங்கா தீர்த்தம்.

மாயூரத்தின் கிழக்கேயுள்ள விளநகரிலிருந்து கிழக்கே ஒருமைல் சென்று அங்கிருந்து தெற்கே ஒருமைல் சென்ருல் இத்தலத்தை அடையலாம்.

**கல்வெட்டு :**

இத்தலம் சுந்தரபாண்டியன் 5ம் ஆட்சி ஆண்டில் ஜெயங்கொண்ட சோழவளநாட்டு வீழைநாட்டு ராஜநாராயண சதுர்வேதிமங்கலமான பறியலூர் எனவழங்கப்படுகிறது. இறைவன் தட்சேஸ்வரமுடையார் எனவும், திருவீரட்டான முடையார் எனவும் வழங்கப்படுகிருர். கிருஷ்ணப்பதேவமகாராயரால் குறிப்பிட்ட சில கிராமங்கள் (பறியலூர் உட்பட) சூலவரி வசூலிக்கப்பெற்றுச் சிவ விஷ்ணு கோயிலுக்களிக்கப்பட்டது. இதில் யாத்ரீகர்களுக்கும் உணவளிக்க ஏற்பாடுசெய்யப் பெற்றது. பூங்காக் குடியான பரராஜ பயங்கரநல்லூரில் 30 வேலி நிலத்தை இறையிலி செய்தளிக்கப்பட்டது. இங்கே

ஏழுலகமுழுதுடைய சதுர்வேதி மங்கலத்து ஒரு அக்ரகாரம் அமைக்க நிலம் ஒதுக்கப்பட்டது *.

## 83. திருத்தருமபுரம்

தருமராசன் பூசித்துப் பேறுபெற்றமையின் இப்பெயர் எய்தியது. பிரமதேவரும் பூசித்துப் பேறுபெற்றுள்ளார். திருநீலகண்ட யாழ்ப்பாணரது மாதா பிறந்த இடமாதலின் திருஞானசம்பந்தர் இங்கு எழுந்தருளியபோது, பாணரது சுற்றத்தவர்கள் இவர் யாழ்கொண்டு வாசிக்காவிடில் திருஞான சம்பந்தர் பாடல் சிறக்காதென்றனர். கேட்ட பாணர் வருந்தி திருஞானசம்பந்தரிடம் முறையிட்டனர். அவரும் 'மாதர் மடப்பிடி' என்னும் பதிகத்தை ஓதினர். பாணனுர் யாழிலிட்டு வாசிக்க இயலாமையை உறவினர்க்குணர்த்தினர். யாழையும் உடைக்கச் சென்றனர். திருஞானசம்பந்தர் தடுத்து, இயன்ற அளவில் வாசிக்கச் சொன்னுர்.

இறைவன் பெயர் யாழ்மூரிநாதர். இறைவியின் பெயர் மதுரமின்னம்மை, தேனமிர்தவல்லி, சதாமதுராம்பிகை. தீர்த்தம் தர்மதீர்த்தம்.

இடம் காரைக்காலிலிருந்து மேற்கே அரைமைலில் உள்ளது.

## 84. திருக்குடந்தை

இத்தலம் தேவாரங்களில் குடமூக்கு என வழங்கப்பெறும். பஞ்சக்குரோச தலங்கள் சூழ்ந்தது. கங்கை யமுனை முதலிய ஒன்பது தீர்த்தங்களும் வந்து வழிபடும் பெருமையுடையது. பதினுன்கு கோயில்களையும், பதினுன்கு தீர்த்தங்களையும் உடையது. ஒன்பதாம் நூற்றுண்டுமுதல் சோழ அரசர்கள் இதனைத் தலைநகராகக் கொண்டனர். சோழர்கள் இருந்த இடமாகிய சோழமாளிகையும், இடிந்துபோன பழங்கோயில் களும் இதன் பழமைக்கு அறிகுறியென்பர் பெர்கூசன் என்னும்

* *167 to 169 of 1925.*

அறிஞர்[1]. ஏழாம் நூற்றுண்டில் மூலக்கூற்றம் என வழங்கப் பட்டதென்பர் பர்னல்துரை. இத்தலத்தில் குரு சிம்மராசியில் பிரவேசிக்குங்காலம் 12 வருஷத்திற்கு ஒருமுறை மகாமகதீர்த் தத்தில் தென்னிந்திய மக்கள் அனைவரும் நீராடுவர். இங்கே யுள்ள பாடல்பெற்ற சிவத்தலங்கள் திருக்குடமூக்கு, குடந்தைக் கீழ்க்கோட்டம், குடந்தைக் காரோணம் என்பன. குடமூக்கு கும்பேசுவரசுவாமிகோயில்; கீழ்க்கோட்டம் நாகேஸ்வரன் கோயில்; காரோணம் காசி விசுவநாதர்கோயில். இவையன்றிச் சோமேசம் முதலிய பல கோயில்கள் உள்ளன. இத்தலம் மூர்க்க நாயனர் வாழ்ந்த தலம்.

இறைவன் பெயர் கும்பேசர், அமுதகும்பேசர், ஆதி கும்பேசர். அம்மையின் பெயர் மங்களாம்பிகை. பிரமன், அகத்தியர், கிருதவீரியன், வீரவர்மன், இந்திரன், மாந்தாதா முதலியோர் வழிபட்டுப் பேறுபெற்றனர்.

**கல்வெட்டு :**

இத்தலம் உய்யக்கொண்டான் வளநாட்டு வடகரையம்பூர் நாட்டுத் திருக்குடந்தை என வழங்கும்[2]. கல்வெட்டுக்கள் பெரும்பாலும் நாகேச்சரமாகிய கீழ்க்கோட்டத்தைப்பற்றி யனவே. குடமூக்கு என்னும் இத்தலத்தைப்பற்றியன அல்ல வாதலின் அவை ஈண்டுத் தரப்படவில்லை.

## 85. திருக்கச்சிஏகம்பம்

கயிலாயத்தினின்றும் இங்கு எழுந்தருளிய இறைவி, இறைவனை எய்துதற்பொருட்டுத் தவஞ்செய்தனர். எண்ணான்கு அறங்களையும் வழுவாதியற்றினர். கம்பையாற்றில் ஒற்றை மாமரத்தடியில் மணலால் சிவலிங்கம்செய்து வழிபட்டனர். இறைவன் அருளால் நீர் கடுகிவரக் கம்பித்து, இறைவனைத் தழுவினர். வளைத்தழும்பும் முலைத்தழும்பும் இறைவன் தன் மேனியில் ஏற்றனர் என்பது புராணவரலாறு.

---

[1] Indian and Castern Architecture 367 of 9.
[2] S. I. *256* of *1911*, *14* of *1908*.

கம்பம் - நடுக்கம். ஏகாமிரம் - ஒற்றை மாமரம். பஞ்சபூத ஸ்தலங்களுள் பிருதிவிஸ்தலம். 'முத்திதரும் நகரேழனுள் முக்கியமாம் முதற்காஞ்சி' என்றதற்கேற்ப முத்திதரும் நகருள் முதன்மைபெற்றது. இத்தலத்து அமைந்துள்ள சிவ, விஷ்ணு, தேவி, கணபதி, முருகன் ஆலயங்கள் அளவிடற்கரியன. ஐயடிகள் காடவர்கோன்நாயனர் ஆட்சிசெய்த தலம். சுந்தரர் இடக்கண்பெற்ற தலம். திருக்குறிப்புத்தொண்ட நாயனர் சாக்கியநாயனர் ஆகிய இவர்கள் முத்திபெற்ற தலம்.

இறைவன் ஏகாம்பரநாதர், பெரிய கம்பர். இறைவி காமாட்சியம்மை, ஏலவார்குழலி. விநாயகர் விகடசக்கர விநாயகர். முருகன் மாவடிக்கந்தர். விருட்சம் மாமரம். தீர்த்தம் சிவகங்கை, கம்பாநதி, ஸ்ரவதீர்த்தம்.

இடம் காஞ்சிபுரம் ஸ்டேஷனிலிருந்து மேற்கே ஒருமைலில் உள்ளது.

**கல்வெட்டு :**

இத்தலத்தைப்பற்றிய கல்வெட்டுக்கள் பலவாயினும் ஏகாம்பரநாதர் கோயிலைப்பற்றியன சிலவே. இங்குள்ள கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ளவர்கள் முறையே திரிபுவனச் சக்ரவர்த்தி இராஜராஜன், கோப்பரகேசரி இராஜராஜன், திரிபுவனச்சக்ரவர்த்தி குலோத்துங்கன் III, இராஜகேசரி குலோத்துங்கன், கோராஜகேசரி குலோத்துங்கன், பரகேசரி உத்தமசோழன் ஆகிய இவர்களும், புவனேகவீரனும், விஜயநகர சதாசிவதேவன், வீரமல்லிகார்ச்சுனன், புக்கராயன் ஆகிய இவர்களும் காகதீய அரசன் கணபதியும், சண்டகோபாலனுமாகிய இவர்களும் ஆவார்கள்.

இராஜராஜதேவன் I 27-ம் ஆண்டில் ஒரு மாறன் தேவடிகளால் 5 கழஞ்சு பொன் படையலுக்காகக் கோயில் பொக்கிஷத்தில் சேர்க்கப்பட்டது*. புவநேகவீரன் என்ற சமரலோகன், சகம் 1391-ல் பாண்டிய நாட்டிலுள்ள இரண்டு கிராமங்களை ஏகாம்பரநாதர் கோயிலுக்கும் காமாட்சியம்மன் கோயிலுக்கும்

* 54 of 1893.

கொடுத்தமை குறிக்கப்பட்டுள்ளது.[1] காகதீய அரசன் கணபதி காலத்து (சகம் 1172) மந்திரியாண்ட சாமந்தகபோஜனால் ஒரு கிராமம் கொடுக்கப்பட்டது.[2]

## 86. திருவாரூர்

இத்தலம் மாயூரம் அறந்தாங்கிப் பாதையில் உள்ள புகை வண்டிக் கூட்டுநிலையம். ஸப்தவிடங்கத் தலங்களுள் ஒன்று. வீதிவிடங்கப்பெருமானே எல்லா இடங்கங்கட்கும் முதன்மையாய்த் திருமாலாலும், இந்திரனாலும் பூசிக்கப்பெற்ற சிறப்புடையார். ஆதலின், அவரைச் சூழ ஏனைய ஆறுவிடங்கர்களும் எழுந்தருள, இவர் இத்தலத்து நடுநாயகமாக வீற்றிருக்கிறார்.

இத்தலம் மிகத் தொன்மையானது. "திருவினாள் சேர்வதற்கு முன்னோ பின்னோ திருவாரூர்க் கோயிலாக் கொண்ட நாளே" என்ற அப்பர் சுவாமிகள் திருவாக்கு இதனை மெய்ப்பிக்கும். இத் தலத்தில் பிரமன் கோயில், துருவாச ஆசிரமம், பரவையுண் மண்டளி, திருநீலகண்டர் கோயில், தண்டபாணி கோயில், பரவையார் கோயில், இராஜதுர்க்கை கோயில், நடுவணநாதர் கோயில், மாற்றுரைத்த விநாயகர் கோயில், சோமநாதர் கோயில், குளுந்தாளம்மன் கோயில், ஐயனார்கோயில், உருத்திரகோடீசுவரர் கோயில், குமரகோயில், எல்லையம்மன் கோயில், மாணிக்கநாச்சியார் கோயில் முதலிய கோயில்கள் உள்ளன.

**தலப்பெயர் :**

இத்தலத்துக்குக் கமலாலயபுரம், க்ஷேத்ரவரபுரம், ஆடகேசுரபுரம், மூலாதாரபுரம், சக்திபுரம், கந்தபுரம் எனப் பல பெயர்கள் இலக்கியங்களில் வழங்குகின்றன.

**தீர்த்தங்கள் :**

தேவதீர்த்தம், சங்கதீர்த்தம், சரசுவதிதீர்த்தம் முதலிய 21 தீர்த்தங்கள் இருப்பதாகப் புராணங்கள் புகலுகின்றன.

---

[1] 25 of 1890. [2] 26 of 1890.

**உட்கோயில்கள் :**

திருக்கோயிலுக்குப் பூங்கோயில் என்று பெயர். கோயிலுக்குள் அசலேசம், ஆடகேசம், ஆனந்தேசம், அருணைசலேசம், விச்வகன்மேசம், சித்தீசம் எனப் பல உட்கோயில்கள் உள்ளன. அவற்றுள் அசலேசம் திருநாவுக்கரசர் பாடல் பெற்றது.

**மூர்த்திகள் :**

ஐங்கலக்காசு விநாயகர், வன்மீகநாதர், தியாகேசர், வாதாபி விநாயகர், நீலோத்பலாம்பிகை, விடங்கர், தருணேந்துசேகரர், கமலாம்பிகை, சுந்தரர், சேரமான் முதலிய மூர்த்திகள் எழுந்தருளி யுள்ளார்கள்.

வாத்தியம் : பஞ்சமுகவாத்தியம், பாரிநாயனம், சுத்த மத்தளம் என்பவை இத்தலத்துக்குச் சிறந்த வாத்தியங்கள்.

தியாகப்பள்ளு, தியாகக்குறவஞ்சி, வீராணுக்கவிசயம் என்பன இத்தலத்தில் ஆடப்பட்ட கூத்துவகை நூல்கள்.

**மண்டபங்கள் :**

தேவாசிரய மண்டபம், பக்தகாட்சி மண்டபம், ஊஞ்சல் மண்டபம், துலாபார மண்டபம், சபாபதி மண்டபம், புராண மண்டபம், இராஜ நாராயண மண்டபம், தட்டஞ்சுற்றி மண்டபம், வசந்த மண்டபம், திருப்பள்ளித்தாம மண்டபம் முதலிய பல மண்டபங்கள் உள்ளன.

**கல்வெட்டுக்கள் :**

சோழர்கள் தம் அரண்மனைத்தெய்வங்களாக வைத்துப் போற்றும் சிவாலயங்களில் இத்தலத்துக் கோயில் முதன்மை யானது. இத்தலம் கயாமாணிக்க வளநாட்டைச் சார்ந்த திருவாரூர் என்றும், அதிராஜ வளநாட்டைச் சேர்ந்த திருவாரூர் என்றும், க்ஷத்திரிய சிகாமணி வளநாட்டுத் திருவாரூர்க் கூற்றத்துத் திருவாரூர் என்றும் கல்வெட்டுக்கள் குறிக்கின்றன.

இரண்டாம் இராஜாதிராஜன் தன் ஆட்சி 16-ம் ஆண்டில் பெரிய கோபுரத்தையும் சபாபதி மண்டபத்தையும் கட்டினான்.

செம்பியன் மாதேவியார் அரநெறிக்கோயிலைக் கற்கோயிலாகக் கட்டுவித்தார். லக்கம தண்டம நாயக்க உடையாருக்கு நன்றாக அவர் மந்திரி ஒரு கோபுரம் கட்டினான். இரண்டாம் இராஜேந்திரன் வீதிவிடங்காதர் கருப்பக்கிருகத்தையும், வன்மீகநாதர் கோயிலையும் பொன் வேய்ந்தான்.

திருமுறை ஆசிரியர்களின் திருநாட்களில் விழாக்கொண்டாட ஏற்பாடுகள் செய்யப்பெற்றிருந்தன.

நம்பியாரூரர் தாயாரான இசைஞானியார் கௌதமகோத்திரத்தாரான ஞானசிவாசாரியாருடைய புத்திரி என்பதை ஒரு கல்வெட்டறிவிக்கிறது.

பராந்தகன், இராஜராஜன் I, இராஜேந்திரன் I, இராஜாதிராஜன் I, குலோத்துங்கன் I, இராஜேந்திரன் II, விக்ரம சோழன், குலோத்துங்கன் II, இராஜாதிராஜன் முதலிய சோழ அரசருடைய கல்வெட்டுக்களில் திருவிளக்குகளும் தேவதானங்களும் குறிப்பிடப்படுகின்றன.

தியாகராஜசுவாமிகோயில் இரண்டாம் பிராகார வட சுவரில் உள்ள மனுச்சரிதம்கண்ட கல்வெட்டில் மனுச்சரிதம் முழுவதும் குறிப்பிடப்படுகிறது *.

இத்தலத்தில் தருமை ஆதி குருமூர்த்திகளின் குருமூர்த்தியாகிய கமலை ஞானப்பிரகாசருக்குத் தஞ்சை மன்னனும், கிருஷ்ணதேவராயனும் அளித்த தேவதானங்களும் வீதிவிடங்கப் பெருமானுக்கும் வன்மீகநாதப் பெருமானுக்கும் நித்தியார்ச்சனை பெருநீராட்டு இவைகளுக்காக அளித்த தேவதானங்களும் இராஜாங்கக்கட்டளை என்ற பெயரோடு விளங்கிவருகின்றன. அவற்றை அவர்கள் குருஞானசம்பந்த சுவாமிகளிடத்தில் ஒப்படைத்துவிட்டார்கள். அது இப்போதும் தருமை ஆதீன நிர்வாகத்திலேயே நடைபெற்று வருகிறது.

இவற்றின் விரிவைத் 'திருவாரூர்' என்னும் ஆதீன வெளியீடு 189-ல் காணலாம்.

---

* 164 of 1894.

## 87. ஸ்ரீ கயிலாயம்

சுந்தரர் வெள்ளையானைமேல் கயிலைசென்றதும் அப்பரடிகள் உடலுறுப்புக்கள் தேய்ந்தொழியுமளவு மன உறுதியோடு கயிலாய யாத்திரை புரிந்ததும் புராண வரலாறுகளிலே இடம் பெற்றுள்ளன.

ஸ்ரீகயிலாயம் இமயமலையின் வடசாரலில் மேற்குத் திபெத்தில் அமைந்துள்ளது. அம்மலையின் தென்பகுதியில் திருக்கேதாரம் போன்ற தலங்களமைந்துள்ளன. தேவாரம் பாடிய மூன்று சமயாசாரியர்களுள் சுந்தரர் கயிலையாத்திரை செய்தார். அப்பரடிகள் கயிலையாத்திரை செய்து திருவையாற்றில் கயிலைக் காட்சியைக் கண்டார். ஞானசம்பந்தர் திருக்காளத்தி மலையிலிருந்தே திருக்கேதாரத்தையும், திருக்கயிலாயத்தையும் பாடியதாகச் சேக்கிழார் குறிப்பிடுகிறார்.

**கயிலையின் அமைப்பு :**

இமய உச்சியின் வடபாகத்தில் சமுத்திரமட்டத்துக்கு 22,980 அடி உயரத்தில், தென்திசையை நோக்கியதாகக் கயிலை அமைந்துள்ளது. வெள்ளியங்கிரி என்றதற்கேற்ப அம்மலை பனிபடர் மலையாகக் காணப்பெறுகின்றது. இருபத்தொன்பது மைல் சுற்றளவுடையதாய்ச் சமதளமாய் அமைந்துள்ளது. பிராகாரம்போன்ற மலைச் சுவர்கள் செங்குத்தாக உள்ளன. அம்மலையில் சதுரம், முக்கோணம், வட்டம்போன்ற சித்திர வேலைப்பாடுடைய மேடைகளும் கைபுனைந்தியற்றாக் கவின் பெறுவனப்புடையதாய்க் காட்சியளிக்கின்றது. இந்தியாவில் தென்குமரிமுதல் இமயம்வரையுள்ள கோபுரங்கள் எத்தனை வகையுண்டோ அத்தனைமாதிரிக் கோபுரங்களும் கயிலையில் காணக்கிடக்கின்றன. இறைவன் அம்மையப்பராய், தக்ஷிணாமூர்த்தியாய் எழுந்தருளிய திருக்கோலங்களும் இருக்கின்றன.

**தீர்த்தங்கள் :**

கௌரிகுளம், மானசரோருவம் போன்ற தீர்த்தங்களும் உள்ளன.

சென்னையிலிருந்து சுமார் 1700 மைல் தூரமுள்ளது கயிலை.

---

சீகாழியில் :




"ஏடுடைய மலரான் பணிந்தேத்துதல்."

சீகாழி பிரமதீர்த்தக்கரையில்:



சிவபாத இருதயர் சிறுகோல்கொண்டு ஓச்சுதல்.

உ

திருச்சிற்றம்பலம்

# திருஞானசம்பந்த சுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்

---

## முதல் திருமுறை

### திருப்பிரமபுரம்

**பதிகவரலாறு:**

சோழநாட்டிலே, சீகாழியிலே, தவம்பெருகும் கவுணிய குலத்தில், சிவதீக்ஷைபெற்ற வேதியர்குலதிலகராகிய சிவபாத இருதயருக்கும் பகவதியம்மையாருக்கும் வேதநெறி தழைத்தோங்க, மிகுசைவத் துறைவிளங்க, சித்திரைமாதத்துத் திருவாதிரைத் திருநாளிலே திருமகனார் ஒருவர் தோன்றினார். இவருக்கு மூன்றுமாண்டு நடக்கும்பொழுது ஒருநாள் சிவபாத இருதயர் சீகாழிக் கோயிலுள் இருக்கும் பிரமதீர்த்தத்தில் நீராடச்சென்றார். குழந்தையும் அழுதுகொண்டே உடன் சென்றது. சிவபாத இருதயர் உடன்வந்த சிறுவரைக் குளக் கரையில் உட்காரவைத்து, நீருள்மூழ்கி 'அகமர்ஷணம்' என்னும் திருமந்திரத்தைச் செபித்துக்கொண்டிருந்தார். அங்ஙனம் அவர்மூழ்கியதும்உடற்றந்தையைக்காணாதுசிறிதும் தனித்திரார் என்ற வியாசத்தால் முழுமுதற்றந்தையாகிய

சிவபெருமானது திருவடிகளை முறைப்படி வழிபட்டபண்டை யுணர்வு மூண்டெழ பிள்ளையார் திருத்தோணிச்சிகரம்பார்த்து 'அம்மே! அப்பா!' என அழுதார். இவ்வொலி திருத்தோணி மலையில் வீற்றிருக்கும் அம்மையப்பர் திருச்செவியில் சென்று சேர்ந்தது. முன்னிலைமைத் திருத்தொண்டு முன்னி அவர்க் கருள் புரிவதற்காகப் பெருமான் பொருவிடைமேல் அம்மை யுடன் எழுந்தருளினர். எல்வுலகும் தொழநின்ற மலைக் கொடியைப் பார்த்து, 'துணைமுலைகள் பொழிகின்ற பாலடிசில் பொன்வள்ளத்து ஊட்டுக' என ஆணைதந்தார். அப்படியே அம்மையாருங்கறந்தருளி, எண்ணரிய சிவஞானத்தின்னமுதம் குழைத்து 'உண்அடிசில்' என ஊட்டினர்; கண்ணீரைத் துடைத்தார்; அழுகையை அகற்றினர், உயிர்த் தந்தையும் தாயுமாகிய இவர்களே திருமேனி தாங்கி வெளிப்பட்டுவந்து இங்ஙனம் அருளப்பெற்றமையால் இவர் ஆளுடைய பிள்ளையார் எனவும் தேவர் முதலானோர்க்கும் அறியமுடியாத சிவஞானம் சம்பந்திக்கப்பெற்றமையால் திருஞானசம்பந்தர் எனவும் அழைக்கப்பெறுவாராயினர்.

செபமுடித்து நீராடிக் கரையேறிய சிவபாத இருதயர் கடைவாய் வழிந்துகிடக்கின்ற பாலைக்கண்டு "நீ யார்தந்த பாலை உண்டாய்? எச்சில் மயங்கிட உனக்கு இது இட்டாரைக் காட்டு" என்று சிறுகோல் கொண்டு ஓச்சி உரப்பினர். குழந்தையாகிய பிள்ளையார் கண்களில் ஆனந்தக்கண்ணீர் துளிக்க வலக்கையைச் சிரத்தன்மேலுயர்த்தி, வானிடமெல் லாம் பரவிநிற்கும் ஒளியோடு விடையின்மீது பண்ணிறைந்த அருமறைகள் பணிந்தேத்த, பரமகருணையின் வடிவாகிய பராசக்தியோடு நின்ற அருள்வண்ணப்பெருமானைச் சுட்டிக் காட்டினர். உளம் நிறைந்து வழிந்த உயர்ஞானத்திருமொழி யால் இத்திருப்பதிகத்தைப் பாடியருளினர்.

பதிகம் பண் - நட்டபாடை எண் 1.

திருச்சிற்றம்பலம்

தோடுடையசெவி[1] யன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடிபூசியென் னுள்ளங்கவர்கள்வன்[2]
ஏடுடையமல ரான்முனைநாட்பணிந் தேத்தவருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 1

---

*1. தோடுடையசெவியன் என்பது முதலாக உள்ளங் கவர்ந்த கள்வனுடைய சிறப்பியல்புகள் தெரிவிக்கப்பெறு கின்றன. பிள்ளையாருடைய அழுகைக்குரல் சென்று பரந்து திருமுலைப்பால் அருளச்செய்தது திருச்செவியாதலின் அதனை முதற்கண் தெரிவிக்கிறார். உலகுயிர்கள் துன்பம் நீங்கி இன்பம் அடைதலே பொருளாக, பாடல் பரமனார் திருச்செவியில்சென்று சேர, திருச்செவியை முதற்கண் சிறப்பித்தார் என்பது, "பல்லுயிரும் களிகூரத் தம்பாடல் பரமர்பால் செல்லுமுறை பெறுவதற்குத் திருச்செவியைச் சிறப்பித்து" என்ற சேக்கிழார் வாக்கால் தெரியலாகும். தோடுடையசெவி என்றதால் இடப் பாகத்துச் செவி என்பது குறிக்கப்பெறுகின்றது. கருணைக் கேற்றது தாய்தழீஇய இடப்பக்கமாதலின் அதனை முற்கூறினார். "தோடு கூற்று பித்தா மூன்றும் பீடுடைத்தேசிகன் பேரருள் ஆகும்" என்பதால் இது ஞானதேசிகனது திருவருட்டிறத்தை விளக்குவதாகும். சொரூபசிவம் மூவகை ஆன்மாக்களுக்கும் மூவகையால் அநுக்கிரகித்து மும்மலங்களையும் போக்கி அருளா ரமுத்தை உண்பித்தருளும் முறையில், சகலான்மாக்களுக்குப் படர்க்கையில் தோன்றிப் புரியும் குருவருளைக் குறிப்பதாகு மென்று "குரு அருளும்" என்ற பாடலும் குறிக்கிறது.*

*மூன்றுவயதுக் குழந்தையாகிய ஞானசம்பந்தப் பிள்ளை யார் தீவிரதர அன்புகொண்டு சன்மார்க்கநெறியாகிய நாயக நாயகித் தன்மையில் எடுத்த எடுப்பிலேயே ஈடுபடுகின்றார்.*

---

[1] दक्षिणे कुण्डले कर्णे वामकर्णे तु पत्रकम् । —பூர்வகாரணம்.
[2] तस्कराणां पतये नमो नमः ॥ —ஸ்ரீருத்ரம்.

உமையொருபாகனுக ஒருபெண்ணேடு இருந்த பயில்வால் என்னுள்ளங் கவர்கின்ருர் என நயந்தோன்றக் கூறியவாறு. விடையேறி- தாம் கண்டகாட்சி இடபாரூடராதலின் அதனைக்குறித்தபடி. தூவெண்மதி-தூய்மையான வெண்ணிறம்பொருந்திய மதி. மதிக்குத் தூய்மை களங்கமின்மை, இருள் ஒளியைச் சாராதவாறுபோலக் களங்கம் இறைவனையும், அவனருள் பெற்ருரையும் சாராது. தூய்மை மனத்திலும் வெண்மைபுறத்திலும் நிகழ்வது ஆதலின் இங்கே குறிப்பிடும் மதி நாம்காணும் சந்திரன்போன்று பிராகிருத சந்திரன் அல்லன் என்பது தெளியுத்தக்கது. அன்றியும் ஒருகலைப்பிறையாதலின் களங்கத்திற்கு இடமில்லை என்பதுமாம். இறைவன் சுடலைப்பொடி பூசுதல்: சர்வசங்காரகாலத்து எல்லாவுலகமும் தத்தங் காரணத்துள் முறையே ஒடுங்க - காரணங்கள் யாவும் இறுதியாக இறைவனிடம் ஒடுக்கப் பெறும்போது நிகழ்வது. மகாசங்காரமாவது நிவர்த்தியாதி பஞ்ச கலைகளிலும் அடங்கிய எல்லாப் புவனங்களையும் சங்கரிக்கின்ற நிலை. அப்போதுதான் எல்லாம் சுடலைக்காடாகும். உள்ளங் கவர்தலாவது அவனையன்றி உளங்கள் அறியாவாறு ஆட்கொள்ளுதல். ஏடு - இதழ். மலரான் - பிரமன். பிரமன் வழிபாடு செய்த தலமாதலின் இறைவற்குப் பிரமபுரீசர் என்பதும் தலத்திற்குப் பிரமபுரம் என்பதும் பெயராயிற்று. பிரமாபுரம் எனவே பிரமன் வழிபட்ட தலம் என்பது விளங்குதலின் மலரான் என்பது பிரமனைக் குறியாது என்றும், இந்நாயனுரே முற்காலத்து ஏடுடைய மலரால் பூசித்த காரணம்பற்றி இங்ஙனம் கூறினுர் என்றும் சதாசிவச் செட்டியாரவர்கள் கருதினுர்கள். பீடு - பெருமை. மேவிய - தாமே விரும்பி எழுந்தருளிய. இறைவன் நித்யசுதந்திரன் ஆகலின் இங்ஙனம் கூறப்பெற்றது. பெம்மான் - பெருமான் என்பதன் திரிபு. கள்வன் பெருமாஞகிய இவன் அன்றே எனக் கூட்டுக. ஏறி, பூசி என்பன பெயர்ச்சொற்கள். வினையெச்சமாக்கி, கவர் கள்வன் என்ற வினைத்தொகையின் நிலைமொழியோடு முடிப்பாரும் உண்டு.

இத்திருப்பாடலுக்கு உரை எழுதிய கயப்பாக்கம் திரு. சதாசிவச்செட்டியார் அவர்கள் "விடையேறி" என்பது நித்யத் தன்மையை வேண்டிய அறக்கடவுளை வெள்விடையாகப் படைத்து ஊர்தியாகக்கொண்டதால் சிருஷ்டியும் "மதிசூடி

என்பது சந்திரனுக்கு அபயம் தந்து திருமுடியில் ஏற்றிக் காத்ததால் திதியும், "பொடிபூசி" என்பது சர்வசங்காரகாலத்து நிகழ்ச்சியை அறிவித்தலால் சங்காரமும், "கள்வன்" என்பது இறைவன் எல்லா உயிர்களிடத்தும் நீக்கமற நிறைந்திருந்தும் அவைகள் வினைப்போகங்களை நுகர ஒளித்து நிற்பதால் திரோபவமும், "அருள்செய்த" என்பது அனைவர்க்கும் அருள் செய்யும் அனுக்கிரகமும் ஆகிய ஐந்தொழிலையும் விளக்கும் குறிப்பு என்பார்கள்.

ஸ்ரீமத் செப்பறைச் சுவாமிகள் அவர்கள் 'தோடுடைய செவியன்' முதலாயின இறைவனது எண்குணங்களாகிய சிறப்பு இயல்புகளை உணர்த்துவன என்றும் 'பிரமாபுரம்' 'விடையேறி' முதலியன இறைவனது தசாங்கங்களைக் குறிப்பால் உணர்த்தி நிற்பன என்றும், 'விடையேறி' 'பொடிபூசி' 'உள்ளங்கவர் கள்வன்' என்பன முறையே இறைவனுடைய மூன்று திருமேனிகளாகிய உருவம் அருஉருவம் அருவம்என்றமூன்றையும் குறித்து நிற்பன என்றும் எழுதியுள்ளார்கள். சேக்கிழார் சுவாமிகள் "மறைமுதல் மெய்யுடன் எடுத்த எழுதுமறை" என்பதால் பிரணவத்தின்முதலாகிய ஓங்காரத்தைச்சிவசத்தியின்உண்மைச் சொரூபமாகிய தகரவித்தையின் அடையாளமாகிய த் என்பதோடு சேர்த்து 'தோ' என்று தொடங்கியதாகக் குறிப்பிடுவார்கள். பன்னிரண்டாந்திருமுறையில் உலகெலாம் என்று முடிவதனையும் இதனோடு சேர்த்துத் திருமுறை முழுவதுமே வேதமூலமாகிய பிரணவத்துள் அடங்கியது என்பது குறிப்பு.

தேவாரத்திற்கும் வேதத்திற்கும் உள்ள ஒற்றுமையை உணர்த்த, வேதம் பயின்ற மரபில் வந்து தமிழ்வேதம் தந்த இவர்கள்,

**तत्सवितुर्वरेण्यं भर्गो देवस्य धीमहि ।**
**धियो यो नः प्रचोदयात् ॥**

என்ற காயத்ரி மந்திரத்தின் முதலெழுத்தாகிய தகரத்தின்மீது பிரணவத்தின் முதலெழுத்தாகிய ஓகாரத்தைச் சேர்த்துத் தொடங்கியிருப்பது அறிந்து இன்புறற்குரியது.

முற்றலாமையிள* நாகமோடேன முளைக்கொம்பவைபூண்டு
வற்றலோடுகல னுப்பலிதேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கற்றல்கேட்டலுடை யார்பெரியார்கழல் கையாற்றொழுதேத்தப்
பெற்றமூர்ந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 2

---

2. இதனால் இறைவன் அணிகளைக்கொண்டு அடையாளங்கள் அறிவிக்கப்பெறுகின்றன. முற்றல் ஆமை-ஆதி கமடமாதலின் வயது முதிர்ந்த ஆமை. ஆமை என்றது ஈண்டு அதன் ஓட்டினை. இளநாகம் என்றது இறைவன் திருமேனியையிடமாகக்கொண்ட பாம்பிற்கு நரை திரை யில்லையாதலின் என்றும் இளமையழியாத நாகம் என்பதைக்குறிப்பிக்க. ஏனம்-பன்றி; ஆதிவராகம். வற்றல் ஓடு-சதை வற்றிய மண்டையோடு. கலன் - பிச்சையேற்கும் பாத்திரம். பலி - பிச்சை, பெரியார்க்கிலக்கணம் கற்றலும் கேட்டலுமே என்பது. கற்றல் - உலக நூல்களை ஓதித் தருக்குவதன்று, இறைவன் புகழையே கற்று அடங்கல். கேட்டலும் அங்ஙனமே. இறைவன் புகழையன்றி வேறொன்றையுங் கல்லாத - கேளாத பெரியோர்களாலேயே இறைவன் தொழற்குரியன் என அதிகாரிகளை யறிவித்தவாறு. 'கல்லார் நெஞ்சில் நில்லான் ஈசன்' 'கற்றவர் வணங்குங் கற்பகக் கனியை' என்பன ஒப்புநோக்கற்குரியன. கற்றல் கேட்டலுடையார் பெரியார் எனவே உபலக்கணத்தால் சிந்தித்தல் தெளிதல் நிட்டைகூடல் முதலியனவும் கொள்ளப்பெறும். "கேட்டலுடன் சிந்தித்தல் தெளிதல் நிட்டை, கிளத்தல் என ஈரிரண்டாம் கிளக்கின் ஞானம்" என்பது சிவஞான சித்தியார். தமக்கு அருள் செய்தவண்ணமே தொழுதேத்தும் பெரியோர்க்கெல்லாம் அருள் வழங்கப் பெருமான் இடபத்தை ஊர்ந்தே இருக்கிறார் என்பதாம். பெற்றம் - இடபம்.

---

* गत्वा कैलासमतुलं महादेवं व्यजिज्ञपन् ।
तदा तमपि देवोऽयं हत्वा कूर्मं महाबलम् ॥
अग्राह तस्य पृष्ठास्थि महाघोरस्य शङ्करः ।
देवैः संप्रार्थितो देवो बभारैतत्प्रजापते ॥ —ஸ்காந்தம்.

நீர்பரந்தநிமிர்* புன்சடைமேலோர் நிலாவெண்மதிசூடி
ஏர்பரந்தவின வெள்வளைசோரவென் னுள்ளங்கவர்கள்வன்
ஊர்பரந்தவுல கின்முதலாகிய வோரூரிதுவென்னப்
பேர்பரந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 3

விண்மகிழ்ந்தமதி லெய்ததுமன்றி விளங்குதலையோட்டில்
உண்மகிழ்ந்துபலி தேரியவந்தென துள்ளங்கவர்கள்வன்
மண்மகிழ்ந்தவர வம்மலர்க்கொன்றை மலிந்தவரைமார்பிற்
பெண்மகிழ்ந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 4

---

3. நீர் - கங்கை, நிமிர்புன்சடை - நிறைந்த புல்லியச்சடை, ஓர்நிலா வெண்மதி - ஓர்கலைப்பிறை, ஏர் - அழகு. வெள்வளை - சங்குவளை. சோர - நழுவ, அவன் மதியைச் சூடியிருத்தலின் விரகமிக்கு உடலிளைத்து வளைசோர்ந்தது என்பதாம். ஊர் பரந்த உலகு - ஊர்கள் மிகுந்த உலகு. மகாப்பிரளய காலத்து உலகமே அழிக்கப்பெற்றபோது, இத்தலம் மட்டும் அழியாது இருத்தலின் உலகிற்கே ஒருவித்தாக இருக்கின்றது சீகாழி என்பது. பேர் - புகழ்.

4. விண்மகிழ்ந்தமதில் - ஆகாயத்திற் பறத்தலை விரும்பிய மதில். இவை திரிபுராரிகளின் பொன் வெள்ளி இரும்பாலான கோட்டை. எய்தது - மேருவை வில்லாக்கி, வாசுகியை நாணுக்கித் துளைத்தது. உள்மகிழ்ந்து - மனமகிழ்ந்து, தேரிய - ஆராய, செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். மண் மகிழ்ந்த அரவம் - புற்றினை விரும்பும் பாம்பு, இறைவன் அணிந்த பாம்பு புற்றில் வாழாததாயினும் சாதி பற்றிக் கூறப்பட்டது. அரவம் கொன்றை மலிந்த மார்பு - அச்சுறுத்தும் விஷம் பொருந்திய பாம்பையும், மணமும் மென்மையும் உடைய கொன்றையையும் அணிந்த மார்பு. என்றது வேண்டுதல் வேண்டாமையைக் காட்டும் குறிப்பாகும். பெண் - உமாதேவியார். பலிதேரவந்தார் எனதுள்ளம்கவர்ந்தார் என்றது என்னுடைய பரிபாகம் இருந்த படியை அறிந்து ஒன்றுசெய்வார்போல வந்து உள்ளமாகிய ஆன்மாவை மலமகற்றித் தமதாக்கினர் என்பதை விளக்கியவாறு.

---

*शम्भुस्तेषु दयां कृत्वा तदादाय जलं महत् ।
जटायां रोम्णि चैकस्मिन् बभार जलबिन्दुवत् ॥ —ஸ்காந்தம்.

ஒருமைபெண்மையுடை யன்சடையன்விடை யூரும்மிவனென்ன
அருமையாகவுரை செய்யவமர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கருமைபெற்றகடல் கொள்ளமிதந்ததோர் காலம்மிதுவென்னப்
பெருமைபெற்றபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 5

மறைகலந்தவொலி பாடலோடாடல ராகிமழுவேந்தி
இறைகலந்தவின வெள்வளைசோரவென் னுள்ளங்கவர்க்கள்வன்
கறைகலந்தகடி யார்பொழினீடுயர் சோலைக்கதிர்சிந்தப்
பிறைகலந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 6

---

*5. ஒருமை - ஒரு திருமேனியிலேயே, பெண்மை உடையன் - பெண் உருவத்தை உடையன்; என்றதால் பெண்ணுருவும் ஆணுருவுமாகிய இருமையும் உடையன் என்பது குறித்தவாறு. பெண்மை - பெண்ணுரு. உடையன் என்றதிலுள்ள விகுதியால் ஆணுருவாயினும் பெண்மை உடைமையும், சிவம் உடையானும் ஆம் என்றவாறு. சடையன் - பெண்மையுருவில் பின்னிய சடையும் ஆணுருவில் அமைந்த சடையுமாயிருத்தலின் இரண்டிற்கு மேற்பச் சடையன் என்றார். உரைசெய்ய - தோழியர் தலைவன் இயல்பைச் சொல்ல. உரையின் வாயிலாக உள்ளத்தில் புகுந்து விரும்பி உள்ளத்தைத் தமதாக்கிக்கொண்டான் என்பார் அமர்ந்து எனது உள்ளம் கவர்கள்வன் என்றார். 'ஓர் காலம் கடல்கொள்ள மிதந்த தலம் இது என்னும் பெருமைபெற்ற பிரமபுரம்' என இயைத்துப் பொருள்காண்க. ஓர்காலம் - சர்வ சங்காரகாலம்.*

*6. பாடுவது வேதம் செய்வது கள்ளம் என்ற நிலையில் பெருமான் இருக்கின்றார் என்பதைக் காட்டுவன முன் இரண்டு அடி. ஒலிகலந்த மறை பாடலோடு எனக் கூட்டி ஒலிவடிவாய வேதத்தைப் பாடுதலை உடையவர் எனப் பொருள்காண்க. மழு - தவறிழைத்தாரைத் தண்டித்தற்காக ஏந்திய சங்காரகாரண மாகிய தீப்பிழம்பு; ஆயுதமுமாம். இறை - மணிக்கட்டு. வெள் வளை - சங்கவளையல்கள். முன்கையில் செறிந்து கலந்திருந்த சங்கவளையல்கள் சோர்ந்தன என்பதால் 'உடம்புநனி சுருங்கல்' என்னும் மெய்ப்பாடு உணர்த்தியவாறு. கறை - இருள். கடி - மணம். பொழில் - நந்தனவனத்தும், சோலை - தானே வளர்ந்த சோலைகளிடத்தும். கதிர் சிந்த என்றதால் நிலவொளி அங்கு மிங்குமாகச் சிதறியிருந்தமை அறியப்படும். கதிர் சிந்து அப் பிறை எனப்பிரிக்க.*

# திரு ஆவூர்ப்பசுபதீச்சரம்

**பதிகவரலாறு :**

திருப்பூவனூர்சென்று வணங்கிய திருஞானசம்பந்தர், சிவனடியார்கள் பலர் ஏத்தொலியெடுப்ப, மிகப்பழம்பதி யாகிய ஆவூரையடைந்தார்கள். பசுபதீச்சரத்தை வணங்கி இப்பதிகத்தை அருளிச்செய்தார்கள்.

**பதிகம் :** பண் - நட்டபாடை எண் 8

திருச்சிற்றம்பலம்

புண்ணியர் பூதியர் பூதநாதர்
புடைபடு வார்தம் மனத்தார்திங்கட்
கண்ணிய ரென்றென்று காதலாளர்
கைதொழு தேத்த விருந்தவூராம்
விண்ணுயர் மாளிகை மாடவீதி
விரைகமழ் சோலை சுலாவியெங்கும்
பண்ணியல் பாடல றுதவாவூர்ப்
பசுபதி யீச்சரம் பாடுநாவே. 1

முத்தியர் மூப்பில ராப்பினுள்ளார்
முக்கணர் தக்கன்றன் வேள்விசாடும்
அத்திய ரென்றென் றடியரேத்தும்
ஐயன ணங்கொ டிருந்தவூராம்
தொத்திய லும்பொழில் மாடுவண்டு
துதைந்தெங்குந் தூமதுப் பாயக்கோயிற்
பத்திமைப் பாடல றுதவாவூர்ப்
பசுபதி யீச்சரம் பாடுநாவே. 2

---

1. பூதியர் - செல்வம் உடையார். புடைபடுவார் - பக்கம் நண்ணிப் பரவுவார். கண்ணி - திருமுடியிற்சூடப்பெறும் மாலை.

2. முத்தியர் - முத்தியின்பத்தை உடையவர். ஆப்பு - கன்றுப்பூர், வேள்விசாடும் அத்தியர் என்றது தக்கன் வேள்விக் கண் அளிக்கும் அவியை ஏற்கும் இரவலராயிருந்தும் வேள்வியை

பொங்கி வரும்புனல் சென்னிவைத்தார்
போம்வழி வந்திழி வேற்றமானுர்
இங்குயர் ஞானத்தர் வானேரேத்து
மிறையவ ரென்றுமி ருந்தவூராம்
தெங்குயர் சோலைசே ராலைசாலி
திளைக்கும் விளைவயல் சேரும்பொய்கைப்
பங்கய மங்கை விரும்புமாவூர்ப்
பசுபதி யீச்சரம் பாடுநாவே. 3

தேவியோர் கூறின ரேறதேறுஞ்
செலவினர் நல்குர வென்னைநீக்கும்
ஆவிய ரந்தண ரல்லறீர்க்கும்
அப்பனு ரங்கே யமர்ந்தவூராம்
பூவிய லும்பொழில் வாசம்வீசப்
புரிகுழ லார்சுவ டொற்றிமுற்றப்
பாவியல் பாடல ருதவாவூர்ப்
பசுபதி யீச்சரம் பாடுநாவே. 4

---

*அழித்தமை சாலாது என்னும் பழிப்பு தோன்றக்கூறியது. அத்தியர்-இரவலர். ஹத்தி என்பதன் திரிபாகக்கொண்டு கொலை என்பாரும் உளர்; அது பொருந்தாமை ஓர்க. தொத்து இயலும் - பூங்கொத்துக்கள் அழகு செய்கின்ற. பத்திமைப் பாடல் - சிவபத்தியைப் பயக்கும் பாடல்கள்.*

*3. பொங்கிவரும் புனல் - கங்கை. அதுவந்த செருக்கினைக் குறிப்பித்தபடி. போம் வழிவந்து - பிறவியினீங்கி உய்ந்து போகக் கூடிய மனிதப்பிறவியில் வந்து. இழிவு ஏற்றம் ஆனுர் - தீயன செய்து இழிந்தும் நல்லன செய்து உயர்ந்தும் உய்ந்த மக்கள். இழிவேற்றமானுரும், ஞானத்தரும், வானேரும் ஏத்தும் இறைவர் என்று ஒரு தொடராக்குக. தென்னஞ் சோலைகளும் ஆலைகளும், வயல்களில் நெற்பயிர்களும் சேரும் ஆவூர் எனவும், பங்கயமாங்கே விரும்பும் ஆவூர் எனவும் கூட்டுக. பொய்கை - மானிடர் ஆக்காத நீர் நிலை.*

*4. நல்குரவு என்னை நீக்கும் ஆவியர் - வறுமை புகுதாதே என்னைக் காக்கும் உயிர்போன்றவர். இதனேடு "இடரினும் தளரினும் எனதுறுநோய் தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்" என்று யாகத்துக்குப் பொன்வேண்டிய காலத்துப்*

இந்தணை யுஞ்சடை யார்விடையார்
இப்பிறப் பென்னை யறுக்கவல்லார்
வந்தணைந் தின்னிசை பாடுவார்பால்
மன்னினர் மன்னி யிருந்தவூராம்
கொந்தணை யுங்குழ லார்விழவிற்
கூட்ட மிடையிடை சேரும்வீதிப்
பந்தணையும் விர லார்தமாவூர்ப்
பசுபதி யீச்சரம் பாடுநாவே. 5

குற்ற மறுத்தார் குணத்தினுள்ளார்
கும்பிடு வார்தமக் கன்புசெய்வார்
ஒற்றை விடையினர் நெற்றிக்கண்ணர்
உறைபதி யாகுஞ் செறிகொண்மாடம்
சுற்றிய வாசலின் மாதர்விழாச்
சொற்கவி பாடநி தானநல்கப்
பற்றிய கையினர் வாழுமாவூர்ப்
பசுபதி யீச்சரம் பாடுநாவே. 6

---

*பாடிய பாடலையும் ஒப்பிடுக. அந்தணர் - முனிவர். புரிகுழலார் சுவடு ஒற்றி - பெண்கள் காற்சுவட்டினாலே தாளமிட்டு, பாவியல் பாடல் - இசையமைந்த பாடல், பா - பரந்துபட்டுச் செல்வதோர் ஓசை.*

*5. இந்து - சந்திரன்; இப்பிறப்பு அறுக்க வல்லார் என்றது என் வினை முழுவதும் உலர்ந்துபோதலின் முத்தி அளிக்கவல்லார் என்பதாம், வந்து அணைந்து - திருக்கோயிலின் திருவணுக்கன் திருவாயிலை வந்து அடைந்து. மன்னினர் - நிலை பெற்று இருப்பவர். கொந்து - பூங்கொத்து; குழலார் விரலார் என்பன மகளிரைக்குறித்து நின்றன.*

*6. குற்றம் அறுத்தார் - அடியார்கள்செய்த குற்றங்களை நீக்கியவர். குற்றம் மறுத்தார் - நறுநாற்றத்திலன்றி தீநாற்றத் தில் செல்லாத வண்டுபோல் குற்றங்களில் சென்று பொருந்த மறுத்தவர். மாதர்கள் விழாவின்கண் சொல்லானியன்ற கவி களைப்பாட, அதனைக்கண்ட மாந்தர்கள் பொன்னளிக்க; அதனை ஏற்ற கையர்களாய் வாழ்கின்ற ஆவூர் என்க. நிதானம் - பொன், "நிதானம் - முற்காரணம் தூய்மை நியமம் நிதி*

நீறுடை யார்நெடு மால்வணங்கு
நிமிர்சடை யார்நினை வார்தமுள்ளம்
கூறுடை யாருடை கோவணத்தார்
குவலய மேத்தவி ருந்தவூராம்
தாறுடை வாழையிற் கூழைமந்தி
தகுகனி யுண்டுமிண் டிட்டினத்தைப்
பாறிடப் பாய்ந்து பயிலுமாவூர்ப்
பசுபதி யீச்சரம் பாடுநாவே. 7

வெண்டலை மாலை விரவிப்பூண்ட
மெய்யுடை யார்விற லாரரக்கன்
வண்டமர் பூமுடி செற்றுகந்த
மைந்தரி டம்வள மோங்கியெங்கும்
கண்டவர் சிந்தைக் கருத்தின்மிக்கார்
கதியரு ளென்றுகை யாரக்கூப்பிப்
பண்டலர் கொண்டு பயிலுமாவூர்ப்
பசுபதி யீச்சரம் பாடுநாவே. 8

---

மறைத்துக்கொள் பொருள் கன்றின் கயிறும்'' என்பது நானார்த்ததீபிகை.

7. நீறுடையார் - தாம் தொன்மைக்கெல்லாம் தொன்மையாயிருத்தலைத் தோற்றுவிக்கச் சர்வசங்காரகாலத்துத் திருநீற்றினைத் திருமேனியிலணிந்தவர். உள்ளம் கூறுடையார் - உள்ளத்தில் குடிகொண்டிருப்பர், தாறிட்ட வாழையில் தழைவால் மந்திகள் கனிந்த பழத்தை உண்டு செருக்கி, குரங்கினத்தைக் கலைந்தோடப்பாய்கின்ற ஆவூர் என்றதால் நினைந்துருகும் அடியார்க்குச் சிவானுபவ வன்மையளிக்கும் ஆவூர் என்பது குறிப்பால் போந்த பொருள்.

8. வெண்டலைமாலை உம்மைத்தொகை; வெண்தலைகளையும் மாலைகளையும் கலந்து அணிந்த திருமேனியுடையவர். விறல்-வலிமை. நாளும் புதுப்பூச்சூடி, போகம் நுகர்பவனாதலின் இராவணன்முடி வண்டமர் பூமுடி எனப்பட்டது. அதனைச் செற்றுகந்தமைந்தர் என்பதால் வினைப்போகக் கழிவின்கண் ஆட்கொள்ளும் இறைவன் என்பது போதரும். சிந்தை கருத்து - இடைவிடாத சிந்தனையால் எழுந்த கருத்து.

மாலு மயனும் வணங்கிநேட
மற்றவ ருக்கெரி யாகிநீண்ட
சீல மறிவரி தாகிநின்ற
செம்மையி னரவர் சேருமூராம்
கோல விழாவி னரங்கதேறிக்
கொடியிடை மாதர்கண் மைந்தரோடும்
பாலென வேமொழிந் தேத்துமாவூர்ப்
பசுபதி யீச்சரம் பாடுநாவே. 9

பின்னிய தாழ்சடை யார்பிதற்றும்
பேதைய ராஞ்சமண் சாக்கியர்கள்
தன்னிய லும்முரை கொள்ளகில்லாச்
சைவ ரிடந்தள வேறுசோலைத்
துன்னிய மாதரு மைந்தர்தாமுஞ்
சுனையிடை மூழ்கித் தொடர்ந்த சிந்தைப்
பன்னிய பாடல் பயிலுமாவூர்ப்
பசுபதி யீச்சரம் பாடுநாவே. 10

---

9. நேட - தேட. மற்று வினைமாற்றுப் பொருளில் வந்தது. சீலம் - எளிமை; இதனைச் சௌலப்யம் என்பர் வடநூலார். சீலமாவது அடியார்க்கு எளியராய் இருக்கும் தன்மை. மாலும் அயனும் தேட அவர்களுக்குச் சோதிப் பிழம்பாய்த் தோன்றிய எளிமையை விளக்கியது. அதனைச் சிற்றறிவுடைய ஆன்மாக்கள் அறியமுடியாமையால் அறிவரிதாகின்ற என்றார். கோல விழா - அழகிய விழா. மாதரும் மைந்தரும் அரங்கேறியும் பால்போன்ற மொழியால் இறைவனை ஏத்துகிறார்கள் என்பது இன்பக்காலத்தும் இறைவனையே தியானிக்கும் பெருமை விளக்கியவாறு.

10. பின்னிய தாழ் சடையார் - பின்னித் தொங்கவிடப் பெற்ற சடையை உடையவர்கள்; சமணரில் இல்லறத்தாராகிய ஆண்கள் தலையைப் பின்னித் தொங்கவிடுதல் மரபு. இன்றும் சீனமக்களிடத்துக் காணலாம். சாக்கியர் - புத்தர். தன்னியலும் உரை - தன்னைப்பற்றி அவர்கள் சொல்லும் உரைகள். உரை கொள்ள இல்லா சைவர் - அவ்வுரைகளுக்குப் பொருளாகத் தாம் ஆகாத சிவபெருமான் என்றது சிவத்தைப்பற்றி அவர்கள்

எண்டிசை யாரும்வ ணங்கியேத்து
மெம்பெரு மானையெ ழில்கொளாவூர்ப்
பண்டுரி யார்சிலர் தொண்டர்போற்றும்
பசுபதி யீச்சரத் தாதிதன்மேல்
கண்டல்கண் மிண்டிய கானற்காழிக்
கவுணியன் ஞானசம் பந்தன்சொன்ன
கொண்டினி தாவிசை பாடியாடிக்
கூடும வருடை யார்கள்வானே. 11

திருச்சிற்றம்பலம்.

---

*கூறும் உரைகள் சிற்றறிவினால் சொல்லப்பட்டன ஆதலின் அவற்றைக் கடந்துநின்ற இயல்பினை உடையவர் என்பதாம். தளவு - முல்லை. மாதரும் மைந்தரும் சுனையில் மூழ்கிப் புறத் தூய்மையொடு அகத்தூய்மையும் கொண்டு வழிபடுகின்றனர் என்றவாறு.*

*11. திசையிலுள்ளார் அனைவரும் வணங்கும் பெருமானை ஆவூரில் வழிவழி உரிமைபூண்ட சில அடியார்கள் போற்றுகின்றார்கள் என்பதாம். கண்டல் - தாழை. சொன்ன - சொல்லினவாய பாடல்கள். பாடி வாய்த்தொண்டு. ஆடி மெய்த்தொண்டு, கூடுதல் சிந்தைத்தொண்டு. கூடுமவர் - தியானிப்பவர்.*

# திருவேணுபுரம்

**பதிகவரலாறு :**

நற்றவர் குழாத்தோடும், ஞானநடஞ்செயும் தில்லையம் பதியினெல்லையில் வணங்கிக்கொண்டு திருக்கழுமலம் சென்ற டைகின்ற திருஞானசம்பந்தப் பிள்ளையார், சீகாழிப்பதியைத் தூரத்தேகண்டதும், பல்லக்கை விட்டிறங்கி 'வண்டார்குழல் அரிவை' என்னும் இப்பதிகத்தைப் பாடியருளுகிறார்.

**பண் - நட்டபாடை**

**பதிகம் :** **எண் 9**

*திருச்சிற்றம்பலம்*

வண்டார்குழ லரிவையொடு பிரியாவகைபாகம்
பெண்டான்மிக வானன்பிறைச் சென்னிப்பெருமானூர்
தண்டாமரை மலராளுறை தவளந்நெடுமாடம்
விண்டாங்குவ போலும்மிகு வேணுபுரமதுவே. 1

படைப்புந்நிலை யிறுதிப்பயன் பருமையொடுநேர்மை
கிடைப்பல்கண முடையான்கிறி பூதப்படையானூர்
புடைப்பாளையின் கமுகின்னொடு புன்னைமலர்நாற்றம்
விடைத்தேவரு தென்றன்மிகு வேணுபுரமதுவே. 2

---

1. இது உமாதேவியைப் பிரிதாதிருக்க ஒருபாகமே பெண்ணான பெருமான் ஊர் வேணுபுரம் என்கின்றது. வண் டார்குழல் அரிவை - வண்டுகள் மொய்க்கும் கூந்தலையுடைய பெண்ணாகிய உமை. பிரியாவகை - பிரியாதிருக்க. பாகம் - ஒரு பாகத்திலேயே. மிகப் பெண் ஆனான் - முழுதும் பெண்வடி வானவன். தவளம் - வெண்மை. மாடம் விண்தாங்குவ போலும் என்றது உயர்வுநவிற்சியணி.

2. படைப்பு - சிருஷ்டி. நிலை - திதி. இறுதி - சம்ஹாரம். பயன் - முத்தொழிலின் பயனாகிய வீட்டின்பத்தின் வடிவாய் இருப்பவன். பயன் - என்பது பயன் வடிவாய இறைவனை உணர்த்திற்று. பருமை - பருப்பொருள். நேர்மை - நுண் பொருள். என்றது அணுவுக்கு அணுவாயும் பெரியவற்றிற் கெல்லாம் பெரிதாயும் நிற்கும் இறைவனின் நிலை உணர்த்திய வாறு. கிடை பல் கணம் உடையான் - வேதத்தை ஓதும்

கடந்தாங்கிய கரியையவர் வெருவவுரிபோர்த்துப்
படந்தாங்கிய வரவக்குழைப் பரமேட்டிதன்பழவூர்
நடந்தாங்கிய நடையார்நல பவளத்துவர்வாய்மேல்
விடந்தாங்கிய கண்ணார்பயில் வேணுபுரமதுவே. 3

தக்கன்றன சிரமொன்றினை யரிவித்தவன்றனக்கு
மிக்கவ்வர மருள்செய்தவெம் விண்ணோர்பெருமானூர்
பக்கம்பல மயிலாடிட மேகம்முழவதிர
மிக்கம்மது வண்டார்பொழில் வேணுபுரமதுவே. 4

நானாவித வுருவானமை யாள்வானணுகாதார்
வானார்திரி புரமூன்றெரி யுண்ணச்சிலைதொட்டான்
றேனார்ந்தெழு கதலிக்கனி யுண்பான்றிகழ்மந்தி
மேனோக்கிநின் றிறங்கும்பொழில் வேணுபுரமதுவே. 5

---

கூட்டமாகிய பல சிவகணங்களையுடையவன். கிடை - வேதம் ஓதும் கூட்டம். 'ஓதுகிடையின் உடன் போவார்' (பெரிய, சண்டே—17) கிறி - வஞ்சகம். புடைப்பாளை - பக்கங்களில் வெடித்து மலர்ந்திருக்கின்ற பாளைகள். விடைத்தே - வேறுபடுத்தியே. கமுகு புன்னைகளின் நாற்றத்தை ஒன்றாகக் காட்டாது வேறுபடுத்திக்காட்டுகிறது.

3. கடம் - மதநீர். அவர் வெருவ - யானையை ஏவிய தாருகாவனத்து முனிவர்களஞ்ச. பழவூர் என்றது மகாப்ரளய காலத்திற்கும் தொன்மையதாதலின். நடந்தாங்கிய நடையார் - நடனத்திற்கு ஏற்ற ஜதிவைப்பைத் தாங்கிய நடையையுடையவர்கள். துவர் - சிவப்பு. மேல்விடம் - மேலாகிய விடம். விடம் உண்டாரையன்றிக் கொல்லாது; இது நோக்கினாரையும் கொல்லும் ஆதலின் மேல்விடம் என்றார். வாய் மேல் (விடந்தாங்கிய) கண் எனலுமாம்.

4. தக்கன் தன் சிரம் - தக்கன் தலை. தன அகரம் வேண்டா வழிச் சாரியை. அரிவித்து என்றது வீரபத்திரக் கடவுளைக் கொண்டு வெட்டுவித்த வரலாற்றினை உட்கொண்டு.

5. நானாவித உருவால் நமையாள்வான் - தியானிக்கின்ற அடியார்கள் நினைத்த உருவத்தோடு வெளிப்பட்டு அருள்புரிபவன். நணுகாதார் - பகைவர்களாகிய திரிபுராதிகள். வானார் - வானத்திற் பறந்து திரிகின்ற. சிலை தொட்டான் -

மண்ணோர்களும் விண்ணோர்களும் வெருமிம்மிகவஞ்சக்
கண்ணார்சல மூடிக்கட லோங்கவ்வுயர்ந்தானூர்
தண்ணார்நறுங் கமலம்மலர் சாயவ்விளவாளை
விண்ணார்குதி கொள்ளும்வியன் வேணுபுரமதுவே. 6

* * * * 7

மலையான்மக ளஞ்சவ்வரை யெடுத்தவ்வலியரக்கன்
றலைதோளவை நெரியச்சர ணுகிர்வைத்தவன்றனூர்
கலையாரொடு சுருதித்தொகை கற்றோர்மிகுகூட்டம்
விலையாயின சொற்றேர்தரு வேணுபுரமதுவே. 8

வயமுண்டவ மாலும்மடி காணாதலமாக்கும்
பயனாகிய பிரமன்படு தலையேந்தியபரனூர்
கயமேவிய சங்கந்தரு கழிவிட்டுயர்செந்நெல்
வியன்மேவிவந் துறங்கும்பொழில் வேணுபுரமதுவே. 9

---

*வில்லால் அம்பைச் செலுத்தியவன். தொடுதல் - செலுத்துதல். 'கடுங் கணைகள் தம்மைத் தொட்டனன்' (கந்த. சூரபன்மன் வதை. 191) சிலை தொட்டான் என்றது சிலையைத் தொட்ட அளவே! திரிபுரங்கள் எரிந்தன என்னும் நயப்பொருள் தோன்ற. தேன் ஆர்ந்து எழு கதலி - தேன்கதலி என்னும் ஒருவகை வாழை. மந்தி மேல்நோக்கி இறங்குகின்ற இயற்கையை அறிவித்தபடி.*

*6. கண்ணார் சல மூடி - நிலமெல்லாம் நிறைந்து நீர் மூடி. மூடி ஓங்க உயர்ந்தான் ஊர் எனக் கூட்டுக.*

*8. இராவணனது தலையும் தோளும் நெரிய விரலினது நுனியை ஊன்றி மறக்கருணை காட்டியது வரையை யெடுத்ததற்காக அன்று; உமாதேவிக்கு அச்சம் விளைத்தமையான். உகிர் - நகம். சுருதித்தொகை - சாகைகளின் கூட்டமாகிய வேதம். விலையாயின சொல் - பெறுமதியுடைய சொற்கள்.*

*9. வயம் உண் தவம் மாலும் - வெற்றி உடைய தவத்தைச் செய்த திருமாலும். அடிகாணாது அலமாக்கும் - திருவடியைக் காணப் பெறாது சுழலும். அலமாக்கும் பரன் எனவும்*

மாசேறிய வுடலாரமண் குழுக்க்ளொடுதேரர்
தேசேறிய பாதம்வணங் காமைத்தெரியானூர்
தூசேறிய வல்குற்றுடி யிடையார்துணைமுலையார்
வீசேறிய புருவத்தவர் வேணுபுரமதுவே. 10

வேதத்தொலி யானும்மிகு வேணுபுரந்தன்னைப்
பாதத்தினின் மனம்வைத்தெழு பந்தன்றனபாடல்
ஏதத்தினை யில்லாவிவை பத்தும்மிசைவல்லார்
கேதத்தினை யில்லார்சிவ கெதியைப்பெறுவாரே. 11

திருச்சிற்றம்பலம்.

---

ஏந்திய பரன் எனவும் தனித்தனியே கூட்டுக, பயன் ஆகிய பிரமன் - அச்சத்தை உடையவனாகிய பிரமன். கயம் - ஆழ்ந்த நீர்நிலை. சங்கம் உப்பங்கழியைவிட்டுச் செந்நெல் வயலில்வந்து உறங்கும் வேணுபுரம். செந்நெல்வியன்-செந்நெல் விளைந்துள்ள அகன்ற இடம்.

10. மாசு ஏறிய உடல் - தேயாது தோய்வதால் அழுக்கு ஏறிய உடல். தேரர் - பௌத்த முனிவர். தேசு ஏறிய பாதம் - ஒளியுள்ள திருவடி. வணங்காமைத் தெரியான் - வணங்காதபடி அவர்களால் அறியமுடியாதவன். தூசு - ஆடை. துடி - உடுக்கை. வீசு ஏறிய புருவத்தவர் - ஆடவர்மேல் வீசி நெற்றியின்கண் ஏறிய புருவத்தினை உடையார்.

11. சென்ற திருப்பாடல்களில் கூறிய முழவதிர்தலும், வாளை குதிகொள்ளுதலும், கற்றோர்கள் சொல்தேர்தலும் ஆகிய இவற்றால் உண்டான ஒலியோடு வேத ஒலியாலும் மிகுந்திருக்கின்ற வேணுபுரம். பாதம் - சிவனது திருவடி. பந்தன் - ஞான சம்பந்தன். ஏதத்தினை இல்லா இவை பத்தும் - துன்பந்தரல் இல்லாத இந்தப் பத்துப் பாடல்களையும்; பத்துப் பாடல்களும் துன்பம் நீக்குமாற்றை ஊன்றி நோக்கி இன்புறுதற்கு உரியது. கேதம் - துன்பம்.

# திருவண்ணாமலை

**பதிகவரலாறு:**

திருஅறையணிநல்லூரை வழிபட்ட பிள்ளையாருக்கு, அன்பர்கள் அண்ணாமலையைக் காட்டினார்கள். அண்ணாமலை, இறைவன் திருவுருவாகவே காட்சியளித்தது. அதனைக் கண்ணுற்பருகிக் கைதொழுது கலந்து போற்றுங்காதலினால் இப்பதிகத்தை அருளிக்கொண்டே தலத்தையடைகின்றார்கள்.

**பதிகம்:**

**பண் - நட்டபாடை**

**பதிகம் 10**

திருச்சிற்றம்பலம்.

உண்ணாமுலை யுமையாளொடு முடனாகியவொருவன்
பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணிதிகழ
மண்ணார்ந்தன வருவித்திரண் மழலைம்முழவதிரும்
அண்ணாமலை தொழுவார்வினை வழுவாவண்ணமறுமே. 1

தேமாங்கனி கடுவன்கொள விடுகொம்பொடுதீண்டித்
தூமாமழை துறுகன்மிசை சிறுநுண்டுளிசிதற
ஆமாம்பிணை யணையும்பொழி லண்ணாமலையண்ணல்
பூமாங்கழல் புனைசேவடி நினைவார்வினையிலரே. 2

---

1. உமையாளொடும் உடனாகிய ஒருவன் என்றது உமாதேவியை இடப்பாகத்திருத்தி இருக்கிற உடனுறை நிலையை உணர்த்தியது. பெண்ணாகிய பெருமான் என்றது உமையம்மையோடு ஒன்றாகிய நிலையை உணர்த்தியது. மழலை முழவு - சொற்றூய்மையில்லாத முழவொலி. சொல் - மத்தளத்தின் ஜதி ஒலி.

2. கடுவன் - ஆண் குரங்கு. விடு கொம்பு - மாம்பழத்தைப் பறித்துவிட்ட மாங்கொப்பு. தூ மா மழை - தூய்மையான கரிய மேகம். துறுகல் - பாறை. ஆமா பிணை - காட்டுப் பசு; பெண்பசுவோடு, ஆமாப் பிணை என்பது எதுகைநோக்கி ஆமாம்பிணையாயிற்று. பூமாங்கழல் - அழகிய மாவிலையின் வடிவந்தோன்றப் புனையப்பட்ட காலணி. மாண் கழலுமாம். நினைக்க முத்தி தரும் தலம் ஆதலின் நினைவார் வினையிலரே என்றார்.

பீலிம்மயில் பெடையோடுறை பொழில்சூழ்கழைமுத்தம்
சூலிம்மணி தரைமேனிறை சொரியும்விரிசாரல்
ஆலிம்மழை தவழும்பொழி லண்ணாமலையண்ணல்
காலன்வலி தொலைசேவடி தொழுவாரனபுகழே. 3

உதிரும்மயி ரிடுவெண்டலை கலனாவுலகெல்லாம்
எதிரும்பலி யுணலாகவு மெருதேறுவதல்லால்
முதிருஞ்சடை யிளவெண்பிறை முடிமேல்கொளவடிமேல்
அதிருங்கழ லடிகட்கிட மண்ணாமலையதுவே. 4

மரவஞ்சிலை தரளம்மிகு மணியுந்துவெள்ளருவி
அரவஞ்செய முரவம்படு மண்ணாமலையண்ணல்
உரவஞ்சடை யுலவும்புன லுடனாவதுமோரார்
குரவங்கமழ் நறுமென்குழ லுமைபுல்குதல்குணமே. 5

---

*3. பீலிம்மயில், ஆலிம்மழை, சூலிம்மணி என்பன விரித்தல் விகாரம். சூல் இ மணி - சூலிருந்துபெற்ற இந்த முத்துக்கள். ஆலி - நீர்த்துளி. திருவடியால் எட்டியுதைத்தார் ஆகலின் காலன் வலிதொலை சேவடி என்றார். புகழ் தொழுவாரன எனக்கூட்டுக.*

*4. உதிரும் மயிர் இடு வெண்டலை - சதைவற்றிப்போனதால் உதிர்கின்ற மயிரையுடைய காட்டில் இடப்பெற்ற பிரம கபாலம். எதிரும் பலி - வந்து இடப்பெறும் பிச்சை. பிச்சை ஏற்பார் யாசியாது தெருவிற்செல்ல மக்களிர் தாமே வந்து இடுதல் மரபாதலின் அதனை விளக்க எதிரும்பலி என்றார். முதிருஞ் சடை இள வெண் பிறை: முரண்.*

*5. சிலை-ஒருவகைமரம். தரளம்-முத்து. மணி-இரத்தினம். அரவம்-ஒலி. உரவம்-உரகம் என்பதன் திரிபு: பாம்பு. உரகமும், கங்கையும் சடையில் உலாவுதலையும் ஓராமல் உமையாளைத் தழுவுதல் குணமாகுமா என்று வினவுகிறார். புணர்ச்சிக்குத் தனிமை இனியதாய், நாணுங் காப்பாகவும். இவர் பாம்பும், கங்கையும் சடைமீது உலாவப் புல்லல் நன்றன்று என்று நகைபடச் சொல்லிநிற்கும்.*

பெருகும்புன லண்ணாமலை பிறைசேர்கடனஞ்சைப்
பருகுந்தனை துணிவார்பொடி யணிவாரதுபருகிக்
கருகும்மிட றுடையார்கமழ் சடையார்கழல்பரவி
உருகும்மன முடையார்தமக் குறுநோயடையாவே. 6

கரிகாலன குடர்கொள்வன கழுதாடியகாட்டில்
நரியாடிய நகுவெண்டலை யுதையுண்டவையுருள
எரியாடிய விறைவர்க்கிட மினவண்டிசைமுரல
அரியாடிய கண்ணாளொடு மண்ணாமலையதுவே. 7

ஒளிறூபுலி யதளாடைய னுமையஞ்சுதல்பொருட்டால்
பிளிறூகுரன் மதவாரண வதனம்பிடித்துரித்து
வெளிறூபட விளையாடிய விகிர்தன்னிராவணனை
அளறூபட வடர்த்தானிட மண்ணாமலையதுவே. 8

6. பிறை சேர் கடல் - ஒருகலைப்பிறை உண்டாதற்கு இடமாகிய பாற்கடல். பருகுந்தனை துணிவார் - உட்கொள்ளும் அளவிற்குத் துணிவுடையவர். பொடி - விபூதி. கருகும் மிடறு - கருமை ஒருகாலைக்கு ஒருகால் மிக்குத்தோன்றும் கழுத்து.

7. கரிகாலன - எரிபிணத்தை நுகர எரியில் நிற்பதால் கரிந்துபோன கால்களையுடையன. கழுது - பேய். நரியாடிய - நரிகள் உருட்டி விளையாடிய. எரியாடிய - இடுகாட்டில் தீப்பிழம்பில் நின்றாடிய. அரி - செவ்வரி.

8. ஒளிறூபுலியதள் - ஒளிசெய்யும் புலித்தோல், பிளிறூ வெளிறூ அளறூ என்ப சந்தம்நோக்கி நீண்டன. மதவாரணம் - மதம்பிடித்த யானை. வதனம் பிடித்து உரித்து - முகத்தில் திருவடியை யூன்றிப் பிடித்துக்கொண்டு உரித்து. வெளிறுபட விளையாடிய - வெள்ளையாக விளையாடிய, வயிரமில்லாத மரத்தை வெளிறு என்றல்போல, கபடமின்றி விளையாடுதலை இங்ஙனம் கூறி இன்புற்றார். அளறுபட - மலைக்கீழகப் பட்டு நசுங்கிச் சேறாக. அடர்த்தான் - நெருக்கியவன்.

விளவார்கனி படநூறிய கடல்வண்ணனும்வேதக்
கிளர்தாமரை மலர்மேலுறை கேடில்புகழோனும்
அளவாவண மழலாகிய வண்ணாமலையண்ணல்
தளராமுலை முறுவல்லுமை தலைவன்னடிசரணே. 9

வேர்வந்துற மாசூர்தர வெயினின்றுழல்வாரும்
மார்பம்புதை மலிசீவர மறையாவருவாரும்
ஆரம்பர்த முரைகொள்ளன்மி னண்ணாமலையண்ணல்
கூர்வெண்மழுப் படையானல்ல கழல்சேர்வதுகுணமே. 10

வெம்புந்திய கதிரோனொளி விலகும்விரிசாரல்
அம்புந்திழ வெயிலெய்தவ னண்ணாமலையதனைக்
கொம்புந்துவ குயிலாலுவ குளிர்காழியுண்ஞான
சம்பந்தன தமிழ்வல்லவ ரடிபேணுதறவமே. 11

திருச்சிற்றம்பலம்.

---

9. விளவு ஆர் கனிபட நூறிய கடல்வண்ணன் - விளாமரமாய் நின்ற கபித்தன் அழியக்கொன்ற கண்ணபிரான். கேடில் புகழோன் - அழியாப் புகழ்பெற்ற பிரமன். அளவா வண்ணம் - தம்முட் பகைகொண்டு கலவாதபடி. இது இத்தலத்தில் பிரம விஷ்ணுக்கள் செருக்கிச்செய்த சண்டையைத்தீர்க்கப் பெருமான் தீப்பிழம்பாகிய அண்ணாமலையாய் நின்ற தலவரலாற்றுக் குறிப்பை விளக்குவது. உண்ணத் தளர்தல் நகிற்கு இயல்பாதலின் உண்ணாமுலை என்பார் தளராமுலை என்றார். தனது நகில் கொண்டும் இறைவனைத் தன்வசமாக்கியவள் என்பது குறிப்பிக்கப் பெற்றது.

10. வேர் - வியர்வை.. மாசு - அழுக்கு. சீவரம் - மரவுரி. மார்பு புலப்படாதவண்ணம் மரவுரியால் மறைத்தல் சமணத்துறவியர் இயல்பு. ஆரம்பர்-தொடக்க நிலையிலுள்ளார்; ஆரம்பவாதிகள் போதிய பயிற்சியில்லார் என்பதாம். ஆடம்பரமில்லாதவர்கள் என்பதுமாம்.

11. வெம்பு உந்திய - வெப்பமிக்க, மலையே இறைவன் திருமேனியாதலின் அவனைத்தீண்டிப் பழியேற்க விருப்பின்றி விலகிச் சென்றார் என்பர். அம்பு - நீர். கொம்பு ஒருவகை வாத்திய விசேடம். கொம்பு ஊதிய இனிய ஓசையைக் குயில் ஒலிக்கும் காழி.

# திருவீழிமிழலை

**பதிகவரலாறு :**

திரும்பாம்புரம் என்னும் தலத்தை வணங்கிக்கொண்டு பிள்ளையார் திருவீழிமிழலைக்கு அப்பருடன் எழுந்தருள அந்தணர்கள் எதிர்கொண்டழைத்தார்கள். பிள்ளையார் சிவிகையினின்றிழிந்து அந்தணர்கள் புடைசூழ விண்ணிழிந்த கோயிலை வலங்கொண்டார். வியந்தார். கீழ்விழுந்து வணங்கினார், உள்ளத்தில் உணர்ச்சி பொங்கி வழிந்தது. இசை ஆயிற்று. "சடையார் புனல் உடையான்" என்றெடுத்துச் சந்த இசைத் தமிழைச் சாற்றி மணவாளப் பெருமானது திருவடிக்கீழ் ஆனந்த வெள்ளத்தாடினார்.

பண் - நட்டபாடை

**பதிகம் :** **எண் 11**

திருச்சிற்றம்பலம்

சடையார்புன லுடையானொரு சரிகோவண முடையான்
படையார்மழு வுடையான்பல பூதப்படையுடையான்
மடமான்விழி யுமைமாதிட முடையானெனையுடையான்
விடையார்கொடி யுடையானிடம் வீழிம்மிழலையே. 1

ஈறாய்முத லொன்றாயிரு பெண்ணாண்குண மூன்றாய்
மாறாமறை நான்காய்வரு பூதம்மவையைந்தாய்
ஆறார்சுவை யேழோசையொ டெட்டுத்திசைதானாய்
வேறாயுட னானானிடம் வீழிம்மிழலையே. 2

---

1. சடையார் புனல் - சடைக்கண் நிறைந்த கங்கை. படையார் மழு என்றது திம்பிழம்பன்று; எறியாகிய படை என்பதை விளக்க. இடம் - இடப்பாகத்து. எனை உடையான் - என்னை அநாதியே ஆளாக உடையவன். விடையார் கொடி - இடபக்கொடி. இது இறைவனுக்குரிய அடையாளக்கொடி, இறைவன் தருமஸ்வரூபியாதலால் அறவடிவானகாளை அவன் கொடிக்கண்ணதாயிற்று.

2. ஈறாய் - உலகத்துயிர்களெல்லாம் தன்னிடத்து ஒடுங்கத் தான் ஒருவனே நிற்றலின் இயங்குவ நிற்பவான எல்லாவற்

வம்மினடி யீர்நாண்மல ரிட்டுத்தொழுதுய்ய
உம்மன்பினொ டெம்மன்புசெய் தீசன்னுறைகோயில்
மும்மென்றிசை முரல்வண்டுகள் கெண்டித்திசையெங்கும்
விம்மும்பொழில் சூழ்தண்வயல் வீழிம்மிழலையே. 3

---

றிற்கும் தான் இறுதியாய். முதல் ஒன்றாய் - இறுதியாக நிற்பவனே உலக காரணனாய் (முதலாய்) நிற்குந் தன்மையன் ஆதலின் ஒடுங்கிய உலகமெல்லாம் மீளத்தோன்றுதற்குக் காரணமான (முதற்)பொருள் தானொருவனேயாய். பெண் ஆண் இரண்டாய் என்பது இரு பெண் ஆண் (ஆய்) என நின்றது. குணம் மூன்றாய் - சத்துவ முதலிய குணங்கள் மூன்றாய். மாறா மறை நான்காய் - தம்முள் மாறுபடாத வேதங்கள் நான்குமாய். அவை இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பன. மாறா மறை - என்றும் ஒரு படித்தான வேதம் எனினுமாம். வருபூதம் அவை ஐந்தாய் - தத்தம் காரணமாகிய புலன்களிலிருந்து தோன்றுகின்ற பூதம் ஐந்தாய். ஆறு ஆர் சுவை - ஆறாக அமைந்த சுவை (ஆய்); அவை, அறுவகையான நாப்பொறி கவரும் உப்பு, உவர்ப்பு, கார்ப்பு, கைப்பு, புளிப்பு தித்திப்பு என்பன. ஏழ் ஓசை - சட்சம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், பஞ்சமம், நிஷாதம், தைவதம் என்ற ஓசைகள் ஏழு. குரல், துத்தம், கைக்கிளை, இழை, இளி, விளரி, தாரம் என்பன என்பது தமிழ்நூல் வழக்கு. எட்டுத்திசை - மாயாகாரியமான உலகத்தில் காணப்பெறும் எட்டுத்திசை. தானாய் - ஒன்றாய். வேறாய் - அவற்றின் வேறாய். உடனானான் - உடனாய் நிற்பவன். இறைவன் கண்ணும் ஒளியும், கதிரும் அருக்கனும், ஒளியும் சூடும்போல உயிர்களோடு கலந்திருக்கின்ற மூவகை நிலைகளை உணர்த்தியவாறு.

3. இது அடியார்களை அழைத்து அறிவித்தது. நாண் மலர் - அன்று அலர்ந்த புதுப்பூ. அடியீர் உம் அன்பினொடு மலரிட்டுத் தொழுதுய்ய வம்மின் எனக் கூட்டுக. அன்றி உம் அன்பினொடு எம்மன்பு செய்து இட்டுத் தொழுது உய்யவம்மின் என்றுமாம். செய்து செய்ய எனத்திரிக்க. மும்மென்பது ஒலிக்குறிப்பு. முரல் - ஒலிக்கின்ற. கெண்டி - மகரந்தங்களைக் கிளறி. வண்டு முரல் பொழில் சூழ் மிழலை எனவே புதுப்பூவிற்குக் குறைவில்லை; ஆதலால் உம்மன்பினொடு

பண்ணும்பத மேழும்பல வோசைத்தமிழவையும்
உண்ணின்றதொர் சுவையும்முறு தாளத்தொலிபலவும்
மண்ணும்புன லுயிரும்வரு காற்றுஞ்சுடர்மூன்றும்
விண்ணும்முழு தானானிடம் வீழிம்மிழலையே. 4

ஆயாதன சமயம்பல வறியாதவனெறியின்
றாயானவ னுயிர்கட்குமுன் றலையானவன்மறைமுத்
தீயானவன் சிவனெம்மிறை செல்வத்திருவாரூர்
மேயானவ னுறையும்மிடம் வீழிம்மிழலையே. 5

---

இட்டுத் தொழுவதே வேண்டப்படுவது என்பது குறிப்பு, எம்மன்பு செய்து என்றதற்கு எம்மன்பின் பயனாக எழுந்த திருப்பாடல்களைப் பாடிக்கொண்டே என்பது பொருளாம். பின்னர்த் திருக்கடைக் காப்பில் 'தமிழ்பத்தும் இசை வல்லார் சொலக்கேட்டார் வினைபோயிட வானடைவார்' என்று அருள் வாராதலின் இதுவே கருத்தாதல் துணியலாம்.

4. பண் - இசை. பதம் ஏழு - ஸ்வரஸ்தானங்கள் ஏழு. பதம் - தானம். பல ஓசைத்தமிழ் - வல்லோசை, மெல்லோசை, இடையோசை முதலிய வேறுபாடுடைய தமிழ். உள் நின்றது ஓர் சுவை-பண்ணைச் சுரத்தானங்களில் நின்று ஆலத்தி பண்ணி, பல ஓசை பொருந்தப் பாடுங்கால் உண்டாகின்ற உள்ளத்து உணர்வாகிய சுவை. உறுதாளத்தொலி - அங்ஙனம் சுவையை அனுபவிக்கும்போது உண்டாகின்ற சச்சபுடம் சாசபுடம் முதலான தாளஒத்துக்கள் பலவும். சுடர் மூன்றும் - சூரியன் சந்திரன் அக்கினி என்ற ஒளிப்பொருள் மூன்றும், இப்பகுதி இறைவனுடைய அட்டமூர்த்தி வடிவம் கூறுகிறது. உயிர் - இயமானனாகிய ஆன்மா.

5. ஆயாதன சமயம் பல அறியாதவன்-இறையுண்மையையும் இறையிலக்கணத்தையும், அளவையானும், அநுபவத்தானும் உள்ளவாறு ஆராயாதனவாகிய சித்தாந்த சைவம் ஒழிந்த ஏனைச்சமயங்களால் சிறப்பியல்பை அறியப் பெறாதவன். நெறி-இறைவனை அறிதற்கு ஏற்ற பல்வேறு சமயநிலைகள். உயிர்கட்கு முன் தலையானவன் - ஆன்மாக்கட்கு அநாதியே தலைமையாக அமைந்தவன். மறை முத்தீயானவன் - வேத வேள்விக்கேற்ற சிவாக்கினியாகிய முத்தீயானவன். ஆயாதன

கல்லானிழற் கீழாயிடர் காவாயெனவானோர்
எல்லாமொரு தேராயயன் மறைபூட்டிநின்றுய்ப்ப
வல்லாயெரி காற்றீர்க்கரி கோல்வாசுகிநாண்கல்
வில்லாலெயி லெய்தானிடம் வீழிம்மிழலையே. 6

கரத்தான்மலி சிரத்தான்கரி யுரித்தாயதொர்படத்தான்
புரத்தார்பொடி படத்தன்னடி பணிமூவர்கட்கோவா
வரத்தான்மிக வளித்தானிடம் வளர்புன்னைமுத்தரும்பி
விரைத்தாதுபொன் மணியீன்றணி வீழிம்மிழலையே. 7

---

என்பது முதல் தீயானவன் என்பதுவரை இறையிலக்கணம் கூறியது. சிவன் எனச் சிறப்பியல்பு கூறியது. எம்பிறை எனத் தம்மோடு உளதாகிய அநாதித் தொடர்பு கூறியது. செல்வத் திருவாரூர் மேயான் என்றது திருவாரூரின் தொன்மை நோக்கிக் கூறியது.

6. கல் ஆல் நிழற்கீழாய்- இறைவன் யோகியாய்க் கல்லால நிழலின்கீழ் அறநால்வர்க்கு உரைத்திருந்த காலத்து. வானோர் காவாய் என - அசுரர்களால் வருந்திய தேவர்கள் காவாய் காவாய் என்று வேண்டிக்கொள்ள; என்றது வேண்டுதல் வேண்டாமையற்ற சனகாதியர் யாதொரு துன்பமுமின்றி இருந்த காலத்தே வினைவயத்தான் வருந்தும் தேவர்கள் அசுரர் ஒறுத்தற்கு ஆற்றாது வருந்திக் காவாய் என வேண்டினர் என்பதை விளக்கியது காண்க. எல் ஆம் ஒரு தேர் - ஒளிப் பொருளாகிய சூரிய சந்திரர்களாகிய சக்கிரம் பூண்ட ஒரு தேர். அயன் - பிரமன், இங்கே பாகனுனன். மறை பூட்டி என்ற தால் வேதங்கள் குதிரைகளாயினமை வெளிப்படை. வல்லாய் எரி - விரைந்து பற்றும் நெருப்பு. காற்று ஈர்க்கு - காற்றாகிய இறகு. அரி கோல் - திருமாலாகிய அம்பு. கல் - மேருமலை.

7. சிரத்தான் மலி கரத்தான் என மாற்றிப், பிரமகபாலத் தான் நிறைந்த திருக்கரத்தையுடையவன் எனப் பொருள் காண்க. படம் - மேற்போர்வை, புரத் தார் பொடிபட - முப் புரங்களின் வரிசை பொடியாக. தன்னடிபணி மூவர்கட்கு - தம் திருவடியைப் பணிந்த தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுன் மாலி என்ற மூவர்கட்கும். ஓவா வரத்தான் மிக அளித்தான்- சுதர்மன், சுசீதி, சுபுத்தி எனப்பெயரீந்து வாயிற்காவலராகும்

முன்னிற்பவ ரில்லாமுர ணரக்கன்வடகயிலை
தன்னைப்பிடித் தெடுத்தான்முடி தடந்தோளிறவூன்றிப்
பின்னைப்பணிந் தேத்தப்பெரு வாள்பேரொடுங்கொடுத்த
மின்னிற்பொலி சடையானிடம் வீழிம்மிழலையே. 8

பண்டேழுல குண்டானவை கண்டானுமுன்னறியா
ஒண்டீயுரு வானானுறை கோயின்னிறைபொய்கை
வண்டாமரை மலர்மேன்மட வன்னந்நடைபயில
வெண்டாமரை செந்தாதுதிர் வீழிம்மிழலையே. 9

---

வரத்தால் மிக அருள் செய்தவன். புரத்தார் பொடிபட என்பதற்கு முப்புராதிகள் பொடியாயினர் எனப் பொருள் கொள்ளின் 'உய்ந்த மூவரில் இருவர் நின் திருக்கோயில் வாய்தல் காவலாளர் என்றேவி' என்பதனோடு மாறுகொள்ளும். அன்றியும் அதிகைப்புராணவரலாற்றொடும் முரணும். ஆதலால் புர தார் பொடிபட எனப் பிரித்தலே சால்புடைத்து. திரிபுரம் எரிந்தகாலத்துக் கமலாக்ஷன்முதலியோர் அழிந்திலர்என்பதைப் புரம் எரிந்த காலத்து இவர்கள் மூவரும் கைலாசத்தில் துவாரபாலகராகும் பதவியைக் கொடுக்கவேண்டும் என வேண்டிக் கொண்டார்கள் என்னும் தர்மசங்கிதைவசனமும் வலியுறுக்கும், புன்னை முத்துப்போலரும்பி, மலர்ந்து, பொன்தாதுக்களை ஈன்று, காய்த்துப் பச்சைமணிகளை யீன்று, அழகு செய்கின்ற மிழலை எனக்கூட்டிப் பொருள் கொள்க.

8. முன் நிற்பவர் இல்லா முரண் அரக்கன் - தன்னோடு எதிர்த்து நின்று பொருவார் யாரும் இல்லா வலிமைபெற்ற தசக்கிரீவன். இற - இற்றுறையும்படி. ஊன்றி - வலக்காற் பெருவிரல் நுனியை ஊன்றி. பெருவாள் - சந்திரகாசம் என்னும் வாள். பேர் - மலைக்கீழகப்பட்டு அழுதமையால் உண்டான இராவணன் என்னும் பெயர்; கீர்த்தியுமாம். இதனால் ஆன்மாக்கள் முனைப்புற்ற காலத்து மறக்கருணை காட்டித் தண்டித்து நற்புத்தி வரச்செய்து, 'நின்னலலது உறுதுணை வேறில்லை' என உணர்ந்து பணிந்தகாலத்து அருள் செய்தல் கூறப்பட்டது.

9. உலகுண்டான் - ஏழுலகையும் தன்வயிற்றில் அடக்கிய திருமால். அவைகண்டான் - அந்த உலகைப் படைத்த பிரமன்.

மசங்கற்சமண் மண்டைக்கையர் குண்டக்குணமிலிகள்
இசங்கும்பிறப் பறுத்தானிட மிருந்தேன்களித்திரைத்துப்
பசும்பொற்கிளி களிமஞ்ஞைக ளொளிகொண்டெழுபகலோன்
விசும்பைப்பொலி விக்கும்பொழில் வீழிம்மிழலையே. 10

வீழிம்மிழ லைம்மேவிய விகிர்தன்றனைவிரைசேர்
காழிந்நகர்க் கலைஞானசம் பந்தன்றமிழ்பத்தும்
யாழின்னிசை வல்லார்சொலக் கேட்டாரவரெல்லாம்
ஊழின்மலி வினைபோயிட வுயர்வானடைவாரே. 11

திருச்சிற்றம்பலம்.

---

*10. மசங்கல் - மயக்கம். மண்டை - பிச்சை யேற்கும் பனையோலைக்குடைப் பாத்திரம். குண்டர் - அறிவற்றவர். இசங்கும் - வினை வயத்தான் பொருந்திய. இருந்தேன் - பெரிய வண்டு; கரியவண்டுமாம். பசும் பொற்கிளி - பசுமை நிறமும் பொன்போலுஞ் செந்தாளும் உடைய கிளி. திருவீழிமிழலைப் பொழில் விண்ணளவும் ஓங்கி வளர்ந்து பொலிவு செய்யும் என்று உரைத்தருளியதால் இன்றும் அச்சிறப்பிற் குன்றாது ஒளிர்கின்றது..*

*11. ஊழின் மலி வினை - முறைமையானிறைந்த வினை; அதாவது இன்னதின்பின் இன்னது நுகர்ச்சிக்கு உரியது என நியதி தத்துவத்தான் வரையறுக்கப்பெற்ற வினை. இத்திருப் பதிகத்தை யாழிசை வல்லவர் பாடக்கேட்டுச் சிவபத்தியுடன் வழிபட்டவர் எல்லாரும் ஊழ்வினை ஒழியவும் வீட்டுலகம் எய்தவும் பெறுவர் என்றதால், தேவாரத் திருப்பதிகங்களை இசையுடன் பாடல் வேண்டும் என்பதும் அது பத்தியை விளைத்துப் பேரின்ப வீட்டை அருளும் என்பதும் புலனாகும். யாழின் இசை என்றும், யாழ் இன்னிசை என்றும் பிரிக்கலாம். ஊழின்மலி வினை போயிடல் - பாசநீக்கம். உயர்வானடைதல் - சிவப்பேறு.*

# திருமுதுகுன்றம்

***பதிகவரலாறு :***

*திருஎருக்கத்தம்புலியூரை வணங்கிப் பதிகம்பாடிப் புறப்பட்ட ஆளுடைய பிள்ளையார் இடையிலுள்ள தலங்கள் பலவற்றையும் வணங்கித் துதித்துத் திருமுதுகுன்றம் என்னும் விருத்தாசலத்தை அடைந்தார். போகின்ற வழியிலேயே முதுகுன்றநாதருடைய அருட்செயல்களும், ஆட்கொள்ளுந் திறனும், இயற்கை வள்மும், நதியின் செலவும் மனத்தைக் கவர அவற்றை அமைத்து 'மத்தாவரை நிறுவி' என்னும் பதிகத்தைத் தொடங்கி; 'முத்தாறுசூழ் முதுகுன்றடைவோம்' என அருளிச்செய்கின்றார்.*

**பண் - நட்டபாடை**

**பதிகம் :** **எண் 12**

*திருச்சிற்றம்பலம்*

மத்தாவரை நிறுவிக்கடல் கடைந்தவ்விடமுண்ட
தொத்தார்தரு மணிநீண்முடிச் சுடர்வண்ணனதிடமாம்
கொத்தார்மலர் குளிர்சந்தகி லொளிர்குங்குமங்கொண்டு
முத்தாறுவந் தடிவீழ்தரு முதுகுன்றடைவோமே. 1

தழையார்வட வியவீதனிற் றவமேபுரிசைவன்
இழையாரிடை மடவாளொடு மினிதாவுறைவிடமாம்
மழைவானிடை முழவவ்வெழில் வளைவாளுகிரெரிகண்
முழைவாளரி குமிறும்முயர் முதுகுன்றடைவோமே. 2

---

*1. வரை மத்தா நிறுவி - மந்தரமலையை மத்தாக நிறுத்தி. அவ்விடம் என்றது அத்தகைய ஆலகாலவிடம் எனச் சுட்டு, பெருமையுணர்த்தி நின்றது. தொத்து - கொத்து. மணிமுத்தாறு மலர், சந்தனம், குங்குமப்பூ முதலிய காணிக்கைகளைக் கொண்டுவந்து சமர்ப்பித்து அடிவணங்குகிறது என்பதாம்.*

*2. வடவிய வீதனில் - ஆலமரத்தினது அகன்ற நீழலில். பதுமாசனத்திலிருந்து தவஞ் செய்கின்ற சைவன் என்றது அநாதி சைவனாகிய சிவனை. இழையார் இடை - நூலிழையை ஒத்த இடை. மழை வானிடை முழவ - மேகம் வானத்தில்*

விளையாதநொர் பரிசில்வரு பசுபாசவேதனையொண்
டளையாயின தவிரவ்வரு டலைவன்னதுசார்பாம்
களையார்தரு கதிராயிர முடையவ்வவனோடு
முளைமாமதி தவழும்முயர் முதுகுன்றடைவோமே. 3

சுரர்மாதவர் தொகுகின்னர ரவரோதொலைவில்லா
நரரானபன் முனிவர்தொழ விருந்தானிட நலமார்
அரசார்வர வணிபொற்கல னவைகொண்டுபன்னாளும்
முரசார்வரு மணமொய்ம்புடை முதுகுன்றடைவோமே. 4

---

பிளிற. முழவம் பெயரடியாக முழவ என்ற வினையெச்சம் பிறந்தது. ஒலிக்க என்பது பொருளாம். எழில் வளை வாள் உகிர் - அழகிய வளைந்த ஒளிபொருந்திய நகத்தையும். எரி கண் - காந்துகின்ற கண்ணையும். முழை - மலைக்குகை. அரி - சிங்கம். சிங்கம் உறுமுதல் மழையொலியை யானையின் பிளிறல் என்று எண்ணி. மேருமலையின் வடபால் தனித்து யோகத்திருந்த இறைவன் முதுகுன்றில் உமையாளொடு போகியாக உறைகின்றான் என்றது.

3. விளையாதது ஒருபரிசில்வரும் பசுபாச வேதனை ஒண் தளை - மீண்டும் அங்குரியாதவாறு அவிந்ததாகிய ஒரு தன்மையில் வரும் பாசங்களாகின்ற துன்பத்தைத் தருகின்ற ஒள்ளிய கட்டு. பசுபாசம் - ஆன்மாக்களை அநாதியே பந்தித்து நிற்கும் ஆணவமலக் கட்டு எனப்பாசத்திற்கு அடையாளமாய் நின்றது. வேதனை - துன்பம் எனப் பொருள் கொண்டு அதன் காரணமாகிய தீவினை என்பாரும் உளர். அப்போது பாசவேதனை உம்மைத்தொகை. பாசமும் வேதனையும் என்பது பொருள். வேதனைக்கு விளையாமையாவது பிராரத்தத்தை நுகருங்கால் மேல்வினைக்கு வித்தாகாவண்ணம் முனைப்பின்றி நுகர்தல். சார்பு - இடம். களை - தேஜஸ். ஆயிரம் பன்மை குறித்து நின்றது. கதிர் ஆயிரம் உடையவன் - சூரியன். சகத்திரகிரணன் என்னும் பெயருண்மையும் அறிக. செங்கதிரோடு முளைமாமதி தவழும் முதுகுன்று என்றமையால் பிள்ளையார் கண்ட காலம் வளர்பிறைக் காலத்து மூன்றும் நாளாகலாம் என்று ஊகிக்கலாம்.

4 தொகு கின்னரர் - எப்பொழுதும் கூட்டமாகவே இருந்து கின்னரி பயிலும் தேவகூட்டத்தார்.

அறையார்கழ லந்தன்றனை யயின்மூவிலையழகார்
கறையார்நெடு வேலின்மிசை யேற்றானிடங்கருதில்
முறையாயின பலசொல்லியொண் மலர்சாந்தவைகொண்டு
முறையான்மிகு முனிவர்தொழு முதுகுன்றடைவோமே. 5

ஏவார்சிலை யெயினன்னுரு வாகியெழில்விசயற்
கோவாதவின் னருள்செய்தவெம் மொருவற்கிடமுலகில்
சாவாதவர் பிறவாதவர் தவமேமிகவுடையார்
மூவாதபன் முனிவர்தொழு முதுகுன்றடைவோமே. 6

---

*5. இப்பாட்டின் முன்னடியிரண்டிலும், அந்தகனை முத்தலைச் சூலத்தின் உச்சியில் தாங்கிய வரலாறு குறிப்பிடப்படுகிறது. அந்தன் - அந்தகாசுரன். அயில் - கூர்மை. வேலுக்கு அழகு இவ்வண்ணம் தண்டிக்கத் தக்கவர்களைத் தண்டித்தல். முனிவர் மறையாயின சொல்லி, மலர் சாந்துகொண்டு முறையான் தொழு முதுகுன்று எனக் கூட்டுக.*

*அந்தகாசுரன் தன் தவமகிமையால் தேவர்களை வருத்தினான். தேவர்கள் பெண்வடிவந்தாங்கி மறைந்து வாழ்ந்தனர். பின் அவர்கள் வேண்டுகோட்கிரங்கிச் சிவபெருமான் பைரவருக்கு ஆணையிட அவர் தனது முத்தலைச் சூலத்திற் குத்திக் கொணர்ந்தார். அவன் சிவனைக் கண்டதும் உண்மை ஞானம் கைவரப் பெற்றான். கணபதியாம் தேவியை அளித்தார் என்பது வரலாறு. (கந்த புராணம்)*

*6. இதில் இறைவன் வேடவுருத்தாங்கிப் பன்றியையை எய்து வீழ்த்தி அருச்சுனன் தவங்கண்டு வந்து பாசுபதம் அருளிய வரலாறு குறிக்கப்பெறுகின்றது. ஏ - அம்பு. சிலை - வில். எயினன் - வேடன். விசயற்கு - அருச்சுனர்க்கு. ஓவாத - கெடாத. சாவாதவர்களும், மீட்டும் பிறப்பெய்தாதவர்களும், ஆகத் தவமிக்க முனிவர்கள்; என்றும் இளமை நீங்காத முனிவர் தொழும் முதுகுன்றம் என்றவாறு.*

தழல்சேர்தரு திருமேனியர் சசிசேர்சடைமுடியர்
மழமால்விடை மிகவேறிய மறையோனுறைகோயில்
விழவோடொலி மிகுமங்கையர் தகுமாடகசாலை
முழவோடிசை நடமுன்செயு முதுகுன்றடைவோமே. 7

செதுவாய்மைகள் கருதிவ்வரை யெடுத்ததிறலரக்கன்
கதுவாய்கள்பத் தலறீயிடக் கண்டானுறைகோயில்
மதுவாயசெங் காந்தண்மலர் நிறையக்குறைவில்லா
முதுவேய்கண்முத் துதிரும்பொழின் முதுகுன்றடைவோமே. 8

இயலாடிய பிரமன்னரி யிருவர்க்கறிவரிய
செயலாடிய தீயாருரு வாகியெழுசெல்வன்
புயலாடுவண் பொழில்சூழ்புனற் படப்பைத்தடத்தருகே
முயலோடவெண் கயல்பாய்தரு முதுகுன்றடைவோமே. 9

---

7. தழல் சேர்தரு திருமேனியர் - தழலை ஒத்த செந்நிற மேனியை யுடையவர். 'தழல்வண்ண வண்ணர்' என்றதும் அது நோக்கி. சசி - சந்திரன். மழ மால் விடை - இளைய பெரிய இடபம். ஆடகசாலை - நடனசாலை.

8. செதுவாய்மைகள் கருதி-பொல்லாச் சொல்லைஎண்ணி. செதுவாய்மை - பொல்லாமொழி. 'செதுமொழிந்த சீத்தசெவி' என்பதுபோல நின்றது. கதுவாய்கள் - வடுவுள்ளவாய் 'கது வாய் எஃகின்' என்னும் பதிற்றுப்பத்தடி ஒப்பு நோக்குக. மலைப்பிளப்பை ஒத்த வாயுமாம். மதுவாய - தேனை மலரின் முகத்தே உடைய, செங்காந்தள்பூக்களில் நிறைய மூங்கில்கள் முத்தைச் சொரிகின்றன என்பது. செங்காந்தள் கையேந்தி ஏற்பாரையும், வேய் வரையாது கொடுப்பாரையும் ஒத்திருக் கின்றன என்று கொள்ளவைத்தவாறு.

9. இயலாடிய பிரமன், இயலாடிய அரி என அடை மொழியை இருவர்க்கும் கூட்டுக. இயல் - தற்பெருமை. செயல் ஆடிய - செயலால் வெற்றி கொண்ட. புயல் - மேகம். புனற்படப்பை - நீர்பரந்த இடம்.

அருகரொடு புத்தரவ ரறியாவரன்மலையான்
மருகன்வரு மிடபக்கொடி யுடையானிடமலரார்
கருகுகுழன் மடவார்கடி குறிஞ்சியதுபாடி
முருகன்னது பெருமைபகர் முதுகுன்றடைவோமே. 10

முகில்சேர்தரு முதுகுன்றுடை யானைம்மிகுதொல்சீர்ப்
புகலிந்நகர் மறைஞானசம் பந்தன்னுரைசெய்த
நிகரில்லன தமிழ்மாலைக ளிசையோடிவைபத்தும்
பகரும்மடி யவர்கட்கிடர் பாவம்மடையாவே. 11

திருச்சிற்றம்பலம்.

---

*10. புறச்சமயிகளால் அறியப்படாமை அறிவித்தவாறு. மலையான் மருகன் - இமவானுக்கு மருமகன். வருமிடபம் என்ற சொற்றொடர் இவர் பதிகங்களிற் பலவிடத்தும் வரல் கண்டு இன்புறற்பாலர் முதற்காட்சியதுவாதலின். கருகு குழல்-ஒருகாலைக்கொருகால் கருப்பு ஏறிக்கொண்டே போகின்ற குழல். கடிகுறிஞ்சி - தெய்வத்தன்மை பொருந்திய குறிஞ்சிப் பண், இப்பண்ணே முருகனது பெருமையைக் கூறுதற்கு ஏற்ற தென்பது.*

*11. நிகரில்லன தமிழ்மாலை என்றார்; ஒவ்வொரு திருப் பாடலின் முதலிரண்டடிக் கண்ணும் இறைவன் ஆன்மாக்களின் மலத்தைநீக்கி ஆட்கொள்ளும் முறைமையும், உபதேச குரு மூர்த்தியாய் வந்தருளும் சிறப்பும், தானே முதல் என உணர்த்தும் தகுதியும் உணர்த்திப் பின்னிரண்டடிகளிலும் இயற்கையழகுகளின் வழியாக இறைவளத்தையுணர்த்துதலின். இடர் - பாவம்.*

# திருவியலூர்

*பதிகவரலாறு :*

*திருமங்கலக்குடியை வணங்கிப் போந்த பிள்ளையார், திருவியலூருக் கெழுந்தருளி இறைவனை வணங்கிக் 'குரவங் கமழ்' என்னும் இன்னிசை கூடும் இத்தமிழ்ப்பதிகத்தொடை சாத்த, இறைவன் அவருக்கு அருளார் திருவேடங்காட்டியருளி ஞர். பிள்ளையார் வணங்கி உய்ந்தார். இதனைப் பிள்ளையார் இப்பதிக ஐந்தாம் பாட்டில், 'கண்ணார்தரும் உருவாகிய கடவுள்' என்றும், ஒன்பதாம் பாட்டில், 'உருவம் விளம்பட்டு அருள் செய்தான்' என்றும் குறிப்பித்தருளுகிறார்கள்.*

**பண் - நட்டபாடை**

**பதிகம் :** **எண் 13**

*திருச்சிற்றம்பலம்*

குரவங்கமழ் நறுமென்குழ லரிவையவள்வெருவப்
பொருவெங்கரி படவென்றத னுரிவையுடலணிவோன்
அரவும்மலை புனலும்மிள மதியும்நகு தலையும்
விரவுஞ்சடை யடிகட்கிடம் விரிநீர்வியலூரே. 1

ஏரார்தரு மொருவன்பல வுருவன்னிலை யானான்
ஆரார்தரு சடையன்அன லுருவன்புரிவுடையான்
மாரார்புர மெரியச்சிலை வளைவித்தவன்மடவாள்
வீரார்தர நின்றானிடம் விரிநீர்வியலூரே. 2

---

*1. குரவம் - குராமலர். அரிவை என்றது உமாதேவியை. இவருக்கு உமையம்மை வெருவ யானை உரித்துப் போர்த்த தாகச் சொல்லுதல் வழக்கம். அரவு முதலியன விரவிய சடை யென்பது தம்முள் மாறுபட்ட, பல பொருள்களும் பகை நீங்கி வாழ்தற்கிடமாகிய சடை என்றவாறு.*

*2. ஆர்தருதல் - ஊர்தல். பல உருவன் - அடியார்கள் வேண்டிய வேண்டியாங்கு கொள்ளும் வடிவங்களையுடையவன். அதாவது எம்போலியர்க்கு வினைவாய்ப்பால் கிடைக்கும் உடல்*

செம்மென்சடை யவைதாழ்வுற மடவார்மனைதோறும்
பெய்ம்மின்பலி யெனநின்றிசை பகர்வாரவரிடமாம்
உம்மென்றெழு மருவித்திரள் வரைபற்றிடவுரைமேல்
விம்மும்பொழில் கெழுவும்வயல் விரிநீர்வியலூரே. 3

அடைவாகிய வடியார்தொழ வலரோன்றலையதனில்
மடவாரிடு பலிவந்துண லுடையானவனிடமாம்
கடையார்தர வகிலார்கழை முத்தம்நிரைசிந்தி
மிடையார்பொழில் புடைசூழ்தரு விரிநீர்வியலூரே. 4

எண்ணார்தரு பயனாயய னவனாய்மிகுகலையாய்ப்
பண்ணார்தரு மறையாயுயர் பொருளாயிறையவனாய்க்
கண்ணார்தரு முருவாகிய கடவுள்ளிடமெனலாம்
விண்ணோரொடு மண்ணோர்தொழும் விரிநீர்வியலூரே. 5

---

*போல்வதன்று, அவன் வடிவென்பது. நிலையானன் - என்றும் அழியாமல் ஏனைய பொருள்கள் தத்தம் கால எல்லை வரை நிலைத்து நிற்க ஏதுவானவன். புரிவுடையான் - அன்புடையான். ஆன்மாக்களிடத்துக் காரணமின்றியே செலுத்தும் அன்புடையவன் என்பது கருத்து. மாறூர் - பகைவர். வீறு - பிறிதொன்றற்கில்லாத பெருமை.*

*3. செம்மென்சடை - செம்மையாகிய மெல்லிய சடை. மடவார் - கர்மபிரமவாதிகளான தாருகாவனத்து முனிவர் பெண்கள். பலி - பிச்சை. உம் - ஒலிக்குறிப்பு. உரை - புகழ்.*

*4. அடைவாகிய அடியார் - தத்தம் நெறியினின்று வழிபடுமடியவர்கள். அடைவு - முறைமை. அலரோன் - பிரமன். கடையார் - பள்ளர்கள். அகில்ஆர் கழை எனப்பிரித்து அகிலும் நிறைந்த மூங்கிலும் எனப் பொருள் காண்க.*

*5. எண் - தியானம். எண்ணார்தருபயன் - தியானப்பயன். அயனவனாய் - பிரமனாய் என்றது. பவமலி நினைவொடு பதுமனன் மலரது மேவிய நிலையை. மிகுகலையாய் - ஒன்றினொன்று மிகுந்திருக்கின்ற கலைப் பொருள்களாய். பண் - சந்தஸ். கண்ணார் தருஉரு-கண் நிறைந்த வடிவம். பேரழகன் என்றபடி.*

வசைவிற்கொடு வருவேடுவ னவனுய்நிலையறிவான்
திசையுற்றவர் காணச்செரு மலைவானிலையவனை
அசையப்பொரு தசையாவண மவனுக்குயர்படைகள்
விசையற்கருள் செய்தானிடம் விரிநீர்வியலூரே. 6

மானுரர வுடையானிர வுடையான்பகனட்டம்
ஊனுர்தரு முயிரானுயர் விசையான்விளைபொருள்கள்
தானுகிய தலைவன்னென நினைவாரவரிடமாம்
மேனுடிய விண்ணோர்தொழும் விரிநீர்வியலூரே. 7

பொருவாரெனக் கெதிராரெனப் பொருப்பையெடுத்தான்றன்
கருமால்வரை கரந்தோளுரங் கதிர்நீண்முடிநெரிந்து
சிரமாயின கதறச்செறி கழல்சேர்திருவடியின்
விரலாலடர் வித்தானிடம் விரிநீர்வியலூரே. 8

---

*6. வசைவில் - வளைந்தவில். நிலையறிவான் - அருச்சுன னுடைய உண்மையான தவநிலையை உணர்த்தும்படி. செரு - போர். நிலையவன்-ஒரு காலில் நின்று தவம் செய்யும் விசயன்.*

*7. மான் - மான் தோல். இரவுடையான் - இரத்தற் றெழில் உடையான். உடையான் என்பது நடுநிலைத்தீவகமாக பகல் நட்டம் உடையான் எனப்பின்னதனோடும் சென்றியையும். ஊனுர் தரும் உயிரான் - உடம்பினுள் எங்கும் வியாபகமாய் இருக்கும் உயிர்க்குயிராய் இருப்பவன். உயர்வு இசையான் - பசுபோத முனைப்பால் உயர்வாக எண்ணுகின்ற உயிர்களிடத்துப் பொருள்கள் எல்லாமாய் இருக்கின்ற இறைவன். மேல்நாடிய விண்ணோர் தொழும் என்றது விண்ணோர்கள் தாம் செய்த புண்ணியப்பயனை நுகர்தலிலேயே மயங்கி நிற்பவராதலின், மேல்நாடற்குரிய சிறப்பு என்றும் இல்லாதவர் என்று குறிப்பித்தவாறு.*

*8. எனக்கு எதிர் பொருவார்ஆர் என, எனக் கூட்டுக. பொருப்பை எடுத்தான் - இராவணன். கருமால்வரை - வலிய பெரிய மலையை ஒத்த. முடிநெரிந்து - கிரீடம் நெரிதலால். சிரமாயின கதற - சிரங்கள் பத்தும் கதற. அடர்ந்தான் என்னுது அடர்வித்தான் என்றது அவனுடைய ஆணவம் குறைந்து பரிபாகம் ஏற்படும்வரை வருத்தி என்ற நயம்தோன்றநின்றது*

வளம்பட்டலர் மலர்மேலயன் மாலும்மொருவகையால்
அளம்பட்டறி வொண்ணவ்வகை யழலாகியவண்ணல்
உளம்பட்டெழு தழற்றூணத னடுவேயொருவுருவம்
விளம்பட்டருள் செய்தானிடம் விரிநீர்வியலூரே. 9

தடுக்காலுடன் மறைப்பாரவர் தவர்சீவரமூடிப்
பிடக்கேயுரை செய்வாரொடு பேணார்நமர்பெரியோர்
கடற்சேர்தரு விடமுண்டமு தமரர்க்கருள்செய்த
விடைச்சேர்தரு கொடியானிடம் விரிநீர்வியலூரே. 10

விளங்கும்பிறை சடைமேலுடை விகிர்தன்வியலூரைத்
தளங்கொண்டதொர் புகலித்தகு தமிழ்ஞானசம்பந்தன்
துளங்கிற்றமிழ் பரவித்தொழு மடியாரவரென்றும்
விளங்கும்புக ழதனோடுயர் விண்ணும்முடையாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*9. வளம்பட்டு அலர் மலர் - திருமாலின் உந்தியினின்றும் தோன்றியது, ஒன்றுதலால் வளமான தாமரை மலர். அளம் பட்டு - வருந்தி. உளம் பட்டு - மனம் உடைய; பட என்பது பட்டெனத் திரிந்து நின்றது எதுகைநோக்கி. விளம்பட்டு - வெளிப்பட்டு. விள்ளப்பட்டு என்பது எதுகை நோக்கி விளப்பட்டு ஆகி அது மெலிந்து விளம்பட்டு என நின்றது. விளம் - அகந்தை, செருக்கொழிய என்றுமாம்.*

*10. தடுக்கு - ஓலைப்பாய். சீவரம் - மரவுரி. பிடக்கு - பிடகம் என்னும் சைன நூல். நமர்பெரியோர் - நம்மவர்களாகிய பெரியோர். கடல் - பாற்கடல், விடமுண்டு அமுது அமரர்க்கு அருள்செய்த - ஆலகால விடத்தைத் தாம் அருந்தி, இனிய அமுதத்தைத் தேவர்க்கு அளித்த கருணையைக் காட்டியவாறு.*

*11. விகிர்தன் - சதுரப் பாடுடையவன். தளம் - இடம். துளங்குஇல் தமிழ் - நடுக்கமில்லாத தமிழ்.*

# திருக்கொடுங்குன்றம்

**பதிகவரலாறு :**

பாண்டியநாடு செல்லத்திருவுளம் பற்றிய ஆளுடைய பிள்ளையார், நதிகள் பலவற்றையுந் தாண்டி, காட்டுவழிகளை யுங் கடந்து, திருக்கொடுங் குன்றத்தை அடைந்தார்கள். அங்கு எழுந்தருளியுள்ள கொழும்பவளச் செழுங்குன்றை வணங்கி 'வானிற் பொலி' என்னும் இப்பதிகத்தை யருளிச் செய்தார்கள்.

பண் - நட்டபாடை

**பதிகம்** **எண் 14**

திருச்சிற்றம்பலம்

வானிற்பொலி வெய்தும்மழை மேகங்கிழித்தோடிக்
கூனற்பிறை சேருங்குளிர் சாரற்கொடுங்குன்றம்
ஆனிற்பொலி யைந்தும்அமர்ந் தாடியுலகேத்தத்
தேனிற்பொலி மொழியாளொடு மேயான்றிருநகரே. 1

மயில்புல்குதண் பெடையோடுட லுடும்வளர்சாரல்
குயிலின்னிசை பாடுங்குளிர் சோலைக்கொடுங்குன்றம்
அயில்வேன்மலி நெடுவெஞ்சுட ரனலேந்திநின்றாடி
எயில்முன்பட வெய்தானவன் மேயவ்வெழினகரே. 2

---

1. கூனல்பிறை மேகங்கிழித்து ஓடிச்சேருங் கொடுங் குன்றம் எனக்கூட்டுக. மழைமேகம் - சூல்முற்றி மழை பொழியும் மேகம். தேனில் பொலி மொழியாள் - குயில் அமுத நாயகி. இளம்பிறை கனத்த மேக உடலத்தைக் கிழித்துச் சென்று சேர்தற்கிடமாகிய குளிர்சாரல் குன்று என்ற மையால், ஆன்மாக்கள் அநாதியான ஆணவமல படலத்தைக் கிழித்துச் சென்று எய்தி, திருவடி நிழலாகிய தண்ணிய இடத்தைச் சாரலாம் என்பது குறித்தவாறு.

2. புல்கு - தழுவிய, தண்பெடை என்றது மயிலுக்குள்ள கற்பின் சிறப்புக்கருதி. குயில் இன்னிசைபாடும் சாரல், மயில் தண்பெடையோடு ஆடும் சாரல் என்றது, தன்வசமற்றுப் பாடியும் ஆடியும் செல்லும் அன்பர்க்குக் குளிருஞ்சாரல் கொடுங்குன்றம் என்ற கருத்துத் தொனித்தல் காண்க.

மிளிரும்மணி பைம்பொன்னொடு விரைமாமலருந்திக்
குளிரும்புனல் பாயுங்குளிர் சாரற்கொடுங்குன்றம்
கிளர்கங்கையொ டிளவெண்மதி கெழுவுஞ்சடைதன்மேல்
வளர்கொன்றையு மதமத்தமும் வைத்தான்வள நகரே. 3

பருமாமத கரியோடரி யிழியும்விரிசாரல்
குருமாமணி பொன்னோடிழி யருவிக்கொடுங்குன்றம்
பொருமாவெயில் வரைவிற்றரு கணையிற்பொடிசெய்த
பெருமானவ னுமையாளொடு மேவும்பெருநகரே 4

மேகத்திடி குரல்வந்தெழ வெருவிவ்வரையிழியும்
கூகைக்குல மோடித்திரி சாரற்கொடுங்குன்றம்
நாகத்தொடு மிளவெண்பிறை சூடிந்நலமங்கை
பாகத்தவ னிமையோர்தொழ மேவும்பழநகரே. 5

கைம்மாமத கரியின்னின மிடியின்குரலதிரக்
கொய்ம்மாமலர்ச் சோலைபுக மண்டுங்கொடுங்குன்றம்
அம்மானென வுள்கித்தொழு வார்கட்கருள்செய்யும்
பெம்மானவ னிமையோர்தொழ மேவும்பெருநகரே. 6

---

3. கிளர்கங்கை - பொங்கும் கங்காநதி. மதமத்தம் - மதத்தை யூட்டும் ஊமத்தம் பூ.

4. கரி - யானை. அரி - சிங்கம். இழியும் - இறங்குகின்ற சாரல். எனவே பகைகொண்ட வலிவுள்ள யானையும் சிங்கமுமாகிய இவ்விரண்டின் வலிமை யடங்க அருவிகிழித்து வருவது போல, கொடுங்குன்றச்சாரலை யடையின் தம்முள் மாறுபட்ட ஆணவக்களிறும், ஐம்பொறிகளாகிய அரிகளும் தன்வலிமை யற்றுக் கருணையருவியின் வழியே இழுக்கப்பட்டு அமிழ்த்தப் படும் என்பது அறிவித்தவாறும்.

5. கூகைக்குலம் - கோட்டான்களின் கூட்டம். கூகைகள் இருள்வாழ்க்கையுடையன. அவைகள் மேக இடிக்குரல்கேட்டு அஞ்சி மலையை விட்டிறங்கிப் புகலிடம் காணாது திரிகின்றன என்றது, அஞ்ஞானமாகிய வாழ்க்கையையுடைய ஆன்மாக்கள் கருணைமழை பொழியும் இறைவனது மறக்கருணை காட்டும் மொழியைக்கேட்டு மலையை அணுகமுடியாதே அலைவர் என்று குறிப்பித்தவாறு. நல மங்கை - அழகிய உமாதேவி.

6. கைம்மா - யானை. வெளிப்படைமொழி. யானை, இடியோசையைக்கேட்டுச் சோலைகளிற் புகுகின்றன. இது ' நெறி

மரவத்தொடு மணமாதவி மௌவல்லதுவிண்ட
குரவத்தொடு விரவும்பொழில் சூழ்தண்கொடுங்குன்றம்
அரவத்தொடு மிளவெண்பிறை விரவும்மலர்க்கொன்றை
நிரவச்சடை முடிமேலுடன் வைத்தானெடுநகரே. 7

முட்டாமுது கரியின்னின முதுவேய்களைமுனிந்து
குட்டாச்சுனை யவைமண்டிநின் ருடுங்கொடுங்குன்றம்
ஒட்டாவரக் கன்றன்முடி யொருபஃதவையுடனே
பிட்டானவ னுமையாளொடு மேவும்பெருநகரே. 8

அறையும்மரி குரலோசையை யஞ்சியடுமானை
குறையும்மன மாகிம்முழை வைகுங்கொடுங்குன்றம்
மறையும்மவை யுடையானென நெடியானெனவிவர்கள்
இறையும்மறி வொண்ணாதவன் மேயவ்வெழினகரே. 9

---

நில்லார் தீயோசைகேட்டு அஞ்சிஓடித் தாணிழல் செல்லும் அன்பரை நினைவூட்டும் நிகழ்ச்சி. அம்மான் - தலைவன். உள்கி - தியானித்து.

7. மரவம் - கடம்பு. மாதவி - குருக்கத்தி. மௌவல் முல்லை. நிரவ - நிரம்ப. ஒன்ற என்றுமாம்.

8. முட்டா - தடையில்லாத. முதுவேய்கள் - முதிர்ந்த மூங்கில்கள். யானைகள் மூங்கிலை முறித்து வைத்துக்கொண்டு சுனைகளில் ஆடுகின்றன. குட்டாச்சுனை - ஆழமாக்கப்படாத சுனை. அதாவது தானே ஆழமானசுனை என்பதாம். குட்டம் - ஆழம். குட்டா - ஆழமாக்கப்படாத. ஒட்டா - பொருந்தாத. பிட்டான் - இரண்டாக ஒடித்தான்.

9. அறையும் - முன்கால்களால் அறைந்துகொல்லும். அடும் ஆனை-கொல்லும் தன்மைவாய்ந்த மதயானை. குறையும் மனமாகி - வன்மைகுறைந்த மனத்தை யுடையவராகி. முழை - குகை. மறையும் அவை யுடையான் - வேதங்களை யுடையவனாய பிரமன். நெடியான் - திருமால் என்றது. இறையும் - சிறிதும்

மத்தக்களி றுளிவ்வர வஞ்சிம்மலைதன்னைக்
குத்திப்பெரு முழைதன்னிடை வைகுங்கொடுங்குன்றம்
புத்தரொடு பொல்லாமனச் சமணர்புறங்கூறப்
பத்தர்க்கருள் செய்தானவன் மேயபழநகரே. 10

கூனற்பிறை சடைமேன்மிக வுடையான்கொடுங்குன்றைக்
கானற்கழு மலமாநகர் தலைவன்னலகவுணி
ஞானத்துயர் சம்பந்தன நலங்கொடமிழ்வல்லார்
ஊனத்தொடு துயர்தீர்ந்துல கேத்தும்மெழிலோரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10. யானை ஆளிவர அஞ்சி, மலையைக் குத்திக்கொண்டு குகையில் தங்குகின்றன என்பதாம்.*

*11. கானல் - கடற்கரைச்சோலை. தலைவன் நல்ல கவுணி- தலைவனாகிய நல்ல கவுண்டின்ய கோத்திரத்துண்டானவன் ஊனம் - குறைபாடு. எழில் - எழுச்சி.*

# திருநெய்த்தானம்

***பதிகவரலாறு :***

*பெரும்புலியூர் முதலிய தலங்களை வணங்கிப் பிள்ளையார் விற்றிருக்குங்காலத்தில் மேற்குத் திசைத் தலங்களையும் வணங்கத் திருவுள்ளங் கொண்டு விடைபெற்றுத் திருவருட் குறிப்பின் வழியே செல்லுகின்றார்கள். திருநெய்த்தானத்தை யடைந்தார்கள். மனப்பொருந்த வணங்கினார்கள். 'மையாடிய கண்டன்' என்னும் இப்பதிகத்தைப் பாடினார்கள். இதில் 'நெய்யாடிய பெருமானுடன் நெய்த்தானம் என்னுங்கள்; செல்வன் அடி, சிவகதி சேரலாம்' என்று ஆணைவழங்கு கிறார்கள்.*

**பண் - நட்டபாடை**

**பதிகம் :** **எண் 15**

*திருச்சிற்றம்பலம்*

மையாடிய கண்டன்மலை மகள்பாகமதுடையான்
கையாடிய கேடில்கரி யுரிமூடியவொருவன்
செய்யாடிய குவளைம்மலர் நயனத்தவளோடும்
நெய்யாடிய பெருமானிடம் நெய்த்தானமெனீரே. 1

பறையும்பழி பாவம்படு துயரம்பலதீரும்
பிறையும்புன லரவும்படு சடையெம்பெருமானூர்
அறையும்புனல் வருகாவிரி யலைசேர்வடகரைமேல்
நிறையும்புனை மடவார்பயி னெய்த்தானமெனீரே. 2

---

*1. மையாடிய கண்டன் - விஷம்பொருந்திய கழுத்தை யுடையவன். கையாடிய கரி - கையோடு கூடிய யானை. கேடில்கரி என்றது இறைவன் உரித்துப் போர்த்ததால் நிலைத்த புகழ்கொண்டமையின். செய் - வயல். நெய்யாடிய பெருமான் என்பது இத்தலத்து இறைவன் திருநாமம். நெய்த்தானம் எனத் தலப்பெயரைச் சொல்லுங்கள் போதும் என்கின்றார்கள்.*

*2. பறையும் - கழியும். அறையும் - ஒலிக்கும். நிறையும் புனைமடவார் - மனத்தைக் கற்பு நெறிக்கண் நிறுத்துவதாகிய நிறைக்குணத்தால் தம்மை ஒப்பனை செய்த மடவார்.*

பேயாயின பாடப்பெரு நடமாடியபெருமான்
வேயாயின தோளிக்கொரு பாகம்மிகவுடையான்
தாயாகிய வுலகங்களை நிலைபேறுசெய்தலைவன்
நேயாடிய பெருமானிட நெய்த்தானமெனீரே. 3

சுடுநீறணி யண்ணல்சுடர் சூலம்மனலேந்தி
நடுநள்ளிரு ணடமாடிய நம்பன்னுறையிடமாம்
கடுவாளிள வரவாடுமிழ் கடனஞ்சமதுண்டான்
நெடுவாளைகள் குதிகொள்ளுயர் நெய்த்தானமெனீரே. 4

நுகராரமொ டேலம்மணி செம்பொன்னுரையுந்திப்
பகராவரு புனல்காவிரி பரவிப்பணிந்தேத்தும்
நிகரான்மண லிடுதண்கரை நிகழ்வாயநெய்த்தான
நகரானடி யேத்தந்நமை நடலையடையாவே. 5

விடையார்கொடி யுடையவ்வணல் வீந்தார்வெளையெலும்பும்
உடையார்நறு மாலைசடை யுடையாரவர்மேய
புடையேபுனல் பாயும்வயல் பொழில்சூழ்ந்த நெய்த்தானம்
அடையாதவ ரென்றும்அம ருலகம்அடையாரே. 6

---

3. பெருநடம் - மகாப்பிரளய காலத்துச் செய்யப்பெறும் மகாநடனம். வேய்-மூங்கில். அவ்வுலகங்களைத்தாயாகி நிலைபேறு செய்த தலைவன் எனக்கூட்டுக. நெய்யாடிய என்பது எதுகை நோக்கி நேயாடிய என்றாயிற்று. நே - அன்பு. அன்பே அபிடேகமாதல் ஞானப்பூசையிலுண்டு.

4. சுடுநீறு - சுட்டநீறாகிய விபூதி. நடுநள்ளிருள் - அர்த்தயாமம். நடுநள் - ஒருபொருட் பன்மொழி. நள் - செறிவுமாம். நம்பன் - நம்பப்படத்தக்கவன், விருப்பிற்குரியன். கடு வாள் இள அரவு ஆடு உமிழ் நஞ்சு - கொடிய ஒளிபொருந்திய இளைய வாசுகியாகிய பாம்பு ஆடி உமிழ்ந்த நஞ்சம்.

5. நுகர் ஆரம் - நுகரத்தக்க பொருளாகிய சந்தனம். பகராவரும் - விலைகூறி வருகின்ற. நிகரான் மணல் - ஒருவிதமான மணல். நடலை - துன்பம்.

6. உடைய அண்ணல், உடையவ் வணல் என விரித்தல் தொகுத்தல் விகாரம் வந்தன சந்தம் நோக்கி. வீந்தார்-இறந்த

நிழலார்வயல் கமழ்சோலைக ணிறைகின்றநெய்த்தானத்
தழலானவ னனலங்கையி லேந்தியழகாய
கழலானடி நாளுங்கழ லாதேவிடலின்றித்
தொழலாரவர் நாளுந்துய ரின்றித்தொழுவாரே. 7

அறையார்கட லிலங்கைக்கிறை யணிசேர்கயிலாயம்
இறையாரமு னெடுத்தானிரு பதுதோளிறவூன்றி
நிறையார்புன னெய்த்தானனன் னிகழ்சேவடிபரவக்
கறையார்கதிர் வாளீந்தவர் கழலேத்துதல்கதியே. 8

கோலம்முடி நெடுமாலொடு கொய்தாமரையானும்
சீலம்மறி வரிதாயொளி திகழ்வாயநெய்த்தானம்
காலம்பெற மலர்நீரவை தூவித்தொழுதேத்தும்
ஞாலம்புக ழடியாருட லுறுநோய்நலியாவே. 9

---

வர்களாகிய பிரமவிஷ்ணுக்களது. வெளே; வெள்ளை என்பதன் தொகுத்தல். நெய்த்தானம் அடையாதவர் அமருலகும் அடையார் என எதிர்மறைமுகத்தால் பயன் கூறியவாறு. அமருலகம், தேவருலகம் என்பாரும்உளர். விரும்பியதலமாகியவீடென்பதே பொருந்துவதாம்; அமரர் உலகு என்னுது அமருலகென்றே இருத்தலின்.

7. கழலாதே - நீங்காதே. விடல் இன்றி - இடைவிடாமல். தொழலார் அவர் - தொழுதலையுடைய அடியார்கள்.

8. அறை - ஓசை. இறை ஆர - மணிக்கட்டுப்பொருந்த. நெய்த்தானனன் - அன் தவிர்வழி வந்த சாரியை; நெய்த்தானன் - நெய்த்தானத்தவனாகிய இறைவன். கறையார் கதிர் வாள் ஈந்த - சந்திரன் பெயரைப் பொருந்திய வாளைத் தந்த என்றது சந்திரஹாசம் என்னும் வாளைத்தந்த என்பதாம். அவர் கழல் ஏத்துதல் கதியே - அந்த இறைவனுடைய கழலை ஏத்துதலே மீட்டும் அடையத்தக்க கதியாம்.

9. கோலம் முடி - பன்றியாக முடிந்த. சீலம் - சௌலப்யம் என்னும் எளிமைக்குணம். காலம்பெற - விடியலிலேயே. உடலை நோய் நலியா என்க. உறுநோய் - பிராரத்த வினையான் வரும் துன்பம்.

மத்தம்மலி சித்தத்திறை மதியில்லவர்சமணர்
புத்தரவர் சொன்னம்மொழி பொருளாநினையேன்மின்
நித்தம்பயி னிமலன்னுறை நெய்த்தானமதேத்தும்
சித்தமுடை யடியாருடல் செறுநோயடையாவே. 10

தலமல்கிய புனற்காழியுட் டமிழ்ஞானசம்பந்தன்
நிலமல்கிய புகழான்மிகு நெய்த்தானனை நிகரில்
பலமல்கிய பாடல்லிவை பத்தும்மிகவல்லார்
சிலமல்கிய செல்வன்னடி சேர்வர்சிவகதியே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10. மத்தம் - மதம். இறைமதியில்லார் - கடவுளுணர்ச்சி சிறிதும் இல்லாதவர்கள். செறுநோய் - வருத்தும் நோய்கள்.*

*11. பலம் மல்கிய பாடலிவை பத்தும் என்றது, முதன் நான்கு பாடலிலும் நெய்த்தானம் என்னுங்கள், உங்களை நடலையடையா, அமருலகு அடையலாம், துயரின்றித் தொழலாம், நோய்நலியா, அடையா, கழலேத்துதல் கதி என இம்மைப் பயனையும்; மறுமைப் பயனையும் எய்தலாம் என்கிறார்கள் ஆதலின். சிலமல்கிய - சிலவே நிறைந்த. இறைவனடியை சில என்றதால் நிறைவு ஏது? மல்குதற்கேற்ற புண்ணிய வாய்ப்புடையன சிலவே யாதலின் இங்ஙனம் கூறினர்.*

# திருப்புள்ளமங்கை

***பதிகவரலாறு :***

*வேதங்களில் சொல்லப்பட்டஅருங்கருத்துக்களின் உள்ளீடாகிய சிவஞானம் தம்மறிவில் நிரம்பப்பெற்ற பிள்ளையார் திருச்சக்கரப்பள்ளியை வணங்கிக்கொண்டு வயற்கரை வழியாகப் புள்ளமங்கையை அடைந்தார்கள். அங்கேயுள்ள ஆலந்துறை என்னும் திருக்கோயிலுக்குச்சென்றார்கள். இறைவன் திருவடித்தலத்தை அன்போடு வணங்கிப் 'பாலுந்துறு திரளாயின' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்கள்,*

**பண் - நட்டபாடை**

**பதிகம் :** **எண் 16**

*திருச்சிற்றம்பலம்.*

பாலுந்துறு திரளாயின பரமன்பிரமன்றான்
போலுந்திற லவர்வாழ்தரு பொழில்சூழ்புளமங்கைக்
காலன்றிற லறச்சாடிய கடவுள்ளிடங்கருதில்
ஆலந்துறை தொழுவார்தமை யடையாவினை தானே. 1

மலையான்மகள் கணவன்மலி கடல்சூழ்தருதன்மைப்
புலையாயின களைவானிடம் பொழில்சூழ்புளமங்கைக்
கலையான்மலி மறையோரவர் கருதித்தொழுதேத்த
அலையார்புனல் வருகாவிரி யாலந்துறையதுவே. 2

---

*1. பால் உந்து உறுதிரள் - பாலைக் கடைதலால் விளைந்த வெண்ணெய். பிரமன் தான் போலுந்திறலவர் - பிரமனும் அவன்போலும் தன்மையினராகிய அந்தணரும். ஆலந்துறை கோயிலின் பெயர்; புள்ளமங்கை தலத்தின் பெயர். இதனை "புளமங்கை ஆதியவர் கோயில் திருவாலந்துறை தொழுமின்" என்ற இப்பதிகம் பத்தாம் பாடலால் அறிக. வினையடையா என்றது ஆகாமியங்கள் அடையா என்பதாம்.*

*2. கடல்சூழ்தரு தன்மைப் புலையாயின களைவான் இடம் பொழில்சூழ் புளமங்கை' - கடல் சூழ்தலால் வந்த பண்பாகிய புலால் மணத்தைக் களைகின்ற பெரிய இடம் (மணந்தருகின்ற)*

மிக்கார் வந்து விரும்பிப் பலியிடத்
தக்கார் தம்மக்க ளீரென்
றுட்கா தாருள ரோதிரு வோத்தூர்
நக்கீ ரேயரு ணல்குமே. 6

தாதார் கொன்றை தயங்கு முடியுடை
நாதா வென்று நலம்புகழ்ந்
தோதா தாருள ரோதிரு வோத்தூர்
ஆதீ ரேயரு ணல்குமே. 7

என்று னிம்மலை யென்ற வரக்கனை
வென்றார் போலும் விரலினால்
ஒன்றார் மும்மதி லெய்தவ னோத்தூர்
என்றார் மேல்வினை யேகுமே. 8

நன்று நான்மறை யானொடு மாலுமாய்ச்
சென்றார் போலுந் திசையெலாம்
ஒன்று மொள்ளெரி யாய்மிக வோத்தூர்
நின்றீ ரேயுமை நேடியே. 9

---

6. நீர் பலியேற்க வந்தகாலத்து, தம் மக்களுள் உம்முன் வந்து பலியிடத்தக்கவர் யார் என்று அஞ்சாதார் உளரோ; அருள் நல்கும் என்கின்றது. இறைவன்கொண்ட விடவேடத்தில் ஈடுபட்டவர்கள் மயங்கித் தன்வசம் அழிந்தமையின் அவர் அணுமைக்கண் நடந்துவந்து பிச்சைபோடத் தக்கார் யார் என்று அஞ்சாதார் உளரோ என்று கூறியதாம். நக்கீரே - மகிழ்ந்திருப்பவரே.

7. கொன்றை விளங்கு முடியுடைநாதா என்று ஓதார் யார்? அருள்நல்கும் என்கின்றது. தாது - மகரந்தம். ஆதிர் - முதற்பொருளாயுள்ளவரே.

8. ஒத்தூர் என்றார்மேல் உள்ள வினைகெடும் என்கின்றது. என்தான் - எம்மாத்திரம். ஒன்னார் - பகைவர். என்றார் மேல்வினை ஏகும் என்றும், என்றார்மேல் வினை ஏகும் என்றும் பிரித்துப் பொருள் கொள்ளலாம்.

9. அயனும் மாலும் உம்மைத் தேடித் திசையெல்லாம் சென்றார்போலும் என்று நகைசெய்கின்றது. நன்றும் நான் மறையான் என்றது நல்லனசெய்யும் நான்மறைகளை யோதியும்

கார மண்கலிங் கத்துவ ராடையர்
தேரர் சொல்லவை தேறன்மின்
ஓரம் பாலெயி லெய்தவ னோத்தூர்ச்
சீர வன்கழல் சேர்மினே. 10

குரும்பை யாண்பனை யீன்குலை யோத்தூர்
அரும்பு கொன்றை யடிகளைப்
பெரும்பு கலியுண் ஞானசம்பந் தன்சொல்
விரும்பு வார்வினை வீடே. 11

திருச்சிற்றம்பலம்

---

அவன் அறிந்திலன் எனக் குறிப்பித்தபடி. ஒன்றாயும் - பெருஞ் சோதிப்பொருளாயும். நேரில் இருந்தும் காணாது திசையெல் லாந் தேடினர்; அவர்கள் அறிவு இருந்தபடி என்னே என்று நகைசெய்தவாறு.

10. ஓரம்பால் எயில் எய்தவன் கழல்சேருங்கள்; புத்தர் சமணர் பொய்யுரை கேளாதீர்கள் என அறிவுறுத்தவாறு. தேரர் - சமணர். கலிங்கத் துவராடையர் - துவர் ஏற்றிய கலிங்கநாட்டு ஆடையையுடைய புத்தர்கள்.

11. ஞானசம்பந்தன் சொல்லிய இவை பத்தும் விரும்பு வார்க்கு வினை ஒழியும் என்கின்றது. முதலிரண்டடியிலும் கூறிய கருத்து, பிள்ளையார் பாடல்களைக் கேட்டதும் இறைவனருளால் ஆண்பனை குலையீன, அதனைக்கண்டதால் விளைந்தது.

# திருமாற்பேறு

**பதிகவரலாறு :**

திருஞானசம்பந்தப் பெருமான், திருக்கச்சிமேற்றளியை வணங்கி எழுந்தருளியிருக்கின்ற காலத்து, ஒரு நாள், பாலி யாற்றுத் தென்கரை வழியாகச் சென்று திருமாற்பேறு' என்னுந் தலத்தை யடைந்தார்கள், முப்புரம் வென்ற முதல் வரை வணங்கி 'ஊறி யார்தரு' என்னும் இப் பதிகத்தை அருளிச்செய்தார்கள். இதனை மொழிமாலை எனச் சிறப்பிப்பர் சேக்கிழார் பெருமான்,

**பண் - பழந்தக்கராகம்**

**பதிகம் :** **எண் 55**

*திருச்சிற்றம்பலம்*

ஊறி யார்தரு நஞ்சினை யுண்டுமை
நீறு சேர்திரு மேனியர்
சேறு சேர்வயற் றென்றிரு மாற்பேற்றின்
மாறி லாமணி கண்டரே. 1

தொடையார் மாமலர் கொண்டிரு போதும்மை
அடைவா ராமடி கள்ளென
மடையார் நீர்மல்கு மன்னிய மாற்பே
றுடையீ ரேயுமை யுள்கியே. 2

---

1. நஞ்சத்தையுண்டு, உமையும் நீறும் சேர்ந்த திருமேனியர் மாற்பேறர் என்கின்றது. ஊறி ஆர் தரு நஞ்சு - கடலில் ஊறி வந்த விடம். உமை நீறுசேர் மேனி எனப் பிரிக்க. மாறிலா - தீதுசெய்யாத; அருளே வழங்குகின்ற, மணிகண்டர் - நீல கண்டர்.

2. மாற்பேறரே உம்மை எண்ணி அடியார்கள் மாலை முதலியவற்றை ஏந்தி இருபோதும் அடைகின்றார்கள் என் கின்றது. தொடை - மாலை. இருபோதும் - காலையு மாலையும்.

பையா ரும்மர வங்கொடு வாட்டிய
கையா னென்று வணங்குவர்
மையார் நஞ்சுண்டு மாற்பேற் றிருக்கின்ற
ஐயா நின்னடி யார்களே. 3

சால மாமலர் கொண்டு சரணென்று
மேலை யார்கள் விரும்புவர்
மாலி னூர்வழி பாடுசெய் மாற்பேற்று
நீல மார்கண்ட நின்னையே. 4

மாறி லாமணி யேயென்று வானவர்
ஏற வேமிக வேத்துவர்
கூற னேகுல வுந்திரு மாற்பேற்றின்
நீற னேயென்று நின்னையே. 5

உரையா தாரில்லை யொன்றுநின் றன்மையைப்
பரவா தாரில்லை நாள்களும்
திரையார் பாலியின் றென்கரை மாற்பேற்
றரையா னேயரு ளல்கிடே. 6

* * * * 7

---

3. நின்னடியார்கள் நின்னை அரவமாட்டிய கையான் என்று வணங்குவார்கள் என்கின்றது. பை - படம். மை - கருமை.

4. நீலகண்ட, உயர்ந்தோர்கள் மலர்கொண்டு நின்னை வழிபடுவார்கள் என்கின்றது. சால - மிக. மேலையோர்கள் - உயர்ந்தோர்கள். மாலினூர் வழிபாடுசெய் மாற்பேறு என்றது இத்தலவரலாற்றுக் குறிப்பு.

5. நின்னைத் தேவர்கள் மாறிலாமணியே என்று ஏத்துவர் என்கின்றது. சில ரத்னங்களை அணிந்தால் தீமையும் செய்யக் கூடும்; இந்தமணி எத்தகையோர்க்கும் இன்பமே செய்தலின் மாறிலாமணியே என்றார். ஏறவே - மிக. தாமுயர என்றுமாம்.

6. திருமாற்பேற்று அரைசனே, உன்னைப் புகழாதாரும், பரவாதாரும் இல்லை என்கின்றது. இத்தலம் பாலியாற்றுத் தென்கரையது என்பது குறிக்கப்பெறுகின்றது.

அரச ளிக்கு மரக்க னவன்றனை
உரைகெ டுத்தவ னொல்கிட
வரமி குத்தவெம் மாற்பேற் றடிகளைப்
பரவி டக்கெடும் பாவமே. 8

இருவர் தேவருந் தேடித் திரிந்தினி
ஒருவ ராலறி வொண்ணிலன்
மருவு நீள்கழன் மாற்பேற் றடிகளைப்
பரவு வார்வினை பாறுமே. 9

தூசு போர்த்துழல் வார்கையிற் றுற்றுணும்
நீசர் தம்முரை கொள்ளெலும்
தேச மல்கிய தென்றிரு மாற்பேற்றின்
ஈச னென்றெடுத் தேத்துமே. 10

மன்னி மாலொடு சோமன் பணிசெயும்
மன்னு மாற்பேற் றடிகளை
மன்னு காழியுண் ஞானசம் பந்தன்சொல்
பன்ன வேவினை பாறுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

*8. இராவணன் வலிகெடுத்து வரமளித்த இறைவனைப் பரவப் பாவம் கெடும் என்கின்றது. உரை - புகழ். ஒல்கிட - பணிய.*

*9. இறைவன் அடிகளைப் பரவுவார் வினைசிதறும் என்கின்றது. தேவர் இருவர் - அயனும் மாலும். இருவர் தேடியும் ஒருவராலும் அறிய முடியாதவன் என்பது கருத்து.*

*10. சமணர் புத்தர் சழக்குரை கொள்ளாதீர்; திருமாற்பேற்றீசன் என்று ஏத்தும் என்கின்றது. தூசு - ஆடை. துற்று-உணவு. நீசர்-இழிந்தவர். கொள்ளெலும்-கொள்ளாதீர்கள்; இது அருவழக்கு. தேசம் - ஒளி.*

*11. இத்தலம் மாலும், மதியும் வணங்கிய தலமாதலின் இத்தலத் திறைவனை வழிபட வினைகள் சிதறும் என்கின்றது. சோமன் - சந்திரன். பன்ன - சொல்ல.*

# திருப்பாற்றுறை

*பதிகவரலாறு :*

*திருத்தவத்துறையை வணங்கிப் பிறதலங்களையும் வணங்கத் திருவுளம்பற்றிய பிள்ளையார் திருப்பாற்றுறையை அடைந்தார்கள். அத்தலத்து எழுந்தருளியுள்ள ஏறுயர்த்த பெருமானை, வணங்கிக் 'காரார் கொன்றை' என்னும் இப் பதிகத்தை அருளிச் செய்தார்கள். இப்பதிகத்தை அருளு கின்றகாலத்துப் பிள்ளையாரின் திருவுள்ளம் சற்புத்திர மார்க்கத்தினின்றும் உயர்ந்து சன்மார்க்கநெறிக்கண் நாயக நாயகித்தன்மையில் ஈடுபடுவதாயிற்று. தலைவியாகிய தன் னுள்ளத்தில் தலைவன் உருவன்றி வேறொன்றும் தோன்றாத நிலையில் ஊடியும் பிரிந்தும் நுகரும் இன்பநிலைகள் தோன்ற இத்திருப்பதிகத்தை அருளிச்செய்தார்.*

**பண் - பழந்தக்கராகம்**

**பதிகம்** **எண் 56**

*திருச்சிற்றம்பலம்*

காரார் கொன்றை கலந்த முடியினர்
சீரார் சிந்தை செலச் செய்தார்
பாரார் நாளும் பரவிய பாற்றுறை
யாரா ராதி முதல்வரே. 1

---

*1. திருஞான சம்பந்தப் பிள்ளையார் தம்மைப் பெண் ணாக்கித் தலைவனாகத் திருப்பாற்றுறைத் திருமூலநாதரைப் பாவித்து ஈடுபட்டு, சிறந்த சிந்தை தம்மிடமே செல்லச் செய்தார் என்கின்றார். கார் ஆர் கொன்றை - கார்காலத்துக் கொன்றை. சிந்தைசெலச் செய்தார் - அடியார்கள் சிந்தையைத் தம்மிடமே செல்லச்செய்தார். ஆதிமுதல்வர் என்றது திருமூல நாதர் என்னும் தலத்திறைவர் பெயரைக் குறிப்பது.*

நல்லா ரும்மவர் தீய ரெனப்படும்
சொல்லார் நன்மலர் சூடினர்
பல்லார் வெண்டலைச் செல்வரெம் பாற்றுறை
எல்லா ருந்தொழு மீசரே. 2

விண்ணார் திங்கள் விளங்கு நுதலினர்
எண்ணார் வந்தெ னெழில்கொண்டார்
பண்ணார் வண்டினம் பாடல்செய் பாற்றுறை
உண்ணா ளுறு முறைவரே. 3

பூவுந் திங்கள் புனைந்த முடியினர்
ஏவி னல்லா ரெயிலெய்தார்
பாவந் தீர்புனன் மல்கிய பாற்றுறை
ஓவென் சிந்தை யொருவரே. 4

மாகந் தோய்மதி சூடி மகிழ்ந்தென
தாகம் பொன்னிற மாக்கினர்
பாகம் பெண்ணு முடையவர் பாற்றுறை
நாகம் பூண்ட நயவரே. 5

---

2. இவர் நல்லவரும் ஆவர்; தீயர் எனவும் சொல்லப் பெறுவர்; ஆயினும் எனது சொன்மலரைச் சூடினர் என்கின்றது. தீயர் - கையில் தீயையுடையவர். சொல் ஆர் நன் மலர் - சொல்லாகிய நிறைந்த நல்லமலர்கள்; என்றது, தலைவி பேசுவன யாவும் அவன் புகழேயாதல் தெரிவித்தது. எல்லாரும் தொழும் - பரிபாகமுடையவர் அஃதில்லாத உலகவர் யாவரும் வணங்கும்.

3. திருமூலநாதர் ஆராயாதே வந்து என்னழகெல்லாவற்றையும் கவர்ந்தார் என்கின்றது. இது உறுப்பு நலனழிதல் என்னும் மெய்ப்பாடு. பாற்றுறையுள் நாள்நாளும் உறைவர் எனப் பிரித்துப் பொருள்காண்க.

4. அம்பால் அடையார் புரம் எய்த பாற்றுறைநாதனே என் சிந்தைக்கண் உள்ள ஒருவர் என்கின்றது. ஏவின் - அம்பால். அல்லார் - பகைவர். ஓ என்பது வினாப்பொருளின் கண்ணது.

5. ஒருபாதியில் பெண்ணையும் உடைய பெருமான் என்னுடைய மார்பைப் பொன்னிறமாக்கினர் என்று பிரிவால் வருந்திய தலைவியின் பசந்தமையை யறிவிக்கின்றது. மாகம் - ஆகாயம். ஆகம் - மார்பு. நயவர் - நலமுடையவர்.

போது பொன்றிகழ் கொன்றை புனைமுடி
நாதர் வந்தெ னலங்கொண்டார்
பாதந் தொண்டர் பரவிய பாற்றுறை
வேத மோதும் விகிர்தரே. 6

வாடல் வெண்டலை சூடினர் மால்விடை
கோடல் செய்த குறிப்பினர்
பாடல் வண்டினம் பண்செயும் பாற்றுறை
ஆட லாகை மசைத்தாரே. 7

வெவ்வ மேனிய ராய்வெள்ளை நீற்றினர்
எவ்வஞ் செய்தெ னெழில்கொண்டார்
பவ்வ நஞ்சடை கண்டரெம் பாற்றுறை
மவ்வல் சூடிய மைந்தரே. 8

ஏன மன்னமு மானவ ருக்கெரி
ஆன வண்ணத்தெ மண்ணலார்
பான லம்மலர் விம்மிய பாற்றுறை
வான வெண்பிறை மைந்தரே. 9

---

*6. கொன்றைபுனைந்த நாதர்வந்து என்நலங்கொண்டார் என்கின்றது.*

*7. ஆடும் அரவையணிந்த பாற்றுறைநாதர் விடையேறிப் பிரிதலைக் கருதினார் என்கின்றது. வாடல் வெண்தலை - உலர்ந்த தலை. மால்விடை கோடல்செய்த குறிப்பினர் - பெரிய இடபத்தைக் கொள்ளுதலைச்செய்த குறிப்பினையுடையவர்; என்றது ஊர்தியாகிய விடையைக் கொள்ளுதல் என்பது தலைவன் பிரிவு கருதியதாம்.*

*8. முல்லைசூடிய இறைவர் பிரிவுத் துன்பத்தை எனக்குப் பெரிதாக்கி எனது அழகைக் கவர்ந்தார் என்கின்றது. வெவ்வ மேனியர் - வெம்மையோடுகூடிய மேனியையுடையவர். எவ்வம் செய்து - துன்புறுத்தி. பவ்வம் நஞ்சு - கடல் நஞ்சு. மவ்வல் - முல்லை.*

*9. திப்பிழம்பாகிய செல்வரே வெண்பிறை யணிந்த மைந்தராக இருக்கின்றார் என்கின்றது. ஏனம் - பன்றி. பானல் - நீலோற்பலம்.*

வெந்த நீற்றினர் வேலினர் நூலினர்
வந்தெ னன்னலம் வௌவினார்
பைந்தண் மாதவி சூழ்தரு பாற்றுறை
மைந்தர் தாமோர் மணாளரே. 10

பத்தர் மன்னிய பாற்றுறை மேவிய
பத்து நூறு பெயரனைப்
பத்தன் ஞானசம் பந்தன தின்றமிழ்
பத்தும் பாடிப் பரவுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10. பாற்றுறை மணாளர் என்நலம் வௌவினார் என்கின்றது. இதில் தலைவி தலைவருடைய உள்ளத் தூய்மையைக் காட்டும் வீரத்தை விளக்கும் வேலையும், இதுவரை மணமாகாமையைக் காட்டும் நூலையுங்கண்டு காதலித்தேன் அவர் என் நலத்தைவௌவினார் என்பதுதோன்ற, நீற்றினர் வேலினர் நூலினராய்வந்து என்நலத்தை வௌவினார் என்கின்றார். எம் மணாளர் என்னாது ஓர் மணாளர் என்றது மலைமகளையும் அலைமகளையும் முன்னரே மணந்திருக்கின்றமை குறிப்பிக்க. இப்பதிகத்துள் இராவணனை அடர்த்ததும், புறச்சமயிகளைப் பற்றிய குறிப்பும் கூறாமை, தலைவனும் தலைவியுமாய் இருந்து அனுபவிக்கும் அருள்நெறி முதிர்ச்சியால் என அறிக. வரும் தோணிபுரப் பதிகத்தும் இக்காட்சியைக் காண்க.*

*11. பாற்றுறைநாதரைப்பற்றிய இப்பாடல் பத்தையுஞ் சொல்லிப் பரவுங்கள் என்கின்றது. பத்து நூறு பெயரன் - ஆயிரந் திருநாமத்தையுடையவன்.*

# திருவேற்காடு

*பதிகவரலாறு:*

*திருக்காளத்தி மலையை வணங்கிக் காளத்தியிற் சில காலம் தங்கியிருந்த காழிப் பிள்ளையார் அடியார் கூட்டத் தோடு காடும் மலையுங் கடந்து, வழியில் பலதலங்களையும் வணங்கிக்கொண்டு, பாலியாற்று வடகரையில் இருக்கும் திருவேற்காட்டை வந்தடைந்தார்கள். அங்குள்ள செழுஞ் சுடர் பொற்கோயிலை அடைந்து பணிந்து, 'ஒள்ளிது உள்ள' என்னும் இப்பதிகத்தையருளிச்செய்தார்கள்.*

**பண் - பழந்தக்கராகம்**

**பதிகம்:** **எண் 57**

*திருச்சிற்றம்பலம்*

ஒள்ளி துள்ளக் கதிக்கா மிவனொளி
வெள்ளி யானுறை வேற்காடு
உள்ளி யாருயர்ந் தாரிவ் வுலகினில்
தெள்ளி யாரவர் தேவரே. 1

ஆட லைகை மசைத்தள வில்லதோர்
வேடங் கொண்டவன் வேற்காடு
பாடி யும்பணிந் தாரிவ் வுலகினில்
சேட ராகிய செல்வரே. 2

---

*1. மிகவும் உயர்ந்ததை எண்ணின் அது நற்கதிக்கு வாயிலாம்; ஆதலால் வேற்காடு எண்ணியவர்கள் இவ்வுலகில் தேவராவர் என்கின்றது. ஒள்ளிது - உயர்ந்தபொருளை. உள்ள - எண்ண. உள்ளம் - உயிருமாம். உள்ளியார் - எண்ணியவர்கள்.*

*2. வேற்காடு பணிந்தார் இவ்வுலகில் பெரிய செல்வராவர் என்கின்றது. சேடர் - பெருமையுடையவர்.*

பூதம் பாடப் புறங்காட் டிடையாடி
வேத வித்தகன் வேற்காடு
போதுஞ் சாந்தும் புகையுங் கொடுத்தவர்க்
கேத மெய்துத லில்லையே. 3

ஆழ்க டலெனக் கங்கைக ரந்தவன்
வீழ்ச டையினன் வேற்காடு
தாழ்வு டைமனத் தாற்பணிந் தேத்திடப்
பாழ்ப டும்மவர் பாவமே. 4

காட்டி னானு மயர்த்திடக் காலனை
வீட்டி னானுறை வேற்காடு
பாட்டி னாற்பணிந் தேத்திட வல்லவர்
ஓட்டி னார்வினை யொல்லையே. 5

தோலி னாலுடை மேவவல் லான்சுடர்
வேலி னானுறை வேற்காடு
நூலி னாற்பணிந் தேத்திட வல்லவர்
மாலி னார்வினை மாயுமே. 6

---

3. வேற்காட்டுநாதரைப் பூவுஞ்சாந்தும் புகையுங்கொண்டு வழிபட்டவர்க்கு ஏதம் எய்தாது என்கின்றது. புறங்காடு - சுடுகாடு. ஆடி - ஆடுபவன்; பெயர்ச்சொல். ஏதம் - துன்பம்.

4. பணிந்த மனத்தோடு ஏத்த பாவம் அழியும் என்கின்றது. ஆழ்கடல் எனக் கங்கை கரந்தவன் - பல மகாநதிகளைத் தன்னகத்து அடக்கிக்கொள்ளும் கடலைப்போலக், கங்கையை அடக்கியவன். வீழ்சடை - விழுதுபோலும் சடை. தாழ்வுடை மனம் - பணிந்த உள்ளம். 'தாழ்வெனுந் தன்மை' (சித்தியார்). பாவம் பாழ்படும் - பாவம் பயன் அளியாதொழியும்

5. இது பாடிப்பணிந்து ஏத்தவல்லவர் வினை ஓடும் என்கின்றது. காட்டினானும் அயர்த்திடு அக்காலனை - மார்க்கண்டேயர் பூசித்து; சிவன் முழுமுதல்வன் என்பதைக் காட்டினானும் அதனை உணராதே மயங்கிய காலனை. வீட்டினான் - அழித்தவன். ஒல்லை - விரைவு.

6. விதிப்படி ஏத்தவல்லவர்க்கு வினைமாயும் என்கின்றது. நூலினால் - ஆகம விதிப்படி. மாலினார் வினை - மயங்கிய ஆன்மாக்களினது வினை.

மல்லன் மும்மதின் மாய்தர வெய்ததோர்
வில்லி னுறை வேற்காடு
சொல்ல வல்ல சுருங்கா மனத்தவர்
செல்ல வல்லவர் தீர்க்கமே. 7

மூரல் வெண்மதி சூடு முடியுடை
வீரன் மேவிய வேற்காடு
வார மாய்வழி பாடுநி னைந்தவர்
சேர்வர் செய்கழ றிண்ணமே. 8

பரக்கி னார்படு வெண்டலை யிற்பலி
விரக்கி னுறை வேற்காட்டூர்
அரக்க னுண்மை யடரப்பட் டானிறை
நெருக்கி னானை நினைமினே. 9

மாறி லாமல ராளொடு மாலவன்
வேற லானுறை வேற்காடு
ஈறி லாமொழி யேமொழி யாவெழில்
கூறி னார்க்கில்லை குற்றமே. 10

---

*7. இறைவனை எப்பொழுதும் பேசவல்ல குவியாமனத்து அடியவர்கள் நீடுவாழ்வர் என்கின்றது. தீர்க்கம் - நிச்சயம்.*

*8. அன்போடு வழிபடுவார் அடி அடைவர் என்கின்றது. மூரல் - இளமை. வாரம் - அன்பு.*

*9. இராவணனது ஆண்மையை அடர்த்த இறைவனை நினையுங்கள் என்கின்றது. பரக்கினார் - அலைந்து திரிந்தவர்கள்; அவர்கள் அயனும் மாலும். விரக்கினன் - சாமர்த்தியமுடையன். விரகினன் என்பது எதுகைநோக்கி விரிந்தது.*

*10. இறைவனைப்பற்றியமொழியே ஈறிலாமொழி; அதனை அழகுபெறக் கூறினார்க்குக் குற்றமில்லை என்கிறது. வேறலான் - வெல்லுதலையுடையான். வேறாகாதவன் எனலுமாம்.*

விண்ட மாம்பொழில் சூழ்திரு வேற்காடு
கண்டு நம்பன் கழல்பேணிச்
சண்பை ஞானசம் பந்தன் செந்தமிழ்
கொண்டு பாடக் குணமாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. திருவேற்காட்டைத் தரிசித்து இறைவன் திருவடியைத் தியானித்து இப்பதிகத்தைப் பாடக் குணமாம் என்கின்றது. விண்ட - மலர்ந்த. சண்பை சீகாழிக்கு மறுபெயர்.

# திருக்கரவீரம்

**பதிகவரலாறு:**

*திருஞானசம்பந்தசுவாமிகள் திருச்சாத்தங்குடி சென்று பெருமானை வணங்கிய பின்பு, திருக்கரவீரத்தையடைந்து நம்பர்தாளை வணங்கி 'அரியும் நம்வினை' என்னும் இத் திருப்பதிகத்தை அருளிச்செய்தார்கள்.*

**பண் - பழந்தக்கராகம்**

**பதிகம்** **எண் 58**

*திருச்சிற்றம்பலம்*

அரியு நம்வினை யுள்ளன வாசற
வரிகொண் மாமணி போறகண்டம்
கரிய வன்றிக முங்கர வீரத்தெம்
பெரிய வன்கழல் பேணவே. 1

தங்கு மோவினை தாழ்சடை மேலவன்
திங்க ளோடுடன் சூடிய
கங்கை யான்றிக முங்கர வீரத்தெம்
சங்க ரன்கழல் சாரவே. 2

ஏதம் வந்தடை யாவினி நல்லன
பூதம் பல்படை யாக்கிய
காத லான்றிக முங்கர வீரத்தெம்
நாதன் பாத நணுகவே. 3

---

*1. கரவீரத்து இறைவன்கழல் பேண வினையுள்ளன எல்லாம் அரியும் என்கின்றது. கழல்பேண நம்வினையுள்ளன அரியும் எனக்கூட்டுக. வரி கொள் மாமணி - நிறங்கொண்ட நீலமணி.*

*2. சங்கரன் கழல்சார வினை தங்குமோ என வினவுகிறது. சங்கரன் - சுகத்தைச் செய்பவன்.*

*3. கரவீரநாதன் பாதம் நணுக ஏதம் அடையா என்கின்றது. ஏதம் - துன்பம்.*

பறையு நம்வினை யுள்ளன பாழ்பட
மறையு மாமணி போற்கண்டம்
கறைய வன்றிக முங்கர வீரத்தெம்
இறைய வன்கழ லேத்தவே. 4

பண்ணி னார்மறை பாடல னாடலன்
விண்ணி னார்மதி லெய்தமுக்
கண்ணி னானுறை யுங்கர வீரத்தை
நண்ணு வார்வினை நாசமே. 5

நிழலி னார்மதி சூடிய நீள்சடை
அழலி னாரழ லேந்திய
கழலி னானுறை யுங்கர வீரத்தை
தொழவல் லார்க்கில்லை துக்கமே. 6

வண்டர் மும்மதின் மாய்தர வெய்தவன்
அண்ட னாரழல் போலொளிர்
கண்ட னானுறை யுங்கரவீ ரத்துத்
தொண்டர் மேற்றுயர் தூரமே. 7

புனலி லங்கையர் கோன்முடி பத்திறச்
சினவ லாண்மை செகுத்தவன்
கனல வன்னுறை கின்ற கரவீரம்
எனவல் லார்க்கிட ரில்லையே. 8

---

4. கழல் ஏத்த வினைபறையும் என்கின்றது. பறையும் என்றதோடமையாது பாழ்பட பறையும் என்றது அதன் வாசனையும் கெடும் என்பதை விளக்க.

5. கரவீரத்தை நண்ணுவார்வினை நாசமாம் என்கின்றது. பண்ணின் ஆர் மறை - சத்தத்தோடுகூடிய வேதம்.

6. இத்தலத்தைத் தொழுவார்க்குத் துக்கம் இல்லை என்கின்றது. நிழலின் ஆர் மதி - ஒளியின் நிறைந்த பிறை.

7. அடியார்மேல் துயரம் தூரமாம் என்கின்றது. வண்டர் - தீயோர்களாகிய முப்புராதிகள். அழல்போல் ஒளிர் கண்டனார் - நெருப்பைப்போல் ஒளிவிடுகின்ற கழுத்தையுடையவர். துயர் தூரமே - துன்பம் தூரவிலகும்.

8. கரவீரம் என்பார்க்கு இடர் இல்லை என்கின்றது. புனல் இலங்கை - கடல்சூழ்ந்த இலங்கை. சின வல் ஆண்மை - கோபத்தோடுகூடிய வலிய ஆண்மை. செகுத்தவன்-அழித்தவன்.

வெள்ளத் தாமரை யானொடு மாலுமாய்த்
தெள்ளத் தீத்திர ளாகிய
கள்ளத் தானுறை யுங்கர வீரத்தை
உள்ளத் தான்வினை யோயுமே. 9

செடிய மண்ணொடு சீவரத் தாரவர்
கொடிய வெவ்வுரை கொள்ளேன்மின்
கடிய வன்னுறை கின்ற கரவீரத்
தடிய வர்க்கில்லை யல்லலே. 10

வீடி லான்விளங் குங்கர வீரத்தெம்
சேடன் மேற்கசி வாற்றமிழ்
நாடு ஞானசம் பந்தன சொல்லிவை
பாடு வார்க்கில்லை பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

*9. கரவீரத்தைத் தியானிக்க வினைவலி குன்றும் என்கின்றது. வெள்ளத்தாமரையான் - நீரில் இருக்கும் தாமரையானாகிய பிரமன். வெள்ளத்தாமரை என்றது சாதியடை. பிரமனிருக்கும் தாமரை உந்தித்தாமரையாயினும் தாமரையென்ற பொதுமை நோக்கிக் கூறப்பட்டது. தான்; அசை.*

*10. கரவீரத்தடியவர்க்கு அல்லல் இல்லை என்கின்றது. செடி - நாற்றம். அம்மொடு என்பது அமண்ணொடு என விரித்தல் விகாரம்பெற்றது. சீவரம் - காவியாடை. கொடிய வெவ்வுரை - நெறியல்லா நெறிக்கண் செலுத்தலின் கொடிய வெம்மையான உரையாயிற்று. கடிய்வன் - காத்தலையுடையவன்.*

*11. இது பாடுவார்க்குப் பாவமே இல்லை என்று கீழ்ப்போன திருப்பாடல்களில் தனித்தனிக் கூறியவற்றைத் தொகுத்துப் பயனாகக் கூறியது. சேடன் - பெருமையையுடையவன். வீடிலான் - விடுதலையில்லாதான். கட்டுடையார்க்கே வீடும் உண்டாதலின் இயற்கையே கட்டிலாத இறைவன் வீடிலாதான் எனப்பட்டான். அழிவில்லாதவன் எனலுமாம்.*

# திருத்தூங்கானைமாடம்

**பதிகவரலாறு :**

திருமுதுகுன்றத்தை வணங்கி எழுந்தருளிய பிள்ளையார் பெண்ணாகடத்தை யடைந்தார்கள். அங்கு, வேதவோசை நீங்காத தூங்கானைமாடச் சுடர்க்கொழுந்தை வணங்கி வலங் கொண்டு 'ஒடுங்கும் பிணி பிறவி' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்கள். இப்பதிகத்தின் சுருக்கமான குறிக் கோள் 'தீங்கு நீங்குவீர் தொழுமின்கள் தூங்கானைமாடம்' என்பது எனச் சேக்கிழார்பெருமான் அருளியுள்ளார்கள்.

**பண் - பழந்தக்கராகம்**

**பதிகம்** **எண் 59**

*திருச்சிற்றம்பலம்*

ஒடுங்கும் பிணிபிறவி கேடென்றிவை
　　யுடைத்தாய வாழ்க்கை யொழியத்தவம்
அடங்கும் மிடங்கருதி நின்றீரெல்லாம்
　　அடிக ளடிநிழற்கீ ழாளாம்வண்ணம்
கிடங்கும் மதிலுஞ் சுலாவியெங்குங்
　　கெழுமனைக டோறு மறையின்னொலி
தொடங்குங் கடந்தைத் தடங்கோயில்சேர்
　　தூங்கானை மாடந் தொழுமின்களே. 1

---

1. தவம் செய்யும் இடத்தைத் தேடுகின்ற மக்களே! தூங்கானைமாடம் தொழுமின்கள் என்கின்றது. நின்றீர் எல்லாம் ஆளாம்வணணம் தொழுமின்கள் எனக்கூட்டுக. ஒடுங்கும் பிணி - தமக்குரிய பருவம் வருந்துணையும் வெளிப் படாதே ஒடுங்கியிருக்கும் நோய். அடங்கும் இடம் - அடங்கி யிருத்தற்குரிய இடம். கிடங்கு - அகழ். சுலாவி - சுற்றி. கெழு மனைகள் - கூடிய வீடுகள். கடந்தை - பெண்ணாகடம்' இது தலப்பெயர். தூங்கானைமாடம் என்பது கோயிலின்பெயர்;

பிணிநீர சாதல் பிறத்தலிவை
பிரியப் பிரியாத பேரின்பத்தோ
டணிநீர மேலுல கமெய்தலுறில்
அறிமின் குறைவில்லை யானேறுடை
மணிநீல கண்ட முடையபிரான்
மலைமக ளுந்தானு மகிழ்ந்துவாழும்
துணிநீர்க் கடந்தைத் தடங்கோயில்சேர்
தூங்கானை மாடந் தொழுமின்களே. 2

சாநாளும் வாழ்நாளுந் தோற்றமிவை
சலிப்பாய வாழ்க்கை யொழியத்தவம்
ஆமா றறியா தலமந்துநீர்
அயர்ந்துங் குறைவில்லை யானேறுடைப்
பூமா ணலங்க லிலங்குகொன்றை
புனல்பொ திந்தபுன் சடையினுறையும்
தூமாண் கடந்தைத் தடங்கோயில்சேர்
தூங்கானை மாடந் தொழுமின்களே. 3

ஊன்றும் பிணிபிறவி கேடென்றிவை
யுடைத்தாய வாழ்க்கை யொழியத்தவம்
மான்று மனங்கருதி நின்றீரெல்லா
மனந்திரிந்து மண்ணின் மயங்காதுநீர்

---

2. பிறப்பிறப்பு நீங்கிப் பேரின்பம் உற எண்ணில் இக் கோயிலைத் தொழுங்கள் என்கின்றது. பிணிநீர்-நோய்த்தன்மை யையுடைய. அணிநீர - அழகிய. மணிநீல கண்டம் - அழகிய நீலகண்டத்தையுடைய. பிரான் - வள்ளன்மையுடையவன். துணிநீர் - ஒளித்தன்மையோடு கூடிய.

3. பிறந்து, வாழ்ந்து, இரந்துவரும் இந்தவாழ்க்கையை ஒழிக்கவிரும்புவீர் இக்கோயிலைத் தொழுங்கள் என்கின்றது. சலிப்பு - ஓய்தல். தவம் ஆமாறு - தவம் சித்திக்கும் வண்ணம். அலமந்து - வருந்தி. தூமாண் கடந்தை - தூய்மையான மாட்சிமைபொருந்திய கடந்தை.

மூன்று மதிலெய்த மூவாச்சிலை
முதல்வர்க் கிடம்போலு முகிறேய்கொடி
தோன்றுங் கடந்தைத் தடங்கோயில்சேர்
தூங்கானை மாடந் தொழுமின்களே. 4

மயறீர்மை யில்லாத தோற்றம்மிவை
மரணத்தொ டொத்தழியு மாறுதலால்
வியறீர மேலுக மெய்தலுறின்
மிக்கொன்றும் வேண்டா விமலனிடம்
உயர்தீர வோங்கிய நாமங்களா
லோவாது நாளும டிபரவல்செய்
துயர்தீர் கடந்தைத் தடங்கோயில்சேர்
தூங்கானை மாடந் தொழுமின்களே. 5

பன்னீர்மை குன்றிச் செவிகேட்பிலா
படர்நோக் கிற்கண் பவளந்நிற
நன்னீர்மை குன்றித் திரைதோலொடு
நரைதோன் றுங்கால நமக்காதன்முன்
பொன்னீர்மை துன்றப் புறந்தோன்றுநற்
புனல்பொ திந்தபுன் சடையினுறையும்
தொன்னீர்க் கடந்தைத் தடங்கோயில்சேர்
தூங்கானை மாடந் தொழுமின்களே. 6

---

4. இதுவும் அது. பிணியூன்றும் பிறவி - நோய் நிலை பெற்ற பிறப்பு. மான்று - மயங்கி. மூவாச்சிலை - மூப்படையாத வில். முகில் - மேகம்.

5. பிறப்பிறப்புக்கள் அழியும் வழிகள்; ஆதலால், அவற்றை நீங்கி மேலுலகம் எய்தலுறின் வேறொன்றும் தேட வேண்டாம்; இறைவன் நாமத்தைச் சொல்லிக்கொண்டு தூங்கானை மாடத்தைத் தொழுங்கள் என்கின்றது. மயல் தீர்மை - மயக்கம் நீங்கும் உபாயம். ஆறு - வழி. வியல்தீர - பலதிறப்படுதல் நீங்க. உயர்தீர ஓங்கிய நாமம் - உயர்ந்த பெயர். ஓவாது - இடைவிடாது.

6. காது, கண் இவை கெட்டு, தோல் சுருங்கி, நரை தோன்றுவதற்குமுன் தொழுமின் என்கின்றது. பல் நீர்மை குன்றி - புலன் நுகர்ச்சிக்கு ஏற்ற பலதன்மைகளும் குறைந்து.

திருவதிகை வீரட்டானம் :



கோயில் உள்விமானம்.

—பக்கம் - சூ0.

திருவேட்களம் :



ஸ்ரீ பாசுபதேசுவரர் ஆலயம்.

—பக்கம் - ருரு.

திருத்தூங்கானைமாடம்:



கோயில் கருப்பகிரகம்.



கோயில் உட்பார்வை.

இறையூண் டுகளோ டிடுக்கணெய்தி
யிழிப்பாய வாழ்க்கை யொழியத்தவம்
நிறையூ ணெறிகருதி நின்றீரெல்லா
நீள்கழ லேநாளு நினைமின்சென்னிப்
பிறைசூ ழலங்க விலங்குகொன்றை
பிணையும் பெருமான் பிரியாதநீர்த்
துறைசூழ் கடந்தைத் தடங்கோயில்சேர்
தூங்கானை மாடந் தொழுமின்களே. 7

பல்வீழ்ந்து நாத்தளர்ந்து மெய்யில்வாடிப்
பழிப்பாய வாழ்க்கை யொழியத்தவம்
இல்சூ ழிடங்கருதி நின்றீரெல்லா
மிறையே பிரியா தெழுந்துபோதும்
கல்சூ ழரக்கன் கதறச்செய்தான்
காதலியுந் தானுங் கருதிவாழும்
தொல்சீர்க் கடந்தைத் தடங்கோயில்சேர்
தூங்கானை மாடந் தொழுமின்களே. 8

---

*படர்நோக்கில் - படலம் மூடியதால். பவளந்நிற நல்நீர்மை செவ்வரி பரந்த நல்ல நிலைமை. திரை - திரங்கிய. பொன் நீர்மை துன்ற - பொன்போன்ற தன்மை பொருந்த; புறந் தோன்றும் - உருத்தாங்கிக் காட்சியளிக்கும்.*

*7. புல்லிய உணவுகொண்டு வருந்தும் இழிந்த வாழ்வு ஒழியத் தவமாகிய பேருண்டியை விரும்பியிருக்கின்றவர்களே! இக்கோயிலைத் தொழுமின் என்கின்றது. இறையூண் - சிற்றுணவு. துகள் - தூளி. இடுக்கண் - துன்பம். தவம் நிறை யூண் நெறி - தவமாகிய நிறைந்த உணவைப்பெறுமார்க்கம். அலங்கல் - மாலை. பிணையும் - சூடும்.*

*8. பல்வீழ்ந்து நாத்தளர்ந்து பழிப்பாய வாழ்க்கை நீங்கத் தவம் புரியும் இடம் தேடுபவர்களே! விரைந்து வாருங்கள்; இக் கோயிலைத் தொழுங்கள் என்கிறது. பழிப்பாய வாழ்க்கை - காளையரானகாலத்துக் காமுற்றுரும் இந்நிலையைக் கண்டு ஏளனம்செய்யும் கிழப்பருவத்தது. இறையே - சிறிதும். போதும் - வாருங்கள். கல் - கைலை. அரக்கன் - இராவணன்.*

நோயும் பிணியு மருந்துயரமு
நுகருடைய வாழ்க்கை யொழியத்தவம்
வாயு மனங்கருதி நின்றீரெல்லா
மலர்மிசைய நான்முகனு மண்ணும்விண்ணும்
தாய வடியளந்தான் காணமாட்டாத்
தலைவர்க் கிடம்போலுந் தண்சோலைவிண்
தோயுங் கடந்தைத் தடங்கோயில்சேர்
தூங்கானை மாடந் தொழுமின்களே. 9

பகடூர் பசிநலிய நோய்வருதலாற்
பழிப்பாய வாழ்க்கை யொழியத்தவம்
முகடூர் மயிர்கடிந்த செய்கையாரு
மூடுதுவ ராடையரு நாடிச்சொன்ன
திகழீர்ந்த பொய்ம்மொழிக டேறவேண்டா
திருந்திழையுந் தானும் பொருந்திவாழும்
துகளீர் கடந்தைத் தடங்கோயில்சேர்
தூங்கானை மாடந் தொழுமின்களே. 10

மண்ணூர் முழுவதிரு மாடவீதி
வயற்காழி ஞானசம் பந்தனல்ல
பெண்ணு கடத்துப் பெருங்கோயில்சேர்
பிறையுரிஞ்சுந் தூங்கானை மாடமேயான்
கண்ணூர் கழல்பரவு பாடல்பத்துங்
கருத்துணரக் கற்றுருங் கேட்டாரும்போய்
விண்ணே ருலகத்து மேவிவாழும்
விதியதுவே யாகும் வினைமாயுமே. 11.

திருச்சிற்றம்பலம்

---

9. இதுவும் அது. நோய் - உடலைப்பற்றியனவாகி வாத பித்த சிலேட்டுமத்தால் விளைவன. பிணி - மனத்தைப் பிணித்து நிற்கும் கவலைகள். அருந்துயரம் - அவற்றால் விளையும் துன்பங்கள். வாயும் - பொருந்தும். தாய - தாவிய.

10. பிறப்பறுக்கப் புறச்சமயத்தார் பொய்ம்மொழிகளைத் தேறவேண்டா; தூங்கானைமாடம் தொழுமின்கள் என்கின்றது. பகடு ஊர் பசி - யானைப்பசி. முகடு - தலையுச்சி. திகழ் தீர்ந்த - விளக்கம் ஒழிந்த. துகள் - குற்றம்.

11. சுடர்க்கொழுந்துநாதன் கழலைப்பரவும் பாடல்பத்தும் கருத்துணரக் கற்றாரும் கேட்டாரும் தேவராய் வாழ்வர்; வினைகள் மாயும் எனப் பயன் கூறுகின்றது. மண் - மார்ச்சனை.

# திருத்தோணிபுரம்

## பண் - பழந்தக்கராகம்

**பதிகம் :** **எண் 60**

*திருச்சிற்றம்பலம்*

வண்டரங்கப் புனற்கமல மதுமாந்திப் பெடையினொடும்
ஒண்டரங்க விசைபாடு மளியரசே யொளிமதியத்
துண்டரங்கப் பூண்மார்பர் திருத்தோணி புரத்துறையும்
பண்டரங்கர்க் கென்னிலைமை பரிந்தொருகாற் பகராயே. 1

---

*1. பிரிவாற்றுமையால் பேதுறுகின்ற தலைவி, தன் நிலைமையை உணர்த்த வண்டைத் தூதாக அனுப்பக்கருதி, அதனைப் பார்த்து வேண்டுகின்றாள். வண் தரங்கம் - வளப்பமான அலை. தரங்க இசை-அலைபோல் அசைகின்ற இசையின் ஆலத்தி. அளி - வண்டு. மதியத்துண்டர் - பிறைத்துண்டை அணிந்தவர். அங்கப் பூண் - எலும்பாகிய ஆபரணம். பண்டரங்கன் - பண்டரங்கக் கூத்தை ஆடுபவன். பதினொருவகைக் கூத்தினுள் சிவபெருமான் திரிபுரத்தை யழித்தபோது வெண்ணீறணிந்து ஆடியகூத்து, தான் ஏவுந்தொழிலுக்கு உடந்தையாய் இருக்க அளி அரசே எனச் சிறப்பித்து அழைத்தாள். பெடையினொடும் இசைபாடும் அளி என்றதனால், பிரிவுத்துன்பம் அறியாமையால், அழைத்து உணர்த்தவேண்டிய அவசியம் ஏற்பட்டது. அதிலும் மது மாந்தி மயங்கியவர்களுக்கு, காதல் வாழ்க்கையில் களித்து இருப்பவர்களுக்கு உணர்த்தினாலல்லது தானே உணரும் ஆற்றல் இல்லை என்பதையும் அறிவித்தவாறு. பெடையோடு இருக்கும் அளியை மூன்றுமவளாகிய தான் பார்த்தமையால் உடன் உறைவு இனிக்கூடாது; என் வேண்டுகோளை நிறைவேற்ற வேண்டும் என்ற கடமையையும் குறிப்பித்தாள். இசைபாடும் அளியாதலின், தோணிபுரநாதரை உன் இசை முதலில் வசப்படுத்த, என்னிலைமையை எடுத்தியம்ப உனக்கு இனியவாய்ப்புக் கிட்டுமென்று உணர்த்தினாள். காதலனோடு களித்திருக்கும் பெடைவண்டு பெண்கள்படும் பிரிவுத்துன்பத்தை நன்கு முன்னர் அறியுமாயினும், அதனைத் தனித்து மற்றொரு தலைவனிடத்து அனுப்புதல் மரபு அன்றாகலின் அளி அரசே என ஆண் வண்டை விளித்தாள். நீ செல்லினும் என்னிலைமை உணர்த்தக்*

எறிசுறவங் கழிக்கான லிளங்குருகே யென்பயலை
அறிவுறு தொழிவதுவு மருவினையேன் பயனன்றே
செறிசிறுர் பதமோதுந் திருத்தோணி புரத்துறையும்
வெறிநிறுர் மலர்க்கண்ணி வேதியர்க்கு விளம்பாயே. 2

பண்பழனக் கோட்டகத்து வாட்டமிலாச் செஞ்சூட்டுக்
கண்பகத்தின் வாரணமே கடுவினையே னுறுபயலை
செண்பகஞ்சேர் பொழில்புடைசூழ் திருத்தோணி புரத்துறையும்
பண்பனுக்கென் பரிசுரைத்தாற் பழியாமோ மொழியாயே. 3

---

*கூடிய அளவிற்கு அவகாசம் இராதென்பார் பண்டரங்கற்கு என்ருர். கூத்தில் ஈடுபட்டவர்க்குக் கேட்பதற்கு அவகாசம் ஏது?. இத்தனை நயங்கள் இப்பாடலில் பொதிந்து ஆன்மாவின் பெண்மைத்தன்மையை மிகுதிப்படுத்தி, இறைவனுகிய தலைவனின் இன்றியமையாமை உணர்ந்து இடையருப் பேரன்பாகிற வண்டைத் தூதனுப்புகின்ற நிலை மிக அறிந்து இன்புறுதற்கு உரியது. அளி என்பது அன்பிற்கும் ஒரு பெயராதல் காண்க.*

*2. வண்டின் இன்னிசை அங்கு ஓதப்படும் வேத ஒலியில் இறைவன் காதில் வீழாது என்பதை உணர்ந்த தலைவி, தாரை போல் பெருங்குரல் இடும் குருகைத் தூதனுப்ப எண்ணி, என்னுடைய பசலைத் துன்பத்தை நீ அறியாமல் இருப்பதும் என் வினைப்பயன்தான்; ஆயினும் அவர்க்கு நீ சொல்லு என்று தூதனுப்புகின்ருள். சுறவம் - சுருமீன். கழி - உப்பங்கழி. கானல் - கடற்கரைச் சோலை. குருகு - நாரை. பயலை - பிரிந்த மகளிர்க்கு உண்டாகும் ஒரு நோய். செறி சிறுர் - நெருங்கிய சிறுவர்கள். பதம் - பதமந்திரங்கள். வெறி நிற ஆர் மலர் - மணமும் நிறமும் பொருந்திய மலர். நீ இளங்குருகாயிருந்தும் என் நோய் அறியாதது என் வினைப்பயன் என்ருள்.*

*3. இளங்குருகும் இவள் துன்பத்தை அறியாதாகவே, கோழியை விளித்துக் கூறுகிருள். நற்பண்புடைய நாயகனுக்கு என் தன்மை உரைத்தால் உனக்குப் பழியாவந்துவிடும் என வேண்டுகிருள். பழனம் - வயல். கோடு - கரை. சூட்டு - உச்சிக் கொண்டை. கண்பு அகத்தின் - சம்பங்கோரையின் நடுவில். 'செருந்தியொடு கண்பு அமர்ந்து ஊர்தார்' (மதுரைக் 122) என்பதிலும் இப்பொருளதாதல் காண்க. தன் துன்பங்கண்டும் தான் தூதுபோகாமல் இருப்பது வருத்தமறியாமையால் என்று*

காண்டகைய செங்காலொண் கழிநாராய் காதலாற்
பூண்டகைய் முலைமெலிந்து பொன்பயந்தா ளென்றுவளர்
சேண்டகைய மணிமாடத் திருத்தோணி புரத்துறையும்
ஆண்டகையாற் கின்றேசென் றடியறிய வுணர்த்தாயே. 4

---

எண்ணிய தலைவி வாட்டமில்லா வாரணமே என்கின்ருள். சம்பங்கோரையின் நடுவில் வாழ்வதால் உனக்கு வருத்தந் தெரியாது; ஆனுலும் நீ ஒரு சேவலாதலின் எம்போலியர் வேண்டுகோளை மொழியத்தான் வேண்டும் என்று வற்புறுத்து கிருள். அதற்குள், நான்போய்ச் சொல்லுகிறேன் அவர் கேட்பாரோ என்ற ஐயம் வாரணத்திற்கும் உண்டாவதாக எண்ணி, தன் தலைவன் பண்பன் என்று அறிவிக்கின்ருள். அதிலும் சிறப்பாக அவனியல்பு அவன் ஊருக்கும், ஊர் இயல்பு அவனுக்கும் உண்டாகையாலே செண்பகஞ்சேர் பொழில்சூழ் தோணிபுரம் என்ற குறிப்பால், வண்டுமொய்க்காத மலராகிய செண்பகம் சேர்ந்திருப்பதால் வண்டுகள் செல்ல அஞ்சுகின்றன; நீ கோரையின் நடுவில் வாழ்வதால் தோணி அணுகும்போது செல்லும் வாய்ப்பிருக்கிறது என்று எண்ணித்தான் உன்னை அனுப்புகின்றேன் என்கின்ருள்.

4. கோழியும் பயன்படாதொழிய, நாரையைப் பார்த்து வேண்டுகிருள். நாராய்! தோள்மெலிந்து மேனி பசந்தாள் என்று இன்றே சென்று உணர்த்து என்கின்றனள். காண் தகைய - அழகுமிக்க. பூண்தகைய - அணிகளால் அழகுபெற்ற. பொன்பயந்தாள் - பொற்றேமலைப்பெற்ருள். சேண் - ஆகாயம். அவர் ஆண்டகையாய் இருப்பதால் அவரால் பூணத்தக்க தளராத முலையும் தளர்ந்து, மெலிந்து, மேனிபசந்தது என்று உணர்த்திஞல், உடனேவந்து தலையளிசெய்வர் என்று இன்றே சென்று தூதுசொல்லவேண்டிய இன்றியமையாமையை விளக்கு கிருள். நீ சென்ருல் பிறர்கண்ணில் படாமல் தங்கி, என் தூதை இரகசியமாய்ச் சொல்லுதற்கேற்ற அவகாசம் கிட்டும் வரைத் தங்குவதற்கு மணிமாடங்கள் இருக்கின்றன; அவரோ திருத்தோணிமலைச் சிகரத்தில் இருக்கிருர் என்று செவ்வி அறிதல் எளிமையும் செப்புகிருள். இதில் நுகர்ச்சிக்குரியமுலை மெலிந்தால் இனி அவருக்குப் பயன்படுமாறு யாங்ஙனம் என்பதனையும் உணரவைத்தாள். அடி - காரணம்.

பாராரே யெனையொருகாற் றொழுகின்றேன் பாங்கமைந்த
காராருஞ் செழுநிறத்துப் பவளக்காற் கபோதகங்காள்
தேராரு நெடுவீதித் திருத்தோணி புரத்துறையும்
நீராருஞ் சடையாருக் கென்னிலைமை நிகழ்த்திரே. 5

சேற்றெழுந்த மலர்க்கமலச் செஞ்சாலிக் கதிர்வீச
வீற்றிருந்த வன்னங்காள் விண்ணோடு மண்மறைகள்
தோற்றுவித்த திருத்தோணி புரத்தீசன் றுளங்காத
கூற்றுதைத்த திருவடியே கூடுமா கூறீரே. 6

---

5. இங்ஙனம் நாரை முதலானவற்றை இவள் வேண்ட, அவை இவளைத் திரும்பியும் பாராமல் ஒழிய, இன்னது செய்வது என்று தோன்றாத நிலையில், மாடப்புறாக்களை அழைத்துக் கூறுகிறாள். கபோதகங்காள்! உங்களைத் தொழுகின்றேன்; என் தலைவருக்கு என் நிலையை உணர்த்துங்கள் என்கின்றாள். எனை ஒருகால் பாராரே - யான் அழைத்த அளி குருகு முதலியவர்கள் என்னை ஒருமுறையும் பாராரே. அளி முதலியவற்றைப் பாரார் என உயர்திணையாற் கூறியது, பிரிவால் விளைந்த பேதமையால் ஆகும். பாங்கு - பக்கத்தில். கார் ஆரும் - கருமைநிறைந்த. கபோதகம் - மாடப்புறா. நீர் - கங்கை. கபோதகங்காள் எனப் பன்மைவாய்பாட்டால் அழைத்தது புறாக்கள் என்றும் இணைபிரியாமல் இருத்தலின். அன்றி இணைந்து வாழுகின்ற இவைகளும் என் வேண்டுகோளிற்காகப் பிரிந்து யான் அடையும் துன்பத்தை இவைகள் எய்தல் ஆகாது என்ற இரக்கத்தாலும் ஆம். தலைவனை "நீர் ஆரும் சடையார்" என்றது கங்கையாகிய ஒருத்தி எஞ்ஞான்றும் உடன் உறைவதால் அவருக்குப் பிரிவுத் துன்பம் தெரியாது; நிழலில் இருப்பவனுக்கு வெய்யிலின் கொடுமை தெரியாதவாறுபோல, என்னிலையைக் கண்ட நீங்களே சொல்லும்வன்மையால் அவரைச் செவிமடுக்கச் செய்யவேண்டும் என்று குறிப்பித்தவாறு.

6. புறாக்களும் இன்பத்தில் மூழ்கி அசையாதிருக்க, தாமரை ஆசனத்தில் இருபுறமும் செந்நெற்கதிர்களாகிய சாமரைவீச அரசபோகத்தில் இருக்கும் அன்னங்கள் இவள் கண்ணில் பட்டன. இரங்கும் பெருந்தன்மை அற்ற அவைகள் கிடக்கட்டும்; இந்த அரச அன்னமாவது என் குறையை நிறைவேற்றும் என்று எண்ணி அதனை அழைத்தாள். தனக்குப்

முன்றில்வாய் மடற்பெண்ணைக் குரம்பைவாழ் முயங்குசிறை
அன்றில்காள் பிரிவுறுநோ யறியாதீர் மிகவல்லீர்
தென்றலார் புகுந்துலவுந் திருத்தோணி புரத்துறையுங்
கொன்றைவார் சடையார்க்கென் கூர்பயலை கூறீரே. 7

பாஹறு மலர்ச்சூதப் பல்லவங்க ளவைகோதி
ஏனோர்க்கு மினிதாக மொழியுமெழி லிளங்குயிலே
தேனூரும் பொழில்புடைசூழ் திருத்தோணி புரத்தமரர்
கோனாரை யென்னிடைக்கே வரவொருகாற் கூவாயே. 8

---

*பிரிவே பெருங்காலனாக இருந்து உயிர்கொள்வதை உணர்த்தினாள். காலகாலன் திருவடியைக் கூடினால் கலக்கமில்லை என்று தெரிவித்துக்கொள்கின்றாள். விண்ணும் மண்ணும் தோற்றுவித்தல் - பொருட் பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தல். மறையைத் தோற்றுவித்தல் - சொற்பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தல்.*

*7. அன்னங்களாலும் பயன்பெறாது மயங்கிய தலைவி பனைமடலில் வாழும் அன்றிலைப்பார்த்துக்கூறுகிறாள். அவள்பார்த்த காலம் பகல் ஆதலின் அன்றில்கள் கூடிக்குலாவிக்கொண்டிருந்தன. ஆதலால் அவற்றை அழைக்கின்ற அவள் உங்களுக்குப் பிரிவுத்துன்பமே தெரியாது; ஆனாலும் மிக வல்லவர்கள்; என் பயலை நோயைக் கூறுங்கள் என்கின்றாள். மேலும் "தென்றலார் புகுந்துலவு" என இளவேனிற்காலம் வந்தமைகாரணத்தால் தான்படும் துன்பத்தை மிகுத்துக் காட்டுகின்றாள். கொன்றைவார் சடையார்க்கு என்ற குறிப்பால் என்நோயைக் கூறுகின்ற நீங்கள், அவர்சடைக்கண்ணதாகிய கொன்றை மாலையைப் பெற்றுக் கொண்டுவந்து கொடுத்தால் அது பெற்றாயினும் உய்வேன் என்று உபாயம் அறிவித்தாள். முன்றில் - வாயில். மடற் பெண்ணை - மட்டைகளோடு கூடிய பனை. குரம்பை - கூடு. முயங்கு சிறை - தழுவியிருக்கின்ற சிறகுகள். கூர் பயலை - மிக்க பசலைநோய்.*

*8. பிரிவுநோய் அறியாமையினாலே அன்னங்களும் பேசாமல் இருக்க, குரல் நயம் இன்மையால் அவரும் கேளார் என்ற எண்ணத்தால், அவரை மீட்டும் வற்புறுத்தாது குயிலைப் பார்த்துத் தலைவன்வரக் கூவாய்! என வேண்டுகின்றாள். குயில் மாந்தளிரை உண்டு, மிக இனிமையாகக் கூவும் தன்மையது*

நற்பதங்கண் மிகவறிவாய் நானுன்னை வேண்டுகின்றேன்
பொற்பமைந்த வாயலகிற் பூவைநல்லாய் போற்றுகின்றேன்
சொற்பதஞ்சேர் மறையாளர் திருத்தோணி புரத்துறையும்
விற்பொலிதோள் விகிர்தனுக்கென் மெய்ப்பயலை விளம்பாயே. 9

சிறையாரு மடக்கிளியே யிங்கேவா தேனொடுபால்
முறையாலே யுணத்தருவன் மொய்பவளத் தொடுதரளந்
துறையாருங் கடற்றோணி புரத்தீசன் றுளங்குமிளம்
பிறையாளன் றிருநாம மெனக்கொருகாற் பேசாயே. 10

---

என்று குறிக்கின்றாள். அது அங்குச்சென்று கூவினாலே போதும் அவர்மனம் மாறும் என்று எதிர்நோக்கினளாக, அளிமுதலியவற்றைப் பார்த்துப் பகராய், விளம்பாய் என வேண்டிய அவள், இதனைக் கூவாய் என்றுமட்டும் வேண்டுகிறாள். தோணிபுரத்தைப் பொழில்சூழ் தோணிபுரம் என்றது தூதுபோகின்ற குயிலுக்குத் தங்குமிடம் வசதியாய் உள்ளது என்பதை அறிவிக்க, என் இடைக்கே என்ற ஏகாரம் வந்தால் பிரியவிடாது காப்பாற்றும் பொறுப்பும் உன்னுடையதே என்று குறிப்பித்து நிற்கின்றது. சூதப் பல்லவம் - மாந்தளிர்.

9. குயிலும் வேனிற்காலத்தன்றி, பொழிலிடைத் தலைவர் வரினன்றித் தூதுசெல்லும் தரத்தன அல்ல என்பதை உட்கொண்ட தலைவி, நாகணவாய்ப்புள்ளை வேண்டுகின்றாள். நற்பதங்கள் மிக அறிவாய் - நல்ல சந்தர்ப்பத்தை நன்றாக அறிவாய். பொற்பு - அழகு. சொற்பதம் - சொல்லப்படுகின்ற பதம் என்னும் ஓதும்முறை. தலைவன் தோளும் சாமர்த்திய முமே தம்மை வசீகரித்தன என்பாள், 'தோள் விகிர்தனுக்கு' என்றாள். தம்முடைய உள்ளக் காதலை மெய்ப்பயலை பலர் அறியப் பரப்புதலின், அதனை நீக்கவேண்டியதன் இன்றியமை யாமையை எடுத்து இயம்புக என்று குறிப்பித்தாள்.

10. இங்ஙனம் சேய்மையிலும் அண்மையிலும் இருக்கின்ற பொருள்களை வேண்டிக்கொள்ள, அவை பயன்படா தொழியவே, தான்வளர்த்த கிளியையே நோக்கி, 'ஒருகால் அவர் பெயரைச் சொல்' என்று வேண்டுகின்றாள். இதுவரை தூதுவேண்டிய அவள் இப்போது கிளியிடம் பெயரை வேண்டுவது, கிளி சென்று தூதுரைத்துத் தலைவரை உடன்படுத்தி

போர்மிகுத்த வயற்றேணி புரத்துறையும் புரிசடையெங்
கார்மிகுத்த கறைக்கண்டத் திறையவனை வண்கமலத்
தார்மிகுத்த வரைமார்பன் சம்பந்த னுரைசெய்த
சீர்மிகுத்த தமிழ்வல்லார் சிவலோகஞ் சேர்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

அழைத்துவரும் வரையில் பிரிவுத்துன்பம் பொறுக்கமுடியாத அளவு பெரிதாம் என்பதை எண்ணி, தலைவனுடைய பெயரைக் கேட்கின்ற அளவிலாவது துன்பந்தோன்ருது என்ற குறிப்பின ளாக இங்ஙனம் வேண்டுகின்றுள். அங்ஙனம் சொல்வதற்குக் கைக்கூலியும் தருவதாகத் தேனெடுபால் முறையாக உணத் தருவன் என்கின்றுள்.

11. கழுமலநாதனைப்பற்றிச் சம்பந்தர் அருளிச்செய்த சிறப்பமைந்த இத்தமிழ்வல்லவர்கள் சிவலோகம் சார்வர் எனத் திருக்கடைக்காப்பு அருளுகின்றது. போர் - வைக்கோற்போர். கார் - கருமை. கமலத்தார் மிகுத்த வரை மார்பன் - தாமரை மலர் மாலை அணிந்த மலைபோன்ற மார்பை உடையவன். அந்தணர்க்கு அடையாள மாலை தாமரையாதலின் இங்ஙனம் கூறினர். பதிகங்கள்தோறும் கூறப்பெறும் இராவணனை அடர்த்த வரலாறு, புத்தர் சமணர்களைப் பற்றிய குறிப்பு இவைகள் இத்திருப்பதிகத்து இல்லாமை ஊன்றி இன்புறுதற் குரியன. சன்மார்க்க நெறியில் தலைவனும் தலைவியுமாக இறை வனும் ஆன்மாவும் ஈடுபடுகிறபோது காதல்வெள்ளத்து ஆழங் காற்படுகின்றபோது, இறைவனுடைய இன்றியமையாத் தன்மை உள்ளத்தைக் கவர்ந்துநின்றபோது இன்ப உணர்ச்சி யன்றி வேறு எதுவும் தோன்ருது என்பதற்கு இதுவே ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.

# திருச்செங்காட்டங்குடி

**பதிகவரலாறு :**

நாகை, கீழ்வேளூர் முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு பெருகிய ஞானம்பெற்ற பிள்ளையார் எழுந்தருளுகின்றபோது, இச்செய்தியைச் செவியுற்ற சிறுத்தொண்டர் ஓடிப்போய் அழைத்துவந்து திருச்செங்காட்டங்குடியைச் சேர்ப்பித்தார். சிறுத்தொண்டரோடு நட்புக்கொண்டு அங்கு எழுந்தருளியிருக்கின்றகாலத்து கணபதீச்சரம் வழிபடச்சென்றார். கோயிலை வலங்கொண்டார். அரவணிந்தார் அடிக்கீழ் வீழ்ந்து எழுந்து திருமுன் கைகூப்பி நின்று, சிறுத்தொண்டர் தொழ இருந்த பெருமையைச் சிறப்பித்து 'நறை கொண்ட மலர் தூவி' என்னும் பொங்கியெழும் இசைப்பதிகமாகிய இதனைப் பாடினார்.

**பண் - பழந்தக்கராகம்**

**பதிகம் :** **எண் 61**

திருச்சிற்றம்பலம்

நறைகொண்ட மலர்தூவி விரையளிப்ப நாடோறும்
முறைகொண்டு நின்றடியார் முட்டாமே பணிசெய்யச்
சிறைகொண்ட வண்டறையுஞ் செங்காட்டங் குடியதனுள்
கறைகொண்ட கண்டத்தான் கணபதீச் சரத்தானே. 1

வாரேற்ற பறையொலியுஞ் சங்கொலியும் வந்தியம்ப
ஊரேற்ற செல்வத்தோ டோங்கியசீர் விழவோவாச்
சீரேற்ற முடைத்தாய செங்காட்டங் குடியதனுள்
காரேற்ற கொன்றையான் கணபதீச் சரத்தானே. 2

---

1. அடியார் மணந்தரும் பூக்களைத் தூவி வழிபட இறைவன் கணபதீச்சரத்தில் எழுந்தருளியிருக்கின்றான் என்கின்றது. நறை - தேன். விரை - மணம். முறைகொண்டு - விதிப்படி. முட்டாமே - இடைவிடாமல். சிறை - சிறகு. அறையும் - ஒலிக்கும். கறை - விடம்.

2. பலவகை வாச்சிய ஒலிகள் நீங்காததும் விழா வறாததுமாகிய செங்காட்டங்குடி கணபதீச்சரத்தான் என்கின்றது.

வரந்தையான் சோபுரத்தான் மந்திரத்தான் றந்திரத்தான்
கிரந்தையான் கோவணத்தான் கிண்கிணியான் கையதோர்
சிரந்தையான் செங்காட்டங் குடியான்செஞ் சடைச்சேரும்
கரந்தையான் வெண்ணீற்றன் கணபதீச் சரத்தானே. 3

தொங்கலுங் கமழ்சாந்து மகிற்புகையுந் தொண்டர்கொண்
டங்கையாற் றொழுதேத்த வருச்சனைக்கன் றருள்செய்தான்
செங்கயல்பாய் வயலுடுத்த செங்காட்டங் குடியதனுள்
கங்கைசேர் வார்சடையான் கணபதீச் சரத்தானே. 4

பாலினு னறுநெய்யாற் பழத்தினாற் பயின்றாட்டி
நூலினன் மணமாலை கொணர்ந்தடியார் புரிந்தேத்தச்
சேலினார் வயல்புடைசூழ் செங்காட்டங் குடியதனுள்
காலினாற் கூற்றுதைத்தான் கணபதீச் சரத்தானே. 5

---

*வார் ஏற்ற பறை - வாரால் இழுத்துக் கட்டப்பெற்ற பறை. சீர் ஏற்றம் - புகழின் மிகுதி. கார் - கார்காலம்.*

*3. வரந்தை முதலிய பதிகளில் இருப்பவனும், உடுக்கை கோவணம் கிண்கிணி கபாலம் இவற்றையுடையவனும் கணபதீச்சரத்தான் என்கின்றது. வரந்தை கிரந்தை சோபுரம் என்பன ஊர்ப்பெயர்கள். மந்திரம் - வேதம். தந்திரம் - ஆகமம். கையது ஓர் சிரந்தையான் - கையின்கண்ணதாக ஓர் சிரத்தை யுடையான். சிரத்தையான் என்பது எதுகைநோக்கி மெலிந்தது. கரந்தை - சிவகரந்தை என்ற மணமுள்ள பூண்டு.*

*4. தொண்டர் அருச்சனைக் கருள்செய்தான் கணபதீச் சரத்தான் என்கின்றது. தொங்கல் - மாலை.*

*5. அடியார் பாலும் நெய்யுங்கொண்டு அபிடேகித்து மண மாலைகொண்டு வழிபடக் கூற்றுதைத்தான் இவ்வூரான் என் கின்றது. பயின்று - பலகாலும் பழகி. நூலினன் - வேதவிதிப் படி. புரிந்து - விரும்பி.*

நுண்ணியான் மிகப்பெரியா னோவுளார் வாயுளான்
தண்ணியான் வெய்யானந் தலைமேலான் மனத்துளான்
திண்ணியான் செங்காட்டங் குடியான்செஞ் சடைமதியக்
கண்ணியான் கண்ணுதலான் கணபதீச் சரத்தானே. 6

மையினுர் மலர்நெடுங்கண் மலைமகளோர் பாகமாம்
மெய்யினுன் பையரவ மரைக்கசைத்தான் மீன்பிறழச்
செய்யினு ரகன்கழனிச் செங்காட்டங் குடியதனுட்
கையினுர் கூரெரியான் கணபதீச் சரத்தானே. 7

தோடுடையான் குழையுடையா னரக்கன்றன் றோளடர்த்த
பீடுடையான் போர்விடையான் பெண்பாக மிகப்பெரியான்
சேடுடையான் செங்காட்டங் குடியுடையான் சேர்ந்தாடும்
காடுடையா னுடுடையான் கணபதீச் சரத்தானே. 8

---

6. நுண்மைக்கு நுண்ணியனுகவும், பருமைக்குப் பரியனுகவும், வருந்துவார் வாயுளானுகவும், தண்ணியனுகவும் வெம்மையனுகவும், மேலும் அகத்தும் இருப்பவனுகவும் விளங்குங் கண்ணுதலான் கணபதீச்சரத்தான் என்கின்றது. 'நுண்ணியான் மிகப் பெரியான்' என்றதும், ஈணொாணீயாநு உைஹதொ உைஹீயாநு (அணோரணீயாந் மஹதோ மஹீயாந்) என்னும் உபநிடதக் கருத்தும் ஒத்தமை காண்க. தன்னடியடைந்த அடியார்கட்குத் தண்ணியான், புறச்சமயத்தார்க்குவெய்யான், கிரியாவான்களுக்குச் சகத்திரதளபத்மத்தின் மேலதாகத் தலைமேலான், ஞானிகட்கு மனத்துளான் என்க. கண்ணி - சூடப்படும் மாலை.

7. மலைமகளை ஓர் பாகமாகக் கொண்டவன், கையில் மழு வேந்திய கணபதீச்சரத்தான் என்கின்றது. மையினுர் மலர் - நீலமலர். பையரவம் - படத்தோடு கூடிய பாம்பு. மீன் பிறழ் அச்செய்யின் ஆர் அகன் கழனி - மீன்கள் துள்ளுகின்ற அந்த வயலையும், நிறைந்த அகன்ற நீர்நிலைகளையும் (உடைய). செய் - பண்படுத்தப்பெற்ற வயல். கழனி - தானே அமைந்த விளைபுலம்.

8. தோடும் குழையும் பீடும் உடையவன் என்பது முதலாக அவன் சிறப்பியல்புகள் பலவற்றைச் செப்புகிறது. தோடு சத்தி பாகத்திற்குரியது. குழை சிவத்தின் பாகத்திற்குரியது. அரக்கன் - இராவணன், பீடு - பெருமை.

ஆனூரா வுழிதருவா னன்றிருவர் தேர்ந்துணரா
வானூரான் வையகத்தான் வாழ்த்துவார் மனத்துளான்
தேனூரான் செங்காட்டங் குடியான்சிற் றம்பலத்தான்
கானூரான் கழுமலத்தான் கணபதீச் சரத்தானே. 9

செடிநுகருஞ் சமணர்களுஞ் சீவரத்த சாக்கியரும்
படிநுகரா தயருழப்பார்க் கருளாத பண்பினன்
பொடிநுகருஞ் சிறுத்தொண்டர்க் கருள்செய்யும் பொருட்டாகக்
கடிநகராய் வீற்றிருந்தான் கணபதீச் சரத்தானே. 10

கறையிலங்கு மலர்க்குவளை கண்காட்டக் கடிபொழிலின்
நறையிலங்கு வயற்காழித் தமிழ்ஞான சம்பந்தன்
சிறையிலங்கு புனற்படப்பைச் செங்காட்டங் குடிசேர்த்தும்
மறையிலங்கு தமிழ்வல்லார் வானுலகத் திருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

9. அவன் ஏறுவதுவிடை; இடம் வான் வையகம் வாழ்த்துவார் மனம் தேனூர் கானூர் முதலியன என்கின்றது. ஆன் ஊரா ஊழிதருவான் - இடபத்தை ஏறிச் சுற்றுவான். இருவர் - அயனும் மாலும். வானூரான் - விண்ணிடமாக ஓங்கி வளர்ந்தவன். இங்ஙனம் புறத்தானே எனினும் வாழ்த்துவார் மனத்தகத்துள்ளான்.

10. புறச்சமயத்தார்க் கிருளாயிருப்பவன் சிறுத்தொண்டநாயனுர்க்கருள்வழங்க இந்நகரில் எழுந்தருளியிருக்கின்ருன் என்கின்றது. செடி - நாற்றம். சீவரம் - காவியாடை. படிநுகராது - பூமியின்கண் நுகரத்தகுவன நுகராதே, அயர் உழப்பார் - துன்பத்தைத் தாமே தேடிக்கொண்டு வருந்துபவர்கள். பொடி - விபூதி. கடி நகர் - காவல் நகரம்.

11. இத்தலத்துத்தமிழில் வல்லவர்கள் வானுலகத்திருப்பவர் என்கின்றது. கறை இலங்கு மலர் - நீலமலர். நறை - தேன். சிறை - கரை. படப்பை - பரப்பு; வயலுமாம். மறை இலங்கு தமிழ் - வேதக் கருத்துகள் விளங்கும் தமிழ்ப் பாடல்கள். வானுலகத்து இருப்பார் - புண்ணியலோகந் துய்க்கச் சென்றதேவர்கள்போலாது அயனுல்படைக்கப்பட்ட பதினெண் கணத்தவர்களில் ஒருவராக என்றும் இருப்பார்.

# திருக்கோளிலி

**பதிகவரலாறு :**

*மல்லல்நீடிய வலிவலம் வணங்கிப் போதரும் பிள்ளையார் கோளிலிப் பெரும்பதியை யடைந்து கோளிலிப்பெருமான் குரைகழலைக் கும்பிட்டு "நாளாய போகாமே" என்னும் இத்திருப்பதிகத்தைப் பாடினர்.*

**பண் - பழந்தக்கராகம்**

**பதிகம் :** **எண் 62**

*திருச்சிற்றம்பலம்*

நாளாய போகாமே நஞ்சணியுங் கண்டனுக்கே
ஆளாய வன்புசெய்வோ மடனெஞ்சே யரனாமம்
கேளாய்நங் கிளைகிளைக்குங் கேடுபடாத் திறமருளிக்
கோளாய நீக்குமவன் கோளிலியெம் பெருமானே. 1

ஆடரவத் தழகாமை யணிகேழற் கொம்பார்த்த
தோடரவத் தொருகாதன் றுணைமலர்நற் சேவடிக்கே
பாடரவத் திசைபயின்று பணிந்தெழுவார் தம்மனத்தில்
கோடரவந் தீர்க்குமவன் கோளிலியெம் பெருமானே. 2

---

*1. வாழ்நாள் வீணாளாகக் கழியாதவண்ணம், நீலகண்டனுக்கு ஆளாய் அன்பு செய்வோம்; நமக்கு மட்டுமன்று; நம்சுற்றமுங்கூட நன்மையடையும் உபாயத்தை அருளிச் செய்து கோள்களை நீக்குபவன் கோளிலிப் பெருமான் என்கின்றது. அடல் நெஞ்சே - வலிமையுடைய நெஞ்சமே. கேளாய் - கேட்பாயாக. கிளை கிளைக்கும் - சுற்றம் சுற்றத்திற்குச் சுற்றம் இவைகட்கும். கோள் - மாறுபாடு.*

*2. பாம்பாகிய நாணில் ஆமையோட்டையும், பன்றிக் கொம்பையும் கட்டியணிந்த இறைவன் திருவடியில், துதிப் பாக்களைச் சொல்லி எழுவார் மனத்துக் கோணலை நீக்கும் பெருமான் இவர் என்கின்றது. கேழல் - பன்றி. தோடு அரவம் - தோடாக உள்ள பாம்பு. பாடு அரவம் - பாட்டோசை. கோடரவம் - கோணல்.*

நன்றுநகு நாண்மலரா னல்லிருக்கு மந்திரங்கொண்
டொன்றிவழி பாடுசெய லுற்றவன்ற னேங்குயிர்மேல்
கன்றிவரு காலனுயிர் கண்டவனுக் கன்றளித்தான்
கொன்றைமலர் பொன்றிகழுங் கோளிலியெம் பெருமானே. 3

வந்தமண லாலிலிங்க மண்ணியின்கட் பாலாட்டும்
சிந்தைசெய்வோன் றன்கருமந் தேர்ந்துசிதைப் பான்வருமத்
தந்தைதனைச் சாடுதலுஞ் சண்டீச னென்றருளிக்
கொந்தணவு மலர்கொடுத்தான் கோளிலியெம் பெருமானே. 4

வஞ்சமனத் தஞ்சொடுக்கி வைகலுநற் பூசனையால்
நஞ்சமுது செய்தருளு நம்பியென வேநினையும்
பஞ்சவரிற் பார்த்தனுக்குப் பாசுபத மீந்துகந்தான்
கொஞ்சுகிளி மஞ்சணவுங் கோளிலியெம் பெருமானே. 5

---

*3. அன்றலர்ந்த புதுப்பூக்களைக்கொண்டு இருக்குவேத மந்திரங்களுடன் பூசைசெய்த மார்க்கண்டன்மேல்வந்த காலனை உதைத்து மார்க்கண்டற்கு உயிர்வழங்கிய இறைவன் இவன் என்கின்றது. நகுநாண்மலர் - மலர்ந்த புதுப்பூ. ஒன்றி - மன ஒருமைப்பாட்டுடன். கன்றி - கோபித்து. கண்டு - போகக் கண்டு.*

*4. மண்ணியாற்றங் கரையில் மணலால் இலிங்கம் தாபித்துப் பாலபிஷேகஞ்செய்த விசாரசருமர் செயலையறிந்து பூசனைக்கு இடையூறுசெய்த தந்தை எச்சதத்தனை அடித்தலும், அவருக்குச் சண்டேச பதவியைக் கொடுத்து, சூடிய மாலையும் உண்டகலமும் அருளிச் செய்தவர் இவர் என்கின்றது. சிதைப்பான் - இடற. கொந்து அணவும் மலர் - பூங்கொத்துக்களில் உள்ள மலர்.*

*5. பொறிகளை யொடுக்கித் தவஞ்செய்த விசயனுக்குப் பாசுபதம் தந்த பரமன் இவர் என்கின்றது. அஞ்சு - மெய் வாய் முதலிய பொறிகள் ஐந்து. வைகலும் - தினந்தோறும். பஞ்சவர் - பாண்டியர். பார்த்தன் - அருச்சுனன். மஞ்சு - ஆகாயம்.*

தாவியவ னுடனிருந்துங் காணாத தற்பரனை
ஆவிதனி லஞ்சொடுக்கி யங்கணனென் றாதரிக்கும்
நாவியல்சீர் நமிநந்தி யடிகளுக்கு நல்குமவன்
கோவியலும் பூவெழுகோற் கோளிலியெம் பெருமானே. 6

கன்னவிலு மால்வரையான் கார்திகழு மாமிடற்றான்
சொன்னவிலு மாமறையான் றோத்திரஞ்செய் வாயினுளான்
மின்னவிலுஞ் செஞ்சடையான் வெண்பொடியா னங்கையினில்
கொன்னவிலுஞ் சூலத்தான் கோளிலியெம் பெருமானே. 7

அந்தரத்திற் றேருரு மரக்கன்மலை யன்றெடுப்பச்
சுந்தரத்தன் றிருவிரலா லூன்றவவ னுடனெரிந்து
மந்திரத்த மறைபாட வாளவனுக் கீந்தானும்
கொந்தரத்த மதிச்சென்னிக் கோளிலியெம் பெருமானே. 8

---

6. உலகத்தைத் தாவியடைந்த திருமாலும் காணாத தற்பரன், பொறிகளையடக்கி அன்புசெய்த நமிநந்தியடிகளுக்குப் புகழைத்தந்த பெருமான் இவர் என்கின்றது. தாவியவன் - மூவுலகத்தையும் ஈரடியால் தாவியளந்த திருமால். காணாத தற்பரனை - நாயகனாகவும், ஊர்வோனாகவும், ஆண்டானாகவும், மைத்துனனாகவும், கண்டதன்றித் தற்பரன் என்று காணப் படாதவற்றிற்கெல்லாம் மேலானவனை.

7. கைலையையுடையவன், நீலகண்டன்; வேதங்களையுடையவன்; தோத்திரஞ்செய்யும் வாயில் உள்ளவன்; செஞ்சடையான்; வெண்பொடியான்; சூலத்தான் இவன் என்கின்றது. கல் நவிலும் மால்வரை எனப் பிரிக்க. கார் - கருமைநிறம். கொன் - பெருமை.

8. வானவூர்தியனாகிய இராவணன் கயிலையை எடுத்த காலத்து விரலூன்றி யடர்த்து அவன் சாமகானஞ்செய்ய அருள்செய்தவன் இவன் என்கின்றது. அந்தரம் - ஆகாயம். சுந்தரம் - அழகு. வாள் - சந்திரஹாசம் என்னும் வாள்.

சிதம்பரத்தில் :



சிவகங்கை தீர்த்தம்.

—பக்கம் - அரு

திருக்கோளிலி :



**ஸ்ரீ தியாகராஜசுவாமி கோயில்.**

(மேல்தளம்)

நாணமுடை வேதியனு நாரணனு நண்ணவொணுத்
தாணுவெனை யாளுடையான் றன்னடியார்க் கன்புடைமை
பாணனிசை பத்திமையாற் பாடுதலும் பரிந்தளித்தான்
கோணவிளம் பிறைச்சென்னிக் கோளிலியெம் பெருமானே. 9

தடுக்கமருஞ் சமணரொடு தர்க்கசாத் திரத்தவர்சொல்
இடுக்கண்வரு மொழிகேளா தீசனையே யேத்துமின்கள்
நடுக்கமிலா வமருலகந் நண்ணலுமா மண்ணல்கழல்
கொடுக்கிலா வரங்கொடுக்குங் கோளிலியெம் பெருமானே. 10

நம்பனைநல் லடியார்க ளுமுடைமா டென்றிருக்கும்
கொம்பனையாள் பாகனெழிற் கோளிலியெம் பெருமானை
வம்பமருந் தண்காழிச் சம்பந்தன் வண்டமிழ்கொண்
டின்பமர வல்லார்க ளெய்துவர்க ளீசனையே. 11

திருச்சிற்றம்பலம்

---

9. அயனும் மாலும் அறியவொண்ணுத் தாணு, பாணபத்திரன் அன்போடு பாடுதலும் அருள் சுரந்து பரிசில் பல அளித்தவன் இவன் என்கின்றது. நாணம் உடை வேதியன் - அறிய முடியாமையால் வெட்கமுற்ற பிரமன். தலைபோனமையால் வெட்கிய என்றுமாம். தாணு - நிலைத்தபொருள். பாணன் - பாணபத்திரன். பரிந்து - விரும்பி.

10. சமணர்களும் தார்க்கிகர்களும் கூறும் துன்பவார்த்தைகளைக் கேளாமல் ஈசனையே ஏத்துங்கள்; வானுலகை அடையலாம்; அரிய வரங்களையும் கொடுக்கும் என்கின்றது. தடுக்கு அமரும் - தடுக்கை ஆடையாக விரும்புகின்ற. தர்க்க சாஸ்திரிகளும் நாஸ்திகர்கள் ஆதலின் அவருரையும் கேளாதீர் என்றார்.

11. நல்ல அடியார்கள் ஒவ்வொருவரும் நம்முடைய செல்வம் என்று நம்பியிருக்கும் கோளிலிப்பெருமானை ஞானசம்பந்தன் அருளிய வண்டமிழ்கொண்டு இன்பங்கொள்ள வல்லவர்கள் ஈசனை எய்துவர் என்கின்றது. கொம்பு அனையாள் - பூங்கொம்பை ஒத்த உமாதேவி. வம்பு - மணம். இன்பு அமர - இன்பத்து இருக்க.

# திருப்பிரமபுரம்

## பல்பெயர்ப்பத்து : பண் - தக்கேசி.

**பதிகம் :** **எண் 63**

*திருச்சிற்றம்பலம்*

எரியார்மழுவொன் றேந்தியங்கை யிடுதலையேகலனு
வரியார்வளையா ரையம்வவ்வாய் மா நலம்வவ்வுதியே
சரியா நாவின் வேதகீதன் றுமறை நான்முகத்தன்
பெரியான்பிரமன் பேணியாண்ட பிரமபுரத்தானே. 1

பெயலார்சடைக்கோர் திங்கள்சூடிப் பெய்பலிக்கென்றயலே
கயலார்தடங்க ணஞ்சொனல்லார் கண்டுயில்வவ்வுதியே
இயலானடாவி யின்பமெய்தி யிந்திரனுண்மண்மேல்
வியலார்முரச மோங்குசெம்மை வேணுபுரத்தானே. 2

---

*1. பிரமபுரத்தானே! ஒருகையில் மழுவையும், ஒருகையில் கபாலத்தையும் ஏந்திக்கொண்டு மகளிரிடம் பிச்சை வாங்காது அவர்கள் அழகை வாங்குகிறீரே ஏன் என்று வினவுகிறது. எரியார் மழு - எரிதலைப் பொருந்திய மழு. வரியார்வளையார் - கோடுகளோடு கூடிய வளையலையுடைய முனிபத்தினியர். ஐயம் - பிச்சை. சரியா நாவின் என்பது முதல் பிரமன் என்பதுவரை பிரமனைக் குறிக்கும் தொடர். பிரமன் வழிபட்டதால் பிரமபுரம் எனத் தலத்திற்குப் பெயர்வந்தமை விளக்கியது.*

*2. வேணுபுரத்தானே! சடையிற் சந்திரனையும் சூடிப் பிச்சைக்கென்று புறப்பட்டு மகளிர் துயிலை வவ்வுவதேன் என்கின்றது. பெயல் - கங்கை. திங்கள் - பிறை. கயல் ஆர் - கயல் மீனை ஒத்த. நல்லார் - பெண்கள். கண் துயில் வவ்வுதியே என்றது விரக நோயால் அவர்கள் துயில் துறந்தார்கள் எனக் குறித்தது. இயலான் நடாவி - முறைப்படி நடத்தி. இந்திரன் ஆள் மண்மேல் - இந்திரன் வந்து மறைந்திருந்தாண்ட மண்ணுலகத்தில். வியல் - அகலம். இந்திரன் மூங்கிலாய் மறைந்திருந்தமையின் வேணுவனமாயிற்று எனக் காரணங் குறித்தது.*

நகலார்தலையும் வெண்பிறையு நளிர்சடைமாட்டயலே
பகலாப்பலிதேர்ந் தையம்வவ்வாய் பாய்கலைவவ்வுதியே
அகலா துறையு மாநிலத்தி லயலின்மையாலமரர்
புகலான்மலிந்த பூம்புகலி மேவியபுண்ணியனே. 3

சங்கோடிலங்கத் தோடுபெய்து காதிலொர்தாழ்குழையன்
அங்கோல்வளையா ரையம்வவ்வா யானலம்வவ்வுதியே
செங்கோனடாவிப் பல்லுயிர்க்குஞ் செய்வினைமெய்தெரிய
வெங்கோத்தருமன் மேவியாண்ட வெங்குருமேயவனே. 4

தணிநீர்மதியஞ் சூடிநீடு தாங்கியதாழ்சடையன்
பிணிநீர்மடவா ரையம்வவ்வாய் பெய்கலைவவ்வுதியே
அணிநீருலக மாகியெங்கு மாழ்கடலாலழுங்கத்
துணிநீர்பணியத் தான்மிதந்த தோணிபுரத்தானே. 5

---

3. இவ்வுலகத்தில் அடைக்கலத்தானம் வேறில்லாமையால் அமரர்கள் வந்து அடைக்கலம் புகுந்த புகலிமேவிய புண்ணியனே! கலையைக்கவர்ந்ததேன் என்கின்றது. நகல் - சிரித்தல். பகலாப்பலி - நடுவற்றபிச்சை; பகற்காலத்தியபலி என்றுமாம். ஐயம் - பிச்சை. பாய் கலை - பரந்த ஆடை. அயல் இன்மையால் - (அடைக்கலம்) வேறின்மையால். புகல் - அடைக்கலம். புகலி என்பதற்குத் தேவர்களால் அடைக்கலம் புகப்பெற்ற இடம் எனக் காரணம் விளக்கியவாறு.

4. வெங்குருமேயவனே! தோடும் குழையும் காதிற்பெய்த உமையொருபாதியனாகிய உருவத்தைக்கொண்டு மகளிரிடம் ஐயம்பெறுது நலங்கவர்ந்தது ஏன் என்கின்றது. சங்கோடு இலங்க - சங்க குண்டலத்தோடு விளங்க. அம் கோல் வளையார் - அழகிய திரண்ட வளையலையுடையவர்கள். ஐயம் வவ்வாயால் - பிச்சையை ஏற்காய். ஆல் அசை. நடாவி - நடத்தி. வெங்கோ தருமன் செங்கோல் நடாவிச் செய்வினை பல்லுயிர்க்கும் மெய்தெரிய மேவி ஆண்ட வெங்குரு எனக் கூட்டுக. தருமன் செங்கோல் முறைப்படி பல உயிர்கட்கும் செய்யும் ஆட்சியின் உண்மையை அறிய வெங்குரு எனப் பெயர் பெற்றது எனக் காரணம் விளக்கியது.

5. உலகம் கடலுள் ஆழ்ந்தகாலத்து மிதந்த தோணிபுரத்தானே! மகளிரிடம் ஐயம் ஏற்காது உடுத்த ஆடையை வவ்விய தேன் என்கின்றது. தணிநீர் மதியம் - கீழ்ப்படிந்த தன்மையை

கவர்பூம்புனலுந் தண்மதியுங் கமழ்சடைமாட்டயலே
அவர்பூம்பலியோ டையம்வவ்வா யானலம்வவ்வுதியே
அவர்பூணரையர்க் காதியாய வடன்மன்னனுண்மண்மேல்
தவர்பூம்பதிக ளெங்குமெங்குந் தங்குதராயவனே. 6

முலையாழ்கெழுவ மொந்தைகொட்ட முன்கடைமாட்டயலே
நிலையாப் பலிதேர்ந் தையம்வவ்வாய் நீநலம்வவ்வுதியே
தலையாய்க்கிடந்தவ் வையமெல்லாந் தன்னதொராணை நடாய்ச்
சிலையான்மலிந்த சீர்ச்சிலம்பன் சிரபுரமேயவனே. 7

---

*உடைய பிறை. பிணிநீர் மடவார் - காமநோய் வாய்ப்பட்ட மாதர்கள். ஐயம் - பிச்சை. பெய்கலை - உடுத்திய ஆடை. உலகம் எங்கும் அணி நீராகிக் கடலால் அழுங்க எனக் கூட்டுக. துணி நீர் பணிய - துணிவுகொண்ட தண்ணீர் கீழ்ப்படிய. தோணிபுரம் என்ற பெயரின் காரணம் விளக்கியது.*

*6. பூந்தராய்மேவியவனே! பலி வவ்வாயாய் அவர்கள் நலம் வவ்வுதியே என்கின்றது. வவ்வாயால் நலம் வவ்வுதியே எனப் பிரித்துப் பொருள்கொள்க. பூண் அரையர்க்கு ஆதியாய அடல் மன்னன் - மன்னர்க்கெல்லாம் முதலாகிய வலிமைமிக்க திருமால். காக்கும் மன்னர்க்கு எல்லாம் தலைவன் காத்தற்றெய்வமாகிய திருமால் என்ற ஒற்றுமைபற்றி உரைக்கப்பெற்றது. "திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேன்" என்பதும் இந்த இயைபுபற்றியே. ஆதிவராகமான திருமால் இரணியனைக் கொன்ற பழிபோகப் பூக்களைக்கொண்டு பூசித்தமையால் பூந்தராய் என அழைக்கப்பெற்றது எனத் தலப்பெயர்க்காரணம் கூறியவாறு.*

*7. சிரபுரமேயவனே! நிலையாப்பிச்சையாக ஐயம் ஏற்காது நலம் வவ்வுதியே என்கின்றது. முலை யாழ் கெழுவ - முல்லை யாழ் சுரம் ஒத்து ஒலிக்க, நிலையாப்பலி என்றது தாருகாவனத்து முனிவர்களின் ஆணவத்தையடக்க ஏற்றுக்கொண்ட பிச்சையேயன்றி நிலைத்ததன்று என்பது விளக்கிற்று. தலையே வடிவாய் (உடல் முதலியன இன்றி) உலகத்தையெல்லாம் தன்னாணையின் நடக்கச்செய்யும் சிலம்பன் என்னும் அசுரன், ராகு என்ற பெயர் தாங்கி வழிபட்ட சிரபுரம் என விளக்கியவாறு. தேவர்களுடன் கலந்து கரவாக அமுதுண்ட சிலம்பன் என்னும் அசுரனை மோகினியான திருமால் சட்டுவத்தால் வெட்ட, தலை மாத்திரமான ராகு இத்தலத்தில் பூசித்தான் என்பது வரலாறு.*

எருதேகொணர்கென் றேறியங்கை யிடுதலையேகலனாக்
கருதேர்மடவா ரையம்வவ்வாய் கண்டுயில்வவ்வுதியே
ஒருதேர்கடாவி யாரமரு ளொருபதுதேர்தொலையப்
பொருதேர்வலவன் மேவியாண்ட புறவமர்புண்ணியனே. 8

துவர்சேர்கலிங்கப் போர்வையாருந் தூய்மையிலாச்சமணும்
கவர்செய்துழலக் கண்டவண்ணங் காரிகைவார்குழலார்
அவர்பூம்பலியோ டையம்வவ்வா யானலம்வவ்வுதியே
தவர்செய்நெடுவேற் சண்டனாளச் சண்பையமர்ந்தவனே. 9

நிழலான்மலிந்த கொன்றைசூடி நீறுமெய்பூசிநல்ல
குழலார்மடவா ரையம்வவ்வாய் கோல்வளைவவ்வுதியே
அழலாயுலகங் கவ்வைதீர வைந்தலைநீண்முடிய
கழனாகரையன் காவலாகக் காழியமர்ந்தவனே. 10

---

8. இதுவும் புறவமர் புண்ணியனே மாதர் துயில் வவ்வியது ஏன் என்கின்றது. ஐயம் ஏற்பார் ஊர்தியேறிச் செல்லார் ஆகவும் "எருதைக் கொணர்க" என்று ஆணையிட்டு அதில் ஏறி. கருதேர் மடவார் - கருவைத்தேரும் மடவார்; காமினிகள். கருது ஏர் மடவார் எனப் பிரித்தலுமாம். ஒருதேரைச் செலுத்தி, பத்துத்தேரை வென்ற தேர்வல்லவனாகிய சிபியாண்ட புறவம் எனப் பெயர்க்காரணத்தைக் குறிப்பாக உணர்த்தியது. சிபியின் தசை எடைக்கு எடைபெற்ற தீக்கடவுளாகிய புறா அப்பாவம் போக வழிபட்ட தலமாதலின் புறவம் என்றாயிற்று என்பது வரலாறு.

9. புறச்சமயிகள் மனந்தேராது உழலச்செய்ததுபோல மகளிர் நலத்தையும் கொண்டனையே என்கின்றது. கலிங்கப் போர்வை - கலிங்கநாட்டில் நெய்தபோர்வை. கவர்செய்து - மனந் திரிந்து. காரிகை - அழகு. தவர்செய் நெடுவேல் சண்டன் ஆள - துளைக்கின்ற நீண்ட வேலை ஏந்திய யமனை அடக்கி ஆள. இது மார்க்கண்டேயர்க்காக யமனை உதைத்த வரலாற்றை உட்கொண்டது.

10. காழியமர்ந்தவனே, வளைகவர்ந்தனையே என்கின்றது. கோல் - திரட்சி. அழலாய் - வெதும்பி. கவ்வை - துன்பம். ஐந்தலை நீள்முடிய கழல் நாக அரையன் - ஐந்து தலையோடும் முடியோடும் கூடிய வீரக்கழலை அணிந்த காளிதன் என்னும் பாம்பு.

கட்டார்துழாயன் ருமறையா னென்றிவர்காண்பரிய
சிட்டார்பலிதேர்ந் தையம்வவ்வாய் செய்கலைவவ்வுதியே
நட்டார்நடுவே நந்தனுள நல்வினையாலுயர்ந்த
கொட்டாறுடுத்த தண்வயல்சூழ் கொச்சையமர்ந்தவனே. 11

கடையார்கொடிநன் மாடவீதிக் கழுமலவூர்க்கவுணி
நடையார்பனுவன் மாலையாக ஞானசம்பந்தனல்ல
படையார்மழுவன் மேன்மொழிந்த பல்பெயர்ப்பத்தும்வல்லார்க்
கடையாவினைக ளுலகிலுளு மமருலகாள்பவரே. 12

திருச்சிற்றம்பலம்

---

*11. திருமாலும் பிரமனும் காணுதற்கரிய சிட்டராய்ப் பலிகொள்ளாது கலைகொள்ளக் காரணம் ஏன் என்கின்றது. கட்டு ஆர் துழாயன் - கட்டுதல் பொருந்திய துளசிமாலையை யுடைய திருமால். சிட்டார் - ஒழுங்கினையுடையவர். கலை - ஆடை. நட்டாறு என்பது நட்டார் என ஆயிற்று. நந்தன் - பிரமன் மகனாகிய பராசரன். ஆள - மச்சகந்தியைப் பெண்டாள. (அப்பழி போம்படி) நல்வினையால் - அவன்செய்த பூசையால். கொட்டு ஆறு உடுத்த - மயிர்ச்சாந்துபோன்ற மணத்தையும், நல்லொழுக்கத்தையும் பொருந்தச்செய்த. உடுத்த கொச்சை எனக் கூட்டுக. இது கொச்சைவயம் என்றதன் காரணம் உணர்த்தியவாறு.*

*12. மேற்கூறிய கழுமலநகரின் பெயராகக் கூறிய பத்தையும் வல்லார்க்கு இவ்வுலகில் தீவினைபொருந்தா; தேவருலகினையும் ஆள்வர் எனப் பயன்கூறுகிறது. கடை - வாயில். கவுணி - கவுணியகோத்திரத்து உதித்தவர். பல்பெயர்ப் பத்தும் - பத்தின் மேலும் பலவாகிய பெயர். அமரர் உலகு அமருலகாயிற்று.*

# திருப்பூவணம்

***பதிகவரலாறு :***

*திருப்புத்தூரை வணங்கிப் பதிகம்பாடி எழுந்தருளும் பிள்ளையார், புற்றில்வாழ் அரவம்பூண்ட பெருமான் எழுந் தருளியுள்ள திருப்பூவணத்தைச் சேர்ந்தார். 'அறையார் புனலும்' என்னும் இப்பதிகத்தை யருளினர்.*

**பண் - தக்கேசி**

**பதிகம் :** **எண் 64**

*திருச்சிற்றம்பலம்*

அறையார்புனலு மாமலரு மாடரவார்சடைமேல்
குறையார்மதியுஞ் சூடிமாதோர் கூறுடையானிடமாம்
முறையார்முடிசேர் தென்னர்சேரர் சோழர்கடாம்வணங்கும்
திறையாரொளிசேர் செம்மையோங்குந் தென்றிருப்பூவணமே. 1

மருவார்மதின்மூன் றொன்றவெய்து மாமலையான்மடந்தை
ஒருபால்பாக மாகச்செய்த வும்பர்பிரானவனூர்
கருவார்சாலி யாலைமல்கிக் கழன்மன்னர்காத்தளித்த
திருவான்மலிந்த சேடர்வாழுந் தென்றிருப்பூவணமே. 2

---

*1. புனலும், ஆத்திமலரும், மதியும் சூடிய உமையொரு பாகன் இடம் பூவணம் என்கின்றது. அறை - பாறை. ஆ - ஆச்சா (ஆத்தி.) குறையார்மதி - பிறைமதி. தென்னர் - பாண் டியர். திறை - கப்பம். செம்மை - ஒழுங்கு.*

*2. திரிபுரம் எரித்துத் தேவியை ஒருபாகம் வைத்தவனூர் இது என்கின்றது. மருவார் - பகைவர். உம்பர்பிரான் - தேவ தேவன். கருவார் சாலி - கருக்கொண்ட நெல். திரு - செல்வம். சேடர் - பெருமையுடையவர்.*

போரார்மதமா வுரிவைபோர்த்துப் பொடியணிமேனியனுக்
காரார்கடலி னஞ்சமுண்ட கண்ணுதல்விண்ணவனூர்
பாரார்வைகைப் புனல்வாய்பரப்பிப் பன்மணிபொன்கொழித்துச்
சீரார்வாரி சேரநின்ற தென்றிருப்பூவணமே. 3

கடியாரலங்கற் கொன்றைசூடிக் காதிலோர்வார்குழையன்
கொடியார்வெள்ளை யேறுகந்த கோவணவன்னிடமாம்
படியார்கூடி நீடியோங்கும் பல்புகழாற்பரவச்
செடியார்வைகை சூழநின்ற தென்றிருப்பூவணமே. 4

கூரார்வாளி சிலையிற்கோத்துக் கொடிமதில் கூட்டழித்த
போரார்வில்லி மெல்லியலாளோர் பான்மகிழ்ந்தானிடமாம்
ஆராவன்பிற் றென்னர்சேரர் சோழர்கள்போற்றிசைப்பத்
தேரார்வீதி மாடநீடுந் தென்றிருப்பூவணமே. 5

நன்றுதீதென் றொன்றிலாத நான்மறையோன்கழலே
சென்றுபேணி யேத்தநின்ற தேவர்பிரானிடமாம்
குன்றிலொன்றி யோங்கமல்கு குளிர்பொழில்சூழ்மலர்மேல்
தென்றலொன்றி முன்றிலாருந் தென்றிருப்பூவணமே. 6

---

*3. யானையை யுரித்துப்போர்த்து, பொடியணிந்து, நஞ்சுண்டு விளங்கும் கண்ணுதற் பெருமானூர் இது என்கின்றது. போர் ஆர் மதமா - சண்டைசெய்யும் மதயானை. உரிவை - தோல். கண் நுதல் - நெற்றிக்கண்ணை யுடையவன். பார் ஆர் - பூமியிற் பொருந்திய. வாய் - வாய்க்கால். வாரி - நீர்.*

*4. கொன்றையணிந்து, காதில் குழைவிளங்க இடபக் கொடி ஏந்திய கோவணாண்டி இடம் இது என்கின்றது. கடி - மணம். அலங்கல் - மாலை. படியார் - பூமியிலுள்ள மக்கள். செடி ஆர் வைகை - புதர் நிறைந்த வைகை.*

*5. திரிபுரம் எரித்த வில்லாளியாய் உமையொரு பாகங் கொண்டானிடம் இது என்கின்றது, சிலை - வில். கூட்டழித்த - ஒருசேர அழித்த. ஆரா அன்பில் - போதும் என்றமையாத அன்பொடு.*

*6. நல்லது தீது இரண்டையுங்கடந்த பெருமான், எல்லோரும் ஏத்தநின்ற பெருமான் இடம் இது என்கின்றது.*

பைவாயரவ மரையிற்சாத்திப் பாரிடம்போற்றிசைப்ப
மெய்வாய்மேனி நீறுபூசி யேறுகந்தானிடமாம்
கைவாழ்வளையார் மைந்தரோடுங் கலவியினுனெருங்கிச்
செய்வார்தொழிலின் பாடலோவாத் தென்றிருப்பூவணமே. 7

மாடவீதி மன்னிலங்கை மன்னனைமாண்பழித்துக்
கூடவென்றி வாள்கொடுத்தாள் கொள்கையினார்க்கிடமாம்
பாடலோடு மாடலோங்கிப் பன்மணிபொன்கொழித்து
ஓடிநீரால் வைகைசூழு முயர்திருப்பூவணமே. 8

பொய்யாவேத நாவினானும் பூமகள்காதலனும்
கையாற்றொழுது கழல்கள்போற்றக் கனலெரியானவனூர்
மையார்பொழிலின் வண்டுபாட வைகைமணிகொழித்துச்
செய்யார்கமலந் தேனரும்புந் தென்றிருப்பூவணமே. 9

---

நன்றும் தீதும் வினையான் வருவன ஆதலின் வினையிலியாகிய பெருமானுக்கு அவ்விரண்டும் இல்லையாயிற்று. குன்றில் ஒன்றி - மலைகளிற் பொருந்தி. முன்றில் - முன்வாயிலில்.

7. பார்புடுத்துப் பூதம்போற்ற நீறுபூசி இடபமூர்ந்தவன் இடம் இது என்கின்றது. பை - படம். பாரிடம் - பூதம். கைவாழ் வளையார் - இளைய மகளிர்கள். கலவி - புணர்ச்சி. கலவிக் காலத்து நிகழ்த்தும் காதற்பாட்டு நீங்காத பூவணம் என்க.

8. இராவணனை அடக்கி ஆண்டு, வரனும் அருள்செய்த மன்னர்க்கு இடம் பூவணம் என்கின்றது. மாண்பு - சிறப்பு.

9 அயனும் மாலும் அறியொண்ணுவகை அழலுருவானவனூர் இது என்கின்றது. பொய்யா வேதம் - எக்காலத்தும் பொய்யாகாத வேதம். வேதத்தின் நித்யத்துவம் கூறியது. பொழிலில் வண்டுபாடச் செய்களிற் கமலம் தேனரும்பும் என்றது கன்று கத்தச் சுரக்கும் கறவைபோல வண்டுபாடக் கமலம் மலர்ந்து தேன்சுரக்கும் என்பதாம்.

அலையார்புனலை நீத்தவருந் தேரருமன்புசெய்யா
நிலையாவண்ண மாயம்வைத்த நின்மலன்றன்னிடமாம்
மலைபோற்றுன்னி வென்றியோங்கு மாளிகைசூழ்ந்தயலே
சிலையார்புரிசை பரிசுபண்ணுந் தென்றிருப்பூவணமே. 10

திண்ணார்புரிசை மாடமோங்குந் தென்றிருப்பூவணத்துப்
பெண்ணார்மேனி யெம்மிறையைப் பேரியலின்றமிழால்
நண்ணாருட்கக் காழிமல்கு ஞானசம்பந்தன்சொன்ன
பண்ணார்பாடல் பத்தும்வல்லார் பயில்வதுவானிடையே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10. புத்தர் சமணர் அன்புசெய்து நிலையாதவண்ணம் அவர்கட்கு மாயையைக்கூட்டிய நின்மலன் இடம் இது என்கின்றது. புனலை நீத்தவர் - நீராடாதே அதனை விலக்கிய சமணர். தேரர் - புத்தர். துன்னி - நெருங்கி. சிலையார் புரிசை - மலையை ஒத்த மதில். பரிசு - அழகு.*

*11. இந்தப் பண்ணார் பாடல் வல்லார் வானுலகிற் பயில்வார் என்கின்றது. திண் - வலிமை. நண்ணார் - பகைவர். உட்க - அஞ்ச.*

# காவிரிப்பூம்பட்டினத்துத்
# திருப்பல்லவனீச்சரம்

***பதிகவரலாறு :***

*திருவலம்புரத்தை வணங்கித் திருச்சாய்க்காடு செல்லத் திருவுளங்கொண்ட பிள்ளையார், வழியில் பல்லவனீச்சரத்தை அடைந்தார். அங்கு எழுந்தருளியுள்ள பன்னகப் பூணி னாரைப் பணிந்து போற்றி 'அடையார்தம் புரங்கள் மூன்றும்' என்னும் இப்பதிகத்தை அருளிச்செய்தார்.*

**பண் - தக்கேசி**

**பதிகம் :** **எண் 65**

*திருச்சிற்றம்பலம்*

அடையார்தம் புரங்கண்மூன்று மாரழலில்லழுந்த
விடையார்மேனி யராய்ச்சீறும் வித்தகர்மேயவிடங்
கடையார்மாட நீடியெங்குங் கங்குல்புறந்தடவப்
படையார்புரிசைப் பட்டினஞ்சேர் பல்லவனீச்சரமே. 1

எண்ணாரெயில்கண் மூன்றுஞ்சீறு மெந்தைபிரானிமையோர்
கண்ணாயுலகங் காக்கநின்ற கண்ணுதனண்ணுமிடம்
மண்ணார்சோலைக் கோலவண்டு வைகலுந்தேனருந்திப்
பண்ணார்செய்யும் பட்டினத்துப் பல்லவனீச்சரமே. 2

---

*1. திரிபுரங்கள் தீயிலழுந்தச் சீறும் வித்தகர் இடம் பல்லவனீச்சரம் என்கின்றது. அடையார் - பகைவர். விடையார் மேனியர் - இடபத்தில் ஆரோகணித்த திருமேனியார். கங்குல் - ஆகாயம். படை - மதிலுறுப்பு.*

*2. முப்புரஞ்சீறிய முதல்வன் தேவர்கட்குக் கண்ணாய் உலகம்காக்கும் கண்ணுதலும் ஆவான்; அவனது இடம் இது என்கின்றது. எண்ணார் - பகைவர். கண்ணுதல் - சிவன். மண் - பூமி. பண் ஆர் செய்யும் - பாடும்.*

மங்கையங்கோர் பாகமாக வாணிலவார்சடைமேற்
கங்கையங்கே வாழவைத்த கள்வனிருந்தவிடம்
பொங்கயஞ்சேர் புணரியோத மீதுயர்பொய்கையின்மேற்
பங்கயஞ்சேர் பட்டினத்துப் பல்லவனீச்சரமே. 3

தாரார்கொன்றை பொன்றயங்கச் சாத்தியமார்பகலம்
நீரார்நீறு சாந்தம்வைத்த நின்மலன்மன்னுமிடம்
போரார்வேற்கண் மாதர்மைந்தர் புக்கிசைபாடலினாற்
பாரார்கின்ற பட்டினத்துப் பல்லவனீச்சரமே. 4

மைசேர்கண்ட ரண்டவாணர் வானவருந்துதிப்ப
மெய்சேர்பொடிய ரடியாரேத்த மேவியிருந்தவிடங்
கைசேர்வளையார் விழைவினோடு காதன்மையாற்கழலே
பைசேரரவா ரல்குலார்சேர் பல்லவனீச்சரமே. 5

---

3. மங்கை ஓர்பாகத்து இருக்கவும் சடைமேற் கங்கையையும் வைத்த கள்வனிடம் இது என்கிறது. வாள் நிலவு - ஒளி பொருந்திய நிலவு. பொங்கு அயஞ்சேர் புணரி - மிகுந்த பள்ளம் பொருந்திய கடல். அயம் - பள்ளம். 'அயமிழியருவி' என்னுங் கலியிலும் இப்பொருட்டாதல் தெளிக. பங்கயம் - தாமரை.

4. கொன்றைசாத்திய மார்பில் நீறும் சாந்தும் சாத்திய நிமலனிடம், மாதரும் மைந்தரும் பாடலினால் பூமிக்கண் இன்பம் நுகரும் தலமாகிய இது என்கின்றது. தாரார் கொன்றை - மாலையாகவேபூக்கும் கொன்றை. போரார் வேற்கண் - போரில் பொருந்திய வேல்போலும் கண்.

5. நீலகண்டரும், நீறு பூசியவருமாகிய சிவபெருமான் அடியார்கள் ஏத்த அமர்ந்திருந்த இடம் இத்தலம் என்கின்றது. மை - விடம். மேவி - விரும்பி. கைசேர் வளையாராகிய அல்குலார், ஆசையோடும் காதலோடும் கழலைச்சேரும் பல்லவனீச்சரம் எனக்கூட்டிப் பொருள் காண்க. விழைவு - பற்று. காதல் - பற்று முற்றி இன்றியமையாத் தன்மையால் எழுந்த விருப்புள்ளம். பை - படம்.

குழலினோசை வீணைமொந்தை கொட்டமுழவதிரக்
கழலினோசை யார்க்கவாடுங் கடவுளிருந்தவிடஞ்
சுழியிலாருங் கடலிலோதந் தெண்டிரைமொண்டெறியப்
பழியிலார்கள் பயில்புகாரிற் பல்லவனீச்சரமே. 6

வெந்தலாய வேந்தன்வேள்வி வேரறச்சாடிவிண்ணோர்
வந்தெலாமுன் பேணநின்ற மைந்தன்மகிழ்ந்தவிடம்
மந்தலாய மல்லிகையும் புன்னைவளர்குரவின்
பந்தலாரும் பட்டினத்துப் பல்லவனீச்சரமே. 7

தேரரக்கன் மால்வரையைத் தெற்றியெடுக்கவவன்
றேரரக்குந் திண்முடிக ளூன்றியசங்கரனூர்
காரரக்குங் கடல்கிளர்ந்த காலமெலாமுணரப்
பாரரக்கம் பயில்புகாரிற் பல்லவனீச்சரமே. 8

அங்கமாறும் வேதநான்கு மோதுமயனெடுமால்
தங்கணுலு நேடநின்ற சங்கரன்றங்குமிடம்
வங்கமாரு முத்தமிப்பி வார்கடலூடலைப்பப்
பங்கமில்லார் பயில்புகாரிற் பல்லவனீச்சரமே. 9

---

*6. குழல் முதலிய வாத்தியங்கள் ஒலிக்க ஆடுங்கடவுள் அமர்ந்த இடம் இத்தலம் என்கின்றது. மொந்தை என்பது ஒருவகைப் பறையாதலின் கொட்ட என்றார். பயில் புகார் - பழகுகின்ற காவிரிப்பூம்பட்டினம்.*

*7. தக்கன் யாகத்தை அழித்துத் தேவரெல்லாரும் வழிபடநின்ற இறைவனது இடம் இத்தலம் என்கின்றது. மந்தல் - மென்மை.*

*8. இராவணன் முடிகள்நெரியத் தாளூன்றிய சங்கரன் ஊர் இத்தலம் என்கின்றது. தெற்றி எடுக்க - பெயர்த்து எடுக்க. தார் அரக்கும் - மாலைகள் அழுத்துகின்ற, அரக்குதல் - பதித்தல். கார் அரக்கும் - மேகங்கள் முகக்கும். பாரர் அக்கம் பயில் புகார் - மக்கள் உருத்திராக்கங்களைப்பயில்கின்ற காவிரிப் பூம்பட்டினம்.*

*9. வேதனும் நெடுமாலும் கண்ணால் தேடநின்ற பெருமான் உறையுமிடம் இது என்கின்றது. கண்ணாலும் என்ற உம்மை*

உண்டுடுக்கை யின்றியேநின் றூர்நகவேதிரிவார்
கண்டுடுக்கை மெய்யிற்போர்த்தார் கண்டறியாதவிடந்
தண்டுடுக்கை தாளந்தக்கை சாரநடம்பயில்வார்
பண்டிடுக்கண் டீரநல்கும் பல்லவனீச்சரமே. 10

பத்தரேத்தும் பட்டினத்துப் பல்லவனீச்சரத்தெம்
அத்தன்றன்னை யணிகொள்காழி ஞானசம்பந்தன்சொற்
சித்தஞ்சேரச் செப்புமாந்தர் தீவினைநோயிலராய்
ஒத்தமைந்த வும்பர்வானி லுயர்விறெடோங்குவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*கருத்தால் தேட வேண்டியதை அவர்கள் அறியாமையால் கண்ணால்தேட, அதற்கும் வெளிப்பட்டு நின்ற இறைவன் என உயர்வைச் சிறப்பித்து நின்றது. வங்கம் - கப்பல்.*

*10. நிறையத்தின்று ஆடையின்றியே திரியும் சமணரும், ஆடையைப் போர்த்துத் திரியும் புத்தரும் கண்டறியாத இடம் இது என்கின்றது முன்னிரண்டடியிலுள்ள உடுக்கை என்பது ஆடை என்ற பொருளிலும், மூன்றாமடியில் உள்ள உடுக்கை என்பது வாத்தியம் என்னும் பொருளிலும் வந்துள்ளன. இடுக்கண் - துன்பம்.*

*11. சம்பந்தன் பல்லவனீச்சரத்துப் பல்லவனநாதரைத் தோத்திரித்த இப்பாடல் பத்தையும் மனம் ஊன்றிச் சொல்லும் மக்கள் தீவினையும் நோயும் இலராய் வானுலகில் வாழ்வார் என்கின்றது.*

# திருச்சண்பைநகர்

பண் - தக்கேசி

பதிகம் : எண் 66

*திருச்சிற்றம்பலம்*

பங்கமேறு மதிசேர்சடையார் விடையார்பலவேதம்
அங்கமாறு மறைநான்கவையு மானார்மீனும்
வங்கமேவு கடல்வாழ்பரதர் மனைக்கேநுனைமூக்கின்
சங்கமேறி முத்தமீனுஞ் சண்பைநகராரே. 1

சூதகஞ்சேர் கொங்கையாளோர் பங்கர்சுடர்க்கமலப்
போதகஞ்சேர் புண்ணியனூர் பூதகண நாதர்
மேதகஞ்சேர் மேகமந்தண் சோலையில்விண்ணார்ந்த
சாதகஞ்சேர் பாளைநீர்சேர் சண்பைநகராரே. 2

---

*1. கூன்பிறையணிந்த சடையாரும், விடையாரும், வேதம் அங்கம் ஆறும் சண்பைநகரார் என்கின்றது. பங்கம் - கூனல்; குற்றம் என்பாரும் உளர். சிவன்சடைசேரத் தகும் பிறைக்குக் குற்றமின்மை தெளிவு. வங்கம் - தோணி. பரதர் - செம்படவர். நுனை மூக்கின் சங்கம் - கூரிய மூக்கினையுடைய சங்குகள். கடல் வாழ் சங்கு பரதர்மனை யேறி முத்தமீனும் என்றது பிறவிக் கடலில் ஆழ்வாரும் வினைநீங்கும் காலம்வரின் சண்பைநகர் சார்ந்து பேரின்பம் எய்துவர் என்று குறிப்பித்தவாறு.*

*2. உமையொருபாகர், செங்கமலப்போதில் வீற்றிருக்கும் புண்ணியனூர் சண்பையார் என்கின்றது. சூதகம் சேர் - சூதாடுங் காயை ஒத்த. பங்கர் - பாகத்தையுடையவர். சுடர் கமலப் போது அகஞ்சேர் - ஒளிவிடுகின்ற செந்தாமரையில் எழுந்தருளியுள்ள. மேதகம் - மேன்மை. விண்ணார்ந்த - மேகநீரையுண்ட. சாதகம் - சாதகப்புள். பாளை நீர்சேர் - தென்னை கமுகு முதலியவற்றின் பாளைகளில் தேன்சேர்ந்த.*

மகரத்தாடு கொடியோ னுடலம் பொடிசெய்தவனுடைய
நிகரொப்பில்லாத் தேவிக்கருள்செய் நீலகண்டனூர்
பகரத்தாரா வன்னம்பகன்றில் பாதம்பணிந்தேத்தத்
தகரப்புன்னை தாழைப்பொழில்சேர் சண்பைநகராரே. 3

மொய்வல்லசுரர் தேவர்கடைந்த முழுநஞ்சதுவுண்ட
தெய்வர்செய்ய வுருவர்கரிய கண்டர்திகழ்சுத்திக்
கையர்கட்டங் கத்தர்கரியி னுரியர்காதலாற்
சைவர்பாசு பதர்கள்வணங்குஞ் சண்பைநகராரே. 4

கலமார்கடலுள் விடமுண்டமரர்க் கமுதமருள்செய்த
குலமார்கயிலைக் குன்றதுடைய கொல்லையெருதேறி
நலமார்வெள்ளை நாளிகேரம் விரியா நறும்பாளை
சலமார்கரியின் மருப்புக்காட்டுஞ் சண்பைநகராரே. 5

---

3. மன்மதனை எரித்து, அவன் மனைவியாகிய இரதிக்கு அருள் செய்தவன் சண்பையான் என்கின்றது. மகரத்து ஆடு கொடியோன் - மகரமீன் எழுதிய வெற்றிபொருந்திய கொடியுடையோன். நிகர் ஒப்பு: ஒருபொருட் பன்மொழி. தேவி என்றது இரதியை. அவளுக்குமட்டும் மன்மதனை எழுப்பித் தந்ததை உணர்த்துவது. தாரா - சிறுநாரை. பகன்றில் - அன்றில். தகரப்புன்னை - தகரமும் புன்னையும்.

4. நஞ்சமுது செய்த தெய்வர், செய்யர், கண்டங்கரியர், சுத்திக்கையர், மழுப்படையர் சண்பைநகரார் என அடையாளம் அறிவிக்கின்றது. கட்டங்கம் - கத்தி. சுத்தி - மழு.

5. தான் நஞ்சுண்டு அமரர்க்கு அமுதம் அருள் செய்தவர் சண்பையார் என்கின்றது. கொல்லை எருது - முல்லை நிலத்து இடபம். நாளிகேரம் - தென்னை. நாளிகேரம் வெள்ளை விரியா நறும்பாளை கரியின் மருப்புக்காட்டும் எனக்கூட்டுக. கரியின் மருப்பு - யானைக்கொம்பு. சலம் - வஞ்சனை. யானைக்கபடம் என்பது வழக்காதலின் சலமார் யானை என்றார்.

மாகரஞ்சே ரத்தியின்றேல் போர்த்துமெய்ம்மாலான்
சூகரஞ்சே ரெயிறுபூண்ட சோதியன்மேதக்க
ஆகரஞ்சே ரிப்பிமுத்தை யந்தண்வயலுக்கே
சாகரஞ்சேர் திரைகளுந்துஞ் சண்பைநகராரே. 6

* * * * 7

இருளைப்புரையு நிறத்திலரக்கன் றனையீடழிவித்து
அருளைச்செய்யு மம்மானேரா ரந்தண்கந்தத்தின்
மருளைச்சுரும்பு பாடியளக்கர் வரையார்திரைக்கையாற்
றரளத்தோடு பவளமீனுஞ் சண்பைநகராரே. 8

மண்டான்முழுது முண்டமாலு மலர்மிசைமேலயனும்
எண்டானறியா வண்ணநின்ற விறைவன்மறையோதி
தண்டார்குவளைக் கள்ளருந்தித் தாமரைத்தாதின்மேற்
பண்டான்கொண்டு வண்டுபாடுஞ் சண்பைநகராரே. 9

---

*6. யானைத்தோலைப் போர்த்துப் பன்றிக் கொம்பை அணிந்த சோதியான் சண்பையான் என்கின்றது. மா கரம் - பெரிய கை. அத்தி - யானை. சூகரம் - பன்றி. ஆகரம் - கடல். திரைகள் முத்தை வயலுக்கே உந்தும் சண்பை என்க.*

*8. இராவணனை ஈடழித்து, ஈடேற்றும் அம்மான் இவர் என்கின்றது. ஈடு - பெருமை. ஏரார் - அழகிய. மருளைச் சுரும்பு பாடி - மருள் என்னும் பண்ணை வண்டு பாடி. அளக்கர் - கடல். வரை ஆர் திரை - மலையையொத்த அலை. தரளம் - முத்து.*

*9. மண்ணுண்ட மாலும் மலரோனும் அறியாவண்ணம் நின்ற இறையோன் சண்பைநகரார் என்கின்றது. எண் தான் அறியா - எள்ளளவும் அறியாத. வண்டு குவளைத் தேனை அருந்தித் தாமரையின் மகரந்தத்தை உண்டு பாடும் சண்பைநகர் என்க.*

போதியாரும் பிண்டியாரும் புகழலசொன்னாலும்
நீதியாகக் கொண்டங்கருளு நிமலனிருநான்கின்
மாதிசித்தர் மாமறையின் மன்னியதொன் னூலர்
சாதிகீத வர்த்தமானர் சண்பைநகராரே. 10

வந்தியோடு பூசையல்லாப் போழ்தின்மறைபேசிச்
சந்திபோதிற் சமாதிசெய்யுஞ் சண்பைநகர்மேய
அந்திவண்ணன் றன்னையழகார் ஞானசம்பந்தன்சொற்
சிந்தைசெய்து பாடவல்லார் சிவகதிசேர்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10. புறச்சமயிகள் இகழ்ந்து பேசினாலும் அவற்றைப் புகழாகக் கொண்டருளும் சண்பைநகரார் இவர் என்கின்றது. போதியார் - புத்தர். பிண்டியார் - சமணர். மாதி சித்தர் - அணிமாதி சித்திகளை உடையவர். சாதி கீத வர்த்த மானர் - சகாரம் முதலாகப் பாடப்படுகின்ற பாட்டில் நிலைத்திருப்பவர்.*

*11. சண்பைநகர்ச் சிவபெருமானைப் பற்றிச்சொன்ன ஞானசம்பந்தனது சொல்லைத் தியானத்தோடு பாடவல்லார்கள் சிவகதிசேர்வர் என்கின்றது. வந்தி - வந்திக்கத்தக்கவளாகிய உமாதேவி. மறை - இரகசியம். சந்தி - காலை மாலை. இறைவன் பூசைக்காலமல்லாத காலங்களில் அம்மையோடு, வேதவிசாரணை செய்து சந்தியாகாலங்களில் சமாதி செய்கின்றார் என்ற அநுபவம் அறிவிக்கப்படுகிறது.*

# திருப்பழனம்

***பதிகவரலாறு :***

*திருவடகுரங்காடுதுறையில் வாலியார் வழிபட்ட அருமையை யமைத்துப் பாடிப்பரவி, பிற தலங்களையும் வழிபட எழுந்தருளிய காழிவேந்தர், முத்தலைச் சூலம் ஏந்திய முதல்வர் எழுந்தருளிய திருப்பழனத்தைச் சேர்ந்தார். கோயிலைக் குறுகி உருகிய மனத்துடன் திருப்பழனநாதரை வணங்கி 'வேதமோதி' என்னும் இப்பதிகத்தை அருளிச்செய்தார். இதனை 'விழைசொற் பதிகம்' என விசேடிப்பர் சேக்கிழார் பெருமானார்.*

**பண் - தக்கேசி**

**பதிகம் :** **எண் 67**

*திருச்சிற்றம்பலம்*

வேதமோதி வெண்ணூல்பூண்டு வெள்ளையெருதேறிப்
பூதஞ்சூழப் பொலியவருவார் புலியினுரிதோலார்
நாதாவெனவு நக்காவெனவு நம்பாவெனநின்று
பாதந்தொழுவார் பாவந்தீர்ப்பார் பழனநகராரே. 1

கண்மேற்கண்ணுஞ் சடைமேற்பிறையு முடையார்காலனைப்
புண்ணாருதிர மெதிராறோடப் பொன்றப்புறந்தாளால்
எண்ணாதுதைத்த வெந்தைபெருமா னிமவான்மகளோடும்
பண்ணார்களிவண் டறைபூஞ்சோலைப் பழனநகராரே. 2

---

*1. நாதா நக்கா எனத் தோத்திரிப்பவர்களின் பாவந்தீர்ப்பவர் பழனநகரார் என்கின்றது. நக்கன் - நிர்வாணி. நம்பன் - நம்பப்படத்தக்கவன்.*

*2. காலனை இரத்த ஆறு பெருக்கெடுத்தோடப் புறந்தாளால் உதைத்த பெருமான் பழனநகரார் என்கின்றது. இதுவும் ஆபத்சகாயர் என்ற இத்தலத்திறைவனுக்கேற்ற செயலாதல் அறிக. கண்மேல் கண் - நெற்றிக்கண். புண்ணார் உதிரம் - புண்ணை வழியாகக்கொண்டு வெளிப்படுகின்ற இரத்தம். பொன்ற - இறக்க. எண்ணாது - அவனை ஒரு பொருளாக மனத்து எண்ணாது.*

பிறையும்புனலுஞ் சடைமேலுடையார் பறைபோல்விழிகட்பேய்
உறையுமயான மிடமாவுடையா ருலகர்தலைமகன்
அறையுமலர்கொண் டடியார்பரவி யாடல்பாடல்செய்
பறையுஞ்சங்கும் பலியுமோவாப் பழனநகராரே. 3

உரமன்னுயர்கோட் டுலறுகூகை யலறுமயானத்தில்
இரவிற்பூதம் பாடவாடி யெழிலாரலர்மேலைப்
பிரமன்றலையி னறவமேற்ற பெம்மானெமையாளும்
பரமன்பகவன் பரமேச்சுவரன் பழனநகராரே. 4

குலவெஞ்சிலையான் மதின்மூன்றெரித்த கொல்லேறுடையண்ணல்
கலவமயிலுங் குயிலும்பயிலுங் கடல்போற்காவேரி
நலமஞ்சுடைய நறுமாங்கனிகள் குதிகொண்டெடிருந்திப்
பலவின்கனிக டிரைமுன்சேர்க்கும் பழனநகராரே. 5

---

*3. கங்கையும் பிறையும் சூடியவர், மயானத்துறைபவர் பழனத்தார் என்கின்றது. அறையும் - ஒலிக்கின்ற. அடியார் பரவி, பாடல்செய் ஓவாப் பழனம் எனக் கூட்டுக.*

*4. மயானத்துப் பூதம் பாட, நள்ளிருளில் நட்டமாடுபவர் இந்நாதர் என்கின்றது. உரம் - வலிமை. உலறு கோட்டு - வற்றிய கிளைகளில். கூகை - கோட்டான். அலர் மேலைப் பிரமன் - தாமரைமலர்மேல் உள்ள பிரமன். நறவம் - தேன்; என்றது உணவு என்னும் பொதுமையில் நின்றது. பரமன் - உயர்ந்தவற்றிற்கெல்லாம் உயர்ந்தவன். பகவன் - ஆறு குணங்களை உடையவன்.*

*5. வில்லால் திரிபுரமெரித்த சிவன் பழனத்தான் என்கின்றது. பின்னிரண்டடிகளில் கடல்போன்ற காவிரியின் அலைகள், மாங்கனிகளையும் பலாக்கனிகளையும் எதிர் உந்திச் சேர்க்கும் பழனம் என வளங் கூறப்பெற்றுள்ளது. கடல்போற் காவேரி என்றது வற்றாமையும் பரப்பும்பற்றி. கலவம் - தோகை.*

வீளைக்குரலும் விளிச்சங்கொலியும் விழவின்னொலியோவா
மூளைத்தலைகொண் டடியாரேத்தப் பொடியாமதிளெய்தார்
ஈளைப்படுகி லிலையார்தெங்கிற் குலையார்வாழையின்
பாளைக்கமுகின் பழம்வீழ்சோலைப் பழனநகராரே. 6

பொய்யாமொழியார் முறையாலேத்திப் புகழ்வார்திருமேனி
செய்யார்கரிய மிடற்றார்வெண்ணூல் சேர்ந்தவகலத்தார்
கையாடலினார் புனலான்மல்கு சடைமேற்பிறையோடும்
பையாடரவ முடனேவைத்தார் பழனநகராரே. 7

மஞ்சோங்குயர முடையான்மலையை மாறாயெடுத்தான்றோள்
அஞ்சோடஞ்சு மாறுநான்கு மடரவூன்றினார்
நஞ்சார்சுடலைப் பொடிநீறணிந்த நம்பான்வம்பாரும்
பைந்தாமரைகள் கழனிசூழ்ந்த பழனநகராரே. 8

கடியார்கொன்றைச் சுரும்பின்மாலை கமழ்புன்சடையார்விண்
முடியாப்படிமூ வடியாலுலக முழுதுந்தாவிய
நெடியானீடா மரைமேலயனு நேடிக்காணாத
படியார்பொடியா டகலமுடையார் பழனநகராரே. 9

---

6. கையில் கபாலங்கொண்டு அடியார்கள் வழிபடநின்ற இறைவன் இந்நகரார் என்கின்றது. வீளைக் குரல் - அழைக்கும் குரல். மூளைத் தலை கொண்டு - மூளையோடுகூடிய பிரமகபாலத்தைக் கொண்டு. ஈளைப் படுகு - உலராத சேற்றோடு கூடிய ஆற்றுப்படுகை. படுகையில் தென்னை, வாழை, கமுகு இவற்றின் பழம் விழுகின்ற பழனம் என வளங்கூறியது.

7. உண்மை அடியார்களால் வணங்கி வாழ்த்தப்படுமவர் பழனத்தார் என்கின்றது. பொய்யாமொழியார் - உண்மையே பேசும் அடியார்கள். மிடற்றார் - கழுத்தினையுடையவர். அகலத்தார் - மார்பினை உடையவர். பை - படம்.

8. இராவணனது இருபது தோள்களும் வருந்த ஊன்றியவர் இவர் என்கின்றது. மஞ்சோங்கு உயரம் உடையான் - ஆகாயம் அளாவிய உயரம் உடையவன். மாறாய் - விரோதித்து. அஞ்சோடு அஞ்சும் ஆறும் நான்கும் - இருபது. அடர - நெருங்க.

9. உலகத்தை மூவடியால் அளந்த திருமாலும் அயனும் தேடிக்கண்டுபிடிக்கமுடியாத திருநீற்றழகர் இவர் என்கின்றது.

கண்டான்கழுவா முன்னேயோடிக் கலவைக்கஞ்சியை
உண்டாங்கவர்க ளுரைக்குஞ்சிறுசொல் லோரார்பாராட்ட
வண்டார்மரையின் மலர்மேனறவ மதுவாய்மிகவுண்டு
பண்டான்கெழும வண்டியாழ்செய்யும் பழனநகராரே. 10

வேய்முத்தோங்கி விரைமுன்பரக்கும் வேணுபுரந்தன்னுள்
நாவுய்த்தனைய திறலான்மிக்க ஞானசம்பந்தன்
பேசற்கினிய பாடல்பயிலும் பெருமான்பழனத்தை
வாயிற்பொலிந்த மாலைபத்தும் வல்லார்நல்லாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*கடி - மணம். சுரும்பு - வண்டு. விண்முடியாப்படி - விண்ணை முடிவாகக் கொண்ட பூமி. நெடியான் - திருவிக்கிரமனாகிய திருமால். நேடி - தேடி. காணுதபடி ஆர் பொடி ஆடு அகல முடையார் எனப் பிரித்து அவர்கள் காணுதவண்ணம் நிறைந்த திருநீற்ருேடு அளாவிய மார்பை உடையவர் எனப் பொருள் காண்க.*

*10. கண்ணைக்கூடக் கழுவாது கஞ்சிகுடிக்கும் புறச்சமயிகளுடைய சிறுசொல்லை ஓராத அடியார்கள் பாராட்ட இருப்பவன் பழனத்தான் என்கின்றது. கலவைக்கஞ்சி - கலந்த கஞ்சி. வண்டு நறவமது உண்டு பண்கெழும யாழ்செய்யும் பழனம் எனக் கொண்டு கூட்டுக.*

*11. பேசற்கு இனிய இப்பாடல் பத்தையும் வல்லார் நல்லார் என்கின்றது. வேய் முத்து - மூங்கில் தோன்றிய முத்து. விரை - மணம்.*

# திருக்கயிலாயம்

*பதிகவரலாறு :*

*திருக்காளத்தியைத் தொழுது பாடிய காழிப்பிள்ளையார், அதற்கு அப்பால் வடக்கிலும் மேற்கிலும் தமிழ் வழங்கும் நாடின்மையால், காளத்தியிலிருந்தபடியே தேவர் வழிபாடு செய்யும் திருக்கயிலையை நினைந்து 'பொடிகொள் உருவர்' என்னும் இப்பதிகத்தை அருளிச்செய்தார்.*

**பண் - தக்கேசி**

**பதிகம் :** **எண் 68**

*திருச்சிற்றம்பலம்*

பொடிகொளுருவர் புலியினதள்ர் புரிநூறிகழ்மார்பில்
கடிகொள்கொன்றை கலந்தநீற்றர் கறைசேர்கண்டத்தர்
இடியகுரலா லிரியுமடங்க லொடுங்குமுனைச்சாரல்
கடியவிடைமேற் கொடியொன்றுடையார் கயிலைமலையாரே. 1

புரிகொள்சடைய ரடியர்க்கெளியார் கிளிசேர்மொழிமங்கை
தெரியவுருவில் வைத்துகந்த தேவர்பெருமானர்
பரியகளிற்றை யரவுவிழுங்கி மழுங்கவிருள்கூர்ந்த
கரியமிடற்றர் செய்யமேனிக் கயிலைமலையாரே. 2

---

*1. கயிலைநாதனின் திருமேனிப்பூச்சு, உடை, ஆடை, அணி, ஊர்தி முதலியவற்றைக் கூறுகின்றது. பொடி - விபூதி. அதள் - தோல். பொடிகொள் உருவர் என்றது திருமேனி முழுதும் பூசப்பட்டதைக் குறித்தது. நீற்றர் என்பது மார்பில் அணிந்ததைக் குறித்தது. கறை - விடம். இடிய குரலால் - இடிக்குரலால். இரியும் - அஞ்சி இரங்குகின்ற. மடங்கல் - சிங்கம். கடிய விடை - வேகமான இடபம்.*

*2. இதுவும் அது. கிளிசேர் மொழி மங்கை - கிளியை யொத்த மொழியினை உடைய உமாதேவி. தெரிய - விளங்க. பரியகளிற்றை அரவு விழுங்கி மழுங்க இருள்கூர்ந்த கயிலை - பெரிய யானையை மலைப்பாம்பு விழுங்கி மறைய இருள்மிகுந்த கயிலை.*

மாவினுரிவை மங்கைவெருவ மூடிமுடிதன்மேல்
மேவுமதியு நதியும்வைத்த விறைவர்கழலுன்னும்
தேவர்தேவர் திரிசூலத்தர் திரங்கன்முகவன்சேர்
காவும்பொழிலுங் கடுங்கற்சுனைசூழ் கயிலைமலையாரே. 3

முந்நீர்சூழ்ந்த நஞ்சமுண்ட முதல்வர்மதனன்றன்
தென்னீருருவ மழியத்திருக்கண் சிவந்தநுதலினார்
மன்னீர்மடுவும் படுகல்லறையி னுழுவைசினங்கொண்டு
கன்னீர்வரைமே லிரைமுன்தேடுங் கயிலைமலையாரே. 4

ஒன்றும்பலவு மாயவேடத் தொருவர்கழல்சேர்வார்
நன்றுநினைந்து நாடற்குரியார் கூடித்திரண்டெங்கும்
தென்றியிருளிற் றிகைத்தகரிதண் சாரனெறியோடிக்
கன்றும்பிடியு மடிவாரஞ்சேர் கயிலைமலையாரே. 5

தாதார்கொன்றை தயங்குமுடியர் முயங்குமடவாளைப்
போதார்பாக மாகவைத்த புனிதர்பனிமல்கும்
மூதாருலகின் முனிவருடனு யறநான்கருள்செய்த
காதார்குழையர் வேதத்திரளர் கயிலைமலையாரே. 6

---

3. இதுவும் அது. மங்கை வெருவ மாவின் உரிவை மூடி - உமாதேவியார் அஞ்ச யானைத்தோலைப் போர்த்து. கழல் உன்னும் - திருவடியைத் தியானிக்கின்ற. திரங்கல் முகவன் - குரங்குகள்.

4. தென் நீர் உருவம் - அழகிய நீர்மையோடு கூடிய வடிவம். சிவந்த - கோபத்தாற் சிவந்த. மன்னீர் மடு - நிலைபெற்ற நீரினையுடைய சுனை, கல்லறை - குகை. உழுவை - புலி.

5. ஒன்றும் பலவும் ஆய வேடத்தார் - ஒன்றாயும் விரிந்து பலவாகியும் ஆகிய வேடத்தை உடையவர். கழல் சேர்வார் - திருவடியைத் தியானிப்பவர்கள். நன்று நினைந்து - பேரின்பத்தை விரும்பி. தென்றி - சிதறி. திகைத்த யானை மலைச் சாரல் வழியாக ஓடி, கன்றும் பிடியுமாக அடிவாரத்துச் சேரும் கயிலை என இயற்கை எடுத்துக்காட்டப்பெறுகிறது.

6. தாது - மகரந்தம். போதார் பாகம் - மெல்லிய இடப் பாகம். உலகின் மூதார் முனிவர் - உலகத்தில் மிக வயது முதிர்ந்த முனிவராகிய சனகாதியர்.

கயிலாயத்தில் :



"கரி தண்சாரல் நெறியோடிக் கன்றும் பிடியும் அடிவாரம்சேர் கயிலாயம்."

* * * *

தொடுத்தார்புரமூன் றெரியச்சிலைமே லெரியொண்பகழியார்
எடுத்தான்றிரடோண் முடிகள்பத்து மிடியவிரல்வைத்தார்
கொடுத்தார்படைகள் கொண்டாராளாக் குறுகிவருங்கூற்றைக்
கடுத்தாங்கவனைக் கழலாலுதைத்தார் கயிலைமலையாரே. 8

ஊணாப்பலிகொண் டுலகிலேற்றா ரிலகுமணிநாகம்
பூணாணார மாகப்பூண்டார் புகழுமிருவர்தாம்
பேணாவோடி நேடவெங்கும் பிறங்குமெரியாகிக்
காணாவண்ண முயர்ந்தார்போலுங் கயிலைமலையாரே. 9

விருதுபகரும் வெஞ்சொற்சமணர் வஞ்சச்சாக்கியர்
பொருதுபகரு மொழியைக்கொள்ளார் புகழ்வார்க்கணியராய்
எருதொன்றுகைத்திங் கிடுவார்தம்பா லிரந்துண்டிகழ்வார்கள்
கருதும்வண்ண முடையார்போலுங் கயிலைமலையாரே. 10

போரார்கடலிற் புனல்சூழ்காழிப் புகழார்சம்பந்தன்
காரார்மேகங் குடிகொள்சாரற் கயிலைமலையார்மேல்
தேராவுரைத்த செஞ்சொன்மாலை செப்புமடியார்மேல்
வாராபிணிகள் வானோருலகின் மருவுமனத்தாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

8. இராவணனை அடக்கி, வாள் கொடுத்தாண்டார் என்ற வரலாறு காட்டப்படுகிறது. எரிய, சிலைமேல், ஒண்பகழியார் தொடுத்தார் எனக்கூட்டுக. படை - வாள். ஆளாக்கொண்டார் - அடிமையாக ஆட்கொண்டார். கடுத்து - கோபித்து.

9. உலகில் பலி ஊணாக்கொண்டு ஏற்றார் எனக்கூட்டுக. பூண் நாண் ஆரமாக - பூணத்தகும் மாலையாக. இருவர் - பிரம விஷ்ணுக்கள்.

10. விருது - பட்டங்கள். பொருது - மோதுதல் காரணமாக. எருது ஒன்று உகைத்து - ஒரு இடபத்தில் ஏறிச்செலுத்தி.

11. கயிலைமலையாரைச் சொன்ன செஞ்சொல் மாலை வல்லார்மேல் பிணிகள் வாரா; வானோர் உலகத்தில் மருவுவர் என்கின்றது. தேரா - தெளிந்து.




# திருவண்ணுமலை

**பதிகவரலாறு :**

*திரு அறையணிநல்லூரை வழிபட்ட புகலிப் பிள்ளையார் தேவரும் முனிவரும் வணங்கும் திருவண்ணுமலையை அன்பர்கள் காட்டக் கண்டார். அண்ணுமலை, சிவனுருவாகக் காட்சி வழங்குதலும், தமது கண்களால் அக்காட்சியைப் பருகி, பெருமானை வழிபட்டு இப்பதிகத்தைப் பாடினுர்கள்.*

**பண் - தக்கேசி**

**பதிகம் :** **எண் 69**

*திருச்சிற்றம்பலம்*

பூவார்மலர்கொண் டடியார்தொழுவார் புகழ்வார்வானேர்கள்
மூவார்புரங்க ளெரித்தவன்று மூவர்க்கருள்செய்தார்
தூமாமழைநின் றதிரவெருவித் தொறுவின்னிரையோடும்
ஆமாம்பிணைவந் தணையுஞ்சார லண்ணுமலையாரே. 1

மஞ்சைப்போழ்ந்த மதியஞ்சூடும் வானேர்பெருமானுர்
நஞ்சைக்கண்டத் தடக்குமதுவு நன்மைப்பொருள்போலும்
வெஞ்சொற்பேசும் வேடர்மடவா ரிதணமதுவேறி
அஞ்சொற்கிளிக ளாயோவென்னு மண்ணுமலையாரே. 2

---

*1 அடியார்கள் மலர்கொண்டு அடிவணங்குவார்கள்; தேவர்கள் தோத்திரிப்பார்கள் ; இங்ஙனமாகத் திரிபுரம் எரித்த பெருமான் அண்ணுமலையார் ஆவர் என்கின்றது. பூ ஆர் மலர் - போதும் விரிந்த பூவும். மூவார் - அழியாதவர்கள். மூவர் - திரிபுராதிகள். தொறுவின் நிரையோடும் - மந்தை வரிசையோடும். ஆமாம் பிணை - காட்டுப்பசுக்கள்.*

*2 அண்ணுமலையாராகிய பிறை சூடிய பெருமான் நஞ்சை யுண்டதும் நன்மைகருதியேயாம் என்கின்றது. மஞ்சு - மேகம். வெஞ்சொல் பேசும் வேடர் - பிடி எறி குத்து கொல்லு என்ற கொடிய சொற்களையே பேசுகிற வேடர்கள். மடவார் - வேட்டுவத்தி. இதணம் - பரண். ஆயோ என்பது கிளி ஓட்டும் ஒலிக் குறிப்பு.*

ஞானத்திரளாய் நின்றபெருமா னல்லவடியார்மேல்
ஊனத்திரளை நீக்குமதுவு முண்மைப்பொருள்போலும்
ஏனத்திரளோ டினமான்கரடி யிழியுமிரவின்கண்
ஆனைத்திரள்வந் தணையுஞ்சார லண்ணுமலையாரே. 3

இழைத்தவிடையா ளுமையாள்பங்க ரிமையோர்பெருமானுர்
தழைத்தசடையார் விடையொன்றேறித் தரியார்புரமெய்தார்
பிழைத்தபிடியைக் காணுதோடிப் பெருங்கைமதவேழம்
அழைத்துத்திரிந்தங் குறங்குஞ்சார லண்ணுமலையாரே. 4

உருவிற்றிகழு முமையாள்பங்க ரிமையோர்பெருமானுர்
செருவில்லொருகால் வளையவூன்றிச் செந்தீயெழுவித்தார்
பருவிற்குறவர் புனத்திற்குவித்த பருமாமணிமுத்தம்
அருவித்திரளோ டிழியுஞ்சார லண்ணுமலையாரே. 5

---

*3 ஞானப்பிழம்பாய் நிற்கும் அண்ணுமலையார் நல்ல அடியார்மேல் வருங் குற்றங்களை நீக்குவதும் உண்மையே போலும் என்கின்றது. திரள் - பிழம்பு. ஊனத்திரள் - குறைகளின் குவியல்; உடம்பு என்றுமாம். உண்மைப்பொருள் - சத்தியம் போலும் என்பது ஒப்பில் போலி. ஏனத்திரள் - பன்றிக்கூட்டம். ஆனை - யானை.*

*4 உமைபங்கர், தேவதேவர், தாழ்சடையார், விடையேறி, திரிபுரம் எய்தவர் இவர் என்கின்றது. இழைத்த - நூலிழையின் தன்மையை யுடைய, தரியார் - பகைவர். பிழைத்த - தவறிய. பெரிய களிறு தன்னை விட்டுப்பிரிந்த பெண்யானையைக் காணுமல் அழைத்துச் சுற்றி அலுத்துப்போய் உறங்கும் சாரல் என மலையியற்கை கூறியவாறு.*

*5 ஒரே உருவில் விளங்கும் உமையொருபாகர், வில் வளைத்துத் திரிபுரத்தைச் செந்தீயாட்டியவர் இவர் என்கிறது. செரு - போர். வில் ஒருகால் வளைய ஊன்றி - வில்லினது ஒரு தலையை வளைவதற்காகக் காலிற் பெருவிரலால் ஊன்றி. பரு வில் குறவர் - பருத்த வில்லையுடைய குறவர்கள். குறவர் குவித்த முத்தங்கள் அருவியோடு இழியும் சாரல் அண்ணுமலை என்க.*

எனைத்தோரூழி யடியாரேத்த விமையோர்பெருமானூர்
நினைத்துத்தொழுவார் பாவந்தீர்க்கு நிமலருறைகோயில்
கனைத்தமேதி காணாதாயன் கைம்மேற்குழலூத
அனைத்துஞ்சென்று திரளுஞ்சார லண்ணாமலையாரே. 6

வந்தித்திருக்கு மடியார்தங்கள் வருமேல்வினையோடு
பந்தித்திருந்த பாவந்தீர்க்கும் பரமனுறைகோயில்
முந்தியெழுந்த முழவினோசை முதுகல்வரைகண்மேல்
அந்திப்பிறைவந் தணையுஞ்சார லண்ணாமலையாரே. 7

மறந்தான்கருதி வலியைநினைந்து மாறாயெடுத்தான்றோள்
நிறந்தான்முரிய நெரியவூன்றி நிறையவருள்செய்தார்
திறந்தான்காட்டி யருளாயென்று தேவரவர்வேண்ட
அறந்தான்காட்டி யருளிச்செய்தா ரண்ணாமலையாரே. 8

---

6: நினைத்துத் தொழுவார் பாவந்தீர்க்கும் நிமலர் உறை கோயில் அண்ணாமலையார் என்கின்றது. எனைத்து ஓர் ஊழி - எத்தகையதோர் ஊழியிலும். கனைத்த - ஒலித்த. மேதிகளைக் காணாத ஆயன் குழலூத அவைகளெல்லாம் திரளும் சாரல் என்க. மேதி - எருமை.

7. தொழும் அடியார்களின் ஆகாமிய சஞ்சித வினைகளைத் தீர்க்கும் பரமன் உறை கோயில் அண்ணாமலை என்கின்றது. வந்தித்து இருக்கும் - வழிபட்டுச் சோகம் பாவனையில் இருக்கும். பந்தித் திருந்த - ஆன்மாவின் அறிவை மறைத்திருந்த. பெரிய பாறைகளில் அந்திப் பிறை அணையும் சாரல் என்பது அண்ணாமலையே பிறை சூடிய பெருமானைக் காட்சியளிப்பதைக் கருதி.

8. இலங்கை மன்னனது தோள் நெரிய, விரல் ஊன்றிய இறைவன் அண்ணாமலையான் என்கிறது. மறம் - வீரம். நிறம் - மார்பு. தேவர் திறங்காட்டியருளாய் என்று வேண்ட, அறங் காட்டி அருள் செய்தார் எனமுடிக்க.

தேடிக்காணார் திருமால்பிரமன் றேவர்பெருமானை
மூடியோங்கி முதுவேயுகுத்த முத்தம்பலகொண்டு
கூடிக்குறவர் மடவார்குவித்துக் கொள்ளவம்மினென்
றாடிப்பாடி யளக்குஞ்சார லண்ணாமலையாரே. 9

தட்டையிடுக்கித் தலையைப்பறித்துச் சமணேநின்றுண்ணும்
பிட்டர்சொல்லுக் கொள்ளவேண்டா பேணித்தொழுமின்கள்
வட்டமுலையா ளுமையாள்பங்கர் மன்னியுறைகோயில்
அட்டமாளித் திரள்வந்தணையு மண்ணாமலையாரே. 10

அல்லாடரவ மியங்குஞ்சார லண்ணாமலையாரை
நல்லார்பரவப் படுவான்காழி ஞானசம்பந்தன்
சொல்லான்மலிந்த பாடலான பத்துமிவைகற்று
வல்லாரெல்லாம் வானோர்வணங்க மன்னிவாழ்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*9. மாலும் அயனும் பெருமானைத் தேடிக் காணாராயிருக்கக் குறத்தியர் மூங்கில் முத்துக்களைக் குவித்து, வாங்கிக்கொள்ள வாருங்கள் என்றழைக்கும் அண்ணாமலை என்கின்றது. வேய் உகுத்த முத்தம் - மூங்கிலில் பிறந்த முத்துக்கள்.*

*10. சமணர் புத்தர் சொல்லைக் கேளாதே, இறைவனைத் தொழுங்கள்; அவ்விறைவன் உறையுங் கோயில் அண்ணாமலையாகும் என்கின்றது. தட்டு - தடுக்கு. பிட்டர் - பித்தர்கள். அட்டம் - பக்கம்.*

*11. அண்ணாமலையாரை ஞானசம்பந்தன் சொன்ன இப்பாடல் வல்லார் தேவர் வணங்க வாழ்வார்கள் என்கின்றது. அல் - இரவு. மன்னி - நிலைபெற்று.*

# திருவீங்கோய்மலை

**பதிகவரலாறு :**

*திருப்பைஞ்ஞீலியை வணங்கி மண்பரவுந் தமிழ் மாலைகளைப்பாடிப் பிறதலங்களையும் வழிபட எண்ணிய சண்பை நாடர், திருவீங்கோய்மலையை அடைந்தார். அங்கு, கங்கைச் சடையர் கழல்பணிந்து "வானத்துயர் தண்" என்னும் இசைப்பதிகம் பாடினார்.*

**பண் - தக்கேசி**

**பதிகம் :** **எண் 70**

*திருச்சிற்றம்பலம்*

வானத்துயர்தண் மதிதோய்சடைமேன் மத்தமலர்சூடித்
தேனொத்தனமென் மொழிமான்விழியா டேவிபாகமாக்
கானத்திரவி லெரிகொண்டாடுங் கடவுளுலகேத்த
ஏனத்திரள்வந் திழியுஞ்சார லீங்கோய்மலையாரே. 1

சூலப்படையொன் றேந்தியிரவிற் சுடுகாடிடமாகக்
கோலச்சடைக டாழக்குழல்யாழ் மொந்தைகொட்டவே
பாலொத்தனைய மொழியாள்காண வாடும்பரமனார்
ஏலத்தொடுநல் லிலவங்கமழு மீங்கோய்மலையாரே. 2

கண்கொணுதலார் கறைகொண்மிடற்றார் கரியினுரிதோலார்
விண்கொண்மதிசேர் சடையார்விடையார் கொடியார்வெண்ணீறு
பெண்கொணமார் பதனிற்பூசும் பெம்மானெமையாள்வார்
எண்குமரியுந் திரியுஞ்சார லீங்கோய்மலையாரே. 3

---

*1. பிறை, மத்தம் இவற்றைச்சூடி, தேவியைப் பாகமாகக் கொண்டு, நள்ளிரவில் நடமாடும் பெருமான் ஈங்கோய் மலையார் என்கின்றது. கானம் - சுடுகாடு. ஏனத்திரள் - பன்றியின் கூட்டம்.*

*2. சுடுகாட்டில் குழலும் யாழும் முழவுங் கொட்ட, பாகம் பிரியாள் காண ஆடும் பெருமான் இவர் என்கின்றது. கோலச்சடை - அழகியசடை. குழல், யாழ், மொந்தை கொட்ட என்றாலும், குழலை ஊத, யாழை வாசிக்க, மொந்தையைக் கொட்ட எனக் கருவிகளுக்கேற்ப பொருள்கொள்க.*

*3. இறைவருடைய உடையும் அணியும் பூச்சும் இவைஎன்கின்றது. நுதல் - நெற்றி. கறை - விடம். மிடறு - கழுத்து. எண்கு - கரடி. அரி - சிங்கம்.*

மறையின்னிசையார் நெறிமென்கூந்தன் மலையான்மகளோடும்
குறைவெண்பிறையும் புனலுந்நிலவுங் குளிர்புன்சடைதாழப்
பறையுங்குழலுங் கழலுமார்ப்பப் படுகாட்டெரியாடும்
இறைவர்சிறைவண் டறைபூஞ்சார லீங்கோய்மலையாரே. 4

நொந்தசுடலைப் பொடிநீறணிவார் நுதல்சேர்கண்ணினர்
கந்தமலர்கள் பலவுந்நிலவு கமழ்புன்சடைதாழப்
பந்தண்விரலாள் பாகமாகப் படுகாட்டெரியாடும்
எந்தம்மடிகள் கடிகொள்சார லீங்கோய்மலையாரே. 5

நீருரகல முடையார்நிரையார் கொன்றையரவோடும்
ஆரூர்சடையா ரயில்வெங்கணையா லவுணர்புரமூன்றும்
சீரூவெரிசெய் தேவர்பெருமான் செங்கணடல்வெள்ளை
ஏரூர்கொடியா ருமையாளோடு மீங்கோய்மலையாரே. 6

வினையாயினதீர்த் தருளேபுரியும் விகிர்தன்விரிகொன்றை
நனையார்முடிமேன் மதியஞ்சூடு நம்பானலமல்கு
தனையார்கமல மலர்மேலுறைவான் றலையோடனலேந்தும்
எனையாளுடையா னுமையாளோடு மீங்கோய்மலையாரே. 7

---

*4. இடுகாட்டில் மலையான் மகளோடு ஆடும் இறைவன் இவர் என்கின்றது. நெறி மென் கூந்தல் - நெறித்துச் சுருண்ட மெல்லிய கூந்தல். குறை வெண் பிறை - சாபத்தால் குறைந்த வெண்மையான பிறைச்சந்திரன். படுகாடு - சுடுகாடு. சிறை வண்டு - சிறகோடுகூடிய வண்டுகள்.*

*5. இதுவும் அது. நொந்த - பதன் அழிந்த. பந்து அண் விரலாள் - பந்து அணுகும் மெல்லிய விரலை உடையாள். கடி கொள் சாரல் - தெய்வமணங்கமழும் சாரல்.*

*6. கொன்றை, அரவு, கங்கை இவற்றைச் சடையில் உடையவரும், திரிபுரங்களை எரித்தவரும் ஈங்கோய்மலையார் என்கின்றது. அகலம் - மார்பு. அயில் - கூர்மை. அடல் - வலிமை.*

*7. வினைதீர்க்கும் விகிர்தனும் என்னை ஆளுடையபிரான் இவர் என்கின்றது. நனை - அரும்பு. தனையார் கமலம் - தலைமை பொருந்திய தாமரை.*

பரக்கும்பெருமை யிலங்கையென்னும் பதியிற்பொலிவாய
அரக்கர்க்கிறைவன் முடியுந்தோளு மணியார்விரறன்னால்
நெருக்கியடர்த்து நிமலாபோற்றி யென்றுநின்றேத்த
இரக்கம்புரிந்தா ருமையாளோடு மீங்கோய்மலையாரே. 8

வரியார்புலியி னுரிதோலுடையான் மலையான்மகளோடும்
பிரியாதுடனா யாடல்பேணும் பெம்மான்றிருமேனி
அரியோடயனு மறியாவண்ண மளவில்பெருமையோ
டெரியாய்நிமிர்ந்த வெங்கள்பெருமா னீங்கோய்மலையாரே. 9

பிண்டியேன்று பெயராநிற்கும் பிணங்குசமணரும்
மண்டைகலனாக் கொண்டுதிரியு மதியிறேரரும்
உண்டிவயிரு ருரைகள்கொள்ளா துமையோடுடனாகி
இண்டைச்சடையா னிமையோர்பெருமா னீங்கோய்மலையாரே. 10

விழவாரொலியு முழவுமோவா வேணுபுரந்தன்னுள்
அழலார்வண்ணத் தடிகளருள்சே ரணிகொள்சம்பந்தன்
எழிலார்சுனையும் பொழிலும்புடைசூ ழீங்கோய்மலையீசன்
கழல்சேர்பாடல் பத்தும்வல்லார் கவலைகளைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

8. இராவணனை விரலால் அடர்க்க, அவன் நிமலா போற்றி என வணக்கம் செய்ய, இரக்கங்காட்டிய பெருமான் இவர் என்கின்றது. பரக்கும் - பரந்த. அணி - மோதிரம்.

9. உமையொருபாதியனாய், அயனும் மாலும் அறியாமல் எரியாய் நிமிர்ந்த பெருமான் இவர் என்கின்றது. வரி - கோடு. எரியாய் - அக்கினிவடிவான அண்ணாமலையாய்.

10. சமணரும் புத்தருமாகிய இவர்களின் உரையைக் கொள்ளாத இமையோர் பெருமான் இவர் என்கின்றது. பிண்டி - அசோகந்தளிர். ஏன்று - தாங்கி. மண்டை - பிச்சை ஏற்கும் பாத்திரம். தேரர் - புத்தர். உண்டி வயிறார் - உண்டு பருத்த வயிற்றை உடையவர்கள். இண்டை - திருமுடியிற் சூடப்படும் வட்டமாகக் கட்டப்பெற்ற மாலை.

11. சம்பந்தன் சொன்ன ஈங்கோய்மலைப் பாடல் பத்தும் வல்லார் கவலை களைவார் என்கின்றது. வேணுபுரம் என்பது சீகாழிக்கு மறுபெயர். எழில் - அழகு.

# திருநறையூர்ச்சித்தீச்சரம்

*பதிகவரலாறு : 29-ம் பதிகம் பார்க்க.*

பண் - தக்கேசி.

**பதிகம் :** **எண் 71**

*திருச்சிற்றம்பலம்*

பிறைகொள்சடையர் புலியினுரியர் பேழ்வாய்நாகத்தர்
கறைகொள்கண்டர் கபாலமேந்துங் கையர்கங்காளர்
மறைகொள்கீதம் பாடச்சேடர் மனையின்மகிழ்வெய்திச்
சிறைகொள்வண்டு தேனூர்நறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 1

பொங்கார்சடையர் புனலரனலர் பூதம்பாடவே
தங்காதலியுந் தாமுமுடனாய்த் தனியோர்விடையேறிக்
கொங்கார்கொன்றை வன்னிமத்தஞ் சூடிக்குளிர்பொய்கைச்
செங்காலனமும் பெடையுஞ்சேருஞ் சித்தீச்சரத்தாரே. 2

முடிகொள்சடையர் முளைவெண்மதியர் மூவாமேனிமேல்
பொடிகொணூலர் புலியினதளர் புரிபுன்சடைதாழக்
கடிகொள்சோலை வயல்சூழ்மடுவிற் கயலாரினம்பாயக்
கொடிகொண்மாடக் குழாமார்நறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 3

---

*1. நறையூர்ச் சித்தீச்சரத்தார் பிறைச்சடையர், புலித்தோலர், அரவார்த்தவர், நீலகண்டர், கபாலி, கங்காளர் என்கின்றது. பேழ்வாய் - பிளந்த வாய். கங்காளம் - முழு எலும்பு. சேடர் - பெருமையுடையவர்.*

*2. இதுவும் அவர் புனலர், அனலர், விடையேறியவர் என்கின்றது. பொங்கு - வளர்ச்சி. கொங்கு - தேன். இறைவன் தம் காதலியும் தாமும் விடையேறியிருப்பதால், பொய்கைகளில் அன்னங்களும் பெடையோடு சேர்ந்திருக்கின்றன என்று, போகியாய் இருந்து உயிர்க்குப் போகத்தை நல்கும் தன்மை விளக்கியவாறு.*

*3. இதுவும் அவர் சடைமுடியர், வெண்ணீற்றர், புலித்தோலர் என்கின்றது. மூவா மேனி - மூப்படையாத என்றும் இளைய திருமேனி. அதளர் - தோலை உடையாக உடையவர்.*

பின்றாழ்சடைமே னகுவெண்டலையர் பிரமன்றலையேந்தி
மின்றாழுருவிற் சங்கார்குழைதான் மிளிருமொருகாதர்
பொன்றாழ்கொன்றை செருந்திபுன்னை பொருந்துசெண்பகம்
சென்றார்செல்வத் திருவார்நறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 4

நீரார்முடியர் கறைகொள்கண்டர் மறைகணிறைநாவர்
பாரார்புகழாற் பத்தர்சித்தர் பாடியாடவே
தேரார்வீதி முழவார்விழவி னொலியுந்திசைசெல்லச்
சீரார்கோலம் பொலியுநறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 5

நீண்டசடையர் நிரைகொள்கொன்றை விரைகொண்மலர்மாலை
தூண்டுசுடர்பொன் னொளிகொள்மேனிப் பவளத்தெழிலார்வந்
தீண்டுமாட மெழிலார்சோலை யிலங்குகோபுரம்
தீண்டுமதியந் திகழுநறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 6

குழலார்சடையர் கொக்கினிறகர் கோலநிறமத்தம்
தழலார்மேனித் தவளநீற்றர் சரிகோவணக்கீளர்
எழிலார்நாகம் புலியினுடைமே லிசைத்துவிடையேறிக்
கழலார்சிலம்பு புலம்பவருவார் சித்தீச்சரத்தாரே. 7

---

4. இதுவும் அவர் தலைமாலை அணிந்தவர், கபாலி, சங்க குண்டலர் என்கின்றது. சங்கு ஆர் குழை - சங்கினால் இயன்ற காதணி. செருந்தி - இது இக்காலத்து செவ்வந்திப்பூ என வழங்கும். திருவார் நறையூர் - திருநறையூர்.

5. சித்தீச்சரத்தார் கங்கை முடியர், நீலகண்டர், மறை நாவர் என்கின்றது. பாரார் புகழ் - உலகம் முழுவதும் வியாபித்த புகழ்.

6. இதுவும் அது. நிரை கொள் கொன்றை - சரமாகப் பூத்த கொன்றை. தூண்டு சுடர் - ஒருகாலைக்கொருகால் மிகுந்து தோன்றும் ஒளி. பவளத் தெழிலார் - பவழம்போன்ற அழகினை உடையவர்.

7. அவர் கூந்தலையும் சடையையும் உடையவர், கொக்கின் இறகை அணிந்தவர், கோவண ஆடையர் என்கின்றது. குழல் - கூந்தல். கோலம் - அழகு. தவளம் - வெண்மை. கீள் - கிழித்த ஆடை. புலம்ப - ஒலிக்க.

கரையார்கடல்சூ ழிலங்கைமன்னன் கயிலைமலைதன்னை
வரையார்தோளா லெடுக்கமுடிக ணெரித்துமனமொன்றி
உரையார்கீதம் பாடநல்ல வுலப்பிலருள்செய்தார்
திரையார்புனல்சூழ் செல்வநறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 8

நெடியான்பிரம னேடிக்காணார் நினைப்பார் மனத்தாராய்
அடியாரவரு மருமாமறையு மண்டத்தமரரும்
முடியால்வணங்கிக் குணங்களேத்தி முதல்வாவருளென்னச்
செடியார்செந்நெற் றிகழுநறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 9

நின்றுண்சமண ரிருந்துண்டேரர் நீண்டபோர்வையார்
ஒன்றுமுணரா வூமர்வாயி லுரைகேட்டுழல்வீர்காள்
கன்றுண்பயப்பா லுண்ணமுலையிற் கபாலமயல்பொழியச்
சென்றுண்டார்ந்து சேருநறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 10

குயிலார்கோல மாதவிகள் குளிர்பூஞ்சுரபுன்னை
செயிலார்பொய்கை சேருநறையூர்ச் சித்தீச்சரத்தாரை
மயிலார்சோலை சூழ்ந்தகாழி மல்குசம்பந்தன்
பயில்வார்க்கினிய பாடல்வல்லார் பாவநாசமே. 11

திருச்சிற்றம்பலம்

---

*8. இராவணனை அடர்த்து, அவன் சாமகானம் பாட அருள்செய்தவர் இவர் என்கின்றது. வரையார் தோளால் - மலையையொத்த தோள்களால். உலப்பில் - வற்றாத.*

*9. அடியாரும் அமரரும் 'முதல்வா! அருள்' என்று தோத்தரிக்க இத்தலத்து எழுந்தருளியிருக்கின்றார் என்கின்றது. நெடியான் - திருமால். நேடி - தேடி. பதவிகளில் இருப்பார் தேடிக்காணாத பெருமான், தியானிப்பவர்கள் மனத்தில் இருக்கின்றார் என எளிமை கூறியவாறு. செடி - புதர்.*

*10. ஒன்றுமறியாத புத்தர் சமணர்களின் உரைகளைக் கேட்டுழலும் மக்களே! இத்தலத்தைச் சேரும் என்கின்றது. கன்று உண்பயப்பால் உண்ண - கன்று உண்ணும் விருப்பால் உண்ண. முலையில் - முலையிலிருந்து. கபாலம் அயல் பொழிய - கறவைப் பாத்திரம் நிறைந்து வழிய. சென்று உண்டு ஆர்ந்து சேரும் - மீளவும் கன்றுபோய் உண்டு நிறைந்து சேரும் என்க.*

*11. இப்பாடல் பாடுவார்க்குப் பாவம் நாசம் ஆம் என்கின்றது. மாதவி - குருக்கத்தி. செயில் - வயலில். இப்பாடல் பயில்வார்க்கு இனிமையாய் இருக்குமென்று இதன் இயல்பு விளக்கியவாறு.*

# திருக்குடந்தைக்காரோணம்

***பதிகவரலாறு :***

*உலகத்துயிர்கள் அனைத்தையும் உடம்பொடுகூட்டித் தோற்றுவித்த அந்தணனாகிய பிரமன் வழிபட்டுய்ந்த சீகாழிப் பதிச் செம்மலாராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் சிவபுரத்தைத் தொழுது பதிகம்பாடி, அண்மையிலுள்ள விடையேறும் பெருமான் திருவடியையும் போற்றத் திருவுளங் கொண்டு, திருக்குடமூக்கு என்னும் கும்பகோணத் தலத்தை அடைந்தார். அதனையுணர்ந்த அவ்வூர் அந்தணர்கள் வேத ஒலி விம்ம, மங்கள வாத்தியங்கள் முழங்க, ஊர்ப்புறத்தே வந்து எதிர்கொண்டு அழைத்துச் சென்றார்கள். குடமூக் காலயத்தைக் குறுகினார்கள். பிள்ளையார் 'குடமூக்கை உவந் திருந்த பெருமான் எம்மிறை' என்று பெருகிய இசையாற் பதிகம் பாடினார்கள். பின்னர் குடந்தைக் கீழ்க்கோட்டம் வணங்கிக்கொண்டு குடந்தைக் காரோணம் சென்றார்கள். அங்கே கங்கை முதலாகிய புனித தீர்த்தங்கள் மாமகத்தில் நீராடுதற்கு வரும் அக்கோயிலை வணங்கினார்கள். மன்மதனை எரித்த பெருமானது மலரடியைக் கண்டார்கள். கண் களித் தார்கள். 'வாரார் கொங்கை' என்னும் பண்ணார்ந்த திருப் பதிகம் பாடினார்கள்.*

**பண் - தக்கேசி**

**பதிகம் :** **எண் 72**

*திருச்சிற்றம்பலம்*

வாரார்கொங்கை மாதோர்பாக மாகவார்சடை
நீரார்கங்கை திங்கள்சூடி நெற்றியொற்றைக்கண்
கூரார்மழுவொன் றேந்தியந்தண் குழகன்குடமூக்கில்
காரார்கண்டத் தெண்டோளெந்தை காரோணத்தாரே. 1

---

*1. குடந்தைக் காரோணத்தார் உமைபொருபாகமாக, சடையில் கங்கையையும் திங்களையும் சூடி, மழுவேந்திய குழகன் ஆவார் என்கின்றது. வார் - கச்சு. குழகன் - இளமை உடையவன்.*

முடியார்மன்னர் மடமான்விழியார் மூவுலகும்மேத்தும்
படியார்பவள வாயார்பலரும் பரவிப்பணிந்தேத்தக்
கொடியார்விடையார் மாடவீதிக் குடந்தைக்குழகாரும்
கடியார்சோலைக் கலவமயிலார் காரோணத்தாரே. 2

மலையார்மங்கை பங்கரங்கை யனலர்மடலாரும்
குலையார்தெங்கு குளிர்கொள்வாழை யழகார்குடமூக்கில்
முலையாரணிபொன் முளைவெண்ணகையார் மூவாமதியினர்
கலையார்மொழியார் காதல்செய்யுங் காரோணத்தாரே. 3

போதார்புனல்சேர் கந்தமுந்திப் பொலியவ்வழகாரும்
தாதார்பொழில்சூழ்ந் தெழிலார்புறவி லந்தண்குடமூக்கில்
மாதார்மங்கை பாகமாக மனைகள்பலிதேர்வார்
காதார்குழையர் காளகண்டர் காரோணத்தாரே. 4

பூவார்பொய்கை யலர்தாமரைசெங் கழுநீர்புறவெல்லாம்
தேவார்சிந்தை யந்தணாளர் சீராலடிபோற்றக்
கூவார்குயில்க ளாலுமயில்க ளின்சொற்கிளிப்பிள்ளை
காவார்பொழில்சூழ்ந் தழகார்குடந்தைக் காரோணத்தாரே. 5

---

2. இவர் முடிமன்னர், மான்விழியார், மூவுலகேத்தும் முதல்வர் என்றது. கொடியார் விடை - கொடியில் பொருந்திய இடபம். கடியார் சோலை - மணம் பொருந்திய சோலை.

3. உமையொருபாகர், மழுவேந்தியவர் பிறைமதியர் இவர் என்கின்றது. மடல் - மட்டை. முலையார் என்பதுமுதல் கலையார் மொழியார் என்பதுவரையில் உமாதேவியைக் குறிக்குஞ் சொற்றொடர்கள். மூவா மதியினர் - இளம்பிறை போன்ற நெற்றியினை உடையவர்.

4. பலிதேர்வார், குழைக்காதர், காளகண்டர் இவர் என்கின்றது. போது - தாமரைமுதலிய பூக்கள். தாது - மகரந்தம். எழில் - அழகு. புறவு - காடு. மாதர் மங்கை - காதல் நிறைந்த உமாதேவி.

5. தாமரை செங்கழுநீர் முதலிய பூக்களைக் கொண்டு தெய்வத்தன்மை கொண்ட அந்தணர்கள் அடிபோற்ற இருப்பவர் காரோணத்தார் என்கின்றது. பூவார்பொய்கை - கொட்டி

மூப்பூர்நலிய நெதியார்விதியாய் முன்னேயனல்வாளி
கோப்பார்பார்த்த னிலைகண்டருளுங் குழகர்குடமூக்கில்
தீர்ப்பாருடலி லடுநோயவலம் வினைகணலியாமைக்
காப்பார்கால னடையாவண்ணங் காரோணத்தாரே. 6

ஊனார்தலைகை யேந்தியுலகம் பலிதேர்ந்துழல்வாழ்க்கை
மானார்தோலார் புலியினுடையார் கரியின்னுரிபோர்வை
தேனார்மொழியார் திளைத்தங்காடித் திகழுங்குடமூக்கில்
கானார்நட்ட முடையார்செல்வக் காரோணத்தாரே. 7

---

*அல்லி தாமரை முதலிய நீர்ப்பூக்கள் நிறைந்த பொய்கை. அவற்றுள் தாமரையும் கழுநீரும் இறைவன் வழிபாட்டிற்கு ஏற்றன ஆதலின் பின்னர் விதந்து கூறப்பட்டன. புறவு - முல்லை. தே ஆர் சிந்தை - தெய்வத்தன்மை நிறைந்த மனம். சீரால் - இறைவன் புகழால். ஆலும் - அகவும். அந்தணாளர் அடிபோற்ற பொழில்சூழ்ந்து அழகார் காரோணத்தார் என முடிக்க.*

*6. திரிபுரம் எரித்தகாலத்து அம்பைக்கோப்பவரும் விசயன் நிலைகண்டு அருள் செய்தவருமாகிய குழகரது குடமூக்கில் அடியார்களைக் காலன்குறுகாதவாறு காப்பவர் காரோணத்தார் என்கின்றது. மூப்பு ஊர் நலிய - முதுமை ஊர்ந்து வருத்த. நெதியார் விதியாய் - நியதியின்வழியே நடக்கும் நெறியாய். பார்த்தன் - அர்ச்சுனன். அடுநோய் - வருத்துகின்ற நோய்கள். அவலம் - துன்பம். மூப்பு ஊர் நலிய, நெதியார் விதியாய் முன்னே கோப்பார், குழகர் குடமூக்கில், வினைகள் நலியாமை உடலில் அடுநோய் அவலம் தீர்ப்பார், காலன் அடையாவண்ணங் காப்பார் காரோணத்தார் எனக் கூட்டுக.*

*7. கபாலம் ஏந்திப் பலி ஏற்று உழலும் இறைவன் காரோணத்தார் என்கின்றது. மானார் தோலார் - மான்தோலை உடையவர். கரியின் உரிபோர்வை - யானைத்தோலால் ஆகிய போர்வையை உடையவர். திளைத்து - கூடி. தேனார் மொழியாள் என்பது இத்தலத்து அம்மையின் திருநாமம்.*

வரையார் திரடோண் மதவாளரக்க னெடுப்பமலைசேரும்
விரையார்பாத நுதியாலூன்ற நெரிந்துசிரம்பத்தும்
உரையார்கீதம் பாடக்கேட்டங் கொளிவாள்கொடுத்தாரும்
கரையார்பொன்னி சூழ்தண்குடந்தைக் காரோணத்தாரே. 8

கரியமாலுஞ் செய்யபூமே லயனுங்கழறிப்போய்
அரியவண்டந் தேடிப்புக்கு மளக்கவொண்கிலார்
தெரியவரிய தேவர்செல்வந் திகழுங்குடமூக்கில்
கரியகண்டர் காலகாலர் காரோணத்தாரே. 9

நாணாரமணர் நல்லதறியார் நாளுங்குரத்திகள்
பேணார்தூய்மை மாசுகழியார் பேசேலவரோடும்
சேணார்மதிதோய் மாடமல்கு செல்வநெடுவீதிக்
கோணாகரமொன் றுடையார்குடந்தைக் காரோணத்தாரே. 10

கருவார்பொழில்சூழ்ந் தழகார்செல்வக் காரோணத்தாரைத்
திருவார்செல்வ மல்குசண்பைத் திகழுஞ்சம்பந்தன்
உருவார்செஞ்சொன் மாலையிவைபத் துரைப்பாருலகத்துக்
கருவாரிடும்பைப் பிறப்பதறுத்துக் கவலைகழிவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*8. இராவணன் கயிலையை எடுக்க, இறைவன் பெருவிரலை ஊன்ற நெரித்த சிரங்கள் பத்திலிருந்தும், சாமகானங்கேட்டு அருள்செய்தவர் இவர் என்கின்றது. சீபாதந்தாங்குவார் இறைவனை இருகையில் அன்போடு கூப்பிடுகிறார்கள்; இவன்மதத்தால் இருக்கிறான்; ஆதலால் அடக்குண்டான் என்பார் மதவாள் அரக்கன் என்று உரைத்தார். விரை - மணம். உரையார்கீதம் - புகழ் நிறைந்த சாம கீதம்.*

*9. அயனும் மாலாலும் அறியவொண்ணாத காலகாலர் குடமூக்கின் காரோணத்தார் என்கின்றது. கழறி - ஒருவருக்கொருவர் இடித்துப்பேசி.*

*10. கோணமாகிய இருப்பிடத்தை உடையவர் இவர் என்கின்றது. குரத்திகள் - ஆரவாரத்தை உடையவர்கள். தூய்மை பேணார் - பரிசுத்தத்தைப் போற்றாதவர்கள். சேண் - ஆகாயம்.*

*11. குடந்தைக் காரோணத்தாரைச் சண்பை ஞானசம்சம்பந்தன் சொன்ன இம்மாலையைச் சொல்பவர்கள் பிறப்பறுத்துக் கவலையிலிருந்து நீக்குவார்கள் என்கின்றது. கருவார் பொழில் - கரிய சோலை. கரு ஆர் இடும்பைப் பிறப்பு - கருப்பையில் படும் துன்பம் நிறைந்த பிறப்பு.*

# திருக்காணூர்

**பதிகவரலாறு :**

திருமழபாடியை வணங்கிப் பதிகம்பாடி அங்கு எழுந்தருளிய பிள்ளையார் திருக்காணூரை அடைந்தார்கள். 'வானூர் சோதி' என்னும் இந்த வளமார் பதிகத்தைப்பாடி வணங்கினார்கள்.

பண் - தக்கேசி

**பதிகம் :** **எண் 73**

*திருச்சிற்றம்பலம்*

வானூர்சோதி மன்னுசென்னி வன்னிபுனங்கொன்றைத்
தேனூர்போது தானூர்கங்கை திங்களொடுசூடி
மானேர்நோக்கி கண்டங்குவப்ப மாலையாடுவார்
கானூர்மேய கண்ணூர்நெற்றி யானூர்செல்வரே. 1

நீந்தலாகா வெள்ளமூழ்கு நீள்சடைதன்மேலோர்
ஏய்ந்தகோணற் பிறையோடரவு கொன்றையெழிலாரப்
போந்தமென்சொ லின்பம்பயந்த மைந்தரவர்போலாம்
காந்தள்விம்மு கானூர்மேய சாந்தநீற்றரே. 2

---

1. கானூர் மேவிய செல்வர், சென்னியிலே வன்னி, கொன்றை, திங்கள், கங்கை சூடி அம்மைகாண ஆடுவார் என்கின்றது. வானூர்சோதி - வானிலுள்ள ஒளிப்பொருளாகிய சூரியனும் சந்திரனும். சென்னி - திருமுடி. வன்னி - வன்னிப் பத்திரம். மானேர் நோக்கி - மானை ஒத்த கண்களையுடைய பார்வதி. ஆன் ஊர் செல்வர் - இடபத்தை ஊர்ந்த செல்வர்.

2. கானூர்மேவிய செல்வர், கங்கையினையுடைய சடையின் மேல் பிறையும் கொன்றையும் பொருந்த, இன்சொல்லால் இன்பம் பயக்கும் இறைவர்போலாம் என்கின்றது. நீந்தலாகா வெள்ளம் மூழ்கும் நீள் சடை - நீந்தமுடியாதஅளவு வேகத்தோடு வந்த கங்கை வெள்ளம் மூழ்கி மறைந்துபோன சடை. ஏய்ந்த - பொருந்திய. போந்த - தன்வாயினின்றும் வந்த. மென்சொல் - மெல்லிய சொற்களால்; என்றது நயந்து பின்னிற்ற

தமிழினீர்மை பேசித்தாளம் வீணைபண்ணிநல்ல
முழவமொந்தை மல்குபாடல் செய்கையிடமோவார்
குமிழின்மேனி தந்துகோல நீர்மையதுகொண்டார்
கமழுஞ்சோலைக் கானூர்மேய பவளவண்ணரே. 8

அந்தமாதி யயனுமாலு மார்க்குமறிவரியான்
சிந்தையுள்ளு நாவின்மேலுஞ் சென்னியுமன்னினுன்
வந்தென்னுள்ளம் புகுந்துமாலை காலையாடுவான்
கந்தமல்கு கானூர்மேய வெந்தைபெம்மானே. 9

ஆமையரவோ டேனவெண்கொம் பக்குமாலைபூண்
டாமோர்கள்வர் வெள்ளர்போல வுள்வெந்நோய்செய்தார்
ஓமவேத நான்முகனுங் கோணுகணையானும்
சேமமாய செல்வர்கானூர் மேயசேடரே. 10

---

*8. இவர் பல வாத்தியங்கள் முழங்கப் பாடிக்கொண்டும் இனிமையாகப் பேசிக்கொண்டும் வந்தார்; வந்தவர் இடம் விட்டுப் பெயராராய் என்னுடைய அழகைக் கவர்ந்துகொண்டு குமிழம்பூ நிறத்தைக் கொடுத்துவிட்டார் என்கின்றது. தமிழின் நீர்மை - இனிமை. கோலம் - அழகு. பவளவண்ணரே என்ருள், அவர்மேனியின் நிறத்தில் ஈடுபட்டு.*

*9. அயனுக்கும் மாலுக்கும் அறியப்படாத இறைவன் எனது சிந்தையிலும், நாவிலும், சென்னியிலும் திகழ்கின்ருன்; என் மனத்திற் புகுந்து காலையும் மாலையும் உலாவுகின்ருன் என்கின்றது. அந்தம் ஆதி - முடிவும் முதலும்.*

*10. எலும்பு முதலியவற்றை அணிந்து வெள்ளை உள்ளம் படைத்தவர்போல வந்து கள்வராய் மனவேதனையைத் தந்தார் என்கின்றது. அவர்கொண்ட வேடத்திற்கும் செயலுக்கும் பொருத்தமில்லை என்றபடி. ஓமம் - ஆகுதி. கோண் நாகணையான் - வளைந்த பாம்பைப் படுக்கையாகக்கொண்டவன். சேமம் - பாதுகாப்பு. சேடர் - கடவுள்.*

கழுதுதுஞ்சுங் கங்குலாடுங் கா னூர்மேயானைப்
பழுதின்ஞான சம்பந்தன்சொற் பத்தும்பாடியே
தொழுதுபொழுது தோத்திரங்கள் சொல்லித்துதித்துநின்
றழுதுநக்கு மன்புசெய்வா ரல்லலறுப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*11. இத்தோத்திரங்களைச் சொல்லித் துதித்து ஆனந்தத்தால் அழுது சிரித்து நிற்பவர்கள் துன்பம் அறுப்பார் என்கின்றது. கழுது - பேய். பொழுது - முப்பொழுதிலும்.*

# திருப்புறவம்

பண் - தக்கேசி

பதிகம் : எண் 74

திருச்சிற்றம்பலம்

நறவநிறைவண் டறைதார்க்கொன்றை நயந்துநயனத்தாற்
சுறவஞ்செறிவண் கொடியோனுடலம் பொடியாவிழிசெய்தான்
புறவமுறைவண் பதியாமதியார் புரமூன்றெரிசெய்த
இறைவனறவ னிமையோரேத்த வுமையோடிருந்தானே. 1

உரவன்புலியி னுரிதோலாடை யுடைமேற்படநாகம்
விரவிவிரிபூங் கச்சாவசைத்த விகிர்தனுகிர்தன்னாற்
பொருவெங்களிறு பிளிறவுரித்துப் புறவம்பதியாக
இரவும்பகலு மிமையோரேத்த வுமையோடிருந்தானே. 2

பந்தமுடைய பூதம்பாடப் பாதஞ்சிலம்பார்க்கக்
கந்தமல்கு குழலிகாணக் கரிகாட்டெரியாடி
அந்தண்கடல்சூழ்ந் தழகார்புறவம் பதியாவமர்வெய்தி
எந்தம்பெருமா னிமையோரேத்த வுமையோடிருந்தானே. 3

---

*1 மகரக்கொடியோனாகிய மன்மதனது உடலத்தைப் பொடி செய்தவரும், திரிபுரம் எரித்தவரும் ஆகிய உமாபதி நகர் புறவம் என்னும் சீகாழியாம் என்கின்றது. நறவம் - தேன். அறை - ஒலிக்கின்ற. நயந்து - விரும்பி. நயனத்தால் - கண்ணால். சுறவம் செறி வண் கொடியோன் - சுறாமீன் எழுதப்பட்ட கொடியை உடையவனாகிய மன்மதன். நயனத்தால் விழித்தலைச் செய்தான் என்க. மதியார் - பகைவர்.*

*2. புலித்தோல் ஆடையின்மேல் நாகத்தைக் கச்சாக உடுத்து, யானையை உரித்துப் போர்த்து, புறவம் பதியாக உமையோடு இருந்தான் என்கின்றது. உரவன் - வலிமை.*

*3. பூதம் பாட, சிலம்பொலிக்க, உமைகாண இடுகாட்டில் நடமாடி இந்நகரை இடமாகக்கொண்டிருந்தான் என்கின்றது. பந்தம் உடைய பூதம் - உதரபந்தம் என்னும் அணியையணிந்த பூதம். கந்தம் - மணம். கரிகாடு - இடுகாடு. அமர்வெய்தி - விரும்பியிருந்து.*

நினைவார்நினைய வினியான்பனியார் மலர்தூய்நித்தலுங்
கனையார்விடையொன் றுடையான்கங்கை திங்கள்கமழ்கொன்றை
புனைவார்சடையின் முடியான்கடல்சூழ் புறவம்பதியாக
எனையாளுடையா னிமையோரேத்த வுமையோடிருந்தானே. 4

செங்கணரவு நகுவெண்டலையு முகிழ்வெண்டிங்களுந்
தங்குசடையன் விடையனுடையன் சரிகோவணவாடை
பொங்குதிரைவண் கடல்சூழ்ந்தழகார் புறவம்பதியாக
எங்கும்பரவி யிமையோரேத்த வுமையோடிருந்தானே. 5

பின்னுசடைக டாழக்கேழ லெயிறுபிறழப்போய்
அன்னநடையார் மனைகடோறு மழகார்பலிதேர்ந்து
புன்னைமடலின் பொழில்சூழ்ந்தழகார் புறவம்பதியாக
என்னையுடையா னிமையோரேத்த வுமையோடிருந்தானே. 6

---

*4. என்னை ஆளாக உடையவன் நினைத்தற்கினியனாய் விடையேறி, கங்கை முதலியவற்றைச் சூடி, புறவம்பதியாக உமையோடு இமையோர் ஏத்த இருந்தான் என்கின்றது. பனி யார் மலர் தூய், நினைவார் நித்தலும் நினைய இனியான் எனக் கூட்டுக. கனை - ஒலி.*

*5. அரவு முதலியவற்றை அணிந்து விடையேறி, கோவண முடுத்தி, இந்நகரை இடமாகக்கொண்டு இமையோர் ஏத்த உமையோடு இருந்தான் என்கின்றது. முகிழ் - இளைய. சரி - தொங்குகின்ற. திரை - அலை.*

*6. என்னையுடையான் சடைதாழ, பன்றிக்கொம்பு மார்பில் விளங்க, பெண்கள் மனைதோறும் சென்று பிச்சை எடுத்துப் புறவம்பதியாக இருந்தான் என்கின்றது. கேழல் எயிறு - பன்றிப் பல்.*

சிக்கார் துவராடைச் சிறுதட் டுடையாரும்
நக்காங் கலர்தூற்றுந் நம்பா னுறைகோயில்
தக்கார் மறைவேள்வித் தலையா யுலகுக்கு
மிக்கா ரவர்வாழும் வீழி மிழலையே. 10

மேனின் றிழிகோயில் வீழி மிழலையுள்
ஏனத் தெயிற்றானை யெழிலார் பொழிற்காழி
ஞானத் துயர்கின்ற நலங்கொள் சம்பந்தன்
வாய்மைத் திவைசொல்ல வல்லோர் நல்லோரே. 11

திருச்சிற்றம்பலம்

---

10. புறச்சமயிகள் புறம்பழிக்கும் நமதிறைவன் கோயில் இது என்கின்றது. சிக்கு ஆர் துவர் ஆடை - சிக்கு நாறும் காவியுடை. தட்டு உடை - ஓலைத்தடுக்காகிய உடை. நக்கு - சிரித்து. அலர்தூற்றும் - பழிதூற்றும். தக்காராய், வேதவேள்வியில் தலையானவராய், உலகுக்கே மிக்கவர்கள் வாழுகின்ற வீழிமிழலை என்க.

11. வீழிநாதனைக் காழி ஞானசம்பந்தன் சொன்ன இப்பாடல் பாடவல்லார் நல்லார் என்கின்றது. மேல்நின்று இழிகோயில் - விண்ணிழிகோயில். இது இத்தலத்துச் சிறப்புக்களுள் ஒன்று. ஏனத்து எயிற்றானை - பன்றிக்கொம்பை அணிந்தானை. வாய்மைத்து இவை - உண்மையை உடையனவாகிய இவற்றை.

# திருவம்பர்மாகாளம்

**பதிகவரலாறு :**

*திருநாவுக்கரசு சுவாமிகளோடும் அடியார்கள் புடை சூழத் திருமாகாளத்தை வணங்கிப் பதிக இன்னிசை பாடிய பிள்ளையார் திருவம்பர்மாகாளத்தைச் சேர்ந்தார்கள். 'அடையார் புரம்' என்னும் இப்பதிகத்தை அருளிச்செய்தார்கள்.*

பண் - குறிஞ்சி

**பதிகம் :** **எண் 83**

*திருச்சிற்றம்பலம்*

அடையார் புரமூன்று மனல்வாய் விழவெய்து
மடையார் புனலம்பர் மாகா ளம்மேய
விடையார் கொடியெந்தை வெள்ளைப் பிறைசூடும்
சடையான் கழலேத்தச் சாரா வினைதானே. 1

தேனார் மதமத்தந் திங்கள் புனல்சூடி
வானார் பொழிலம்பர் மாகா ளம்மேய
ஊனார் தலைதன்னிற் பலிகொண் டுழல்வாழ்க்கை
ஆனான் கழலேத்த வல்ல லடையாவே. 2

திரையார் புனலோடு செல்வ மதிசூடி
விரையார் பொழிலம்பர் மாகா ளம்மேய
நரையார் விடையூரு நம்பான் கழனாளும்
உரையா தவர்கண்மே லொழியா வூனம்மே. 3

---

*1. இப்பதிகத்தால் அம்பர்மாகாளத்தெழுந்தருளிய இறைவனுடைய திருவடியை ஏத்தவல்லவர்க்கு வினை சாரா, தவம் சாரும், இன்பம் எய்தும் என்பது அறிவிக்கப்படுகின்றது. அடையார் - பகைவர்; என்றது திரிபுராதிகள். மடை - வாய்க்கால் மடை.*

*2. ஊனார் தலை - பிரமகபாலம். ஆனான் - இடபத்தை யுடையவன். அல்லல் - துன்பம்.*

*3. திரை - அலை. மேனி குறைதலாகிய வறுமையும் இறைவனைச் சார்ந்து கழிந்தமையின் செல்வமதியாயிற்று. விரை - மணம். நரை - வெண்மை. ஊனம் - பழி. இப்பாடல் எதிர்மறைமுகத்தான் வற்புறுத்தியது.*

கொந்தண் பொழிற்சோலைக் கோல வரிவண்டு
மந்தம் மலியம்பர் மாகா ளம்மேய
கந்தங் கமழ்கொன்றை கமழ்புன்சடை வைத்த
எந்தை கழலேத்த விடர்வந் தடையாவே. 4

அணியார் மலைமங்கை யாகம் பாகமாய்
மணியார் புனலம்பர் மாகா ளம்மேய
துணியா ருடையினன் றுதைபொற் கழலாளும்
பணியா தவர்தம்மேற் பறையா பாவம்மே. 5

பண்டாழ் கடனஞ்சை யுண்டு களிமாந்தி
வண்டார் பொழிலம்பர் மாகா ளம்மேய
விண்டார் புரம்வேவ மேருச் சிலையாகக்
கொண்டான் கழலேத்தக் குறுகா குற்றம்மே. 6

மிளிரும் மரவோடு வெள்ளைப் பிறைசூடி
வளரும் பொழிலம்பர் மாகா ளம்மேய
கிளருஞ் சடையண்ணல் கேடில் கழலேத்தத்
தளரும் முறுநோய்கள் சாருந் தவந்தானே. 7

---

4. கொந்து அண் பொழில்.- கொத்துக்கள் நிறைந்த நந்தவனம். கோலம் - அழகு. மந்தம் - தென்றற்காற்று.

5. அணி - அழகு. ஆகம் - உடல். மணியார் புனல் - முத்துக்களோடுகூடிய தண்ணீர். துணி ஆர் உடை - துணிக்கப் பெற்ற கோவண உடை. பணியாதவர்மேல் பாவம் பறையா என இதுவும் எதிர்மறை முகத்தான் விளக்கியது.

6. பண்டு ஆழ் கடல் நஞ்சை எனப்பிரிக்க. அமுதமுண்டு களிப்பது இயல்பாயினும் இவர் நஞ்சையுண்டு களித்தார் என்றது மிக நயமான பகுதி. அமுதுண்டு களிப்பார் அறிவு மயங்குவார். நஞ்சை உண்டு இவர் களித்த களிப்பு இத்துணைத் தேவர்க்கும் இன்பம் செய்தோமே என்றதால் விளைந்தது. களி மாந்தி - களிப்பையடைந்து. விண்டார் - பகைவர். இது இத் தலவரலாறு. இத் தலத்திறைவன் பெயர் காளகண்டேஸ்வரர் என்பதுங் காண்க.

7. மிளிரும் அரவு - விளங்குகின்ற பாம்பு. அரவுக்கு விளக்கம் அடியார்கள் அன்போடு அடைக்கலமாக நோக்கும் இறைவனுடைய திருவடி, கரம், கழுத்து, முடி, செவி இவற்றி

கொலையார் மழுவோடு கோலச் சிலையேந்தி
மலையார் புனலம்பர் மாகா ளம்மேய
இலையார் திரிசூலப் படையான் கழலுள்ளும்
நிலையா நினைவார்மே லில்லா வினைதானே. 8

சிறையார் வரிவண்டு தேனுண் டிசைபாட
மறையார் நிறையம்பர் மாகா ளம்மேய
நறையார் மலரானும் மாலும் காண்பொண்ணு
இறையான் கழலேத்த வெய்தும் மின்பம்மே. 9

மாசூர் வடிவின்னுர் மண்டை யுணல்கொள்வார்
கூசா துரைக்குஞ்சொற் கொள்கை குணமல்ல
வாசார் பொழிலம்பர் மாகா ளம்மேய
ஈசா வென்பார்கட் கில்லை யிடர்தானே. 10

வெரிநீர் கொளவோங்கும் வேணு புரந்தன்னுள்
திருமா மறைஞான சம்பந்தன சேணுர்
பெருமான் மலியம்பர் மாகா ளம்பேணி
உருகா வுரைசெய்வா ருயர்வா னடைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

லெல்லாம் அணியாக இருந்து அடியார்கள் மனத்தைக் கவர்தல். கேடில்கழல் - அழிந்துபடாத்திருவடி. உறுநோய்கள் தளரும், தவம் சாரும் என முடிக்க.

8. கொலை ஆர்மழு என்றது படைக்கலம் என்றபொதுமை பற்றி வந்த அடை; இறைவன் மழு யாரையும் கொலைசெய்தல் இல்லையாதலின். கோலச் சிலை - அழகுக்காகத் தரிக்கப்பட்ட வில்.

9. மறையார் - அந்தணர். நறை - தேன். இறையான் சிவபெருமான்.

10. மாசூர்வடிவு - அழுக்கடைந்த மேனி. இன்னுர் - துன்பமுடையவர்கள். மண்டை - வாயகன்ற உண்ணும் பாத்திரம். கூசாது உரைக்கும் சொல் - பொய் என்றறிந்தும் மனமும் வாயும் கூசாமல் உரைக்குஞ்சொல். வாசு ஆர் பொழில் - வாசனை நிறைந்த பொழில்; வெட்டிவேரும் ஆம்.

11. வெரி நீர் - தேனாகிய நீர். வேரி என்பது வெரி எனத் திரிந்து நின்றது. சேணுர் பெருமான் - விண்ணவர் தலைவனாகிய சிவபெருமான்.

# திருநாகைக்காரோணம்

***பதிகவரலாறு :***

*திருச்சாத்தமங்கையில் திருநீலநக்க நாயனுர் திருமாளிகை யில்தங்கி வழிபட்டுத் திருப்பதிகம்பாடி எழுந்தருளியிருந்த பிள்ளையார், பிற பதிகளையும் வழிபடத் திருவுளம்பற்றி, அடி யார் கூட்டங்களோடு நாகபட்டினத்தை யடைந்தார்கள். திரு நாகைக் காரோணத்துக் கைதொழுது கலந்த ஓசைச் சொற் றமிழ் மாலையாகிய 'புனையும் விரி கொன்றை' என்னும் இப் பதிகத்தைப்பாடிச் சிலநாள் தங்கியிருந்தார்கள்.*

பண் - குறிஞ்சி

**பதிகம் :** **எண் 84**

*திருச்சிற்றம்பலம்*

புனையும் விரிகொன்றைக் கடவுள் புனல்பாய
நனையுஞ் சடைமேலோர் நகுவெண் டலைசூடி
வினையில் லடியார்கள் விதியால் வழிபட்டுக்
கனையுங் கடனாகைக் காரோ ணத்தானே. 1

பெண்ணா ணெனநின்ற பெம்மான் பிறைச்சென்னி
அண்ணா மலைநாட னாரூ ருறையம்மான்
மண்ணார் முழவோவா மாடந் நெடுவீதிக்
கண்ணார் கடனாகைக் காரோ ணத்தானே. 2

---

*1. வினைநீங்கிய அடியார்கள் விதிப்படி வழிபட்டுச் செறி யும் கடனாகைக்காரோணத்தானே சிரமாலையணிந்தவன் என் கின்றது. புனையும் - அழகுசெய்யும். கடவுள்புனல் - தேவ கங்கை. வினையில் அடியார்கள் - வினை ஓய்ந்த அடியார்கள். கனையும் - செறியும்.*

*2. சிவமும் சத்தியுமாக நின்றவன், அண்ணாமலையான், ஆரூருறைவான் காரோணத்தானே என்கின்றது. திருமாலின் தருக்கொழித்த தலங்கள் மூன்றினையும் சேர்த்துக்கூறியருளி னர். திருவாரூரில் வில்நாணைச் செல்லாக அரித்து நிமிர்த்தித் திருமால் சிரத்தையிடறினர்; திருவண்ணாமலையில் தீமலையாய்*

பாரோர் தொழவிண்ணோர் பணியம் மதின்மூன்றும்
ஆரா ரழலூட்டி யடியார்க் கருள்செய்தான்
தேரார் விழவோவாச் செல்வன் றிரைசூழ்ந்த
காரார் கடனாகைக் காரோ ணத்தானே. 3

மொழிசூழ் மறைபாடி முதிருஞ் சடைதன்மேல்
அழிசூழ் புனலேற்ற வண்ணல் லணியாய
பழிசூழ் விலராய பத்தர் பணிந்தேத்தக்
கழிசூழ் கடனாகைக் காரோ ணத்தானே. 4

ஆணும் பெண்ணுமா யடியார்க் கருணல்கிச்
சேணின் றவர்க்கின்னஞ் சிந்தை செயவல்லான்
பேணி வழிபாடு பிரியா தெழுந்தொண்டர்
காணுங் கடனாகைக் காரோ ணத்தானே. 5

---

நின்று செருக்கடக்கினார்; நாகையிலும் தியாகர் திருவுருவில் இருந்து திருமாலின் தியானவஸ்துவானார் என்பதாம். மண் - மார்ச்சனை என்னும் மண். கண் - இடம்.

3. திரிபுரம் எரித்த செயல் விண்ணவர் மண்ணவர் அடியார் எல்லாரும் மகிழுஞ் செயலாயிற்று என்பது உணர்த்துகின்றது. ஆரார் - பகைவர். காரார்கடல் - கரியகடல்.

4. பழியொடு பொருந்தாத பத்தர்தொழும் நாகை என்கின்றது. மொழிசூழ்மறை - மந்திரமொழியாகச் சூழும் வேதம். அழிசூழ்புனல் - அழித்தலையெண்ணி மிடுக்கோடு வந்த கங்கை. பழிசூழ்வு இலராய - பழிசூழாத. பழியும் சூழ்ச்சியும் இலராய என்றுமாம்.

5. அடியார்க்கு அருள்செய்து, விலகிநின்றவருக்கும் திருவுளம் பாலித்துத் தியானிக்கும் செம்மனச் செல்வர் தரிசிக்க நின்றவன் இவன் என்கின்றது. சிவம் சத்தியாக நின்றாலல்லது அருளல் நிகழாமையின் 'ஆணும் பெண்ணுமாய் அருள் நல்கி' என்றார். சேண் நின்றவர் - தூரத்தே நின்றவர்; தேவருமாம். இன்னம் சிந்தைசெய வல்லான் - மேலும் திருவருள் உள்ளத்தைப் புரியவல்லவன். காணும் - அநவரததரிசனம் செய்யும்.

ஏனத் தெயிறோடு மரவ மெய்பூண்டு
வானத் திளந்திங்கள் வளருஞ் சடையண்ணல்
ஞானத் துரைவல்லார் நாளும் பணிந்தேத்தக்
கானற் கடனாகைக் காரோ ணத்தானே. 6

அரையா ரழனாக மக்கோ டசைத்திட்டு
விரையார் வரைமார்பின் வெண்ணீ றணியண்ணல்
வரையார் வனபோல வளரும் வங்கங்கள்
கரையார் கடனாகைக் காரோ ணத்தானே. 7

வலங்கொள் புகழ்பேணி வரையா லுயர்திண்டோள்
இலங்கைக் கிறைவாட வடர்த்தங் கருள்செய்தான்
பலங்கொள் புகழ்மண்ணிற் பத்தர் பணிந்தேத்தக்
கலங்கொள் கடனாகைக் காரோ ணத்தானே. 8

---

6. ஞானிகள் பணிய இருப்பான் இவன் என்கின்றது. ஏனத்து எயிறு - பன்றிக்கொம்பு. அரவம் - பாம்பு. ஞானத்து உரைவல்லார் - சிவஞானத்தோடு செறிந்து இறைவன் புகழையே பேசவல்லவர்கள். கானல் - கடற்கரைச் சோலை.

7. சங்குமணியைச் சர்ப்பத்தோடு அணிந்தவன் இவன் என்கின்றது. அரை ஆர் அழல் நாகம் - இடுப்பில் பொருந்திய தீயைப்போல் கொடிய விடப்பாம்பு. அக்கோடு - சங்குமணியோடு. அசைத்திட்டு - கட்டி. விரை - மணம். வரை ஆர்வன போல - மலைகள் நிறைந்திருப்பனபோல. வங்கங்கள் - தோணிகள். வங்கங்கள் வரையார்வனபோல வளரும் கரை எனக் கூட்டுக.

8. தன்புகழைநம்பி வளர்ந்த தோளையுடைய இராவணன் வாட அடர்த்து அருள்செய்தவர் இவர் என்கின்றது. வலங்கொள் புகழ் என்றது கொடை முதலியவற்றாலும் புகழ் வருமாதலின் அவற்றினின்றும் பிரிக்க. கலம் - மரக்கலம்.

திருமா லடிவீழத் திசைநான் முகனேத்தப்
பெருமா னெனநின்ற பெம்மான் பிறைச்சென்னிச்
செருமால் விடையூருஞ் செல்வன் றிரைசூழ்ந்த
கருமால் கடனாகைக் காரோ ணத்தானே. 9

நல்லா ரறஞ்சொல்லப் பொல்லார் புறங்கூற
அல்லா ரலர்தூற்ற வடியார்க் கருள்செய்வான்
பல்லார் தலைமாலை யணிவான் பணிந்தேத்தக்
கல்லார் கடனாகைக் காரோ ணத்தானே. 10

கரையார் கடனாகைக் காரோ ணம்மேய
நரையார் விடையானை நவிலுஞ் சம்பந்தன்
உரையார் தமிழ்மாலை பாடு மவரெல்லாம்
கரையா வுருவாகிக் கலிவா னடைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*9. அயன் மால் இவர்கள் பெருமானே என ஏத்தநின்றவர், விடையூருஞ்செல்வர் இவர் என்கின்றது. செரு மால் விடை - சண்டைசெய்யும் பெரிய இடபம். கரு மால் கடல் - கரிய பெரிய கடல்.*

*10. நல்லவர்கள் அறம் சொல்ல, தீயோர் புறங்கூற, அயலார் பழிசொல்ல அடியார்க்கு அருள்செய்பவன் காரோணத்தான் என்கின்றது. பல் ஆர் தலை - பல்லோடுகூடிய தலை. கல் ஆர் கடல் - கல் என்னும் ஒலியோடு கூடிய கடல்.*

*11. காரோணநாதனை ஞானசம்பந்தன் சொன்ன தமிழ் மாலையாகிய இவற்றைப் பாடுவார் அழியாவடிவோடு வான் அடைவார்கள் என்கின்றது. கரையார் கடல் - ஒலிக்கின்ற கடல். நரை - வெண்மை. உரை - புகழ். கரையா உருவாகி - அழியாத வடிவத்தோடு. கலி - ஓசை.*

# திருநல்லம்

*பதிகவரலாறு :*

*வைகல் மாடக்கோயிலை வணங்கிப்போந்த பிள்ளையார் திருநல்லத்தை நணுகினார்கள். அங்கு எழுந்தருளியுள்ள நீடுமாமணியின் சேவடிகளை வணங்கி, இனிய தமிழாகிய 'கல்லால் நிழன்மேய' என்னும் பதிகத்தை அருளிச்செய்தார்.*

பண் - குறிஞ்சி

**பதிகம்:** **எண் 85**

*திருச்சிற்றம்பலம்*

கல்லா னிழன்மேய கறைசேர் கண்டாவென்
றெல்லா மொழியாலு மிமையோர் தொழுதேத்த
வில்லா லரண்மூன்றும் வெந்து விழவெய்த
நல்லா னமையாள்வா னல்ல நகரானே. 1

தக்கன் பெருவேள்வி தன்னி லமரரைத்
துக்கம் பலசெய்து சுடர்பொற் சடைதாழக்
கொக்கின் னிறகோடு குளிர்வெண் பிறைசூடும்
நக்கன் னமையாள்வா னல்ல நகரானே. 2

---

*1. உபதேச குருமூர்த்தியாயிருந்த நீலகண்டா என்று தேவர்கள் தோத்திரிக்கத் திரிபுரம் எரித்த பெருமான் நம்மை யாட்கொள்ளுவதற்காகத் திருநல்லம் என்னும் திருப்பதியில் எழுந்தருளியிருக்கின்றார் என்கின்றது. கறை - விஷம். எல்லா மொழியாலும் - தமக்குத் தெரிந்த மொழிகள் எல்லாவற்றாலும்.*

*2. தக்கயாகத்தில் தேவர்களைத் துக்கப்படச்செய்த பெருமான் இவர் என்கின்றது. நக்கன் - பெருமான். இது நிர்வாணி என்னும் பொருளது.*

அந்தி மதியோடு மரவச் சடைதாழ
முந்தி யனலேந்தி முதுகாட் டெரியாடி
சிந்தித் தெழுவல்லார் தீரா வினைதீர்க்கும்
நந்தி நமையாள்வா னல்ல நகரானே. 3

குளிரும் மதிசூடிக் கொன்றைச் சடைதாழ
மிளிரும் மரவோடு வெண்ணூ றிகழ்மார்பில்
தளிருந் திருமேனித் தையல் பாகமாய்
நளிரும் வயல்சூழ்ந்த நல்ல நகரானே. 4

மணியார் திகழ்கண்டம் முடையான் மலர்மல்கு
பிணிவார் சடையெந்தை பெருமான் கழல்பேணித்
துணிவார் மலர்கொண்டு தொண்டர் தொழுதேத்த
நணியா னமையாள்வா னல்ல நகரானே. 5

வாசம் மலர்மல்கு மலையான் மகளோடும்
பூசுஞ் சுடுநீறு புனைந்தான் விரிகொன்றை
ஈசன் னெனவுள்கி யெழுவார் வினைகட்கு
நாசன் னமையாள்வா னல்ல நகரானே. 6

---

3. தியானிப்பவர்களுடைய தீராவினை நீக்குவார் இவர் என்கின்றது. முந்தி - ஊழித் தொடக்கத்தில். தீராவினை - இறைவன் திருவருளால் அன்றி வேறொன்றாலும் தீராத வினை. நந்தி - சிவபெருமான்.

4. உமையொருபாகன் இவன் என்கின்றது. மிளிரும் - விளங்குகின்ற. தளிரும்திகழ் மேனி - தளிரைப்போல் விளங்குகின்ற மேனி. நளிரும் வயல் - குளிர்ந்த வயல்.

5. மலர்கொண்டு கழல்பேணி தொண்டர்கள் தொழுது ஏத்த அவர்களுக்கு அண்மையில் இருப்பவன் இவன் என்கின்றது. மணி - நீலமணி. பிணிவார் சடை - கட்டிய நீண்ட சடை. நணியான் - நணுகியவன். துணிவார் தொண்டர் - மனத் துணிவினை உடைய தொண்டர்.

6. உமாதேவியோடு நீறணிந்து கொன்றை சூடிய ஈசன் எனத் தியானிப்பார்க்கு வினைநாசம் செய்பவன் இவன் என்கின்றது. உள்கி - நினைத்து.

அங்கோல் வளைமங்கை காண வனலேந்திக்
கொங்கார் நறுங்கொன்றை சூடிக் குழகாக
வெங்கா டிடமாக வெந்தீ விளையாடும்
நங்கோ னமையாள்வா னல்ல நகரானே. 7

பெண்ணார் திருமேனிப் பெருமான் பிறைமல்கு
கண்ணார் நுதலினான் கயிலை கருத்தினால்
எண்ணா தெடுத்தானை யிறையே விரலூன்றி
நண்ணார் புரமெய்தா னல்ல நகரானே. 8

நாகத் தணையானு நளிர்மா மலரானும்
போகத் தியல்பினாற் பொலிய வழகாகும்
ஆகத் தவளோடு மமர்ந்தங் கழகாரும்
நாகம் மரையார்த்தா னல்ல நகரானே. 9

குறியில் சமணோடு குண்டர் வண்டேரர்
அறிவில் லுரைகேட்டங் கவமே கழியாதே
பொறிகொள் ளரவார்த்தான் பொல்லா வினைதீர்க்கும்
நறைகொள் பொழில்சூழ்ந்த நல்ல நகரானே. 10

---

*7. உமையம்மைகாணக் கொன்றைசூடி, ஊழிக்காலத்தில் நடனம் புரிபவர் இவர் என்கின்றது. அம் கோல் வளை - அழகிய திரண்ட வளையல். கொங்கு - மணம் நிறைந்த தேன். குழகாக - இளமையாக.*

*8. இராவணனை விரலால் ஊன்றித் திரிபுரம் எரித்தவர் இவர் என்கின்றது. எண்ணாது - பின்வருகின்ற தீங்கை முன் ஆராயாது. இறையே - சிறிது. நண்ணார் - பகைவர்.*

*9. நாகத்தணையான் - திருமால். திருமாலை இச்சொல்லால் குறித்தது அணையிருந்தும் அணையிலேயே அருகில் அலர்மகள் இருந்தும் மாலுக்குப் போகம் கூடவேண்டுமாயின் இறைவன் போகியாய் இருந்தால் அல்லது பயனில்லை என்பதைக் காட்ட. மாமலரான் என்பதும் அங்ஙனமே.*

*10. இது பொல்லா வினையைப் போக்குவார் இவர் என்கின்றது. குறி இல் சமண் - குறிக்கோளற்ற சமணர். குண்டர் - அறிவிலிகள். தேவர் - புத்தர். அவமே - வீணாக. பொறி - படப்பொறி. நறை - தேன்.*

நலமார் மறையோர்வாழ் நல்ல நகர்மேய
கொலைசேர் மழுவானைக் கொச்சை யமர்ந்தோங்கு
தலமார் தமிழ்ஞான சம்பந் தன்சொன்ன
கலைக ளிவைவல்லார் கவலை கழிவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*11. நல்ல நகரானை ஞானசம்பந்தன் சொன்ன கலைக ளாகிய இவைகளை வல்லவர்கள் கவலை கழிவார் என்கின்றது. கொச்சை - சீகாழி. இப்பதிகத்தைக் கலைகள் எனச் சிறப்பித்தமை காண்க.*

# திருநல்லூர்

***பதிகவரலாறு:***

*திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருபாலைத்துறையை வணங்கிக்கொண்டு திருநல்லூரரை யடைந்தார்கள். அங்கிருந்த அந்தணர்கள் மங்கள வாத்தியங்களுடன் எதிர்கொண்டு அழைத்தனர். பிள்ளையார் சிவிகையில் ஆரோகணித்த வண்ணமே சென்றார். கோயிலை அணுகியதும் சிவிகையினின்றும் கீழிறங்கி, அந்தணர் கூட்டம் முன்செல்ல, அடியார் கூட்டம் இருமருங்கும் வர, திருக்கோயிலையடைந்தார். கோபுரத்தைக்கண்டு வணங்கினார். கோயிலை வலம்வந்தார். அப்போது ஆனந்தபாஷ்பம் அருவிபோற்பொழிய இறைவனைத் தொழுது பரவுசொற்பதிகமாகிய "கொட்டும்பறை" என்னும் இதனை அருளிச்செய்தார்.*

பண் - குறிஞ்சி

**பதிகம்:** **எண் 86**

*திருச்சிற்றம்பலம்*

கொட்டும் பறைசீராற் குழும வனலேந்தி
நட்டம் பயின்றாடு நல்லூர்ப் பெருமானை
முட்டின் றிருபோது முனியா தெழுந்தன்பு
பட்ட மனத்தார்க ளறியார் பாவமே. 1

ஏறி லெருதேறு மெழிலா யிழையோடும்
வேறும் முடனுமாம் விகிர்த ரவரென்ன
நாறும் மலர்ப்பொய்கை நல்லூர்ப் பெருமானைக்
கூறும் மடியார்கட் கடையா குற்றமே. 2

---

*1. பறை கொட்டுஞ் சீருக்கு ஏற்ப அனலேந்தியாடும் நல்லூர்ப் பெருமானை காலை மாலை யிருவேளைகளிலும் அன்பு செய்யு மனத்தவர்கள் பாவமேயறியார் என்கின்றது. சீரால் - சதிக்கு ஏற்ப சீரால் ஆடும் எனக் கூட்டுக. முட்டின்று - இடையீடு இல்லாமல். அன்புபட்ட - அன்பொடு பொருந்திய.*

*2. அம்மையொடு உடனாயும் வேறாயும் இருக்கும் பெருமானாகிய நல்லூர் இறைவனைத் தோத்திரிப்பார்க்குக் குற்றம் அடையா என்கின்றது. ஏறில் எருது ஏறும் விகிர்தர் எனக் கூட்டிப் பொருள்கொள்க. எருதன்றி வேறொன்றிலும்*

சூடு மிளந்திங்கட் சுடர்பொற் சடைதாழ
ஓடுண் கலனாக வூரு ரிடுபிச்சை
நாடுந் நெறியானை நல்லூர்ப் பெருமானைப்
பாடும் மடியார்கட் கடையா பாவமே. 3

நீத்த நெறியானை நீங்காத் தவத்தானை
நாத்த நெறியானை நல்லூர்ப் பெருமானைக்
காத்த நெறியானைக் கைகூப் பித்தொழு
தேத்து மடியார்கட் கில்லை யிடர்தானே. 4

ஆகத் துமைகேள்வ னரவச் சடைதாழ
நாகம் மசைத்தானை நல்லூர்ப் பெருமானைத்
தாகம் புகுந்தண்மித் தாள்க டொழுந்தொண்டர்
போக மனத்தராய்ப் புகழத் திரிவாரே. 5

---

அவர்க்கு விருப்பில்லை என்றவாறு. எழில் - அழகு. வேறுதல் - அம்மையை இடப்பாகத்துக் கொண்டிருத்தல். உடனுதல் - தன்மேனியில் ஒருபங்காய்க் கொண்டு அர்த்தநாரீச்சுரராக இருத்தல். இதுவும் உருவில் வேறுபட்டுத் தோன்றுதலின் சத்தியைத் தன்னுளடக்கியிருக்கும்நிலை கூறிற்றுமாம்.

3. ஊரிடு பிச்சையை நாடும் முறையையுடைய நல்லூர்ப் பெருமானைப் பாடுகின்ற அடியவர்களைப் பாவம் அடையா என்கின்றது. சுடர் பொன் சடை - ஒளிவிடுகின்ற பொன் போலும் திருச்சடை.

4. இவனைக் கைதொழுதேத்துவார்கட்கு இடர் இல்லை என்கின்றது. நீத்த நெறியானை - விடுபட்ட நெறிகளையுடையவனை. நெறி என்பன யாவும் மலமாயாபந்தங்களாற் கட்டப்பெற்ற எம்போலியர்க்கே ஆதலின் அவையற்ற இறைவன் விடுபட்ட ஆசார சீலங்களை உடையவனாயினன். நாத்த நெறியானை என்பதில் ஞாத்தநெறி நாத்த நெறியாயிற்று. ஞாத்த - கட்டப்பட்ட; எமக்கு ஒழுங்குகளைக் கட்டிக்கொடுத்தவனை என்பது பொருள்.

5. சிவனைச் சேரவேண்டும் என்ற தாகம் எடுத்து அணுகுந் தொண்டர்கள் போகநிறைந்த மனத்தராக உலகம் புகழத் திரிவார்கள் என்கின்றது. ஆகம் - மேனி. தாகம் புகுந்து - வேட்கைமிக்கு. அண்மி - அணுகி.

கொல்லுங் களியானை யுரிபோர்த் துமையஞ்ச
நல்ல நெறியானை நல்லூர்ப் பெருமானைச்
செல்லு நெறியானைச் சேர்ந்தா ரிடர்தீரச்
சொல்லு மடியார்க ளறியார் துக்கமே. 6

எங்கள் பெருமானை யிமையோர் தொழுதேத்தும்
நங்கள் பெருமானை நல்லூர் பிரிவில்லாத்
தங்கை தலைக்கேற்றி யாளென் றடிநீழல்
தங்கு மனத்தார்க ளடுமாற் றறுப்பாரே. 7

காம னெழில்வாட்டிக் கடல்சூ ழிலங்கைக்கோன்
நாம மிறுத்தானை நல்லூர்ப் பெருமானை
ஏம மனத்தாரா யிகழா தெழுந்தொண்டர்
தீப மனத்தார்க ளறியார் தீயவே. 8

வண்ண மலரானும் வைய மளந்தானும்
நண்ண லரியானை நல்லூர்ப் பெருமானைத்
தண்ண மலர்தூவித் தாள்க டொழுதேத்த
எண்ணு மடியார்கட் கில்லை யிடுக்கணே. 9

---

6. மக்களடையும் நெறியாகவுள்ள நல்லூர்ப் பெருமானைச் சொல்லும் அடியார்கள் துக்கம் அறியார் என்கின்றது. உரி - தோல். செல்லுநெறி - அடையத்தகும் நெறியாகிய முத்தி. சேர்ந்தார் - தியானித்தவர்கள்.

7. சிரமேற் கைகுவித்து, திருமுன்நின்று 'அடியேன்மீளா ஆளாவேன்' என்று திருவடி நீழலில் தங்கும் மனத்தார்கள் தடுமாற்றம் அறுப்பார்கள் என்கின்றது.

8. இராவணனது புகழைக் கெடுத்த பெருமானாகிய நல்லூர்ப் பெருமானைப் புகழுந்தொண்டர் ஒளிமனத்தர்களாய் தீயன அறியார் என்கின்றது. காமன் - மன்மதன். எழில் - எழுச்சி; தருக்கு. நாமம் - புகழ். ஏமமனத்தார் - பாதுகாப்புற்ற மனத்தவர்கள். தீபமனத்தார் - எழுதிய தீபம்போல நிலைத்த மனத்தடியார்கள்.

9. அயனும் மாலும் அணுகவும் அரிய பெருமான் திருவடியை மலர்தூவி வணங்கும் அடியார்கட்கு என்றும் துன்பமில்லை என்கிறது. வண்ணமலரான் - செந்தாமரையில்

பிச்சக் குடைநீழற் சமணர் சாக்கியர்
நிச்ச மலர்தூற்ற நின்ற பெருமானை
நச்சு மிடற்றானை நல்லூர்ப் பெருமானை
எச்சு மடியார்கட் கில்லை யிடர்தானே. 10

தண்ணம் புனற்காழி ஞான சம்பந்தன்
நண்ணும் புனல்வேலி நல்லூர்ப் பெருமானை
வண்ணம்'புனைமாலை வைக லேத்துவார்
விண்ணுந் நிலனுமாய் விளங்கும் புகழாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

உள்ள பிரமன். வையம் அளந்தான் - உலகளந்த பெருமாள். தொழுது ஏத்தவும் வேண்டாம்; எண்ணிஞற்போதும் இடுக்கண் இல்லை என்று எளிமை கூறியவாறு.

10. அமணரும் புத்தரும் அலர்தூற்ற நின்ற பெருமானைப் புகழும் அடியார்கட்கு இடர் இல்லை என்கின்றது. பிச்சக்குடை - மயிற்பீலியாலாகிய குடை. நிச்சம் - நாடோறும். அலர் - பழிச்சொல். நச்சுமிடற்றானை - விஷம் பொருந்திய கழுத்தை யுடையவனை.

11. ஞானசம்பந்தன், நல்லூர்ப்பெருமானைச் சொன்ன புகழ்மாலையை நாளும் ஏத்துவார் விண்ணும் நிலனுமாக விளங்கும் புகழார் என்கின்றது. தண்ணம்புனல்: அம் சாரியை. புனல் வேலி - நீரை வேலியாகவுடைய. வண்ணம்புனைமாலை - இறையியல்புகளை எடுத்துச் சேர்த்துச் சொன்ன மாலை. வைகல் - நாடோறும்.

# திருவடுகூர்

***பதிகவரலாறு :***

*சண்பைவேந்தர் திருப்பாதிரிப்புலியூரை வணங்கிப் பதிகம்பாடித் திருவடுகூரையடைந்தார். இறைவனை வணங்கி, 'சுடுகூர் எரிமாலை' என்னும் இப்பதிகத்தை அருளிச்செய்தார்.*

**பண் - குறிஞ்சி**

**பதிகம்** **எண் 87**

*திருச்சிற்றம்பலம்*

சுடுகூ ரெரிமாலை யணிவர் சுடர்வேலர்
கொடுகூர் மழுவாளொன் றுடையார் விடையூர்வர்
கடுகூர் பசிகாமங் கவலை பிணியில்லார்
வடுகூர் புனல்சூழ்ந்த வடுகூ ரடிகளே. 1

பாலுந் நறுநெய்யுந் தயிரும் பயின்றாடி
ஏலுஞ் சுடுநீறு மென்பு மொளிமல்கக்
கோலம் பொழிற்சோலைக் கூடி மடவன்னம்
ஆலும் வடுகூரி லாடும் மடிகளே. 2

சூடு மிளந்திங்கட் சுடர்பொற் சடைதன்மேல்
ஓடுங் களியானை யுரிபோர்த் துமையஞ்ச
ஏடு மலர்மோந்தங் கெழிலார் வரிவண்டு
பாடும் வடுகூரி லாடும் மடிகளே. 3

---

*1. தீயணிவர், சுடர்வேலர், மழுவுடையர், பசி காமம் கவலை பிணி முதலியன இல்லாதவர் வடுகூரடிகள் என்கின்றது. கூர் எரி மாலை - மிக்க தீவரிசையை. வேல் - சூலம். கொடு கூர் - கொடுமைமிக்க. விடை - இடபம். கடு கூர் - கடுமைமிக்க.*

*2. பால் நெய் தயிர் இவற்றை ஆடி, நீறும் எலும்பும் ஒளி நிரம்பச்சூடி, நடஞ்செய்வர் இவர் என்கின்றது. பயின்று - பலகாலும் விரும்பி. ஏலும் - பொருந்தும். கோலம் - அழகு. ஆலும் - ஒலிக்கும்.*

*3. சடையின்மேல் இளம்பிறையைச் சூடுவர்; உமையாள் அஞ்ச யானையை உரித்துப் போர்த்திக்கொண்டு ஆடுவர் வடுகூர்நாதர் என்கின்றது. மலர் ஏடு - பூவிதழ். மோந்து - முகர்ந்து. எழிலார் - அழகுமிக்க.*

துவரும் புரிசையுந் துதைந்த மணிமாடம்
கவர வெரியோட்டிக் கடிய மதிலெய்தார்
கவரு மணிகொல்லைக் கடிய முலைநல்லார்
பவரும் வடுகூரி லாடும் மடிகளே. 4

துணியா ருடையாடை துன்னி யரைதன்மேல்
தணியா வழனாகந் தரியா வகைவைத்தார்
பணியா ரடியார்கள் பலரும் பயின்றேத்த
அணியார் வடுகூரி லாடும் மடிகளே. 5

தளருங் கொடியன்ன டன்னோ டுடனாகிக்
கிளரு மரவார்த்துக் கிளரு முடிமேலோர்
வளரும் பிறைசூடி வரிவண் டிசைபாட
ஒளிரும் வடுகூரி லாடும் மடிகளே. 6

---

4. திரிபுரம் எரியச்செய்தார் வடுகூரிலாடும் அடிகள் என்கின்றது. துவரும் புரிசையும் துதைந்த மணிமாடம் - காவியூட்டி மதில்கள் செறிந்த அழகிய மாடங்கள். ஓட்டி - பரப்பி. கடிய மதில் - காவலோடுகூடிய முப்புரங்கள். மணி கவரும் கொல்லை கடிய முலைநல்லார் பவரும் - இரத்தினங்களைக் கவரும் முல்லைநிலத்தில் உள்ள காவல்பொருந்திய முலையோடு கூடிய பெண்களாகிய கொடிகளோடு கூடிய.

5. கோவணமுடுத்து அதன்மேல் அழகாக நாகம்வைத்த வர், அடியார்கள் பலரும் வணங்கும் வடுகூரில் ஆடும் அடிகள் என்கின்றது. துணி - கிழிக்கப்பெற்ற கோவணம். துன்னி - பொருந்தி. தணியா அழல் நாகம் - தணியாத கோபத்தோடு கூடிய பாம்பு. பணி ஆர் அடியார்கள் - பணிதலைப்பொருந்திய அடியார்கள்.

6. உமாதேவியோடு உடனாகி, அரவு பிறை இவற்றை அணிந்து வடுகூர் அடிகள் ஆடும் என்கின்றது. தளரும் கொடி யன்னாள் - சுமைபொறுக்காது தள்ளாடும் கொடியை ஒத்த உமாதேவி. அரவு - பாம்பு. கிளரும் - விளங்கும். ஒளிரும் - பிரகாசிக்கும்.

நெடியர் சிறிதாய நிரம்பா மதிசூடும்
முடியர் விடையூர்வர் கொடியர் மொழிகொள்ளார்
கடிய தொழிற்காலன் மடிய வுதைகொண்ட
அடியர் வடுகூரி லாடும் மடிகளே. 7

பிறையு நெடுநீரும் பிரியா முடியினர்
மறையும் பலபாடி மயானத் துறைவாரும்
பறையு மதிர்குழலும் போலப் பலவண்டாங்
கறையும் வடுகூரி லாடும் மடிகளே. 8

சந்தம் மலர்வேய்ந்த சடையின் னிடைவிம்மு
கந்தம் மிகுதிங்கட் சிந்து கதிர்மாலை
வந்து நயந்தெம்மை நன்று மருள்செய்வார்
அந்தண் வடுகூரி லாடும் மடிகளே. 9

திருமா லடிவீழத் திசைநான் முகனுய
பெருமா னுணர்கில்லாப் பெருமா னெடுமுடிசேர்
செருமால் விடையூருஞ் செம்மான் றிசைவில்லா
அருமா வடுகூரி லாடும் மடிகளே. 10

---

7. நெடியர், சிறுமதிசூடும் முடியர், விடையூர்வர், கொடியர் மொழிகொள்ளாதவர், காலனையுதைத்த அடியவர் வடுகூரில் ஆடும் அடிகள் என்கின்றது. நிரம்பா மதி - இளம்பிறை கடிய தொழில் - கொடுந்தொழில்.

8. கங்கையும் பிறையும் பிரியா முடியாரும், வேதம் பல பாடி மயானத்துறைவாரும் வடுகூரில் ஆடும் அடிகள் என்கின்றது. நெடுநீர் - கங்கை. பறையும் குழலும்போலப் பல வண்டு ஆங்கு அறையும் எனப் பிரிக்க.

9. மலர் புனைந்த சடைக்காட்டில் இருப்பதால் மணம் பெற்ற மதி சிந்துகின்ற கதிர்களோடு வந்து நயந்து எமக்கு நன்மையை அருளுவர் வடுகூரிலழகர் என்கின்றது. சந்தம் - அழகு. கதிர்மாலை - கிரணவரிசை. நயந்து - இனியன பலகூறி, நன்றும் அருள்செய்வார் - நன்றாக அருளுவர். நன்றும் மருள் செய்வார் - நன்றாக மயக்குவர் என்றுமாம்.

10. அயனும் மாலும் அறியவொண்ணாப்பெருமான் மாலாகிய இடபமூரும் செம்மான் வடுகூர் அடிகள் என்கின்றது.

படிநோன் பவையாவர் பழியில் புகழான
கடிநா ணிகழ்சோலை கமழும் வடுகூரைப்
படியா னசிந்தை மொழியார் சம்பந்தன்
அடிஞா னம்வல்லா ரடிசேர் வார்களே. 11

திருச்சிற்றம்பலம்

---

செருமால் - பொருகின்ற பெரிய; திருமாலாகிய என்றுமாம். திசை வில்லா அரு மா வடுகூரில்-திசைகளில் எல்லாம் ஒளியைச் செய்கின்ற அரிய பெரிய வடுகூரில்.

11. இவ்வுலகத்துள்ள நோன்பெல்லாம் ஆய இறைவன் எழுந்தருளியுள்ள வடுகூரைப் பாடிய திருவடிஞானத்தால்வந்த இத்திருப்பாடல்களைவல்லார் திருவடிசேர்முத்தியை எய்துவார்கள். படி - பூமி. படியான சிந்தை - படிதலான மனம். அடிஞானம் - சிவஞானம்; அடிசேர்வார் - அடிசேரும் முத்தியாகிய சாயுச்சிய முத்தியை அடைவார்கள்.

# திருவாப்பனூர்

***பதிகவரலாறு :***

*திருப்பரங்குன்றை வணங்கியபின் திருஞானசம்பந்தப் பிள்ளையார் ஆப்பனூரை அணைந்து வணங்கி ' முற்றுஞ் சடைமுடி.' என்னும் இப்பதிகத்தை அருளிச்செய்தார்கள்.*

**பண் - குறிஞ்சி**

**பதிகம்** **எண் 88**

*திருச்சிற்றம்பலம்*

முற்றுஞ் சடைமுடிமேன் முதிரா விளம்பிறையன்
ஒற்றைப் படவரவ மதுகொண் டரைக்கணிந்தான்
செற்றமில் சீரானைத் திருவாப்ப னூரானைப்
பற்று மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 1

குரவங் கமழ்குழலாள் குடிகொண்டு நின்றுவிண்ணோர்
விரவுந் திருமேனி விளங்கும் வளையெயிற்றின்
அரவ மணிந்தானை யணியாப்ப னூரானைப்
பரவு மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 2

முருகு விரிகுழலார் மனங்கொ ளநங்கனைமுன்
பெரிது முனிந்துகந்தான் பெருமான் பெருங்காட்டின்
அரவ மணிந்தானை யணியாப்ப னூரானைப்
பரவு மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 3

---

*1. இப்பதிகம் ஆப்பனூரானைப் பணிவார், பரவுவார், புகழ்வார், வினைப்பற்றறுப்பார் என்கின்றது. ' முற்றும் சடை முதிரா இளம்பிறை' என்பதில் பொருள்முரண் உள்ளது. செற்றம் - கோபம்.*

*2. குரவம் கமழ்குழலாள் - குராமலர் மணக்கும் கூந்தலையுடைய உமாதேவி. விரவும் - கலந்து பணியும். வளை எயிறு - வளைந்த விஷப்பல். பரவுதல் - தோத்திரித்தல்.*

*3. முருகு விரி குழலார் - மணம் வீசும் கூந்தலையுடைய பெண்கள். அநங்கன் - மன்மதன்.*

பிணியும் பிறப்பறுப்பான் பெருமான் பெருங்காட்டில்
துணியி னுடைதாழச் சுடரேந்தி யாடுவான்
அணியும் புனலானை யணியாப்ப னூரானைப்
பணியு மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 4

தகர மணியருவித் தடமால் வரைசிலையா
நகர மொருமூன்று நலங்குன்ற வென்றுகந்தான்
அகர முதலானை யணியாப்ப னூரானைப்
பகரு மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 5

ஓடுந் திரிபுரங்க ளுடனே யுலந்தவியக்
காட திடமாகக் கனல்கொண்டு நின்றிரவில்
ஆடுந் தொழிலானை யணியாப்ப னூரானைப்
பாடு மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 6

இயலும் விடையேறி யெரிகொண் மழுவீசிக்
கயலி னிணைக்கண்ணு ளொருபாற் கலந்தாட
இயலு மிசையானை யெழிலாப்ப னூரானைப்
பயிலு மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 7

கருக்கு மணிமிடறன் கதநாகக் கச்சையினன்
உருக்கு மடியவரை யொளிவெண் பிறைசூடி
அரக்கன் றிறலழித்தா னணியாப்ப னூரானைப்
பருக்கு மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 8

---

4. பிணியும் பிறப்பும் அறுப்பான் என உம்மை விரிக்க. துணியின் உடை - கீண்ட கோவண உடை.

5. தகரம் அணி யருவி - மயிர்ச்சாந்தணிந்த அருவி. நகரம் ஒரு மூன்று - முப்புரம். அகரமுதலானை என்பது 'அகரமுதல எழுத்தெல்லாம்' என்ற குறட்கருத்து.

6. உலந்து - வற்றி.

7. இயலும் விடை - மனம்போலியங்கும் இடபம்.

8. கருக்கும் மணி மிடறன் - மேலும் கருக்கும் நீலமணி போலும் கழுத்தினையுடையவன். கதநாகம் - சினத்தோடுகூடிய

கண்ணன் கடிக்கமல மலர்மே லினிதுறையும்
அண்ணற் களப்பரிதாய் நின்றங் கடியார்மேல்
எண்ணில் வினைகளைவா னெழிலாப்ப னூரானைப்
பண்ணின் னிசைபகர்வார் வினைபற் றறுப்பாரே. 9

செய்ய கலிங்கத்தார் சிறுதட் டுடையார்கள்
பொய்யர் புறங்கூறப் புரிந்த வடியாரை
ஐய மகற்றுவா னணியாப்ப னூரானைப்
பைய நினைந்தெழுவார் வினைபற் றறுப்பாரே. 10

அந்தண் புனல்வைகை யணியாப்ப னூர்மேய
சந்த மலர்க்கொன்றை சடைமே லுடையானை
நந்தி யடிபரவு நலஞான சம்பந்தன்
சந்த மிவைவல்லார் தடுமாற் றறுப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பாம்பு. அரக்கன் - இராவணன். திறல் - வலி. பருக்கும் - பருகும் என்பதன் விரித்தல் விகாரம். குடிக்கும் என்பது பொருள்.

9. கடிக்கமலம் - மணம் உள்ள தாமரை. அண்ணல் என்றது பிரமனை.

10. செய்ய கலிங்கத்தார் - சிவந்த காவியாடையார். சிறு தட்டு - சிறு தடுக்கு. புரிந்த - விரும்பிய. ஐயம் அகற்றுவான் - சந்தேக ஞானத்தை விளக்குபவன்.

11. நந்தி - சிவபெருமான். சந்தம் - சந்தத்தோடுகூடிய திருப்பாடல்.

# திருவெருக்கத்தம்புலியூர்

***பதிகவரலாறு :***

*பொன்னம்பலந் தொழுது போந்த புகலிப் பிள்ளையார் திருமுன்பு சென்று, திருநீலகண்ட யாழ்ப்பாணர், 'அடியேன் பதி முதலியவற்றையும் வணங்கிப் போதல்வேண்டும்' என்று விண்ணப்பிக்க, பிள்ளையார் அங்ஙனமே தந்தையார் பரிசனங்கள் பாணர் மதங்கசூளாமணியார் இவர்களுடன் நிவாநதியின் கரைவழியே, மேற்றிசையிற்போய்த் திரு எருக்கத்தம்புலியூரை அடைந்தார். அப்போது பாணனர் இது 'அடியேன் பதி' என விண்ணப்பித்துக்கொள்ள, புகலிவேந்தர் பெரிதும் விருப்புற்று எழுந்தருளினர். திருக்கோயிலுக்குச் சென்று வழிபட்டுப் "படையார் தரு" என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்.*

பண் - குறிஞ்சி

**பதிகம் :** **எண் 89**

*திருச்சிற்றம்பலம்*

படையார் தருபூதப் பகடா ருரிபோர்வை
உடையா னுமையோடு முடனு யிடுகங்கைச்
சடையா னெருக்கத்தம் புலியூர்தகு கோயில்
விடையா னடியேத்த மேவா வினைதானே. 1

இலையார் தருசூலப் படையெம் பெருமானாய்
நிலையார் மதின்மூன்று நீருய் விழவெய்த
சிலையா னெருக்கத்தம் புலியூர்த் திகழ்கோயில்
கலையா னடியேத்தக் கருதா வினைதானே. 2

---

*1. பகடு ஆர் உரி - யானையின் தோல். மேவா - தம் வலிமையைக்காட்டா.*

*2. இலையார்தரு சூலப்படை - இலைவடிவாகச் செய்யப் பெற்ற சூலப்படை. நிலையார் - அழிந்துபடுந்தன்மையரான திரிபுராதிகள்.*

விண்ணோர் பெருமானே விகிர்தா விடையூர்தீ
பெண்ணா ணலியாகும் பித்தா பிறைசூடீ
எண்ணா ரெருக்கத்தம் புலியூ ருறைகின்ற
அண்ணா வெனவல்லார்க் கடையா வினைதானே. 3

அரையார் தருநாக மணிவா னலர்மாலை
விரையார் தருகொன்றை யுடையான் விடையேறி
வரையா னெருக்கத்தம் புலியூர் மகிழ்கின்ற
திரையார் சடையானைச் சேரத் திருவாமே. 4

வீறார் முலையாளைப் பாக மிகவைத்துச்
சீறா வருகாலன் சினத்தை யழிவித்தான்
ஏறா னெருக்கத்தம் புலியூ ரிறையானை
வேறா நினைவாரை விரும்பா வினைதானே. 5

நகுவெண் டலையேந்தி நானாவிதம் பாடிப்
புகுவா னயம்பெய்யப் புலித்தோல் பியற்கிட்டுத்
தகுவா னெருக்கத்தம் புலியூர்த் தகைந்தங்கே
தொகுவான் கழலேத்தத் தொடரா வினைதானே. 6

---

3. பெண் ஆண் அலியாகும் - பால் பாகுபாட்டையும் திணைப்பாகுபாட்டையும் கடந்தவன் என்பது கருத்து. 'பித்தா பிறைசூடீ' இத்தொடரே சுந்தரர் வாக்கில் தோன்றுவது. எண் ஆர் - எண்ணுதல் பொருந்திய.

4. விரை - மணம். வரையான் - கைலைமலையை யுடையவன். திரையார் சடையான் - கங்கையணிந்த சடையான். திரை ஆகுபெயராய்க் கங்கையை உணர்த்திற்று.

5. வீறு - தனிப்பெருமை. வேறொன்றற்கு இல்லாத அழகு என்பர் நச்சினார்க்கினியர். அழித்தான் என்னாது அழிவித்தான் என்றது காலன் தாமேயுணர்ந்து அடங்கச்செய்த தன்மையால். வேறாநினைவாரை - தனியேயிருந்து தியானிப்பவர்களை.

6. நானாவிதம் பாடி - பலவகையான பண்களைப் பாடி. அயம் பெய்யப் புகுவான் - பிச்சையை மகளிர்பெய்யப் புகுவான். ஐயம் அயம் எனப் போலியாயிற்று. பியற்கு - பிடரிக்கு.

* * * * 7

ஆவா வெனவரக்க னலற வடர்த்திட்டுத்
தேவா வெனவருளார் செல்வங் கொடுத்திட்ட
கோவே யெருக்கத்தம் புலியூர் மிகுகோயில்
தேவே யெனவல்லல் தீர்தல் திடமாமே. 8

மறையா னெடுமால்காண் பரியான் மழுவேந்தி
நிறையா மதிசூடி நிகழ்முத் தின்தொத்தே
இறையா னெருக்கத்தம் புலியூ ரிடங்கொண்ட
கறையார் மிடற்றானைக் கருதக் கெடும்வினையே. 9

புத்த ரருகர்தம் பொய்கள் புறம்போக்கிச்
சுத்தி தரித்துறையுஞ் சோதி யுமையோடும்
நித்த னெருக்கத்தம் புலியூர் நிகழ்வாய
அத்த னறவன்றன் னடியே யடைவோமே. 10

ஏரா ரெருக்கத்தம் புலியூ ருறைவானைச்
சீரார் திகழ்காழித் திருவார் சம்பந்தன்
ஆரா வருந்தமிழ் மாலை யிவைவல்லார்
பாரா ரவரேத்தப் பதிவா னுறைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*8. ஆ ஆ - இரக்கக்குறிப்பு. தேவா என - அவனே தேவா என்று வேண்ட.*

*9. மறையான் - பிரமன். நிறையாமதி - இளம்பிறை. முத்தின் தொத்தே - முத்தின் கொத்தே.*

*10. சுத்தி தரித்து - தூய்மையைப் பொருந்தி. அத்தன் - தலைவன்.*

*11. ஏர் - எழுச்சி. ஆரா அருந்தமிழ் - உணர்ந்தது போதும் என்றமையாத மிக இனிய தமிழ்.*

# திருப்பிரமபுரம்

*திருவிருக்குக்குறள்*

பண் - குறிஞ்சி

**பதிகம் :** **எண் 90**

*திருச்சிற்றம்பலம்*

அரனை யுள்குவீர், பிரம னூருளெம்
பரனையே மனம், பரவி யுய்ம்மினே. 1

கான வுள்குவீர், வேணு நற்புரத்
தாணு வின்கழல், பேணி யுய்ம்மினே. 2

நாத னென்பிர்காள், காத லொண்புகல்
ஆதி பாதமே, ஓதி யுய்ம்மினே. 3

அங்க மாதுசேர், பங்க மாயவன்
வெங்குரு மன்னும், எங்க ளீசனே. 4

வாணி லாச்சடைத், தோணி வண்புரத்
தாணி நற்பொனைக், காணு மின்களே. 5

---

*1. சிவபெருமானைச் சிந்திப்பவர்களே பிரமபுரத்தில் உள்ள பரமனைப் பரவியுய்யுங்கள் என்கின்றது.*

*2. கான உள்குவீர் - தரிசிக்க எண்ணுபவர்களே. வேணு புரம் - சீகாழி. தாணு - சிவபெருமான்.*

*3. நாதன் என்பிர்காள் - என் தலைவன் என்பவர்களே. புகல் ஆதி - சீகாழியிலுள்ள முதல்வன்.*

*4. அங்கம் - மேனி. பங்கம் - பாதி. வெங்குரு - சீகாழி.*

*5. வாள் நிலாச் சடை - ஒளிபொருந்திய நிலாவையணிந்த சடை. ஆணிநற்பொனை - மாற்றுயர்ந்த பொன்போன்றவனை. தோணிபுரம் - சீகாழி.*

பாந்த ளார்சடைப், பூந்த ராய்மன்னும்
ஏந்து கொங்கையாள், வேந்த னென்பரே. 6

கரிய கண்டனைச், சிரபு ரத்துளெம்
அரசை நாடொறும், பரவி யுய்ம்மினே. 7

நறவ மார்பொழிற், புறவ நற்பதி
இறைவ னுமமே, மறவ னெஞ்சமே. 8

தென்றி லரக்கனைக், குன்றிற் சண்பைமன்
அன்று நெரித்தவா, நின்று நினைமினே. 9

அயனு மாலுமாய், முயலுங் காழியான்
பெயல்வை யெய்திநின், றியலு முள்ளமே. 10

தேர ரமணரைச், சேர்வில் கொச்சைமன்
நேரில் கழனினைந், தோரு முள்ளமே. 11

தொழுழு மனத்தவர், கழும லத்துறை
பழுதில் சம்பந்தன், மொழிகள் பத்துமே. 12

திருச்சிற்றம்பலம்

---

*6. பாந்தள் - பாம்பு. பூந்தராய் - சீகாழி.*

*7. சிரபுரம் - சீகாழி.*

*8. நறவம் - தேன். புறவநற்பதி - சீகாழி. மறவல் நெஞ்சமே எனப் பிரிக்க.*

*9. தென்றில் அரக்கன் - தென்திசையில் உள்ள அரக்கன். குன்றில் - கட்டுமலையில். சண்பை - சீகாழி. அன்று - கயிலையைத் தூக்கிய காலத்து. நெரித்தவா - இராவணனை நெரித்த வாற்றை.*

*10. முயலும் - தேடமுயற்சிக்கும். காழி - சீகாழி.*

*11. கொச்சை - சீகாழி. நேரில் கழல் - ஒப்பற்ற திருவடி. ஓரும் - தியானிக்கும்.*

*12. பழுது - குற்றம். கழுமலம் - சீகாழி.*

# திருவாரூர்

***பதிகவரலாறு :***

*செல்வத் தியாகேசர் சேவடி தொழவேண்டும் என்ற அன்புவெள்ளம் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் உள்ளத்துப் பெருகி வழிகின்றது. அப்பர் பெருமானும் ஆரூர்த் தியாகேசப் பெருமானின் ஆதிரைநாளின் திருவோலக்கச் சிறப்பை எடுத்து விளக்கினார்கள். அதனால் அன்புவெள்ளம் உடைப்பெடுத்து ஓடுகின்றது. ஆரூர்க்கு வழிக்கொண்டு வருகின்றார்கள். கனிந்த சிந்தை கவிதைகளாக வெளிப்படுகின்றது. 'பாடல னன்மறை' என்ற பதிகமாகின்றது. விற்குடி முதலியவற்றை வணங்கிக்கொண்டு திருவாரூர் திருமதிற்புறத்து அணுகுகின்றபோது சிவிகையினின்றும் இறங்கித் தலத்தையும் சிவமாகக்கண்டு, செங்கை நிறைய மலர்களை யேந்தித் தூவுகின்றவர்கள் திருவிருக்குக்குறளாகிய இதனைத் தமிழ்நாடுய்ய அருளிச்செய்கின்றார்கள்.*

*திருவிருக்குக்குறள்*

**பண் - குறிஞ்சி**

**பதிகம் :** **எண் 91**

*திருச்சிற்றம்பலம்*

சித்தந் தெளிவீர்காள், அத்த னாரூரைப்
பத்தி மலர்தூவ, முத்தி யாகுமே. 1

---

*1. திருவிருக்குக்குறள் என்பது வீடு காதலிப்பவரால் விரும்பப்பெறும், இரண்டு சீர்களான் யாக்கப்பெற்ற இருக்கு மந்திரம்போன்ற பாடல் என்பதாம். வேதங்களுள் இருக்கு மந்திர வடிவாக உள்ளது; அதுபோல இப்பதிகமும் மந்திர வடிவாக உள்ளது எனலுமாம். மந்திரம் சொற்சுருக்கமுடையது; எண்ணுவார் எண்ணத்தை ஈடேற்றவல்லது. அதுபோல இதுவும் அமைந்திருப்பது காண்க. அநாதியே ஆன்மாவைப்பற்றி நிற்கும் பாசத்தால் இருவினைக் கீடாகக் கருவயிற் பிண்டமாய் வளர்ந்து பிறந்து, பரிபாகமுற்ற வினைகள் துன்ப*

பிறவி யறுப்பீர்காள், அறவ னூரை
மறவா தேத்துமின், துறவி யாகுமே. 2

---

இன்பங்களை யூட்டுகின்றகாலத்து வருந்தி மகிழ்ந்து, அலைகின்ற ஒழியாத் துன்பத்தினின்றும் உய்திவேண்டும் உத்தமர்களை யழைத்து, அன்போடு மலர் தூவுங்கள்; கைகளாற் றொழுங்கள்; எடுத்து வாழ்த்துங்கள்; உங்களுடைய பற்றறும், வினைகள் விண்டுபோம்; இன்பமுத்தி யெய்தலாம் எனப் பயனும், வழியும் வகுப்பன இப் பத்துப்பாடல்களும்.

இம் முதற்பாட்டு முத்தி யெய்தலாம் என்பதனைத் தெரிவித்து, அதற்கு உபாயம் உணர்த்துகின்றது.

சித்தம் தெளிவீர்காள் - மலமறைப்பாற் கலக்குண்ட சித்தந் தெளிய விரும்புபவர்களே. அத்தன் - அனைவர்க்குந் தலைவன். தியாகேசப் பெருமான் எழுந்தருளியுள்ள ஆரூரைப் பத்தியோடு மலர் தூவி வழிபடுங்கள் முத்தியாகும் என்பது போந்த பொருள். தெளிவீர்காள் என்று எதிர்காலத்தாற் கூறியது மலர் தூவல் முதலிய கிரியைத்தொண்டுகள் சித்தந்தெளிதற்கு ஏதுவென்பது தெரித்தற்கு; 'கிரியையென மருவும் யாவையும் ஞானங் கிடைத்தற்கு நிமித்தம்' என்பது ஞானசாத்திரமாகலின். மலர் தூவ என்றது இறைவனும், ஞானாசாரியனும் எழுந்தருளியுள்ள இடங்களை மலர் தூவி வழிபடல் மரபு என்பதை விளக்கி நிற்கின்றது. முத்தியாகும் என முத்தியை வினை முதலாகக் கூறியருளியது திருவருட்பதிவு உற்றகாலத்துத் தாமே வந்தெய்துவதோர் சிவானந்த மாதலின்.

2. முத்தியாதற்குப் பிறவி இடையூறுதலின் அப்பிறப்பு, பாவத்தைப்பற்றி வருவதொன்றுதலின், பாவமோ பற்றுள்ளங் காரணமாக எழுவதாகலின், காரியமாகிய பிறப்பினையறுக்க விரும்புவார்க்குத் துறவியாதலே சிறந்த உபாயம் என்பதை உணர்த்துகின்றது இப்பாட்டு.

அறவன் - தருமவடிவன். மறவாது ஏத்துமின் - நினைப்பின்றி நினைத்து வழிபடுங்கள். நெஞ்சொடு படாத செயலும் உண்டன்றே! அங்ஙனன்றிக்கே புத்திபூர்வமாக வழிபடுங்கள்.

துன்பந் துடைப்பீர்காள், அன்ப னணியாரூர்
நன்பொன் மலர்தூவ, இன்ப மாகுமே. 3

உய்ய லுறுவீர்காள், ஐய ளூரைக்
கையி ளுற்றெழ, நையும் வினைதானே. 4

பிண்ட மறுப்பீர்காள், அண்ட ளூரைக்
கண்டு மலர்தூவ, விண்டு வினைபோமே. 5

---

துறவியாகும் - பிறவிக்கு ஏதுவாகிய பற்றுள்ளங்கழியும்' என்பதாம். மறங்கடிய அறவனலன்றியாகாது என்பது உணரக் கிடக்கின்றது. துறவி - துறவு. வி தொழில் விகுதி.

3. பிறந்தார் உறுவது பெருகிய துன்பமாதலின் அதனைத் துடைக்கவேண்டும் என்பதும், அதற்கு உபாயம் மலர் தூவலே என்பதும் உணர்த்துகின்றது இப் பாடல்.

அன்பன் - சிவன். அன்பனணி யாரூர் - அன்பனால் அழகு பெறும் ஆரூர். பொன்மலர் தூவ என்பது செம்பொன்னும் வெண்பொன்னுமாகிய இரண்டாலும் பூக்கள் செய்து அவற்றை முல்லை மலரோடு கலந்து தூவுதல் மரபு. இன்பம் ஆகும் - துன்பநீக்கத்திற்குத் தொழுத உங்கட்கு இன்பமும் ஆகும் என்பதாம். இன்பம் என்றது இம்மையின்பத்தையும் நிரதிசயா நந்தப் பேரின்பத்தையும்.

4. இப்பாடல், துன்பந் துடைத்து உய்தியை விரும்புவீராயின் கைகளாற் றொழுங்கள் என்றருளிச் செய்கின்றது.

ஐயன் - தலைவன். வினை தானே நையும் என்றது தொழுவாரிடம் இருப்புக்கொள்ள இடமின்மையால் வல்வினைகள் மெலிந்துபோம் என்பதாம். வினை உண்டாலன்றிக் கழியாதாகலின் நையும் என்றார்.

5. கீழைத்திருப்பாட்டு பிராரத்தவினை நைந்துபோம் என்றது; இத் திருப்பாட்டு வரக்கடவ வினைகளும் விண்டுபோம் என்கின்றது.

பாச மறுப்பீர்காள், ஈச னணியாரூர்
வாச மலர்தூவ. நேச மாகுமே. 6

வெய்ய வினைதீர, ஐய னணியாரூர்
செய்ய மலர்தூவ, வைய முமதாமே. 7

அரக்க னுண்மையை, நெருக்கி னனூர்
கரத்தி னற்றொழத், திருத்த மாகுமே. 8

---

*பிண்டம் - கருவில் உறுப்பு நிரம்பாதிருக்கும் தசைத்திரள். 'சிறப்பில் சிதடும் உறுப்பில் பிண்டமும்' என்பது புறநானூறு. பிண்டம் அறுப்பீர்காள் - மீண்டும் விளையும் கருவிடைப் பிண்ட நிலையை அறுப்பவர்களே! அண்டன் ஆரூர் என்றது தேவ லோகத்தில் எழுந்தருளியிருந்ததை மனக்கொண்டு கூறியது. அண்டன் - தேவன். வினை விண்டுபோம் - வினைகள் மீண்டும் அங்குறியாதவாறு கெடும். நெல் வாய்விண்டது என்பதுபோல.*

*6. இழைத்திருப்பாட்டு வினை நீக்கங் கூறியது. அவ்வினை யோடு ஒருங்கு எண்ணப் பெறுவதாய், அநாதியே பந்தித்துள்ள பாசமுங் கெடும்; இறைவன் நேசமாகும் என்று சொல்கிறது இப்பாட்டு. பாசம் - ஆணவம். கட்டி நிற்பதாகலின் அதனை யறுக்கவேண்டுமாயிற்று. ஆன்ம அறிவைப் பந்தித்து அடக்கி நிற்றலின் பாசம் எனப்பெற்றது. நேசமாகுமே என்பதை யுற்று நோக்குகின்ற எம்போலியர்க்கு, பாசமறுத்த நம்பியாரூரர்க்குத் தோழரானதுபோல நமக்கும் நேசமாவர் என்ற நினைப்பு உண்டாகும். அன்பு முதிரும் என்றுமாம்.*

*7. இருவகை வினையும் தீரவேண்டும் என்றும், தீர்ந்தால் உலகமுழுதும் உடைமையாம் என்றும் உணர்த்துகிறது இப் பாடல். வெய்ய வினை - விரும்பத்தக்க நல்வினையும் கொடிய தீவினையும். இரண்டும் பொன் விலங்கும் இருப்பு விலங்கும் போலத் தளைத்து நிற்பவாகலின் நல்வினையும் தீரவேண்டுவ தாயிற்று. செய்ய மலர் - சிவந்த மலர். வையம் உமதாம் - எவி மாவலியாகி வையமுழுதாண்டாற்போல உமதாம் என்பதாம். விளி முதற்பாட்டிலிருந்து கொள்ளப்பெறும்.*

*8. செய்யமலர் தூவி வையந்தமதாய காலத்து உண்டாகிய தருக்கையும் களைந்து திருத்தம் நல்குவர் தியாகேசராதலின்*

துள்ளு மிருவர்க்கும், வள்ள லாரூரை
உள்ளு மவர்தம்மேல், விள்ளும் வினைதானே. 9

கடுக்கொள் சீவரை, அடக்கி னாரூர்
எடுத்து வாழ்த்துவார், விடுப்பர் வேட்கையே. 10

---

அவர் தலத்தைக் கையினாற்றொழுவேண்டும் என்கின்றது இப்பாடல். அரக்கன் - சிவபூசையை விதிமுறையியற்றி ஆட்சியும் படையும் பெற்ற இராவணன். ஆண்மை - திருவருட்பதிவு இன்மையால் தன்முனைப்பால் எழுந்த வன்மை. நெருக்கினான் - அடர்த்தவன். திருத்தம் - தூய்மை. திருத்தமாகும் - கோணல் நீங்கும் என்றுமாம். அரக்கன் தருக்கழித்த இறைவனது ஆரூர் தொழத் திருத்தமாம் என்க.

9. அருள்பெற்றுச் சிறிது திருந்திப் பதவிகளின்நிற்பாரும், பதவிமோகத்தான் மயங்குவாராயினும் அவர்கள் பிழைநோக்காதே அதுதான் ஆன்மவியல்பு என்று திருவுளங்கொண்டு அருள்செய்யும் கருணையாளன் எழுந்தருளியுள்ள ஆரூரை நினைக்கவேண்டும் என்றும், நினைத்தால் ஆகாமிய சஞ்சித வினைகள் அழியும் என்றும் அறிவிக்கின்றது இப்பாடல். துள்ளும் இருவர் - அதிகாரம்பெற்ற சகலான்மாக்களாதலின் மலமுனைப்பால் தாம் பெரியர் எனத் துள்ளுகின்ற பிரம விஷ்ணுக்கள். வள்ளல் - அவர்களுடைய மிகுதிகண்டும் நகையாது வழங்குபவர். உள்ளுதல் - தியானித்தல். மேல்வினை விள்ளும் எனவும் கூட்டலாம்.

10. அதிகாரமலத்தான் துள்ளுவாரையும் ஆட்கொள்ளும் இறைவன், ஏனைய விஷத்தன்மைபொருந்திய ஆன்மாக்களையும் அடக்கியாளுவர் என்ற கருணையின் மேன்மையைக் காட்டுகின்றது இச்செய்யுள். கடுக்கொள் சீவர் - விடத்தன்மைபொருந்திய ஆன்மாக்கள். அடக்கினார் - அத்தன்மை கெடுமாறு அடக்கியவர். எடுத்து வாழ்த்துவார் - உள்ளத்துட்கிடந்த உணர்ச்சி வெள்ளம் உரையிறந்து வருதலின் கேட்டாரும் தம்போலுய்ய உரக்க வாழ்த்துபவர்கள். வேட்கை விடுப்பர் - உரையினைச் செவிகேட்க, கேட்டதனைச் சித்தம் தியானிக்க, அதனால் மனம் ஒடுங்குதலின் பற்றுள்ளத்தைவிடுவர் என்பதாம்.

சீரூர் சம்பந்தன், ஆரூ ரைச்சொன்ன
பாரூர் பாடலார், பேரா ரின்பமே. 11

திருச்சிற்றம்பலம்

---

*11. முத்தியாகுமே என முதற்பாட்டில் அருளியவர்கள் அதற்கிடையூருன பிறவி வினை பாசம் இவைகளையும், இவைகளை நீக்கும் உபாயங்களையும், நீங்கியார் எய்தும் பயனையும் முறையே கூறினுர்கள். இத்தகைய பாடல்கள் பத்தையும் பயில்வாரும் அத்தகைய இன்பத்தை எய்துவர்; பேரார்; நிலையாவரெனத் திருக்கடைக்காப்புச் செய்தருள்கின்றுர்கள். சீர் ஊர் - சீகாழி. பாரூர் பாடல் - உலகமுழுதும் பரவிப் பண்படுத்தும் பாடல். இன்பம் பேரார் - பெற்ற இன்பத்தினின்றும் மீளார். பேராவின்பப் பெருவாழ்வெய்துவர் என்பதாம். கீழ்ப்பாடல்களுள் ஆரூரை மலர்தூவ அடையும் பயனை ஐந்துபாடல்களும், தொழுவார் எய்தும் பயனை இரண்டுபாடல்களும், வாழ்த்துவார் எய்தும் பயனை இரண்டுபாடல்களும், பாடற்பயனை ஒரு பாடலும் உணர்த்துகின்றன.*

திருவாரூர் பூங்கோயிலில் :



நீலோத்பலாம்பாள்.

—பக்கம் - ாகஎ.

திருவீழிமிழலையில் :




திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும்,
படிக்காசு பெற்றது.

# திருவீழிமிழலை

**பதிகவரலாறு :**

திருஞானசம்பந்த சுவாமிகள் திருநாவுக்கரசுநாயனாரோடு திருவீழிமிழலையில் வீற்றிருக்கின்றபோது பெரும்பஞ்சம் உண்டாக, அப்பசியால் உயிர்கள் வாடின. அடியார்களும் வருந்தினர். அதுகண்ட நாயன்மார்கள் 'கண்ணுதலான் திருநீற்றுச்சார்பினோர்க்கும் கவலை வருமோ' எனத் திருவுளத்து எண்ணித் துயின்றனர். அன்று இரவு இறைவன் கனவில் தோன்றி, 'காலமாறுதலினால் நீங்கள் கவல்வீரல்லீர்; எனினும் உங்கள் அடியார்களின் வாட்டத்தைத் தீர்க்கும்பொருட்டுப் பஞ்சம் நீங்கும்வரை பீடத்தின் கிழக்குப் பகுதியிலும் மேற்குப் பகுதியிலுமாகப் படிக்காசு ஒவ்வொன்று அளிக்கின்றோம்' என்று அருள் செய்தனர். விடியலில் இருவரும் சென்று அவ்வாறே இருக்கக்கண்டு எடுத்து வந்து அடியார்கட்கு அமுதளித்தனர். வாகீசர் திருமடத்தில் காலம் தாழ்க்காது அமுதூட்டப்பெறுதலையும் தமதுகாசு வட்டம் கொடுத்து மாற்றப்பெறுதலையும் அறிந்த சிவஞானப் பிள்ளையார் திருக்கோயிலுக்குச் சென்று 'வாசி தீரவே' என்னும் இப்பதிகத்தை அருளிச்செய்து வாசியில்லாக் காசு பெற்று, சிவனடியார்களுக்கு நேரத்தோடு திருவமுதளித்து எழுந்தருளியிருந்தனர். சில நாட்களில் பஞ்சம் நீங்கிற்று.

திருவிருக்குக்குறள்

**பண் - குறிஞ்சி**

**பதிகம்** **எண் 92**

திருச்சிற்றம்பலம்

வாசி தீரவே, காசு நல்குவீர்
மாசின் மிழலையீர், ஏச லில்லையே. 1

---

1. வாசி - வேறுபாடு. மாசு - குற்றம். ஏசல் - நிந்தனை.

இறைவ ராயினீர், மறைகொண் மிழலையீர்
கறைகொள் காசினை, முறைமை நல்குமே. 2

செய்ய மேனியீர், மெய்கொண் மிழலையீர்
பைகொ ளரவினீர், உய்ய நல்குமே. 3

நீறு பூசினீர், ஏற தேறினீர்
கூறு மிழலையீர், பேறு மருளுமே. 4

காமன் வேவவோர், தூமக் கண்ணினீர்
நாம மிழலையீர், சேம நல்குமே. 5

பிணிகொள் சடையினீர், மணிகொண் மிடறினீர்
அணிகொண் மிழலையீர், பணிகொண் டருளுமே. 6

மங்கை பங்கினீர், துங்க மிழலையீர்
கங்கை முடியினீர், சங்கை தவிர்மினே. 7

---

*2. இறைவர் ஆயினீர் என இயற்கையே இறைவரை ஆயினீர் என ஆக்கல்கொடுத்துக் கூறினர் முறைப்படி வேற்றுமையறக் கொடுக்காமையால். கறைகொள் காசு - அழுக்குப்படிந்த காசு; நாட்படச் சேமித்துவைத்த காசு என்பது கருத்து.*

*3. மெய் - உண்மைத்தன்மை. பை - படம்.*

*4. பேறும் அருளும் - காசுகொடுத்ததோடமையோம்; வீடு பேற்றையும் கொடும் என்பதாம்.*

*5. தூமக்கண் - புகையோடுகூடிய தீக்கண். நாமம் - புகழ். சேமம் - பாதுகாவல். க்ஷேமம் என்பதன் திரிவுமாம்.*

*6. பிணிகொள்சடையினீர் - கட்டிய சடையையுடையரே. மணி - நீலமணி. பணி - ஏவல்.*

*7. பங்கு - ஒருபகுதி. துங்கம் - உயர்வு. சங்கை - சந்தேகம். தேவரீரிடம் வேற்றுமை சிறிதும் இல்லையாகவும் நாங்கள் சந்தேகிக்கிறோம்; வாசிதீர அளித்து அதனைப்போக்கியருளும்.*

அரக்க னெரிதர, இரக்க மெய்தினீர்
பரக்கு மிழலையீர், கரக்கை தவிர்மினே. 8

அயனு மாலுமாய், முயலு முடியினீர்
இயலு மிழலையீர், பயனு மருளுமே. 9

பறிகொ டலையினர், அறிவ தறிகிலார்
வெறிகொண் மிழலையீர், பிறிவ தரியதே. 10

காழி மாநகர், வாழி சம்பந்தன்
வீழி மிழலைமேல், தாழு மொழிகளே. 11

திருச்சிற்றம்பலம்

---

*8. அரக்கன் - இராவணன். பரக்கும் - எங்கும் புகழ் பரவிய. கரக்கை - வஞ்சகத்தை.*

*9. பயன் - வீட்டின்பம்.*

*10. பறிகொள்தலையினர் - மயிர்பறித்த தலையையுடைய சமணர். அறிவது அறியவேண்டிய உண்மை ஞானங்களை. வெறி - மணம்.*

*11. வீழிமிழலைமேல் தாழும் மொழிகளே வல்லார் எல்லா நன்மையும் எய்துவர் எனச் செயப்படுபொருளும், வினையும் வருவித்து முடிக்க.*

# திருமுதுகுன்றம்

**பதிகவரலாறு :** *(12-ம் பதிகம் பார்க்க)*

*திருவிருக்குக்குறள்*

**பண் - குறிஞ்சி**

**பதிகம்** **எண் 93**

*திருச்சிற்றம்பலம்*

நின்று மலர்தூவி, இன்று முதுகுன்றை
நன்று மேத்துவீர்க் கென்று மின்பமே. 1

அத்தன் முதுகுன்றைப், பத்தி யாகிநீர்
நித்த மேத்துவீர்க், குய்த்தல் செல்வமே. 2

ஐயன் முதுகுன்றைப், பொய்கள் கெடநின்று
கைகள் கூப்புவீர், வைய முமதாமே. 3

ஈசன் முதுகுன்றை, நேச மாகிநீர்
வாச மலர்தூவப், பாச வினைபோமே. 4

மணியார் முதுகுன்றைப், பணிவா ரவர்கண்டீர்
பிணியா யினகெட்டுத், தணிவா ருலகிலே. 5

---

1. இன்றைக்கே முதுகுன்றை மலர்தூவி ஏத்தும் உங்களுக்கு என்றைக்கும் இன்பமாம் என்கின்றது. ஒருநாள் வழிபாட்டிற்கு நிலைத்த இன்பம் வரும் என்கின்றது.

2. உய்த்தல் செல்வமே - பொருந்துதல் செல்வமேயாகும். என்றது பொருள்பெருகும் என்பதாம்.

3. ஐயன் - தலைவன். பொய்யில்லாதவருக்கு உலகமே உரிமையாம் என்பதை விளக்கியவாறு.

4. நேசமாகி. அன்பாகி. பாசவினை - பாசமும் வினையும்.

5. மணி - அழகு. முத்துமாம். தணிவார் - அமைதி உறுவார்கள்.

மொய்யார் முதுகுன்றில், ஐயா வெனவல்லார்
பொய்யா ரிரவோர்க்குச், செய்யா ளணியாளே. 6

விடையான் முதுகுன்றை, இடையா தேத்துவார்
படையா யினசூழ, உடையா ருலகமே. 7

பத்துத் தலையோனைக், கத்த விரலூன்றும்
அத்தன் முதுகுன்றை, மொய்த்துப் பணிமினே. 8

இருவ ரறியாத, ஒருவன் முதுகுன்றை
உருகி நினைவார்கள், பெருகி நிகழ்வோரே. 9

தேர ரமணரும், சேரும் வகையில்லான்
நேரின் முதுகுன்றை, நீர்நின் றுள்குமே. 10

நின்று முதுகுன்றை, நன்று சம்பந்தன்
ஒன்று முரைவல்லார், என்று முயர்வோரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*6. மொய் - நெருக்கம். ஐயா! எனத் தோத்திரிக்க வல்லவராய் இரவலர்க்கு இல்லை என்று பொய்யும் சொல்லாதவர்களுக்குச் செய்யவள் அணியள் ஆவாள் என்றவாறு.*

*7. இடையாது - இடையீடு படாது. உலகம் உடையார் - சக்ரவர்த்தியாவர்.*

*8. மொய்த்து - நெருங்கி.*

*9. இருவர் - அயனும் மாலும்.*

*10. உள்கும் - தியானியுங்கள்.*

*11. ஒன்றும் உரை - அவன் தான் என வேறின்றி ஒன்றிய உரை.*

# திருவாலவாய்

**பதிகவரலாறு :**

குலச்சிறையார் எதிர்கொள்ள எழுந்தருளிய திருஞான சம்பந்த சுவாமிகள் "இதுதான் திருவாலவாய்" என உடன் வரும் அடியார்கள் காட்டக்கண்டு கரங்குவித்தருளிப் பதிகம் பாடித் திருக்கோயிலை அடைந்தார்கள். ஆலவாயண்ணலை ஆராத அன்பினுடன் வழிபட்டுப் புளகம் மெய்யெலாம் போர்ப்ப, கண்ணீர்வாரத் திருமுன்னின்று "நீலமாமிடற் றாலவாயினான்" என்னும் மூலமாகிய திருவிருக்குக்குறளை மொழிந்தார்கள். அடியார்களோடும் சிவானந்த வாரிதியில் திளைத்தார்கள்.

திருவிருக்குக்குறள்

**பண் - குறிஞ்சி**

**பதிகம் :** **எண் 94**

திருச்சிற்றம்பலம்

நீல மாமிடற், றால வாயிலான்
பால தாயினார், ஞால மாள்வரே. 1

ஞால மேழுமாம், ஆல வாயிலார்
சீல மேசொலீர், காலன் வீடவே. 2

ஆல நீழலார், ஆல வாயிலார்
கால காலனார், பால தாமினே. 3

அந்த மில்புகழ், எந்தை யாலவாய்
பந்தி யார்கழல், சிந்தை செய்ம்மினே. 4

---

1. பாலது ஆயினார் - சாமீப்யம் அடைந்தவர்கள்.

2. ஞாலம் ஏழுமாம் ஆலவாயில் - உலகேழும் உளதா தற்குக் காரணமாகிய துவாதசாந்தப் பெருவெளியாகிய ஆல வாயில். சீலம் - குணங்கள். வீட - அழிய.

3. ஆலநீழலார் - வடவாலவிருட்சத்தின் நிழலில் இருப்பவர்.

4. அந்தமில்புகழ் - எல்லையற்ற புகழ். பந்தியார் - இட மாகக்கொண்டவர்; பாசங்களால் கட்டுண்ணாதவர் என்றுமாம்.

ஆட லேற்றினன், கூட லாலவாய்
பாடி யேமனம், நாடி வாழ்மினே. 5

அண்ண லாலவாய், நண்ணி னன்றனை
எண்ணி யேதொழத், திண்ண மின்பமே. 6

அம்பொ னலவாய், நம்ப னர்கழல்
நம்பி வாழ்பவர், துன்பம் வீடுமே. 7

அரக்க னர்வலி, நெருக்க னலவாய்
உரைக்கு முள்ளத்தார்க், கிரக்க முண்மையே. 8

அருவ னலவாய், மருவி னன்றனை
இருவ ரேத்தநின், றுருவ மோங்குமே. 9

ஆர நாகமாம், சீர னலவாய்த்
தேர மண்செற்ற, வீர னென்பரே. 10

அடிக ளாலவாய்ப், படிகொள் சம்பந்தன்
முடிவி லின்றமிழ், செடிக ணீக்குமே. 11

திருச்சிற்றம்பலம்

---

5. ஆடல் ஏறு - வெற்றியோடுகூடிய இடபம். நாடி - விரும்பி.

6. எண்ணி - தியானித்து. திண்ணம் - உறுதி.

7. நம்பனார் கழல் நம்பி - இதுவே எமக்கு இம்மையும் மறுமையும் இன்பமும் வீடும் என்று உறுதி கொண்டு.

8. நெருக்கன் - நெருக்கியவன்.

9. அருவன் - அருவமானவன். இருவர் - அயனும் மாலும்.

10. ஆரம் - மாலை. சீரன் - புகழுடையவன். தேர் - புத்தர். அமண் - அமணர்.

11. செடிகள் - வினைகள்.

# திருவிடைமருதூர்

**பதிகவரலாறு :** (32-ம் பதிகம் பார்க்க)

*திருவிருக்குக்குறள்*

**பண் - குறிஞ்சி**

**பதிகம்:** **எண் 95**

*திருச்சிற்றம்பலம்*

தோடொர் காதினன், பாடு மறையினன்
காடு பேணிநின், றுடு மருதனே. 1

கருதார் புரமெய்வர், எருதே யினிதூர்வர்
மருதே யிடமாகும், விருதாம் வினைதீர்ப்பே. 2

எண்ணு மடியார்கள், அண்ணன் மருதரைப்
பண்ணின் மொழிசொல்ல, விண்ணுந் தமதாமே. 3

விரியார் சடைமேனி, எரியார் மருதரைத்
தரியா தேத்துவார்,பெரியா ருலகிலே. 4

பந்த விடையேறும், எந்தை மருதரைச்
சிந்தை செய்பவர், புந்தி நல்லரே. 5

---

*1. பேணி - விரும்பி.*

*2. கருதார் - பகைவர். விருது ஆம் - பெருமை உளதாம். வினை தீர்ப்பு ஆம் - வினைகள் தீர்தலை உடையனவாம்.*

*3. அண்ணல் - பெருமையிற் சிறந்தவர். பண்ணின் மொழி - தோத்திரங்கள்.*

*4. எரி - மழு. தரியாது - தாமதியாது.*

*5. பந்தவிடை - கட்டோடுகூடிய இடபம்.*

கழலுஞ் சிலம்பார்க்கும், எழிலார் மருதரைத்
தொழலே பேணுவார்க், குழலும் வினைபோமே. 6

பிறையார் சடையண்ணல், மறையார் மருதரை
நிறையா னினைபவர், குறையா ரின்பமே. 7

எடுத்தான் புயந்தன்னை, அடுத்தார் மருதரைத்
தொடுத்தார் மலர்சூட்ட, விடுத்தார் வேட்கையே. 8

இருவர்க் கெரியாய, உருவ மருதரைப்
பரவி யேத்துவார், மருவி வாழ்வரே. 9

நின்றுண் சமண்டேரர், என்று மருதரை
அன்றி யுரைசொல்ல, நன்று மொழியாரே. 10

கருது சம்பந்தன், மருத ரடிபாடிப்
பெரிதுந் தமிழ்சொல்லப், பொருத வினைபோமே. 11

திருச்சிற்றம்பலம்

---

*6. கழலும் சிலம்பும் ஆர்க்கும் - ஒருகால் கழலும் ஒருகால் சிலம்பும் ஒலிக்கும். உழலும் வினை - வருத்தும் வினைகள்.*

*7. நிறையால் - நிறைவோடு.*

*8. எடுத்தான் - கைலையைத் தூக்கிய இராவணன். வேட்கை - பொருள்கள்மேல் தோன்றும் பற்றுள்ளம்.*

*9. இருவர்க்கு - அயனுக்கும் மாலுக்கும். மருவி - எல்லாவற்றோடும் பொருந்தி.*

*10. சமணரும் புத்தரும் என்றைக்கும் மருதப்பெருமானை அன்றிப் பிறவற்றைப் பேசுவதால் நல்லதைச் சொல்லமாட்டார்கள்.*

*11. பொருதவினை - இதுவரையில் வருத்திவந்த வினைகள்.*

# திருஅன்னியூர்

**பதிகவரலாறு :**

வெங்குருவேந்தர் திருக் குறுக்கைப் பதியை வணங்கி, அன்னியூரை அடைந்தார்கள். அங்கு எழுந்தருளியுள்ள ஆபத்சகாயநாதர் அடியிணைபோற்றி "மன்னியூரிறை" என்னும் இப்பதிகத்தை அருளிச்செய்தார்.

திருவிருக்குக்குறள்

பண் - குறிஞ்சி

**பதிகம் :** **96**

திருச்சிற்றம்பலம்

மன்னி யூரிறை, சென்னி யார்பிறை
அன்னி யூரமர், மன்னு சோதியே. 1

பழகுந் தொண்டர்வம், அழக னன்னியூர்க்
குழகன் சேவடி, தொழுது வாழ்மினே. 2

நீதி பேணுவீர், ஆதி யன்னியூர்ச்
சோதி நாமமே, ஓதி யுய்ம்மினே. 3

பத்த ராயினீர், அத்த ரன்னியூர்ச்
சித்தர் தாடொழ, முத்த ராவரே. 4

நிறைவு வேண்டுவீர், அறவ னன்னியூர்
மறையு ளான்கழற், குறவு செய்ம்மினே. 5

---

1. சென்னி - தலை. சோதிமன்னி ஊர் இறை எனமுடிக்க.

2. வம் - வாருங்கள். குழகன் - இளையவன்.

5. நிறைவு வேண்டுவீர் - குறைவிலா நிறைவாக விரும்புகின்றவர்களே. அறவன் - அறவடிவானவன்.

இன்பம் வேண்டுவீர், அன்ப னன்னியூர்
நன்பொ னென்னுமின், உம்ப ராகவே. 6

அந்த ணாளர்தம், தந்தை யன்னியூர்
எந்தை யேயெனப், பந்த நீங்குமே. 7

தூர்த்த னைச்செற்ற, தீர்த்த னன்னியூர்
ஆத்த மாவடைந், தேத்தி வாழ்மினே. 8

இருவர் நாடிய, அரவ னன்னியூர்
பரவு வார்விண் ணுக், கொருவ ராவரே. 9

குண்டர் தேரருக், கண்ட னன்னியூர்த்
தொண்டு ளார்வினை, விண்டு போகுமே. 10

பூந்த ராய்ப்பந்தன், ஆய்ந்த பாடலால்
வேந்த னன்னியூர், சேர்ந்து வாழ்மினே. 11

திருச்சிற்றம்பலம்

---

*6. உம்பராக - தேவர்களாக. நன்பொன் என்னுமின் - நல்லபொன் என்று சொல்லுங்கள்.*

*7. பந்தம் - மலமாயையால் விளைந்த கட்டு.*

*8. தூர்த்தன் - காமியாகிய இராவணன். தீர்த்தன் - பரிசுத்தமானவன். ஆத்தமா - அன்போடு. ஆப்தமாக என்பதன் சிதைவு.*

*9. விண்ணுக்கு ஒருவராவர் - இந்திரனாவர்.*

*10. அண்டன் - அண்டமுடியாதவன், வினை விண்டு போகும் - நெல் வாய்விண்டதுபோல வினை முளைக்குந் தன்மை யழியும்.*

*11. பந்தன் - ஞானசம்பந்தன் என்பதன் முதற்குறை. பூந்தராய் - சீகாழி.*

# திருப்புறவம்

## பண் - குறிஞ்சி

**பதிகம் :** **எண் 97**

*திருச்சிற்றம்பலம்*

எய்யாவென்றித் தானவரூர்மூன் றெரிசெய்த
மையார்கண்டன் மாதுமைவைகுந் திருமேனிச்
செய்யான்வெண்ணீ றணிவான்றிகழ்பொற் பதிபோலும்
பொய்யா நாவி னந்தணர்வாழும் புறவம்மே. 1

மாதொருபாலு மாலொருபாலும் மகிழ்கின்ற
நாதனென்றேத்து நம்பரன்வைகும் நகர்போலும்
மாதவிமேய வண்டிசைபாட மயிலாடப்
போதலர்செம்பொன் புன்னைகொடுக்கும் புறவம்மே. 2

வற்றாநதியும் மதியும்பொதியுஞ் சடைமேலே
புற்றாரரவின் படமாடவுமிப் புவனிக்கோர்
பற்றாயிடுமின் பலியென்றடைவார் பதிபோலும்
பொற்றாமரையின் பொய்கைநிலாவும் புறவம்மே. 3

---

*1. புறவம் திரிபுரம் எரித்த நீலகண்டர்பதிபோலும் என்கின்றது. எய்யா வென்றி - அடையாத வெற்றியையுடைய. தானவர் - அசுரர்கள். மை - விடம். பொய்யாநாவின் அந்தணர் - பொய்யே சொல்லாத நாவினை உடைய அந்தணர். அவர்கள் கூறும் உரை தவறாத நா என்றுமாம்.*

*2. ஒருபாதி உமையும் ஒருபாதி மாலுமாக இருக்கும் நாதன் நகர் புறவம் என்கின்றது. மாதவி மேய வண்டு - குருக்கத்தியில் மேவிய வண்டுகள். புன்னை போதலர் செம்பொன் கொடுக்கும் புறவம் - புன்னைமரங்கள் போதாய் இருந்து அலர்ந்து மகரந்தங்களாய செம்பொன்னைக் கொடுக்கும் புறவம்; இதனால் மரங்களும் வள்ளன்மை செய்யும் நகரம் என்றறிவித்தவாறு.*

*3. இவ்வுலகத்திற்கு ஒரு பற்றுக்கோடாக இருக்க எமக்குப் பலியிடுங்கள் என்றுவரும் இறைவன்பதி புறவம் என்கின்றது. வற்றாநதி - கங்கை. பொற்றாமரையின் பொய்கை நிலாவும் - பொற்றாமரையைப்போல பிரமதீர்த்தம் விளங்குகின்ற.*

போதியர் பிண்டியரென் றிவர்கள் புறங்கூறும் பொய்ந்நூல்
ஓதிய கட்டுரைகேட் டுழல்வீர் வரிக்குயில்கள்
கோதிய தண்பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர் நின்ற
வேதியனைத் தொழநும் வினையான வீடுமே. 10

அலைமலி தண்புனல்சூழ்ந் தழகார் புகலிந்நகர் பேணும்
தலைமக னாகிநின்ற தமிழ்ஞான சம்பந்தன்
கொலைமலி மூவிலையான் கொடிமாடச் செங்குன்றூ ரேத்தும்
நலமலி பாடல்வல்லார் வினையான நாசமே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10. புத்தர் சமணர் இவர்களுடைய புறவுரை கேட்டு உழலுகின்றமக்களே! செங்குன்றூர் வேதியனைத்தொழ உங்கள் வினையாயின அழியும் என்கின்றது. போதியர் - புத்தர். பிண்டியர் - சைனர். கட்டுரை - கட்டிச்சொன்ன பொய்யுரை. கோதிய - மூக்காற்கோதியுண்ட. வேதியன் - வேதங்களை அருளிச்செய்தவன். வீடும் - அழியும்.*

*11. ஞானசம்பந்தப்பெருமான் செங்குன்றூர் நாதரை ஏத்திய நலமிகுந்தபாடல் வல்லார் வினைகள் நாசமாம் எனப் பயன் கூறுகின்றது. புகலி - சீகாழி. கொலைமலிமூவிலையான் - கொலைபுரியும் முத்தலைச் சூலம் ஏந்தியவன்.*

# திருப்பாதாளீச்சரம்

**பதிகவரலாறு :**

*பிள்ளையார் பொன்னி வளந்தரு நாடாகிய சோழநாட்டில் திருக்களரை வழிபட்டு, பாதாளீச்சரத்தை அடைந்து, கண்டங் கறையணிந்தார் கழலைப் போற்றினர். "மின்னியல் செஞ்சடைமேல்" என்னும் திருப்பதிகத்தை அருளிச் செய்தார்.*

**பண் - வியாழக்குறிஞ்சி**

**பதிகம் :** **எண் 108**

*திருச்சிற்றம்பலம்*

மின்னியல் செஞ்சடைமேல் விளங்கும்மதி மத்தமொடு நல்ல
பொன்னியல் கொன்றையினன் புனல்சூடிப் பொற்பமரும்
அன்ன மனநடையா ளொருபாகத் தமர்ந்தருளி நாளும்
பன்னிய பாடலினா னுறைகோயில் பாதாளே. 1

நீடலர் கொன்றையொடு நிரம்பா மதிசூடி வெள்ளைத்
தோடமர் காதினல்ல குழையான் சுடுநீற்றன்
ஆடர வம்பெருக வனலேந்திக் கைவீசி வேதம்
பாடலி னலினியா னுறைகோயில் பாதாளே. 2

---

*1. இப்பதிகம் முழுதும் செஞ்சடைமேல், பிறை ஊமத்தம் கொன்றை இவற்றையணிந்தவனும், கங்கையணிந்து உமையை யொருபாகத் திருந்தருளச்செய்தவனும் ஆகிய இறைவன் உறை கோயில் திருப்பாதாளீச்சரம் என்கின்றது. ஒவ்வொரு பாடலி லும் தலத்தின் திருப்பெயருக்கேற்பப் பாம்பணிந்தமை பேசப் படுதல் காண்க. விளங்கும்மதி - இறைவன் திருமுடிமேல் இருத்தலின் விளக்கம்பெற்ற பிறை. 'அன்னம் அனநடையாள்' அன்ன என்பது அன எனல் தொகுத்தல் விகாரம்.*

*2. நிரம்பாமதி - குறைப்பிறை. வெள்ளைத்தோடு - முத்துத் தோடு. குழை - காதணியாகிய குண்டலம்.*

நாகமும் வான்மதியுந் நலமல்கு செஞ்சடையான் சாமம்
போகநல் வில்வரையாற் புரமூன் றெரித்துகந்தான்
தோகைநன் மாமயில்போல் வளர்சாயற் றூமொழியைக் கூடப்
பாகமும் வைத்துகந்தா னுறைகோயில் பாதாளே. 3

அங்கமு நான்மறையும் மருள்செய் தழகார்ந்த வஞ்சொல்
மங்கையோர் கூறுடையான் மறையோ னுறைகோயில்
செங்கய னின்றுகளுஞ் செறுவிற் றிகழ்கின்ற சோதிப்
பங்கய நின்றலரும் வயல்சூழ்ந்த பாதாளே. 4

பேய்பல வுந்நிலவப் பெருங்காடரங்காகவுன்னி நின்று
தீயொடு மான்மறியும் மழுவுந் திகழ்வித்துத்
தேய்பிறை யும்மரவும் பொலிகொன்றைச் சடைதன்மேற் சேரப்
பாய்புன லும்முடையா னுறைகோயில் பாதாளே. 5

கண்ணமர் நெற்றியினான் கமழ்கொன்றைச் சடைதன்மே னன்று
விண்ணியன் மாமதியும் முடன்வைத் தவன்விரும்பும்
பெண்ணமர் மேனியினான் பெருங்கா டரங்காக வாடும்
பண்ணியல் பாடலினா னுறைகோயில் பாதாளே. 6

---

3. வான்மதி - வானிலுள்ள பிறை. சாமம் போக - உரிய காலங்கழிய. தோகை மா மயில் - ஆண்மயில்.

4. செங்கயல்மீன்கள் புரளும் வயலில் தாமரை மலரும் பாதாளம் என்கின்றது. செறு - வயல்.

5. பேய்கள் உடன்விளங்க, இடுகாட்டை நாடகமேடையாக எண்ணி, மான், மழு முதலியன தாங்கி ஆடும் பெருமான் உறைவிடம் பாதாளீச்சரம் என்கின்றது. உன்னிநின்று, திகழ்வித்து, சேர உடையான் உறைகோயில் பாதாள் எனக்கூட்டுக.

6. கண்ணமர்நெற்றி - கண்ணோடு விளங்குகின்ற நெற்றியை யுடையவன். நன்று விண் இயல் மாமதி - நன்றாக விண்ணில் இயங்குகின்ற பெரிய பிறைச்சந்திரன்.

விண்டலர் மத்தமொடு மிளிரும்மிள நாகம்வன் னிதிகழ்
வண்டலர் கொன்றைநகு மதிபுல்கு வார்சடையான்
விண்டவர் தம்புரமூன் றெரிசெய்துரை வேதநான் கும்மவை
பண்டிசை பாடலினு னுறைகோயில் பாதாளே. 7

மல்கிய நுண்ணிடையா ளுமைநங்கை மறுகவன்று கையால்
தொல்லை மலையெடுத்த வரக்கன்றலை தோணெரித்தான்
கொல்லை விடையுகந்தான் குளிர்திங்கள் சடைக்க ணிந்தோன்
பல்லிசை பாடலினு னுறைகோயில் பாதாளே. 8

தாமரை மேலயனும் மரியுந்தம தாள்வினையாற் றேடிக்
காமனை வீடுவித்தான் கழல்காண்பில ராயகன்றார்
பூமரு வுங்குழலா ளுமைநங்கை பொருந்தியிட்ட நல்ல
பாமரு வுங்குணத்தா னுறைகோயில் பாதாளே. 9

---

7. விண்டு - முறுக்கவிழ்ந்து. வன்னி - வன்னியிலை. நகும் - மலரும். விண்டவர் - பகைவர்.

8. இராவணன் தோள் நெரித்தது; இறைவற்கு எழுந்த சீற்றம் காரணம் அன்று; உமாதேவி நடுங்க, அந்நடுக்கந்தீரவே விரலூன்றி மலையை நிலைக்கச்செய்தார்; அது இராவணற்கு இன்னலாயிற்று என்ற கருத்து ஓர்க. கொல்லைவிடை - முல்லை நிலத்து இடபம்.

9. ஆள்வினையால் - முயற்சியால். செயலற்ற தன்மையில் சிந்திக்கவேண்டிய சிவத்தைச் செய்வினையாற் காணமுற்பட்ட அறிவீனத்தை விளக்கியவாறு. காமனை வீடுவித்தான் கழல் - காமனை எரித்த பெருமான் திருவடி. காமனும் தருக்கி வருவா னாயினும் அவன் காண இருந்தமையும் அயனும் மாலும் காணா திருந்தமைக்கும் ஏது ஒன்று உண்டு. இவர்கள் தாம் பெரியர் என்னுந் தருக்கால் முனைத்து வந்தவர்கள்; காமன் தேவகாரியம் என்றும், இந்திரன் சாபத்தால் இறப்பதைக் காட்டிலும்; சிவன் கோபத்தால் இறப்பதுமேல் என்றும் வந்தவன்; ஆதலால் இவனுக்குக் கட்புலனானார் என்பது சிந்தனைக்குரியது.

காலையி லுண்பவருஞ் சமண்கையருங் கட்டுரை விட்டன்
ருல விடநுகர்ந்தா னவன்றன்னடி யேபரவி
மாலையில் வண்டினங்கண் மதுவுண் டிசைமுரல வாய்த்த
பாலையாழ்ப் பாட்டுகந்தா னுறைகோயில் பாதாளே. 10

பன்மலர் வைகுபொழில் புடைசூழ்ந்த பாதாளைச் சேரப்
பொன்னியன் மாடமல்கு புகலிந்நகர் மன்னன்
தன்னொளி மிக்குயர்ந்த தமிழ்ஞான சம்பந்தன் சொன்ன
இன்னிசை பத்தும்வல்லா ரெழில்வானத் திருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10. பாலை யாழ்ப் பாட்டு உகந்தான் - பாலைப்பண்ணில் விருப்புடையான்.*

*11. இப்பதிகம் வல்லார் தேவராய் வானத்திருப்பார் என்கின்றது.*

# திருச்சிரபுரம்

**பண் - வியாழக்குறிஞ்சி**

**பதிகம் :** **எண் 109**

*திருச்சிற்றம்பலம்*

வாருறு வனமுலை மங்கைபங்கன்
நீருறு சடைமுடி நிமலனிடங்
காருறு கடிபொழில் சூழ்ந்தழகார்
சீருறு வளவயற் சிரபுரமே. 1

அங்கமொ டருமறை யருள்புரிந்தான்
திங்களொ டரவணி திகழ்முடியன்
மங்கையொ டினிதுறை வளநகரஞ்
செங்கயன் மிளிர்வயற் சிரபுரமே. 2

பரிந்தவன் பன்முடி யமரர்க்காகித்
திரிந்தவர் புரமவை தீயின்வேவ
வரிந்தவெஞ் சிலைபிடித் தடுசரத்தைத்
தெரிந்தவன் வளநகர் சிரபுரமே. 3

நீறணி மேனிய னீண்மதியோ
டாறணி சடையின னணியிழையோர்
கூறணிந் தினிதுறை குளிர்நகரஞ்
சேறணி வளவயற் சிரபுரமே. 4

---

*1. இப்பதிகம் பெரியநாயகியுடன் எழுந்தருளியிருக்கும் பெருமான் நகரம் சிரபுரமாகிய சீகாழி என்கின்றது. வார் - கச்சு.*

*2. அருமறை-எக்காலத்தும் உணரும் அருமைப்பாட்டினை யுடைய வேதம்.*

*3. பரிந்தவன் - அன்புகூர்ந்தவன். வரிந்த - கட்டிய. அடு சரத்தை - கொல்லும் பாணத்தை. தெரிந்தவன் - ஆராய்ந்தவன்.*

*4. அணியிழை - அணிந்த இழையினையுடையாளாகிய உமை.*

அருந்திற லவுணர்க ளரணழியச்
சரந்துரந் தெரிசெய்த சங்கரனூர்
குருந்தொடு கொடிவிடு மாதவிகள்
திருந்திய புறவணி சிரபுரமே. 5

கலையவன் மறையவன் காற்றொடுதீ
மலையவன் விண்ணொடு மண்ணுமவன்
கொலையவன் கொடிமதில் கூட்டழித்த
சிலையவன் வளநகர் சிரபுரமே. 6

வானவர் மதியொடு மத்தஞ்சூடித்
தானவர் புரமெய்த சைவனிடங்
கானமர் மடமயில் பெடைபயிலுந்
தேனமர் புரமெரி சிரபுரமே. 7

மறுத்தவர் திரிபுர மாய்ந்தழியக்
கறுத்தவன் காரரக் கன்முடிதோள்
இறுத்தவ னிருஞ்சினக் காலனைமுன்
செறுத்தவன் வளநகர் சிரபுரமே. 8

வண்ணநன் மலருறை மறையவனுங்
கண்ணனுங் கழறொழக் கனலுருவாய்
விண்ணுற வோங்கிய விமலனிடம்
திண்ணநன் மதிலணி சிரபுரமே. 9

---

5. அருந்திறல் - பிறரால் வெல்லுதற்கு அரிய வலிமை. சரம் துரந்து - அம்பைச் செலுத்தி. சங்கரன் - சுகத்தைச் செய்பவன். குருந்து - குருந்தமரம். மாதவி - குருக்கத்தி. புறவு - காடு.

6. கலையவன் - கல்வியினால் எய்தும் பயனாகிய ஞானம் ஆயவன், மதில் அழித்த கொலையவன் எனக்கூட்டுக.

7. தானவர் - அசுரர். கான் - காடு.

8. மறுத்தவர் - பகைவர். கறுத்தவன் - சினந்தவன்.

9. வண்ணநன்மலர் - தாமரைமலர். திண்ணநன்மதில் - உறுதியாகிய மதில்.

வெற்றரை யுழல்பவர் விரிதுகிலார்
கற்றில ரறவுரை புறனுரைக்கப்
பற்றலர் திரிபுர மூன்றும்வேவச்
செற்றவன் வளநகர் சிரபுரமே. 10

அருமறை ஞானசம் பந்தனந்தண்
சிரபுர நகருறை சிவனடியைப்
பரவிய செந்தமிழ் பத்தும் வல்லார்
திருவொடு புகழ்மல்கு தேசினரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10. வெற்று அரை உழல்பவர் - ஆடையில்லாத இடையோடு திரிகின்றவர்கள். அறவுரை கற்றிலர் எனமாறுக. புறன் உரைக்க - பொருந்தாத புறம்பான உரைகளைச் சொல்ல. பற்றலர் - பகைவர்.*

*11. தேசினர் - ஒளியையுடையவர்கள்*

# திருவிடைமருதூர்

*பதிகவரலாறு :* (32-ம் பதிகம் பார்க்க)

பண் - வியாழக்குறிஞ்சி

**பதிகம் :** **எண் 110**

*திருச்சிற்றம்பலம்*

மருந்தவன் வானவர் தானவர்க்கும்
பெருந்தகை பிறவினொ டிறவுமானான்
அருந்தவ முனிவரொ டாலிழற்கீழ்
இருந்தவன் வளநக ரிடைமருதே. 1

தோற்றவன் கேடவன் றுணைமுலையாள்
கூற்றவன் கொல்புலித் தோலசைத்த
நீற்றவ னிறைபுன லீள்சடைமேல்
ஏற்றவன் வளநக ரிடைமருதே. 2

---

*1. இப்பதிகம் முழுதும் இறைவன் திருநகர் இடைமருதே என்கின்றது. மருந்தவன் - மருந்துபோல்பவன். மருந்து, நோய் நீக்கவும், நோய் வாராமல் தடுக்கவும், உடலைவளர்க்கவும் உண்ணப்படுமாறு போல இறைவனும் அநாதியே பந்தித்த மலப்பிணியைநீக்கவும், வினை ஏறாமல் காக்கவும், கைவந்த சிவஞானங் கழன்றுபோம்வண்ணம் வாசனை தாக்காமல் வளர்க்கவும் உபகாரப்படுதலின் மருந்தவன் என்றருளினார். அமுதமாயினான் எனலுமாம். தானவர் - அசுரர். பிறவு இறவு - பிறப்பு இறப்பு. 'வு' விகுதிபெற்ற தொழிற்பெயர்; மிக அருமையான பிரயோகம். முனிவரோடு ஆலநிழல் கீழ் இருந்தவன் எனப்பிரிக்க.*

*2. தோற்றவன் - பிறப்பைப்பருளியவன். கேடவன் - அழித்தவன். கூற்றவன் - பாகமதுடையான்.*

படையுடை மழுவினன் பால்வெண்ணீற்றன்
நடைநவி லேற்றினன் ஞாலமெல்லாம்
உடைதலை யிடுபலி கொண்டுழல்வான்
இடைமரு தினிதுறை யெம்மிறையே. 3

பணைமுலை யுமையொரு பங்கனொன்னார்
துணைமதின் மூன்றையுஞ் சுடரின்மூழ்கக்
கணைதுரந் தடுதிறற் காலற்செற்ற
இணையிலி வளநக ரிடைமருதே. 4

பொழிலவன் புயலவன் புயலியக்குந்
தொழிலவ னுயரவன் துயரகற்றுங்
கழலவன் கரியுரி போர்த்துகந்த
எழிலவன் வளநக ரிடைமருதே. 5

நிறையவன் புனலொடு மதியும்வைத்த
பொறையவன் புகழவன் புகழநின்ற
மறையவன் மறிகட னஞ்சையுண்ட
இறையவன் வளநக ரிடைமருதே. 6

---

3. நடைநவில் - நடைபழகுகின்ற. உடைதலை - உடைந்த கபாலம்.

4. பணைமுலை - பருத்தமுலை. ஒன்னார் - பகைவர். துணை மதில் - திரிபுராதிகள் செய்யும் தீமைக்கெல்லாம் அரணாயிருந்து துணைபுரிந்த மதில். கணை - அம்பு. அடுதிறல் - கொல்லும் வன்மை.

5. புயலவன் - மேகமாயுள்ளவன். 'புயலவனாய், அதனை யியக்கும் தொழிலவனாய், துயரவனாய், துயரை அகற்றும் கழலவனாய், என்பன பொருளாயும், அதனையியக்கும் கருத்தனாயும் இருப்பவன் இறைவனே என்பதை விளக்கிற்று. 'கரியுரிபோர்த் துகந்த எழிலவன் என்றது' செய்ய திருமேனிமேல் கரிய தோலைப் போர்த்தியதும் அழகாயிற்று என்பதாம்.

6. பொறையவன் - சுமையையுடையவன்.

நனிவளர் மதியொடு நாகம்வைத்த
பனிமலர்க் கொன்றையம் படர்சடையன்
முனிவரொ டமரர்கண் முறைவணங்க
இனிதுறை வளநக ரிடைமருதே. 7

தருக்கின வரக்கன தாளுந்தோளும்
நெரித்தவ னெடுங்கைமா மதகரியன்
றுரித்தவ னொன்னலர் புரங்கண்மூன்றும்
எரித்தவன் வளநக ரிடைமருதே. 8

பெரியவன் பெண்ணினொ டாணுமானான்
வரியர வணைமறி கடற்றுயின்ற
கரியவ னலரவன் காண்பரிய
எரியவன் வளநக ரிடைமருதே. 9

சிந்தையில் சமணொடு தேரர்சொன்ன
புந்தியி லுரையவை பொருள்கொளாதே
அந்தண ரோத்தினொ டரவமோவா
எந்தைதன் வளநக ரிடைமருதே. 10

---

7. பனிமலர் - குளிர்ந்தமலர், முனிவர் முன்னும் தேவர் பின்னுமாக வணங்குதல் முறையாதலின் முறை வணங்க என்றார். முனிவர்கள் வணக்கம் உலகம் உய்யவந்த நிஷ்காமிய வணக்கம்; தேவர்கள் வணக்கம் அசுரர் அழியத் தாம் வாழ வேண்டும் என்னும் காமிய வணக்கம் ஆதலின் அவர்கள் முன்னும் தேவர்கள் பின்னும் முறையே வணங்க என்றது.

8. அரக்கன் - இராவணன். ஒன்னலர் - பகைவர்.

9. அரவணை - ஆதிசேடனாகிய படுக்கை. கரியவன் - திருமால். அலரவன் - பிரமன்.

10, சிந்தை இல் சமண் - சிந்தனை என்பதொன்றற்ற சமணர். தேரர் - புத்தர். புந்தி இல் உரை - புத்தியற்ற வார்த்தை. ஓத்து - வேதம். அரவம் - ஒலி.

இலைமலி பொழிலிடை மருதிறையை
நலமிகு ஞானசம் பந்தன்சொன்ன
பலமிகு தமிழிவை பத்தும்வல்லார்
உலகுறு புகழினொ டோங்குவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*11. இடைமருதூர்ப் பதிகமாகிய இப்பத்தையும் வல்லவர் உலகிற்புகழோடு ஓங்கி வாழ்வர் என்கின்றது. பலமிகுதமிழ் - பயன் மிகுந்த தமிழ். தெய்வபல மிகுந்த தமிழ் என்றுமாம். புகழ் இம்மைப் பயனே என்பார் உலகு உறு புகழ் என்று அருளினர். நலம் - திருவருட்டிறம்.*

# திருக்கடைமுடி

## பண் - வியாழக்குறிஞ்சி

**பதிகம் :** **எண் 111**

*திருச்சிற்றம்பலம்*

அருத்தனை யறவனை யமுதனைநீர்
விருத்தனைப் பாலனை வினவுதிரேல்
ஒருத்தனை யல்லதிங் குலகமேத்தும்
கருத்தவன் வளநகர் கடைமுடியே. 1

திரைபொரு திருமுடி திங்கள்விம்மும்
அரைபொரு புலியத ளடிகளிடம்
திரையொடு நுரைபொரு தெண்சுனைநீர்
கரைபொரு வளநகர் கடைமுடியே. 2

ஆலிள மதியினொ டரவுகங்கை
கோலவெண் ணீற்றனைத் தொழுதிறைஞ்சி
ஏலநன் மலரொடு விரைகமழும்
காலன வளநகர் கடைமுடியே. 3

---

*1. நீர் பொருளாயுள்ளவனும், அறவடிவானவனும், அமுதனுமாகிய இறைவன் இடம் வினவுவீராயின், அது கடைமுடி என்கின்றது. அருத்தன் - பொருள்வடிவானன். விருத்தன் - மூத்தவன். அருத்தனை..............உலகம் ஏத்தும் ஒருத்தனை வினவுதிரேல் கருத்தவன் அல்லது வளநகர் கடைமுடியே எனக் கூட்டுக. இதன் கருத்து அத்தகைய ஒருவனை வினவுதிராயின் அவன் தியானிப்பார் கருத்தினை இடமாகக் கொண்டவன். அன்றியும், கடைமுடியும் இடமாக்கியவன் என்பதாம்.*

*2. கங்கையையும் பிறையையும் அணிந்த திருமுடியையும், புலித்தோல் உடுத்த அரையையும் உடைய அடிகளிடம் கடைமுடி என்கின்றது. திரை - அலை. ஆகுபெயரால் கங்கையை உணர்த்தியது. அதள் - தோல்.*

*3. இளம்பிறை முதலியவற்றையுடைய இறைவனைத் தொழ, மலர்மணங்கமழும் திருவடியையுடையவன் நகர் கடைமுடி (அடைவோம்) என்கின்றது. இறைஞ்சி என்ற செய்து என் வினையெச்சத்தைச் செயவென் எச்சமாக மாற்றுக. இறைஞ்சக் கமழும் காலன நகர் எனமுடிக்க.*

கொய்யணி நறுமலர்க் கொன்றையந்தார்
மையணி மிடறுடை மறையவனூர்
பையணி யரவொடு மான்மழுவாள்
கையணி பவனிடங் கடைமுடியே. 4

மறையவ னுலகவன் மாயமவன்
பிறையவன் புனலவ னனலுமவன்
இறையவ னெனவுல கேத்துங்கண்டம்
கறையவன் வளநகர் கடைமுடியே. 5

படவர வேரல்குற் பல்வளைக்கை
மடவர லாளையொர் பாகம்வைத்துக்
குடதிசை மதியது சூடுசென்னிக்
கடவுடன் வளநகர் கடைமுடியே. 6

---

*4. கொன்றையையணிந்த நீலகண்டனும், அரவையும், மானையும், மழுவையும் கையில் அணிந்தவனும் ஆகிய இறைவன் இடம் கடைமுடி என்கின்றது. கொய் - கொய்யப்பெற்ற. மை - விடம். பை - படம்.*

*5. 'எல்லாமாயிருப்பவன் இறைவன்' என உலகேத்துங் கண்டங்கரியவன் இடம் கடைமுடி என்கின்றது. மறையவன் - ஒலிவடிவானவன். உலகவன் - பொருட்பிரபஞ்சவடிவானவன். மாயம் அவன் - இவை யிரண்டிற்கும் அடியாகிய சுத்தமும் அசுத்தமும் ஆன மாயையும்அவன். இறையவன் - எல்லா உயிர் களினும் உள்ளும்புறம்புந் தங்குதலையுடையவன். கறை - விடம்.*

*6. உமாதேவியை யொருபாகம்வைத்து, பிறையைச்சூடும் முடியையுடைய கடவுள் நகர் இது என்கின்றது. படஅரவு ஏர்- அரவின் படத்தையொத்த. மடவரலாள் - உமாதேவி. குட திசைமதி - இளம்பிறை. பிறை மேற்கின்கண்ணே தோன்று மாதலின் இங்ஙனம் கூறினார்.*

பொடிபுல்கு மார்பினிற் புரிபுல்குநூல்
அடிபுல்கு பைங்கழ லடிகளிடம்
கொடிபுல்கு மலரொடு குளிர்சுனைநீர்
கடிபுல்கு வளநகர் கடைமுடியே, 7

நோதல்செய் தரக்கனை நோக்கழியச்
சாதல்செய் தவனடி சரணெனலும்
ஆதர வருள்செய்த வடிகளவர்
காதல்செய் வளநகர் கடைமுடியே. 8

அடிமுடி காண்கில ரோரிருவர்
புடைபுல்கி யருளென்று போற்றிசைப்பச்
சடையிடைப் புனல்வைத்த சதுரனிடம்
கடைமுடி யதனயல் காவிரியே. 9

மண்ணுதல் பறித்தலு மாயமிவை
எண்ணிய காலவை யின்பமல்ல
ஒண்ணுத லுமையையொர் பாகம்வைத்த
கண்ணுதல் வளநகர் கடைமுடியே. 10

---

*7. மார்பிற்பூணூலையும், திருவடியிற்கழலையும் பூண்ட அடிகளிடம் இது என்கின்றது. பொடி - விபூதி. கொடிபுல்கு மலர் - முல்லைக்கொடியில் பொருந்தியுள்ள மலர். கடி - காவல்.*

*8. இராவணன் வலியடக்கி யாட்கொண்ட இறைவன் இடம் இது என்கின்றது. நோதல்செய்து - வருத்தி. நோக்கு அழிய - திருவருட்பார்வைகெட, சாதல்செய்தவன் - அழிந்துபட்டவனாகிய இராவணன்.*

*9. அடிமுடியறியாத அயனும் மாலும் அருள் என்று போற்றிசைப்ப, கங்கைசூடிய பெருமானிடம் இது என்கின்றது. புடைபுல்கி - அணுகி.*

*10. முழுகுதலும், மயிர்பறித்தலும் ஆகிய இந்த விரத ஒழுக்கங்கள் யாவும் வெறும் மாயம்; எண்ணும்பொழுது இவை இன்பமாகா; உமாதேவியைப் பாகம்வைத்த பெருமானது இடம் இது என்கின்றது. ஒள்நுதல் - ஒளிபொருந்திய நெற்றி.*

பொன்றிகழ் காவிரிப் பொருபுனல்சீர்
சென்றடை கடைமுடிச் சிவனடியை
நன்றுணர் ஞானசம் பந்தன்சொன்ன
இன்றமி ழிவைசொல வின்பமாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. காவிரியின் நீர்வளம்மிகுந்த கடைமுடியின்கண் எழுந்தருளியுள்ள சிவனடியைப்பற்றித் திருஞானசம்பந்தன் சொன்ன இனிய தமிழைச்சொல்ல இன்பமாம் என்கின்றது. பொருபுனல் - கரையை மோதுகின்ற நீர். பொன்திகழ் காவிரி - பொன்னியெனப் பெயர்தாங்கித் திகழ்கின்ற காவிரி. பொன் - அழகுமாம். சீர் சென்றடை சிவன் எனக் கூட்டுக. உரைப்பார் உரைக்கும் புகழ்களை உரியான் இவனென உணராதே உரைப்பினும் சென்றடைவது சிவனையே என்பதாம். சீர் சென்றடை கடைமுடி எனலுமாம்.

# திருச்சிவபுரம்

***பதிகவரலாறு :*** (21-ம் பதிகம் பார்க்க)

**பண் - வியாழக்குறிஞ்சி**

**பதிகம் :** **எண் 112**

*திருச்சிற்றம்பலம்*

இன்குர லிசைகெழும் யாழ்முரலத்
தன்கர மருவிய சதுரனகர்
பொன்கரை பொருபழங் காவிரியின்
தென்கரை மருவிய சிவபுரமே. 1

அன்றடற் காலனைப் பாலனுக்காய்ப்
பொன்றிட வுதைசெய்த புனிதனகர்
வென்றிகொ ளெயிற்றுவெண் பன்றிமுன்னாள்
சென்றடி வீழ்தரு சிவபுரமே. 2

மலைமகண் மறுகிட மதகரியைக்
கொலைமல்க வுரிசெய்த குழகனகர்
அலைமல்கு மரிசிலி னதனயலே
சிலைமல்கு மதிளணி சிவபுரமே. 3

---

*1. யாழேந்திய கரத்தன் நகர் சிவபுரம் என்கின்றது. முரல - ஒலிக்க.*

*2. மார்க்கண்டற்காகக் காலனையுதைத்தவன் நகர் இது என்கின்றது. அடல் - வலிமை. பொன்றிட - அழிய. எயிறு - கொம்பு. வெண்பன்றி - திருமாலாகிய சுவேதவராகம். இது இத்தலவரலாற்றுக்குறிப்பை அருளியது.*

*3. மலைமகள் அஞ்ச யானையையுரித்த இறைவன் நகர் இது என்கின்றது. மறுகிட - கலங்க. உரிசெய்த - உரித்த. குழகன் - இளமையையுடையவன். சிலை மல்கும் - மலைபோல் விளங்கும்.*

மண்புன லனலொடு மாருதமும்
விண்புனை மருவிய விகிர்தனகர்
பண்புனை குரல்வழி வண்டுகிண்டிச்
செண்பக மலர்பொழிற் சிவபுரமே. 4

வீறுநன் குடையவள் மேனிபாகம்
கூறுநன் குடையவன் குளிர்நகர்தான்
நாறுநன் குரவிரி வண்டுகிண்டித்
தேறலுண் டெழுதரு சிவபுரமே. 5

மாறெதிர் வருதிரி புரமெரித்து
நீறது வாக்கிய நிமலனகர்
நாறுடை நடுபவ ருழவரொடும்
சேறுடை வயலணி சிவபுரமே. 6

ஆவிலைந் தமர்ந்தவ னரிவையொடு
மேவிநன் கிருந்ததோர் வியனகர்தான்
பூவில்வண் டமர்தரு பொய்கையன்னச்
சேவறன் பெடைபுல்கு சிவபுரமே. 7

---

4. ஐம்பூதமுமாகிய விகிர்தனகர் இதுவாம் என்கின்றது. மாருதம் - காற்று. பண்புனை குரல் - பண்ணைச்செய்கின்ற குரல்.

5. உமாதேவியை ஒருபாகங்கொண்டவன் நகர் இதுவாம் என்கின்றது. வீறு - தனிப்பெருமை. நாறு நல்குரவிரி - மணம் வீசுகின்ற நல்லகுராமலர்; விரி - மலர்; முதனிலைத் தொழிலாகு பெயர். தேறல் - தேன்.

6. திரிபுரங்களை நீறாக்கிய நிமலன் நகர் இதுவாம் என்கின்றது. மாறு - பகையாக. நாறு - நாற்று.

7. ஆனைந்தாடும் பரமன் அம்மையோடும் எழுந்தருளியிருந்த இடமாம் என்கின்றது. ஆவில் ஐந்து - பஞ்சகவ்யம். அரிவை - உமாதேவி. பூவில் வண்டு கண்ணயர்ந்திருக்கும் பொய்கையிலே, அன்னச்சேவல் தன் பெடையைப்புல்லும் சிவபுரம் என்பதாம்.

எழின்மலை யெடுத்தவல் லிராவணன்றன்
முழுவலி யடக்கிய முதல்வனகர்
விழவினி லெடுத்தவெண் கொடிமிடைந்து
செழுமுகி லடுக்கும்வண் சிரபுரமே. 8

சங்கள வியகையன் சதுர்முகனும்
அங்கள வறிவரி யவனகர்தான்
கங்குலும் பறவைகள் கமுகுதொறும்
செங்கனி நுகர்தரு சிவபுரமே. 9

மண்டையிற் குண்டிகை மாசுதரும்
மிண்டரை விலக்கிய விமலனகர்
பண்டமர் தருபழங் காவிரியின்
தெண்டிரை பொருதெழு சிவபுரமே. 10

சிவனுறை தருசிவ புரநகரைக்
கவுணியர் குலபதி காழியர்கோன்
தவமல்கு தமிழிவை சொல்லவல்லார்
நவமொடு சிவகதி நண்ணுவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

8. இராவணனின் வலியடக்கிய முதல்வன்நகர் இது என்கின்றது. எழில்மலை - அழகியகைலை. உற்சவத்தில் உயர்த்திய கொடிகள் மேகத்தையணுகும் சிவபுரம் என விழாச் சிறப்பும், கொடியின் உயரமும் உரைத்தவாறு.

9. அயனும்மாலும் அறியப்பெறாதவன் நகர் இதுவாம் என்கின்றது. சங்கு அளவியகையன் - பாஞ்சசன்யம் என்னும் சங்குகலந்த கையையுடையவன். அளவு - உயரமும், ஆழமும் ஆகிய புறஅளவு. இரவிலுங்கூடப் பறவைகள் கமுகுதோறும் பழநுகரும் நகர் என்று இருபோதும் பறவைக்கு உபகாரப் படுவது உரைக்கப்பெற்றது.

10. புறச்சமயிகளை விலக்கிய விமலன் நகரிதுவாம் என்கின்றது. மண்டை - உண்கலம். மாசு - அழுக்கு. பண்டு அமர் தருபழங்காவிரி - முன்னமே வளர்ந்தரும் பழங்காவிரி எனப் பழமைக்கு எல்லை கூறியவாறு.

11. சிவபுரத்தைக் காழிநாதன் கூறிய பாடலைச் சொல்ல வல்லவர் சிவகதி சேர்வர் எனப் பயன் கூறியது. நவம் - புதுமை.

# திருவல்லம்

**பதிகவரலாறு :**

திருமாற்பேறு உடையவர்தம் திருவருள் பெற்றுத் திருவல்லத்தையடைந்த சிவஞானச் செம்மலார், அங்குள்ள பெருமானுக்கு "எரித்தவன் முப்புரம்" என்னும் திருப்பதிகப் பெரும் பிணையலை அணிந்தார்.

**பண் - வியாழக்குறிஞ்சி**

**பதிகம் :**

**எண் 113**

திருச்சிற்றம்பலம்

எரித்தவன் முப்புர மெரியின் மூழ்கத்
தரித்தவன் கங்கையைத் தாழ்ச டைமேல்
விரித்தவன் வேதங்கள் வேறு வேறு
தெரித்தவ னுறைவிடந் திருவல் லமே. 1

தாயவ னுலகுக்குத் தன்னொப் பிலாத்
தூயவன் றூமதி சூடி யெல்லாம்
ஆயவ னமரர்க்கு முனிவர் கட்கும்
சேயவ னுறைவிடந் திருவல் லமே. 2

---

1. முப்புரம் எரித்தவன். சடையிற் கங்கையைத் தரித்தவன். வேதங்களை விரித்தவன். பெயரும் தெரித்தவன் இடம் திருவல்லம் என்கின்றது. விரித்தவன் - பரப்பியவன். தெரித்தவன் - பொருளுணர்த்தியவன்.

2. உலகுக்குத் தாயானவன், ஒப்பில்லாத்தூயவன், தேவர்கட்கும் முனிவர்கட்கும் சேயவன் திருத்தலம் திருவல்லம் என்கின்றது. அமரர் முனிவர் இருவரும் போகிகளாயும், மனனசீலர்களாயும் இருத்தலின் அவர்களுக்குச் சேயவனானான் என்றருளினர். இவர்களுக்குச் சேயவன் எனவே ஞானிகட்கு மிக அண்ணியன் என்பதாம்.

பார்த்தவன் காமனைப் பண்ப ழியப்
போர்த்தவன் போதகத் தின்னு ரிவை
ஆர்த்தவ னான்முகன் றலையை யன்று
சேர்த்தவ னுறைவிடந் திருவல் லமே. 3

கொய்தவம் மலரடி கூடு வார்தம்
மைதவழ் திருமகள் வணங்க வைத்துப்
பெய்தவன் பெருமழை யுலக முய்யச்
செய்தவ னுறைவிடந் திருவல் லமே. 4

சார்ந்தவர்க் கின்பங்க டழைக்கும் வண்ணம்
நேர்ந்தவ னேரிழை யோடுங் கூடித்
தேர்ந்தவர் தேடுவார் தேடச்செய்தே
சேர்ந்தவ னுறைவிடந் திருவல் லமே. 5

---

3. காமனை யெரித்தவன், யானையையுரித்தவன், பிரமனைச் சிரங்கொய்தவன், இடம் இது என்கின்றது. பண்பு - அழகு. போதகம் - யானைக்கன்று. உரிவை - தோல். ஆர்த்தவன் - கட்டியவன்.

4 தம் அடியை வணங்குவாரைத் திருமகள் வணங்க வைத்து, உலகம் உய்யப் பெருமழை பெய்யச் செய்தவன் உறைவிடம் வல்லம் என்கின்றது. கொய்த அம் மலரடி - கொய்த அழகிய மலரையணிந்த திருவடி. கூடுவார்தம்மை - தியானிப்பவர்களை. தவழ் திருமகள் - நிலையாமல் தவழ்ந்துகொண்டேயிருக்கின்ற இலட்சுமியை.

5. சார்ந்தவர்க்கு இன்பநல்கி, பார்வதியோடும் இருப்பவனும், தெளிந்தாரும் தேடுவாரும் தேடச்செய்தே அவர்களிடம் சேர்ந்திருப்பவனும் ஆகிய சிவனிடம் இது என்கின்றது. சார்ந்தவர்க்கு - திருவடியே சரண் என்று சார்ந்த ஞானிகட்கு. நேர்ந்தவன் - திருவுளம் பற்றியவன்; தேர்ந்த ஞானியரையும் தேடச்செய்து அவர்கட்குப் பாலினெய்போலவும் தேடுவாரைத் தேடச்செய்து விறகின்தீப்போலவும் தோன்றி நிற்பவன்.

பதைத்தெழு காலனைப் பாதமொன்றால்
உதைத்தெழு மாமுனிக் குண்மை நின்று
விதிர்த்தெழு தக்கன்றன் வேள்வியன்று
சிதைத்தவ னுறைவிடந் திருவல் லமே. 6

* * * * 7

இகழ்ந்தரு வரையினை யெடுக்க லுற்றாங்
ககழ்ந்தவல் லரக்கனை யடர்த்த பாதம்
நிகழ்ந்தவர் நேடுவார் நேடச் செய்தே
திகழ்ந்தவ னுறைவிடந் திருவல் லமே. 8

பெரியவன் சிறியவர் சிந்தை செய்ய
அரியவ னருமறை யங்க மானான்
கரியவ னான்முகன் காணவொண்ணாத்
தெரியவன் வளநகர் திருவல் லமே. 9

---

6. காலனை உதைத்தும், மார்க்கண்டர்க்கு உண்மைப் பொருளாய் எதிர்நின்றும், தக்கன் யாகத்தினைத் தகர்த்தும் நின்ற இறைவனிடம் இது என்கின்றது. மாமுனி - மார்க்கண்டர். விதிர்த்து - நடுங்கி.

8. இராவணன் வலியடக்கிய பாதத்தைத் தேடுவார் தேடச் செய்தே எமக்கு எளிமையாகத் திகழ்ந்தவன் நகர் இது என்கின்றது. இகழ்ந்து அருவரையினை - இது என் வலிக்கு எம் மாத்திரம் என்று இகழ்ந்து அரிய கைலையை. நிகழ்ந்தவர் - பாதத்தை நிகழ்பொருளாகக்கண்டவர்கள். நேடுவார் - தேடுபவர்கள்.

9. பெரியவன், சிறியவர்கள் தியானித்தற்கு அரியவன், வேதமும் அங்கமும் ஆனான், அயனும் மாலுங்காண ஒண்ணாத தெரியவன்நகர் இது என்கின்றது தெரியவன் - தெரியநிற்பவன். முனைப்படங்கிய முத்தான்மாக்களுக்கு விளங்கி நிற்பவன் என்பதாம்.

அன்றிய வமணர்கள் சாக்கி யர்கள்
குன்றிய வறவுரை கூறு வண்ணம்
வென்றவன் புலனைந்தும் விளங்க வெங்கும்
சென்றவ னுறைவிடந் திருவல் லமே. 10

கற்றவர் திருவல்லங் கண்டு சென்று
நற்றமிழ் ஞானசம் பந்தன் சொன்ன
குற்றமில் செந்தமிழ் கூற வல்லார்
பற்றுவ ரீசன்பொற் பாதங் களே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10.* *சமணரும், புத்தரும் அறமிலா உரை பேசாவண்ணம் ஐம்புலன்களையும் வென்றவன் நகர் வல்லம் என்கின்றது. அன்றிய - மாறுபட்ட. அறம் குன்றிய உரை என மாறுக.*

*11.* *ஞானசம்பந்தப் பெருமான் திருவல்லத்தைக்கண்டு சொன்ன குற்றம் இல் செந்தமிழ்ப் பாடலாகிய இவற்றைக் கூறவல்லவர் ஈசன் பாதங்களைப் பற்றுவர் என்கின்றது. கண்டு சென்று சொன்ன என்பதால் இப்பதிகம் திருவல்லத்தை வழிபட்டுபோன பின்பு சிவானந்தானுபவம் சிந்தையில் நிறைய ஆக்கப்பெற்றதாகும் என்பதறியப்பெறும்.*

# திருமாற்பேறு

***பதிகவரலாறு :*** *(55-ம் பதிகம் பார்க்க)*

**பண் - வியாழக்குறிஞ்சி**

**பதிகம் :** **எண் 114**

*திருச்சிற்றம்பலம்*

குருந்தவன் குருகவன் கூர்மையவன்
பெருந்தகை பெண்ணவ னாணுமவன்
கருந்தட மலர்க்கண்ணி காதல்செய்யும்
மருந்தவன் வளநகர் மாற்பேறே. 1

பாறணி வெண்டலை கையிலேந்தி
வேறணி பலிகொளும் வேட்கையனாய்
நீறணிந் துமையொரு பாகம்வைத்த
மாறிலி வளநகர் மாற்பேறே. 2

கருவுடை யாருல கங்கள்வேவச்
செருவிடை யேறியுஞ் சென்றுநின்று
உருவிடை யாளுமை யாளுந்தானும்
மருவிய வளநகர் மாற்பேறே. 3

---

*1. இப்பதிகம், மருந்தாய், மாறிலியாய், உமாபதியாய், கயிலாயபதியாய், காலகாலனாய், முனிவரும் தேவரும் மக்களும் ஒருசேர வணங்கத்தகும் எளிமையனாய், மாதுடையனாய், பிறை முதலிய சூடியவனாய், எந்தையாய் இருப்பவன் நகர் மாற்பேறு என்கின்றது. குருந்தவன் - குருந்தமரத்தடியிற் குருவானவன். இவ்வுரை மாணிக்கவாசகர் காலத்துக்கு ஞானசம்பந்தப் பெருமான் பின்னவராயிற்கொள்ளலாம். குருகவன் - வயிரவனையில் ஒன்றானவன். மருந்து - அமுதம்.*

*2. பாறு - பருந்து. மாறிலி - மாறுபாடில்லாதவன்.*

*3. கருவுடையார் உலகங்கள் வேவ - பிறப்புடைய ஆன்மாக்களின் போக நுகர்ச்சிக்காகப் படைக்கப்பெற்ற உலகங்கள் அழிய. உரு - அழகிய.*

தலையவன் றலையணி மாலைபூண்டு
கொலைநவில் கூற்றினைக் கொன்றுகந்தான்
கலைநவின் ருன்கயி லாயமென்னும்
மலையவன் வளநகர் மாற்பேறே. 4

துறையவன் ருெழிலவன் ருெல்லுயிர்க்கும்
பிறையணி சடைமுடிப் பெண்ணெரு்பாகன்
கறையணி மிடற்றண்ணல் காலற்செற்ற
மறையவன் வளநகர் மாற்பேறே. 5

பெண்ணினல் வாளையோர் பாகம்வைத்துக்
கண்ணிறு் காமனைக் காய்ந்தவன்றன்
விண்ணவர் தானவர் முனிவரொடு
மண்ணவர் வணங்குநன் மாற்பேறே. 6

* * * * 7

தீதிலா மலையெடுத் தவ்வரக்கன்
நீதியால் வேதகீ தங்கள்பாட
ஆதியா ருகிய வண்ணலெங்கள்
மாதிதன் வளநகர் மாற்பேறே. 8

செய்யதண் டாமரைக் கண்ணனெடும்
கொய்யணி நறுமலர் மேலயனும்
ஐயனன் சேவடி யதனையுள்க
மையல்செய் வளநகர் மாற்பேறே. 9

---

4. தலையணிமாலை - கபாலமாலை. நவில் - விரும்பும்.

5. துறையவன் - பலநெறிகளாயிருப்பவன். தொழிலவன் - ஐந்து தொழிலையுடையவன். கறை - விடம்.

6. உமையையொருபாகம் வைத்தும் மன்மதனைக் கண்ணுற் காய்ந்தவன் என்பதில் நயம்ஓர்க. விண்ணவர் முதலானோர் ஒப்ப வணங்கத்தகும் எளிமையில் இருப்பவன் என இறைவனுடைய ஒப்பநோக்கும் பேரருள் உரைக்கப்பட்டது.

8. மாதி - மாதினையுடையவன்.

9. ஐயன் நன்சேவடி - தலைவனுடைய நல்ல சேவடியை. மையல் - விருப்பம்.

குளித்துணு வமணர்குண் டாக்கரென்றும்
களித்துநன் கழலடி காணவுறுர்
முளைத்தவெண் மதியினெ டரவஞ்சென்னி
வளைத்தவன் வளநகர் மாற்பேறே. 10

அந்தமின் ஞானசம் பந்தன்சொன்ன
செந்திசை பாடல்செய் மாற்பேற்றைச்
சந்தமின் றமிழ்கள்கொண் டேத்தவல்லார்
எந்தைதன் கழலடி யெய்துவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

10. 'கூழாயினுங் குளித்துக் குடி' என்பது உலக வாய் மொழியாகவும் குளித்து உண்ணுத அமணர்கள் என அவர்கள் இயல்பு கூறியது. குண்டு ஆக்கர் - பரு உடலராகிய புத்தர்.

11. அந்தம் இல் - அழிவற்ற. சந்தம் இன் தமிழ் - இசை யோடு கூடிய இனிய தமிழ். இப்பதிகம் பாடினவர்க்குப் பயன் திருவடிப்பேறு எனச் சொல்லப்படுகின்றது. செந்து இசை பாடல் - செவ்விய இசையையுடைய பாடல். து - சாரியை.

# திருவிராமனதீச்சரம்

***பதிகவரலாறு :***

*திருப்பனையூரை வணங்கிவருகின்ற சிரபுரச்செல்வர் திருஇராமனதீச்சரத்தை அடைந்து "சங்கொளிர்" என்னும் இப்பதிகத்தையருளிச்செய்தார்.*

**பண் - வியாழக்குறிஞ்சி**

**பதிகம் :** **எண் 115**

*திருச்சிற்றம்பலம்*

சங்கொளிர் முன்கையர் தம்மிடையே
அங்கிடு பலிகொளு மவன்கோபப்
பொங்கர வாடலோன் புவனியோங்க
எங்கும னிராமன தீச்சரமே. 1

சந்தநன் மலரணி தாழ்சடையன்
தந்தம தத்தவன் றுதையோதான்
அந்தமில் பாடலோ னழகனல்ல
எந்தவ னிராமன தீச்சரமே. 2

தழைமயி லேறவன் றுதையோதான்
மழைபொழி சடையவன் மன்னுகாதில்
குழையது விலங்கிய கோலமார்பின்
இழையவ னிராமன தீச்சரமே. 3

---

*1. முனிபன்னியர் இடும்பலியை ஏற்பவனும், அரவணிந்தவனும், உலகமெலாம் உயர எங்கும் மன்னியிருப்பவனும் ஆகிய சிவனிடம் இராமனதீச்சரம் என்கின்றது. சங்கு - வளையல். அங்கு - அசை. புவனி - பூமி.*

*2. தாழ்சடையன், விநாயகப்பெருமான் தாதை, பாடலன், அழகன் நகர் இது என்கின்றது. சந்தம் - அழகு. தந்த மதத்தவன் - தந்தத்தையும் மதத்தையும் உடைய விநாயகப் பெருமான். அந்தம் இல் - எல்லையில்லாத.*

*3. முருகன் தாதை, மார்பில் பூணூலன் நகர் இதுவே என்கின்றது. தழை மயில் - பீலியோடு கூடிய மயில். ஏறவன் -*

சத்தியு ளாதியோர் தையல்பங்கன்
முத்திய தாகிய மூர்த்தியோதான்
அத்திய கையினி லழகுசூலம்
வைத்தவ னிராமன தீச்சரமே. 4

தாழ்ந்தகு ழற்சடை முடியதன்மேல்
தோய்ந்த விளம்பிறை துலங்குசென்னிப்
பாய்ந்தகங் கையொடு படவரவம்
ஏய்ந்தவ னிராமன தீச்சரமே. 5

சரிகுழ லிலங்கிய தையல்காணும்
பெரியவன் காளிதன் பெரியகூத்தை
அரியவ னாடலோ னங்கையேந்தும்
எரியவ னிராமன தீச்சரமே. 6

மாறிலா மாதொரு பங்கன்மேனி
நீறது வாடலோ னீள்சடைமேல்
ஆறது சூடுவா னழகன்விடை
ஏறவ னிராமன தீச்சரமே. 7

---

ஏறுதலையுடையவன். மழை - நீர்த்துளி. குழை - காதணி. கோலம் - அழகு. இழை - பூணூல்; ஆபரணமும் ஆம்.

4. ஆதி சத்தியின் தலைவன், முத்திதரு முதல்வன் நகர் இது என்கின்றது. அத்தியகையினில் அழகு சூலம் வைத்தவன்- சங்கார கிருத்தியஞ்செய்யும் தீயேந்திய திருக்கரத்தில் அழகுக் காகச் சூலத்தை ஏந்தியவன். இதன் நயம் ஓர்க.

5. பிறையணிந்த சென்னியோடு கங்கை பாம்பு அணிந்த-வன் நகர் இது என்கின்றது. ஏய்ந்தவன் - பொருந்தியவன்.

6. பராசக்தி காணும் பெரியவன், காளியின் கூத்திற்கு அரியவன், ஆனந்தக் கூத்தன் நகர் இது என்கின்றது. சரி குழல் - பிடரிமீது சரிந்த கூந்தல். இத்தலத்து இறைவிநாமம் சரியார் குழலி.

7. மாதொருபங்கன், நீறூடி, ஆறுசூடி, அழகன் நகர் இது என்கின்றது. மாறு இலா மாது - அபின்னையாகிய பராசக்தி. நீறு அது ஆடலோன் - நீறூடியவன்.

தடவரை யரக்கனைத் தலைநெரித்தோன்
படவர வாட்டிய படர்சடையன்
நடமது வாடலா னுன்மறைக்கும்
இடமவ னிராமன தீச்சரமே. 8

தனமணி தையறன் பாகன்றன்னை
அனமணி யயனணி முடியுங்காணன்
பனமணி வரவரி பாதங்காணன்
இனமணி யிராமன தீச்சரமே. 9

தறிபோலாஞ் சமணர்சாக் கியர்சொற்கொளேல்
அறிவோரா னுமை மறிந்துரைமின்
மறிகையோன் றன்முடி மணியார்கங்கை
எறிபவ னிராமன தீச்சரமே. 10

தேன்மலர்க் கொன்றையோன் * * 11

திருச்சிற்றம்பலம்

---

8. இராவணனை நெரித்தவன், அரவாட்டிய சடையன், நடனம் ஆடுதலையுடையவன் நகர் இது என்கின்றது. நான் மறைக்கும் இடம் அவன் - வேதங்கள் நான்கிற்கும் இடம் ஆயவன்.

9. உமைபாகனை அயன் முடிகாணன், அரி அடிகாணன், அத்தகைய இறைவன் நகர் இது என்கின்றது. அனம் அணி அயன் - அன்னமாகத் தன்னைப்புனைந்துகொண்ட பிரமன். பன மணி வரவு அரி - படங்களில் மணிகளையுடைய ஆதிசேடன் மேல் வருதலையுடைய மால். பண என்பது எதுகை நோக்கிப் பன என ஆயிற்று. நான்கு தலையையுடைய பிரமன் ஒரு முடியைக் காணமையும், ஏனமாய் நான்கு கால்களையுடைய திருமால் இணையடி காணமையும் வியப்பு என நயந்தோன்ற நின்றது.

10. அறிவால் அறியப்பெறுதவன், மான்கையன், கங்கையன் நகர் இது என்கின்றது. தறி - தடி. அறிவு - பசு, பாச ஞானம். பாசஞானத்தாலும் படர் பசுஞானத்தாலும் ஈசனை யறியவொண்ணுது ஆதலின் இங்ஙனம் கூறினர். மறி - மான் குட்டி.

## பொது

**பதிகவரலாறு :**

கொடிமாடச் செங்குன்றூரில் சிவஞானச் செம்மலார் அடியார்களுடன் தங்கியிருந்தகாலத்துப் பனிக்காலம் வந்து விட்டது. அதனால் அடியார்கள் நளிர்சுரத்தினால் வருந்தினார்கள். பிள்ளையாரிடம் விண்ணப்பம் செய்துகொண்டனர். 'இந்த நளிர்சுரம் வருதல் இந்நாட்டிற்கு இயல்பாயினும் நமக்கு இந்தநோய் எய்தப்பெறா. நீலகண்டமே எந்நாளும் அடியார் இடர்தீர்க்கும் அருந்துணை' என்று எண்ணி "அவ்வினைக் கிவ்வினை" என்னும் திருப்பதிகத்தைத் தொடங்கி, ஒவ்வொரு திருப்பாடல் இறுதியிலும் "செய்வினை தீண்டா திருநீலகண்டம்" என ஆணைவைத்து அருளிச்செய்தார்கள். உடனே அடியார்களுக்குமட்டுமன்றி அந்நாட்டிலேயே சுரநோய் தொலைந்தது.

(திருநீலகண்டம்)

பண் - வியாழக்குறிஞ்சி

**பதிகம் :** **எண் 116**

திருச்சிற்றம்பலம்

அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லு மஃதறிவீர்
உய்வினை நாடா திருப்பது முந்தமக் கூனமன்றே
கைவினை செய்தெம் பிரான்கழல் போற்றுது நாமடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 1

---

1. நாம் முன்முன் பிறவிகளில் ஈட்டிய தீவினைகட்கு ஏற்ப இப்பிறவியில் பிராரத்தம் வந்தூட்ட இத்துன்பம் அனுபவிக்கிறோம் என்று சொல்லும் அடியார்களைப் பார்த்து நீங்கள் உய்வைத் தேடாதிருப்பது ஊனமல்லவா? கைத்தொண்டு செய்து கழலைப்போற்றுவோம்; நாம் செய்தவினை நம்மைத் தீண்டா; திருநீலகண்டம் என்கின்றது. அவ்வினைக்கு - முன்னைய வினைக்கு. இவ்வினை - இப்போது சுரநோயால் வருந்தும் இவ்வினை. உய்வினை - தீரும் உபாயத்தை. கைவினை - கிரியைகளாகிய சிவப்பணி.

காவினை யிட்டுங் குளம்பல தொட்டுங் கனிமனத்தால்
ஏவினை யாலெயின் மூன்றெரித் தீரென் றிருபொழுதும்
பூவினைக் கொய்து மலரடி போற்றுது நாமடியோம்
தீவினை வந்தெமைத் தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 2

மூலைத்தட மூழ்கிய போகங் களுமற் றெவையுமெல்லாம்
விலைத்தலை யாவணங் கொண்டெமை யாண்ட விரிசடையீர்
இலைத்தலைச் சூலமுந் தண்டு மழுவு மிவையுடையீர்
சிலைத்தெமைத் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 3

விண்ணுல காள்கின்ற விச்சா தரர்களும் வேதியரும்
புண்ணிய ரென்றிரு போதுந் தொழப்படும் புண்ணியரே
கண்ணிமை யாதன மூன்றுடை யீருங் கழலடைந்தோம்
திண்ணிய தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 4

மற்றிணை யில்லா மலைதிரண் டன்னதிண் டோளுடையீர்
கிற்றெமை யாட்கொண்டு கேளா தொழிவதுந் தன்மைகொல்லோ
சொற்றுணை வாழ்க்கை துறந்துந் திருவடி யேயடைந்தோம்
செற்றெமைத் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 5

---

*2. திரிபுரம் எரித்த பெருமானே! நந்தவனம் வைத்தும், குளந்தோண்டியும், பூவெடுத்துக்கட்டி அணிவித்தும் போற்றுவோம்; ஆதலால் தீவினை எம்மைவந்து தீண்டப்பெறா திருநீலகண்டம் என்கின்றது. கா - சோலை. தொட்டும் - தோண்டியும். ஏ வினையால் - அம்பின் தொழிலால்.*

*3. போகங்கள் எம்மைப் பற்றுவண்ணம் தடுத்தாண்ட பெருந்தகையீர்! சூலம் மழு இவற்றையுடையீர்! எம்மை வினை தீண்டப்பெறா என்கின்றது. விலைத்து அலையாவண்ணம் - அடியேனை விலகச்செய்து அலையாவண்ணம்; விலையாகக் கொண்டு எனலுமாம். சிலைத்து - ஒலித்து.*

*4. வேதியரும் வித்தியாதரர்களும் புண்ணியர் என்று தொழும் புண்ணியரே! உம் கழல் அடைந்தோம்; திண்ணிய தீவினை தீண்டப்பெறா என்கின்றது. திண்ணிய தீவினை தீண்டப் பெறா என்றது இதுவரை நுகர்ந்த அளவிலேயே அமைவதாக, திருவருள்நோக்கத்தால் அவை மென்மையாயின ஆதலின் இங்ஙனம் கூறினர்.*

*5. ஒப்பற்ற மலைபோல் திரண்ட தோளுடையீர்! எம்மை யாட்கொண்டும் எம்குறையைக் கேளாதொழிவது பெருமையோ*

மறக்கு மனத்தினை மாற்றியெம் மாவியை வற்புறுத்திப்
பிறப்பில் பெருமான் றிருந்தடிக் கீழ்ப்பிழை யாதவண்ணம்
பறித்த மலர்கொடு வந்துமை யேத்தும் பணியடியோம்
சிறப்பிலித் தீவினை தீண்டப்பெ றுதிரு நீலகண்டம். 6

* * * * 7

---

எல்லாத் துணையையும் விட்டு உமது திருவடி யடைந்தோம் ஆதலால் எம்மைத் தீவினை தீண்டப்பெறு. திருநீலகண்டம் ஆணை என்கின்றது. மற்று - வேறு. இணை - ஒப்பு. கிற்று - வலி படைத்து. சொல்துணைவாழ்க்கை - சொல்லப்படுகிற துணைகள் பலவற்றோடும் கூடிய வாழ்க்கை. செற்று - வருத்தி. எமது வினைகளை வெருட்டும் வலியுடையீர் என்று குறிக்க இணையில்லா மலைதிரண்டன்ன தோளுடையீர் என்று குறிப்பித்தது. எமக்கும் தேவரீர்க்கும் உள்ளதொடர்பு ஆட்கொள்ளப்பட்டதால் உண்டான ஆண்டானும் அடிமையுமான தொடர்பு அங்ஙனமிருந்தும் எமது குறையை நீரேயறிந்து நீக்கவேண்டியிருக்க, சொல்லியும் கேளாது ஒழிவதும் தன்மையோ என்றார். துணையென்று சொல்லப்படுகின்ற வாழ்க்கைகளைத் துறந்து உம் திருவடியடைந்தோம் என்றது அகப்பற்றும் புறப்பற்றும் விட்டு உம்மைப்பற்றினேம் என்றது. தீவினை செற்றுத்தீண்டப்பெறு என்றது தீவினைகள் தீண்டுபவற்றைத் தடுத்தலாகாது ஆயினும் அவைவலியிழந்தனவாகத் தீண்டா என்று விளக்கியவாறு.

6. எம்மோடு ஒன்றி வராமல் மறுக்கும் தன்மைவாய்ந்த மனத்தையும்மாற்றி, உயிரைவற்புறுத்தித்தேவரீர் திருவடிக்குப் பிழை ஏற்படாதவண்ணம் மலர்கொண்டேத்தும் அடியேங்களைச் சிறப்பில்லாத இத்தீவினைகள் தீண்டப்பெறு திருநீலகண்டம் என்கின்றது. மனத்திற்கு இயற்கை, பற்றியதை விட்டுப்பற்றி, அதன் மயமாய், பற்றியதையும் மறந்துவிடுதல் அந்த நிலையை மாற்றி என்றார். திருவடியையே பற்றிவிடாது நிற்றலின் வினையின் வழிநின்று மலமறைப்பால் தடுமாறும் ஆன்மாவை வற்புறுத்தி. சிறப்பில் இத்தீவினை - சிறப்பற்ற இந்தத்தீவினை.

கருவைக் கழித்திட்டு வாழ்க்கை கடிந்துங் கழலடிக்கே
உருகி மலர்கொடு வந்துமை யேத்துது நாமடியோம்
செருவி லரக்கனைச் சீரி லடர்த்தருள் செய்தவரே
திருவிலித் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 8

நாற்ற மலர்மிசை நான்முக னாரணன் வாதுசெய்து
தோற்ற முடைய வடியு முடியுந் தொடர்வரியீர்
தோற்றினுந் தோற்றுந் தொழுதுவணங்குது நாமடியோம்
சீற்றம தாம்வினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 9

சாக்கியப் பட்டுஞ் சமணுருவாகி யுடையொழிந்தும்
பாக்கிய மின்றி யிருதலைப் போகமும் பற்றும்விட்டார்
பூக்கமழ் கொன்றைப் புரிசடை யீரடி போற்றுகின்றோம்
தீக்குழித் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 10

---

8. பிறவியை அறுத்து உலகவாழ்க்கையை வெறுத்து உம் திருவடிக்கே உருகிவழிபடும் எமக்குத் தீவினை தீண்டப்பெறா திருநீலகண்டம் என்கின்றது. கரு - பிறவிமுதல். செரு இல் அரக்கன் - போரில்லாத இராவணன். திக்குவிஜயம்பண்ணிப் போரில்லாமையால் தருக்கிக் கயிலை எடுத்தானாதலின் இங்ஙனம் கூறினார். திரு இல் - சிவனடி வழிபடும் செல்வத்தையில்லாத

9. மலர்மேலயனும் திருமாலும் தங்களுக்குள் வாதுசெய்து அடிமுடியும் அறியப்படாத தன்மையை யுடையவரே! காணப் பெறினும் பெறுவீர். உம்மைத் தொழுது வணங்குவோம்; சீற்றமாகிய வினை எம்மைத் தீண்டப்பெறா; திருநீலகண்டம் என்கின்றது. நாற்றம் - மணம். தோற்றமுடைய - கட்புலனாகிய. சீற்றம் - கோபம்.

10. சாக்கியராயும் சமணராகியும் இருமையின்பமும் ஒழிந்தார்கள்; நாங்கள் நும் திருவடி போற்றுகின்றோம்; எம்மை வினை தீண்டப்பெறா என்கின்றது. இருதலைப் போகம் - இம்மை மறுமை யின்பம். தீக்குழித் தீவினை - தீக்குழியினைப் போலக் கனலுவதாகிய தீவினை.

பிறந்த பிறவியிற் பேணியெஞ் செல்வன் கழலடைவான்
இறந்த பிறவியுண் டாகி லிமையவர் கோனடிக்கண்
திறம்பயின் ஞானசம் பந்தன செந்தமிழ் பத்தும்வல்லார்
நிறைந்த வுலகினில் வானவர் கோனொடுங் கூடுவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*11. எமது இறைவன் கழலடையப் பிறந்த இப்பிறவியில் சிவபெருமான் திருவடியைப்பேணி, மீட்டும் பிறவியுளதாயின், இம்மொழி பத்தும் வல்லார்கள் வானவர்கோனொடுங் கூடுவர் என்கின்றது. அடைவான் பேணி, வல்லார், பிறவியுண்டாகில் கோனொடுங் கூடுவர் என முடிக்க.*

# திருப்பிரமபுரம்

**பதிகவரலாறு :**

வாக்கின்மன்னரை வழியனுப்பியபின் காழித்திருஞான சம்பந்தப் பிள்ளையார் மீண்டும் சீகாழியிற் புகுந்து, வேதவடிவாகிய திருத்தோணியில் வீற்றிருந்த விண்ணவர் பெருமானைப் பாடிப்பணிந்து, அங்கு எழுந்தருளியிருக்கின்ற நாளில், செந்தமிழ்ப் பாமாலையின் விகற்பங்களாகிய மொழிமாற்று, மாலைமாற்று, திருவியமகம், ஏகபாதம், இருக்குக்குறள், எழுகூற்றிருக்கை முதலானவற்றை அருளிச்செய்து, திருப்பாணனாரும் இசைவடிவான மதங்கசூளாமணியாரும் இப்பதிகங்களை ஏழிசைபற்றிப்பாடச் சீகாழியில் எழுந்தருளியிருந்தார்கள்.

மொழிமாற்று

பண் - வியாழக்குறிஞ்சி

**பதிகம் :** **எண் 117**

திருச்சிற்றம்பலம்

காட தணிகலங் காரர வம்பதி காலதனில்
தோட தணிகுவர் சுந்தரக் காதினிற் றூச்சிலம்பர்
வேட தணிவர் விசயற் குருவம் வில்லுங்கொடுப்பர்
பீட தணிமணி மாடப் பிரம புரத்தரரே. 1

---

மொழிமாற்று என்பது பொருள்கோள்வகையுள் ஒன்று. பொருளுக்கு ஏற்பச் சொல்லைப் பிரித்து முன்பின் கூட்டிக் கொள்வது.

1. பிரம புரத்தரனார் காட்டைப் பதியாகக்கொள்ளுவர்; அரவத்தை அணிவர்; அழகிய காதில் தோடு அணிவர்; காலில் சிலம்பணிவர்; வேடுருவந்தாங்கி விசயற்குப் பாசுபதாஸ்திரம் அளிப்பர் என்கின்றது. காடது பதி, அணிகலம் காரரவம், காலதனில் தூச்சிலம்பர், சுந்தரக்காதினில் தோடது அணிகுவர் எனப் பிரித்துக்கூட்டுக. பீடம் - மேடை.

கற்றைச் சடையது கங்கண முன்கையிற் றிங்கள்கங்கை
பற்றித்து முப்புரம் பார்படைத் தோன்றலை சுட்டதுபண்
டெற்றித்துப் பாம்பை யணிந்தது கூற்றை யெழில்விளங்கும்
வெற்றிச் சிலைமதில் வேணு புரத்தெங்கள் வேதியரே. 2

கூவிளங் கையது பேரி சடைமுடிக் கூட்டத்தது
தூவிளங் கும்பொடிப் பூண்டது பூசிற்றுத் துத்திநாகம்
ஏவிளங் குந்நுத லாளையும் பாக முரித்தனரின்
பூவிளஞ் சோலைப் புகலியுண் மேவிய புண்ணியரே. 3

உரித்தது பாம்பை யுடன்மிசை யிட்டதோ ரொண்களிற்றை
எரித்ததொ ராமையை யின்புறப் பூண்டது முப்புரத்தைச்
செருத்தது சூலத்தை யேந்திற்றுத் தக்கனை வேள்விபன்னூல்
விரித்தவர் வாழ்தரு வெங்குரு வில்வீற் றிருந்தவரே. 4

---

2. வேணுபுரத்து வேதியரின் சடையது திங்களும் கங்கையும்; முன்கையிற் கங்கணமாக யணிந்தது பாம்பு; கையில் பற்றியது பிரமன் தலை; சுட்டது முப்புரம் என்கின்றது. பண்டு கூற்றை எற்றித்து என மொழிமாற்றிக் காண்க. பற்றித்து எற்றித்து என்பன பற்றிற்று எற்றிற்று என்பதன் மரூஉ. எற்றித்து - உதைத்தது.

3. கூவிளம் சடைமுடிக் கூட்டத்தது; பேரி கையது; தூவிளங்கும் பொடி பூசிற்று; துத்திநாகம் பூண்டது என மொழிமாற்றிப் பொருள் கொள்க. கூவிளம் - வில்வம். பேரி - உடுக்கை. தூ - தூய்மை. பொடி - விபூதி. துத்தி - படப்பொறி. ஏவிளங்குநுதலாள் - அம்புபோல் விளங்கும் நெற்றியையுடையாள் என்றது உமாதேவியை. நெற்றி என்றது ஆகுபெயராகக் கண்ணை உணர்த்திற்று. உரித்தனர் - உரிமையாகப்பூண்டனர். புகலி - சீகாழி.

4. பாம்பை உடல்மிசையிட்டது; ஓர் ஒண் களிற்றை உரித்தது; ஆமையை இன்புறப் பூண்டது; முப்புரத்தை எரித்தது; சூலத்தை ஏந்திற்று; தக்கனை வேள்வி செருத்தது எனக்கூட்டுக. களிறு - யானை. செருத்தது - வருத்தியது. பன்னூல்விரித்தவர் - பலநூல்களையும் விரித்துணர்ந்த அந்தணர்.

கொட்டுவ ரக்கரை யார்ப்பது தக்கை குறுந்தாளன
விட்டுவர் பூதங் கலப்பில ரின்புக ழென்புலவின்
மட்டுவ ருந்தழல் சூடுவர் மத்தமு மேந்துவர்வான்
தொட்டுவ ருங்கொடித் தோணி புரத்துறை சுந்தரரே. 5

சாத்துவர் பாசந் தடக்கையி லேந்துவர் கோவணந்தங்
கூத்தவர் கச்சுக் குலவிநின் றுடுவர் கொக்கிறகும்
பேர்த்தவர் பல்படை பேயவை சூடுவர் பேரெழிலார்
பூத்தவர் கைதொழு பூந்தராய் மேவிய புண்ணியரே. 6

காலது கங்கை கற்றைச் சடையுள்ளாற் கழல்சிலம்பு
மாலது வேந்தன் மழுவது பாகம் வளர்கொழுங்கோட்
டாலது வூர்வ ரடலேற் றிருப்ப ரணிமணிநீர்ச்
சேலது கண்ணியொர் பங்கர் சிரபுர மேயவரே. 7

---

*5. வான்தொட்டு வருங் கொடித் தோணி புரத்துறை சுந்தரர் மத்தம் சூடுவர்; அக்கு அரையார்ப்பது; தக்கை கொட்டுவர்; குறுந்தாளன பூதம் இன்புகழ் விட்டுவர்; என்பு கலப்பிலர்; உலவின்மட்டு வருந்தழல் ஏந்துவர் எனக்கூட்டிப் பொருள்காண்க. அக்கு - சங்குமணி. தக்கை - ஒரு வாத்தியம். விட்டுவர் - சொல்லுவர். உலவின் மட்டு வருந்தழல் - உலகத்தை யழிக்குமளவு வரும் காலாக்கினி.*

*4. தவர் பூ கைதொழு பூந்தராய் மேவிய புண்ணியர் பாசம் தடக்கையில் ஏந்துவர்; கோவணம் சாத்துவர்; தம்கூத்தவர்; கச்சு குலவிநின்று ஆடுவர்; கொக்கிறகும் சூடுவர்; பல்படைபேய் பேர்த்தவர்; பேர் எழிலார் எனக்கூட்டுக. கச்சு குலவி நின்று ஆடுவர் - அரையில் கச்சு விளங்க நின்றுடுவர். குலவி: குலவ எனத்திரிக்க. பேர்த்தவர் - அடிபெயர்த்தாடல் செய்தவர்.*

*7. அணிமணி நீர்ச் சேலது கண்ணி ஓர் பங்கர் சிரபுரம் மேயவர் காலது கழல் சிலம்பு, கற்றைச்சடை உள்ளால் கங்கை, மாலது பாகம், ஏந்தல் மழுவது, வளர் கொழுங் கோட்டு ஆலது இருப்பர், அடல் ஏறு ஊர்வர் என மொழிமாற்றுக. கோடு - மேருமலைத் தென்சிகரம். ஆலது, சேலது என்பனவற்றுள் அது பகுதிப்பொருள் விகுதி.*

நெருப்புரு வெள்விடை மேனிய ரேறுவர் நெற்றியின்கண்
மருப்புறு வன்கண்ணர் தாதையைக் காட்டுவர் மாமுருகன்
விருப்புறு பாம்புக்கு மெய்த்தந்தை யார்விறன் மாதவர்வாழ்
பொருப்புறு மாளிகைத் தென்புற வத்தணி புண்ணியரே. 8

இலங்கைத் தலைவனை யேந்திற் றிறுத்த திரலையின்னாள்
கலங்கிய கூற்றுயிர் பெற்றது மாணி குமைபெற்றது
கலங்கிளர் மொந்தையி னாடுவர் கொட்டுவர் காட்டகத்துச்
சலங்கிளர் வாழ்வயற் சண்பையுண் மேவிய தத்துவரே. 9

அடியிணை கண்டிலன் றாமரை யோன்மால் முடிகண்டிலன்
கொடியணி யும்புலி யேறுகந் தேறுவர் தோலுடுப்பர்
பிடியணி யுந்நடை யாள்வெற் பிருப்பதோர் கூறுடையர்
கடியணி யும்பொழிற் காழியுண் மேய கறைக்கண்டரே. 10

---

8. விறல் மாதவர்வாழ் பொருப்புறு மாளிகைத் தென்புற வத்து அணி புண்ணியர், நெருப்புரு மேனியர், வெள்விடை ஏறுவர், நெற்றியின் கண்ணர், மருப்புருவன் தாதை, மா முருகன் விருப்புறு தந்தையார், பாம்புக்கு மெய்(யைக்) காட்டுவர் எனக்கூட்டுக. மருப்பு உருவன் - கொம்பினையுடைய விநாயகப்பெருமான். தாதையை என்பதிலுள்ள ஐகாரத்தைப் பிரித்து மெய் என்பதனோடு கூட்டி மெய்யை எனப் பொருள் கொள்க. இது உருபு பிரித்துக் கூட்டல்.

9. சலம் கிளர் வாழ் வயல் சண்பையில் மேவிய தத்துவர் இலங்கைத் தலைவனை இறுத்தது; இரலை ஏந்திற்று; கலங்கிய கூற்று குமை பெற்றது; இல் நாள் மாணி உயிர்பெற்றது; கலங்கிளர் மொந்தையின் கொட்டுவர்; காட்டகத்து ஆடுவர் எனக்கூட்டுக. இரலை - மான். இல் நாள் மாணி - வாழ்நாள் உலந்த மார்க்கண்டன், குமை பெற்றது - அழிந்தழிந்தது.

10. கடி அணியும் பொழில் காழியுள் மேய கறைக் கண்டர் அடியிணை மால் கண்டிலன்; தாமரையோன் முடி கண்டிலன்; கொடியணியும் ஏறு உகந்து ஏறுவர்; புலித்தோல் உடுப்பர்; பிடியணியும் நடையாள் கூறுடையர்; வெற்பு இருப்பது எனக் கூட்டுக. கடி - மணம். கொடியணியும் -

கையது வெண்குழை காதது சூல மமணர் புத்தர்
எய்துவர் தம்மை யடியவ ரெய்தாரொ ரேனக்கொம்பு
மெய்திகழ் கோவணம் பூண்ப துடுப்பது மேதகைய
கொய்தலர் பூம்பொழிற் கொச்சையுண் மேவிய கொற்றவரே. 11

கல்லுயர் கழுமல விஞ்சியுண் மேவிய கடவுடன்னை
நல்லுரை ஞானசம் பந்தன் ஞானத் தமிழ்நன்குணரச்
சொல்லிடல் கேட்டல் வல்லோர்தொல்லை வானவர் தங்களொடும்
செல்குவர் சீரரு ளாற்பெற லாஞ்சிவ லோகமதே. 12

திருச்சிற்றம்பலம்

---

*கொடியை யலங்கரிக்கும், பிடி அணியும் நடையாள் - பெண் யானையை யொத்த நடையினையுடைய பார்வதி. வெற்பு - கையிலை.*

*11. கொய்து அலர் பூம்பொழில் மேதகைய கொச்சையுள் மேவிய கொற்றவர் கையது சூலம்; காதது வெண்குழை; அமணர் புத்தர் தம்மை எய்தார்; அடியவர் எய்துவர்; ஓர் ஏனக்கொம்பு மெய்திகழ் பூண்பது; கோவணம் உடுப்பது எனக்கூட்டுக.*

*12. கழுமலநகர்க் கடவுளை ஞானசம்பந்தன் சொன்ன ஞானத்தமிழ் நல்லுரைகளைச் சொல்லவும் கேட்கவும் வல்லார் தேவரோடு சிவலோகம் பெறுவர் என்கின்றது. புண்ணியஞ் செய்து தேவராய்ப் பதவியில் நிற்பாரை விலக்கத் தொல்லை வானவர் என்றருளினூர்.*

# திருப்பருப்பதம்

**பதிகவரலாறு :**

கூற்றுதைத்தார் வீற்றிருக்கும் திருக்கோகரணம் பாடி எழுந்தருளிய பிள்ளையார் திருப்பருப்பதத்தை அடைந்து 'சுடுமணி யுமிழ் நாகம்' என்னும் இத்திருப்பதிகத்தைப் பாடிப் பர்வதநாயகரைப் பரவினர்.

பண் - வியாழக்குறிஞ்சி

**பதிகம் :** **எண் 118**

*திருச்சிற்றம்பலம்*

சுடுமணி யுமிழ்நாகஞ் சூழ்தர வரைக்கசைத்தான்
இடுமணி யெழிலானை யேறல னெருதேறி
விடமணி மிடறுடையான் மேவிய நெடுங்கோட்டுப்
படுமணி விடுசுடரார் பருப்பதம் பரவுதுமே. 1

நோய்புல்கு தோறிரைய நரைவரு நுகருடம்பில்
நீபுல்கு தோற்றமெல்லா நினையுள்கு மடநெஞ்சே
வாய்புல்கு தோத்திரத்தால் வலஞ்செய்து தலைவணங்கிப்
பாய்புலித் தோலுடையான் பருப்பதம் பரவுதுமே. 2

---

1 திருவரையில் நாகத்தைக் கட்டியவர்; யானையேறாது ஆனேறு ஏறியவர்; நீலகண்டர் எழுந்தருளிய பெருப்பதத்தைப் பரவுவோம் என்கின்றது. சுடுமணி - ஒளிவிடுகின்ற மாணிக்கம். அசைத்தான் - கட்டியவன். இடுமணி எழில் ஆனை - இரு மருங்கும் இடப்பெற்ற மணிகளையுடைய யானையை.

2. நெஞ்சே தோல் திரங்கி, நரைத்துப்போகும் உனது தோற்றம் எல்லாவற்றையும் கொஞ்சம் நினைத்துப்பார், வாய் நிறைந்த தோத்திரத்தால் வலஞ்செய்து வணங்கிப் பெருப் பதத்தைப் பரவுவோம் வா என்கின்றது. புல்கு - தழுவிய. இரைய - சுருங்க. நினை உள்கு - நினைத்துப்பார் சிந்தித்துப்பார். புல்கு - நிறைந்த.

துனியுறு துயர்தீரத் தோன்றியோர் நல்வினையால்
இனியுறு பயனுதே லிரண்டுற மனம்வையேல்
கனியுறு மரமேறிக் கருமுசுக் கழையுகளும்
பனியுறு கதிர்மதியான் பருப்பதம் பரவுதுமே. 3

கொங்கணி நறுங்கொன்றைத் தொங்கலன் குளிர்சடையான்
எங்கணு யகலநின்ரு னெனவரு ளீசனிடம்
ஐங்கணை வரிசிலையா னநங்கனை யழகழித்த
பைங்கண்வெள் ளேறுடையான் பருப்பதம் பரவுதுமே. 4

துறைபல சுனைமூழ்கித் தூமலர் சுமந்தோடி
மறையொலி வாய்மொழியால் வானவர் மகிழ்ந்தேத்தச்
சிறையொலி கிளிபயிலுந் தேனின மொலியோவாப்
பறைபடு விளங்கருவிப் பருப்பதம் பரவுதுமே. 5

சீர்கெழு சிறப்போவாச் செய்தவ நெறிவேண்டில்
ஏர்கெழு மடநெஞ்சே யிரண்டுற மனம்வையேல்
கார்கெழு நறுங்கொன்றைக் கடவுள திடம்வகையால்
பார்கெழு புகழோவாப் பருப்பதம் பரவுதுமே. 6

---

*3. பிறவித்துன்பம் நீங்கப்பிறந்த நீ, செய்த நல்வினையால் எய்தப்போகும் இன்பப் பிறவியை எண்ணி இரண்டுபட்டமனம் எய்தாதே; திருமலையைப் பரவுவோம் வா என்கின்றது. துனி - வருத்தம். கோடிச்செல்வம் பெற முயன்றூர் பிடிச்செல்வம் பெற்றுமகிழார்கள் அதுபோல நீ பேரின்பம் பெறப் பிறந்து புண்ணிய வசத்தால்வரும் தேவலோக இன்பம் முதலியவற்றைச் சிந்தியாதே உறுதியாக இரு என்பதாம். முசு - குரங்கு.*

*4. எங்கள் பிறவிநோய்போக்க அருள் செய்யும் ஈசனிடம் திருமலை என்கின்றது. கொங்கு - தேன். தொங்கலன் - மாலையை யுடையவன். அநங்கன் - மன்மதன்.*

*5. வானவர்கள் சுனைநீராடித்தொழும் பருப்பதம் பரவுதும் என்கின்றது. சிறை - சிறகுகள். தேனினம் - வண்டுக்கூட்டம். பறைபடும் - முழவுபோல ஒலிக்கும்.*

*6. நெஞ்சே! சிறப்பகலாத செய்தவம் வேண்டில் இரண்டுபட எண்ணுதே; புகழ் நீங்காப் பொருப்பைப் பரவுதும் என்கின்றது. ஏர் - எழுச்சி.*

புடைபுல்கு படர்கமலம் புகையொடு விரைகமழத்
தொடைபுல்கு நறுமாலை திருமுடி மிசையேற
விடைபுல்கு கொடியேந்தி வெந்தவெண் ணீறணிவான்
படைபுல்கு மழுவாளன் பருப்பதம் பரவுதுமே. 7

நினைப்பெனு நெடுங்கிணற்றை நின்றுநின் றயராதே
மனத்தினை வலித்தொழிந்தே னவலம்வந் தடையாமைக்
கனைத்தெழு திரள்கங்கை கமழ்சடைக் கரந்தான்றன்
பனைத்திரள் பாயருவிப் பருப்பதம் பரவுதுமே. 8

மருவிய வல்வினைநோ யவலம்வந் தடையாமல்
திருவுரு வமர்ந்தானுந் திசைமுக முடையானும்
இருவரு மறியாமை யெழுந்ததோ ரெரிநடுவே
பருவரை யுறநிமிர்ந்தான் பருப்பதம் பரவுதுமே. 9

---

7. விடைக்கொடியை ஏந்தி நீறணியும் நிமலன் பருப்பதம் பரவுதும் என்கின்றது. புடை - பக்கம். புகை - யாகப்புகை. விரை - மணம். தொடை புல்கு - தொடுத்தலைப் பொருந்திய. விடை - இடபம்.

8. நினைப்பாகிய கிணற்றைப் பார்த்து நின்று நின்று மயங்காமல், மனத்தை வலிய அடிப்படுத்தினேன்; ஆதலால் அவலம் அடையாவண்ணம் பருப்பதம் பரவுதும் என்கின்றது. அயராது - மயங்காமல். வலித்து - இழுத்து. நினைப்பை ஆழமான கிணறாகவும், மனத்தைக் கயிறாகவும் உருவகித்தார்; இது மனத்தினை வலித்து என்பதனால் உணரப்பெறுகின்றது.

9. அயனும் மாலும் அறியாவண்ணம் எரிநடுவே மலையாய் எழுந்தானது பருப்பதம் பரவுதும் என்கின்றது. வல்வினை நோய்- பரிபாகமுற்ற வினையால் வரும் துன்பம். அவலம் - அதனால் விளைந்த செயலறவு. திரு உரு அமர்ந்தான் - திருமகளைத் தன் மார்பில் வைத்த திருமால். பருவரை உற - பெரியமலையைப் போல.

சடங்கொண்ட சாத்திரத்தார் சாக்கியர் சமண்குண்டர்
மடங்கொண்ட விரும்பியராய் மயங்கியோர் பேய்த்தேர்ப்பின்
குடங்கொண்டு நீர்க்குச்செல்வார் போதுமின் குஞ்சரத்தின்
படங்கொண்ட போர்வையினன் பருப்பதம் பரவுதுமே. 10

வெண்செநெல் விளைகழனி விழவொலி கழுமலத்தான்
பண்செலப் பலபாட லிசைமுரல் பருப்பதத்தை
நன்சொலி னுற்பரவு ஞானசம் பந்தனல்ல
ஒண்சொலி னிவைமாலை யுருவெணத் தவமாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

*10 சமணர் புத்தர்கட்குப்பின் பேய்த்தேர்முன் குடங்கொண்டு தண்ணீர்க்குப் போவார்போல போவார்போக, யானையுரிபோர்த்த இறைவன் பருப்பதம் பரவுதும் என்கின்றது. சடம் - அறியாமை. மடம் - அறியாமை. பேய்த்தேர் - கானல்நீர். குஞ்சரத்தின் படம் - யானைத்தோலாகிய ஆடை.*

*11. சீபருப்பதத்தைத் திருஞானசம்பந்தர் சொன்ன இம்மாலையை உருவெண்ணத்தவமாம் என்கின்றது. வெண் செந்நெல்: உம்மைத்தொகை. எண்ண என்பது எண எனத் தொகுத்தல் விகாரம்பெற்றது.*

## திருக்கள்ளில்

### பண் - வியாழக்குறிஞ்சி

பதிகம் : எண் 119

திருச்சிற்றம்பலம்

முள்ளின்மேன் முதுகூகை முரலுஞ் சோலை
வெள்ளின்மேல் விடுகூறைக் கொடி விளைந்த
கள்ளின்மே யவண்ணல் கழல்க ளுளும்
உள்ளுமே லுயர்வெய்த லொரு தலையே. 1

ஆடலான் பாடலா னரவங்கள் பூண்டான்
ஓடலாற் கலனில்லா னுறை பதியால்
காடலாற் கருதாத கள்ளின் மேயான்
பாடெலாம் பெரியார்கள் பரசு வாரே. 2

எண்ணார்மும் மதிலெய்த விமையா முக்கண்
பண்ணார்நான் மறைபாடும் பரம யோகி
கண்ணார்நீ றணிமார்பன் கள்ளின் மேயான்
பெண்ணாணும் பெருமானெம் பிஞ்ஞ கனே. 3

---

1. கள்ளில் மேவிய கடவுளின் கழல்களைத் தியானிக்க உயர்வெய்தல் துணிவு என்கின்றது. முள்ளின்மேல் - முள் மரத்தின்மேல். வெள்ளில்மேல் - விளாவின்மேல். கூறைகொடி - ஆடையாலாகிய கொடி. உள்ளுமேல் - தியானிக்குமாயின். ஒருதலை - துணிவு.

2. ஆடல்பாடல் உடையவன் உறைபதி கள்ளில், அதன் கண்மேயானுடைய பெருமைகளைப் பெரியார்கள் பேசுவார்கள் என்கின்றது. அரவம் - பாம்பு. கலன் - உண்கலன். பாடு - பெருமை.

3. திரிபுரம் எரித்த பரமயோகி கள்ளில் மேயவன்; அவனே பெண் ஆண் ஆனான் என்கின்றது. எண்ணார் - பகைவர். கண் - அழகு. பிஞ்ஞகன் - மயிற்பீலியையணிந்தவன்.

பிறைபெற்ற சடையண்ணல் பெடைவண் டாலும்
நறைபெற்ற விரிகொன்றைத் தார் நயந்த
கறைபெற்ற மிடற்றண்ணல் கள்ளின் மேயான்
நிறைபெற்ற வடியார்க ணெஞ்சு ளானே. 4

விரையாலு மலராலும் விழுமை குன்றா
உரையாலு மெதிர்கொள்ள வூரா ரம்மாக்
கரையார்பொன் புனல்வேலிக் கள்ளின் மேயான்
அரையார்வெண் கோவணத்த வண்ண லானே. 5

நலனாய பலிகொள்கை நம்பா னல்ல
வலனாய மழுவாளும் வேலும் வல்லான்
கலனாய தலையோட்டான் கள்ளின் மேயான்
மலனாய தீர்த்தெய்து மாதவத் தோர்க்கே. 6

---

4. கள்ளில் மேயான் என்னெஞ்சுளான் என்கின்றது. ஆலும் - ஒலிக்கும். நறை - தேன். கறை - விடம். நிறைபெற்ற அடியார்கள் - மனநிறைவுற்ற அடியார்கள்.

5. கள்ளில் மேயான் மணப்பொருள்களாலும், மலராலும் தோத்திரப் பாக்களாலும் ஊரார் எதிர்கொள்ளும் அண்ணலாக இருக்கின்றான் என்கின்றது. விரை - மணம். எண்வகை விரைகள் சங்கஇலக்கியங்களிற் கூறப்பெற்றுள்ளன. விழுமை - பெருமை. உரை - புகழ்.

6. கள்ளில் மேயான் மாதவத்தோர்க்கு மூலமலத்தைத் தீர்த்து அவரைப் பொருந்துவன் என்கின்றது. நலன் ஆயபலி - இடுவார்க்கு நன்மையமைத்த பிச்சை. வலன் ஆய மழுவாளும் வேலும் வல்லான் - வெற்றியைத் தருவதாய மழுமுதலிய படைகளை வல்லவன். மலன் ஆய தீர்த்து - மலங்களைப்போக்கி. தீர்த்து என்பது உபசார வழக்கு. வலியை வாட்டி என்பது கருத்து.

பொடியார்மெய் பூசினும் புறவி னறவம்
குடியாவூர் திரியினுங் கூப்பி டினும்
கடியார்பூம் பொழிற்சோலைக் கள்ளின் மேயான்
அடியார்பண் பிகழ்வார்க ளாதர் களே. 7

திருநீல மலரொண்கண் டேவி பாகம்
புரிநூலுந் திருநீறும் புல்கு மார்பில்
கருநீல மலர்விம்மு கள்ளி லென்றும்
பெருநீல மிடற்றண்ணல் பேணு வதே. 8

வரியாய மலரானும் வையந் தன்னை
உரிதாய வளந்தானு முள்ளு தற்கங்
கரியானு மரிதாய கள்ளின் மேயான்
பெரியானென் றறிவார்கள் பேசு வாரே. 9

ஆச்சியப் பேய்களோ டமணர் குண்டர்
பேச்சிவை நெறியல்ல பேணு மின்கள்
மாச்செய்த வளவயன் மல்கு கள்ளில்
தீச்செய்த சடையண்ண றிருந் தடியே. 10

---

7. கள்ளில் மேயான் அடியார்கள் நீறணியினும், தேனைக் குடித்து ஊர் திரியினும், கூப்பிடினும் அவர்களை இகழ்வார்கள் கீழ்மக்கள் என்கின்றது. 'எத்தொழிலைச் செய்தாலும், ஏதவத்தைப் பட்டாலும் முத்தர் மனம் மோனத்தே' இருக்குமாதலின் அவர்களை யிகழ்வார் ஆதர் என்றவாறு.

8. கள்ளிலே இறைவன் என்றும் பேணுவது என்கின்றது. பேணுவது - விரும்புவது.

9. 'கள்ளின் மேயான் பெரியான்' என்று அறிவார்கள் இவனைப்பற்றிப் புகழ்வார்கள் என்கின்றது. அறியாத ஒன்று பேசவாராதாகலின் பெரியான் என்று அறிவார்களே பேசுவர் என்றார்கள். வரி - செவ்வரி. வையந்தன்னை உரிது ஆய அளந்தான் - உலகத்தை உரித்தாக்க அளந்த திருமால்.

10. புறச்சமயிகள் பேச்சு நெறியற்றன; கள்ளில் இறைவன் திருவடியைச் சிந்தியுங்கள் என்கின்றது. ஆச்சியப்பேய்கள் - பரிகசிக்கத்தக்க பேய்கள். ஆச்சியம் ஹாஸ்யம் என்பதன் திரிபு. மா - பெருமை.

திகைநான்கும் புகழ்காழிச் செல்வ மல்கு
பகல்போலும் பேரொளியான் பந்த னல்ல
முகைமேவு முதிர்சடையன் கள்ளி லேத்தப்
புகழோடும் பேரின்பம் புகுது மன்றே. 11

திருச்சிற்றம்பலம்

---

*11. நாற்றிசையும் புகழ்பெற்ற ஞானசம்பந்த சுவாமிகள் பதிகத்தைக்கொண்டு கள்ளில் ஏத்தப் புகழோடு பேரின்பமும் பொருந்தும் என்கின்றது. திகை - திசை. பகல் - சூரியன். பந்தன் - நாம ஏகதேசம்.*

# திருவையாறு

## திருவிராகம். பண் - வியாழக்குறிஞ்சி

**பதிகம் :** **எண் 120**

*திருச்சிற்றம்பலம்*

பணிந்தவ ரருவினை பற்றறுத் தருள்செயத்
துணிந்தவன் றோலொடு நூறுதை மார்பினில்
பிணிந்தவ னரவொடு பேரெழி லாமைகொண்
டணிந்தவன் வளநக ரந்தணை யாறே. 1

கீர்த்திமிக் கவனகர் கிளரொளி யுடனடப்
பார்த்தவன் பனிமதி படர்சடை வைத்துப்
போர்த்தவன் கரியுரி புலியத ளரவரை
ஆர்த்தவன் வளநக ரந்தணை யாறே. 2

வரிந்தவெஞ் சிலைபிடித் தவுணர்தம் வளநகர்
எரிந்தற வெய்தவ னெழிறிகழ் மலர்மேல்
இருந்தவன் சிரமது விமையவர் குறைகொள
அரிந்தவன் வளநக ரந்தணை யாறே. 3

---

*1. அடியார்களுடைய அருவினைகளை யறுத்து அருள் செய்யத்துணிந்தவன்; தோல் சேர்ந்த நூல் செறிந்த மார்பினை யுடையவன்; அரவோடு ஆமை ஓட்டைப் பிணிந்தவன் வளநகர் ஐயாறு என்கின்றது. பணிந்தவர் - தாழ்வெனும் தன்மையோடு மலம் வாடி அடிபணிந்த அடியார்கள். அருவினை-திருவருளன்றி வேறொன்றாலும் நீக்குதற்கரியவினை. பிணித்தவன் எனற்பாலது எதுகைநோக்கி பிணிந்தவன் என மெலிந்தது.*

*2. திரிபுரம் எரித்தவன், யானையையுரித்துப் போர்த்திய வன், புலித்தோல் பாம்பு இவற்றை அரையிற் கட்டியவன் நகர் ஐயாறு என்கின்றது. கீர்த்தி மிக்கவன் நகர் - திரிபுரம். திரிபுராதிகளுக்கு உண்டான கீர்த்தி அவர்கள் அழிவிற்குக் காரணமாயிற்று எனக் குறித்தவாறு. அடப் பார்த்தவன் - அழிய விழித்தவன். திரிபுரத்தை விழித்தெரித்ததாக ஒரு வரலாறு தேவாரத்துப் பல இடங்களிலும் வருதல் காண்க. அதள் - தோல். ஆர்த்தவன் - கட்டியவன்.*

*3. வில்லேந்தி அவுணர் முப்புரங்களும் எரிய எய்தவனும், பிரமனுடைய சிரத்தைத் தேவர்கள் வேண்ட அரிந்தவனும்*

வாய்ந்தவல் லவுணர்தம் வளநக ரெரியிடை
மாய்ந்தற வெய்தவன் வளர்பிறை விரிபுனல்
தோய்ந்தெழு சடையினன் றொன்மறை யாறங்கம்
ஆய்ந்தவன் வளநக ரந்தணை யாறே. 4

வானமர் மதிபுல்கு சடையிடை யரவொடு
தேனமர் கொன்றையன் றிகழ்தரு மார்பினன்
மானன மென்விழி மங்கையொர் பாகமும்
ஆனவன் வளநக ரந்தணை யாறே. 5

முன்பனை முனிவரோ டமரர்க ளடிதொழும்
இன்பனை யிணையில விறைவனை யெழிறிகழ்
என்பொனை யேதமில் வேதியர் தாந்தொழும்
அன்பன வளநக ரந்தணை யாறே. 6

---

*ஆகிய இறைவன் நகர் இது என்கின்றது. வரிந்த - கணுக்கள் தோறும் கட்டப்பெற்ற. பிரமன் சிரங்கொய்தது தம்மைப்போல ஐந்தலை படைத்திருந்தமையால் அன்று; தேவர்கள் வேண்டிக் கொள்ள அவர்கள்மீதுவைத்த கருணையினாலேயே என்பது விளக்கியவாறு.*

*4. திரிபுரம் எரித்தவன், பிறையும் நீரும் பொருந்திய சடையினன், வேதம் அங்கம் இவற்றை யாய்ந்தவன் நகர் ஐயாறு என்கின்றது. வாய்ந்த - வரங்களின் வன்மைவாய்ந்த. ஆய்ந் தவன் - ஆராயப்பெற்றவன். வேதங்களை ஆயவேண்டிய இன்றி யமையாமை இறைவற்கின்மையாதலின் வேதங்களால் ஆராயப் பெற்றவன் என்பதே பொருந்துவதாம்.*

*5. பிறையணிந்த சடையில் பாம்பையும் கொன்றையை யும் சூடியவன், விளங்கும் மார்பினையுடையவன், உமையொரு பாதியன் வளநகர் ஐயாறு என்கின்றது. வானமர் மதி என்றது மதியென்ற பொதுமைநோக்கி. ஓர் பாகம் ஆனவன் என்பதற்கு இடப்பாகம் கொண்டவன் என்றுரைப்பினும் அமையும்.*

*6. வலியுடையனை, முனிவரும் தேவரும் வணங்கும் இன்ப வடிவனை, என் பொன்போன்றவனை, அந்தணர் வணங்கும் அன்பனை உரிமையாக உடைய தலம் ஐயாறு என்கின்றது. முன்பு - வலிமை. இணையில இறைவனை - ஒப்பற்ற முதல்வனை. எழில் - அழகு. அன்பன - அன்பனுடையதான.*

வன்றிற லவுணர்தம் வளநக ரெரியிடை
வெந்தற வெய்தவன் விளங்கிய மார்பினில்
பந்தமர் மெல்விரல் பாகம தாகிதன்
அந்தமில் வளநக ரந்தணை யாறே. 7

விடைத்தவல் லரக்கனல் வெற்பினை யெடுத்தலும்
அடித்தலத் தாலிறை யூன்றிமற் றவனது
முடித்தலை தோளவை நெரிதர முறைமுறை
அடர்த்தவன் வளநக ரந்தணை யாறே. 8

விண்ணவர் தம்மொடு வெங்கதி ரோனல்
எண்ணிலி தேவர்க ளிந்திரன் வழிபடக்
கண்ணனும் பிரமனும் காண்பரி தாகிய
அண்ணறன் வளநக ரந்தணை யாறே. 9

மருளுடை மனத்துவன் சமணர்கண் மாசரு
இருளுடை யிணைத்துவர்ப் போர்வையி னூர்களும்
தெருளுடை மனத்தவர் தேறுமின் றிண்ணமா
அருளுடை யடிகட மந்தணை யாறே. 10

---

7. திரிபுரங்கள் தீயிடை வேவ எய்தவன், பந்தணை விரலியைப் பாகங்கொண்டவன் வளநகர் ஐயாறு என்கின்றது. அந்தம் இல் - அழிவில்லாத.

8. இராவணனை அடித்தலத்தால் அடர்த்தவன் நகர் ஐயாறு என்கின்றது. விடைத்த - செருக்கிய. நல்வெற்பு - கைலை. இறை - சிறிது. இறையூன்றியது கருணையின் மிகுதியால்.

9. இந்திரன், எண்ணற்ற தேவர்கள், சூரியன் இவர்கள் வழிபட, திருமாலும் பிரமனும் காண்டற்கரிய கடவுள் நகர் ஐயாறு என்கின்றது. அண்ணல் - பெருமையிற் சிறந்தவன்.

10. மருண்ட மனத்துச் சமணர்கள் முதலாயினூர்களிடம் பொருந்ாது, தெளிந்த மனத்தவர்களே! உறுதியாகத் தெளிவுறுங்கள்; அருள் உடைய அடிகள் இடம் ஐயாறே என்கின்றது. மருள், இருள் - அறியாமை. இணை துவர் போர்வையினூர் - இரண்டான காவிப் போர்வையுடையவர்கள்.

நலமலி ஞானசம் பந்தன தின்றமிழ்
அலைமலி புனல்மல்கு மந்தணை யாற்றினைக்
கலைமலி தமிழிவை கற்றுவல் லார்மிக
நலமலி புகழ்மிகு நன்மையர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

*11. ஐயாற்றைப்பற்றித் திருஞானசம்பந்தர் சொல்லிய கலைமலிதமிழிவை வல்லார் புகழ்மிகுந்த நன்மையர் ஆவர் எனப் பயன்கூறுகின்றது.*

# திருவிடைமருதூர்

**பதிகவரலாறு :**

திருநாகேச்சரத்தை வணங்கிப் பதிகம்பாடித் தொழுது, இடைமருதுக்கு எழுந்தருளிய பிள்ளையாரை, அடியார்கள் எதிர்கொண்டு அழைத்தனர். பிள்ளையார் முதலில் பரம் பொருளானார் முதற்கோயிலைச் சென்று வழிபட்டனர். தமது கண்களில் ஆனந்தபாஷ்பம்வழிய அவனிமீது விழுந்தெழுந்து, 'நடைமரு திரிபுரம்' முதலிய பல பதிகங்களை அருளிச் செய்தனர்.

**திருவிராகம். பண் - வியாழக்குறிஞ்சி**

**பதிகம் :** **எண் 121**

*திருச்சிற்றம்பலம்*

நடைமரு திரிபுர மெரியுண நகைசெய்த
படைமரு தழலெழ மழுவல பகவன்
புடைமரு திளமுகில் வளமமர் பொதுளிய
இடைமரு தடையநம் மிடர்கெட லெளிதே. 1

மழைநுழை மதியமொ டழிதலை மடமஞ்ஞை
கழைநுழை புனல்பெய்த கமழ்சடை முடியன்
குழைநுழை திகழ்செவி யழகொடு மிளிர்வதொர்
இழைநுழை புரியண லிடமிடை மருதே. 2

---

1. திரிபுரம் தீயெழச் சிரித்த மழுவேந்தியவனது இடைமருது அடைய நம் இடர் கெடல் எளிது என்கின்றது. நடை மரு திரிபுரம் - இயங்குதலை மருவிய முப்புரம். படை மரு தழல்எழ - படைக்கலமாகப் பொருந்தித் தீயெழ. புடைமருது - பக்கங்களிலுள்ள மருதமரங்கள். பொதுளிய - செறிந்த.

2. மதியத்தையும் கபாலத்தையும் கங்கையையும் தாங்கிய சடையன்; குழைக்காதோடு விளங்கும் பூணூலையணிந்த அண்ணல் இடம் இது என்கின்றது. மழை நுழை மதியம் - மேகத்தினூடே நுழையும்பிறை. அழி தலை - தசைநார் அழிந்த பிரமகபாலம். மடமஞ்ஞை கழை நுழை புனல் - இளைய மயில்கள் மூங்கிலிடையே நுழைகின்ற தேவகங்கை.

அருமைய னெளிமைய னழல்விட மிடறினன்
கருமையி னொளிபெறு கமழ்சடை முடியன்
பெருமையன் சிறுமையன் பிணைபெணொ டொருமையின்
இருமையு முடையண லிடமிடை மருதே. 3

பொரிபடு முதுகுற முளிகளி புடைபுல்கு
நரிவளர் சுடலையு ளடமென நவில்வோன்
வரிவளர் குளிர்மதி யொளிபெற மிளிர்வதொர்
எரிவளர் சடையண லிடமிடை மருதே. 4

வருநல மயிலன மடநடை மலைமகள்
பெருநல முலையிணை பிணைசெய்த பெருமான்
செருநல மதிலெய்த சிவனுறை செழுநகர்
இருநல புகழ்மல்கு மிடமிடை மருதே. 5

---

*இழை நுழைபுரி அணல் - இழையாகத் திரண்ட முப்புரிநூலை அணிந்த பெருமையிற் சிறந்தவன்.*

*3. அரியனாக, எளியனாக, நீலகண்டனாக, சடைமுடியனாக, ஒருருவிலேயே சிவமும் சக்தியுமாகிய ஈருருவத்தையுடையவனாக இருக்கும் அண்ணல் இடம் இடைமருது என்கின்றது. அருமையன் - அணுகியடிவணங்காத புறச்சமயிகட்கும், ஆணவ பரிபாகமுறாத பதவிமோகமுடையார்க்கும் அரியன். எளிமையன் - அடியார்க்கு எளியன். பெருமையன் - பெரியவற்றிற்கு எல்லாம் பெரிய பெருமையுடையவன். சிறுமையன் - சிறியவற்றிற்கெல்லாம் சிறியவன். பிணை பெண்ணொடு - பிணைந்துள்ள உமாதேவியோடு. ஒருமையின் - ஒரு திருமேனியிலேயே. இருமையும் உடைய - சிவமும் சத்தியுமாகிய இரண்டன் தன்மையும் உடைய.*

*4. இடுகாட்டுள் நடமாடுவோன், மதி புனைந்த சடையண்ணல் இடம் இது என்கின்றது. பொரி படு முதுகு உற முளி களி புடை புல்கு நரி - பொரிந்த முதுகிற் பொருந்தக் காய்ந்த களிப்போடு கூடிய நரி. வரி - கோடு அளவாக. அதாவது கீற்றாக.*

*5. பெருநலமுலையம்மையோடு கூடிய பெருமான் நகர் இடைமருது என்கின்றது. வருநல மயில் அன மட நடை மலைமகள் - வருகின்ற மயிலன்ன சாயலையும் அன்னம்போன்ற மடநடையையும் உடைய மலைமகள். பெருநலமுலையாள்*

கலையுடை விரிதுகில் கமழ்குழ லகில்புகை
மலையுடை மடமக டுணையிட முடையோன்
விலையுடை யணிகல னிலனென மழுவினோ
டிலையுடை படையவ னிடமிடை மருதே. 6

வளமென வளர்வன வரிமுரல் பறவைகள்
இளமண லணைகரை யிசைசெயு மிடைமரு
துளமென நினைபவ ரொலிகழ லிணையடி
குளமண லுறமூழ்கி வழிபடல் குணமே. 7

மறையவ னுலகவன் மதியவன் மதிபுல்கு
துறையவ னெனவல வடியவர் துயரிலர்
கறையவன் மிடறது கனல்செய்த கமழ்சடை
இறையவ னுறைதரு மிடமிடை மருதே. 8

---

இத்தலத்து இறைவியின் திருநாமம். செருநலமதில் - போர்நலம் வாய்ந்த முப்புரம்.

6. உமாதேவியை இடப்பாகம் உடையோன், மழு சூலம் இவற்றையுடையவன் இடம் இது என்கின்றது. துகிலையும், அகில் புகை கமழ் குழலையும் உடைய மடமகள் எனக் கூட்டுக. விலையுடை அணிகலன் இலன் என - விலைமதிப்புடைய உயர்ந்த ஆபரணங்கள் இல்லாதவன் என. இலையுடை படையவன் - இலைவடிவாகிய சூலப்படையை உடையவன்.

7. வண்டுகள் இசைமுரலும் இடைமருதுறைபவனிணையடியைக் குளத்தில் மூழ்கி வழிபடல் குணமாம் என்கின்றது. வளம் என வளர்வன - இது வளமான இடம் என்று வளர்வன வாகிய. வரி முரல் பறவைகள் - வரிகளோடு ஒலிக்கின்ற வண்டுகள். மனம் நினைத்த பொருள் வடிவாக அமையும் இயல்பிற்றாதலின் 'இடைமருது உளமென நினைபவர்' என்றார். குளம் அணல் உற மூழ்கி - குளத்தில் கழுத்தளவிருந்து மூழ்கி. அணல் - தாடி.

8. வேதியன், உலகெலாமாயவன் என்றெல்லாம் சொல்லவல்ல அடியவர்கள் துயரிலர் என்கின்றது. செந்தீக் கொழுந்துபோலச் சுடர்விடும் சடையவன் என்க. மிடறது கறையவன் என மாறிக் கூட்டுக.

மருதிடை நடவிய மணிவணர் பிரமரும்
இருதுடை யகலமொ டிகலின ரினதெனக்
கருதிட லரியதொ ருருவொடு பெரியதொர்
எருதுடை யடிகட மிடமிடை மருதே. 9

துவருறு விரிதுகி லுடையரு மமணரும்
அவருறு சிறுசொலை நயவன்மி னிடுமணல்
கவருறு புனலிடை மருதுகை தொழுதெழும்
அவருறு வினைகெட லணுகுதல் குணமே. 10

தடமலி புகலியர் தமிழ்கெழு விரகினன்
இடமலி பொழிலிடை மருதினை யிசைசெய்த
படமலி தமிழிவை பரவவல் லவர்வினை
கெடமலி புகழொடு கிளரொளி யினரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*9. திருமாலும் பிரமனும் மாறுபட இன்னதெனை அறிய முடியாத வடிவத்தோடு எழுந்த பெருமானிடம் இது என்கின்றது. மருதிடை நடவிய மணிவணர் - மருதமரங்களினிடையே கட்டிய உரலோடு புகுந்த கண்ணன். இனது எனக் கருதிடல் அரியது - இன்னது என்னக் கருதமுடியாத. எருது - இடபம்.*

*10. புறச்சமயிகள் பேச்சை விரும்பாதீர்கள்; இடைமருதினைக் கைதொழும்; அவர்களின் வினை கேட்டையணுகுதல் குணம் என்கின்றது. துவர் உறு உடையர் - புத்தர்.*

*11. தமிழ் விரகனாகிய ஞானசம்பந்தப்பெருமான், இடைமருதைப்பற்றி இயம்பிய தமிழை வல்லவர் வினைகெடப் புகழொடு ஒளியுமிக விளங்குவர் என்கின்றது. படம் மலி தமிழ் - படமெடுத்தாற்போலச் சிறந்த தமிழ். கிளர் - மிகுகின்ற.*

# திருவிடைமருதூர்

## திருவிராகம். பண் - வியாழக்குறிஞ்சி

பதிகம் : எண் 122

*திருச்சிற்றம்பலம்*

விரிதரு புலியுரி விரவிய வரையினர்
திரிதரு மெயிலவை புனைகணை யினிலெய்த
எரிதரு சடையின ரிடைமரு தடைவுனல்
புரிதரு மனனவர் புகழ்மிக வுளதே. 1

மறிதிரை படுகடல் விடமிடை மிடறினர்
எறிதிரை கரைபொரு மிடைமரு தெனுமவர்
செறிதிரை நரையொடு செலவில ருலகினில்
பிறிதிரை பெறுமுடல் பெறுகுவ தரிதே. 2

சலசல சொரிபுனல் சடையினர் மலைமகள்
நிலவிய வுடலினர் நிறைமறை மொழியினர்
இலரென விடுபலி யவரிடை மருதினை
வலமிட வுடனலி விலதுள வினையே. 3

---

*1. புலித்தோலரையினராகிய இறைவனது திரு இடைமருதினை அடைய விரும்பிய மனத்தவர்க்குப் புகழ் மிகவுளது என்கின்றது. திரிதரும் எயில் - திரிபுரம்.*

*2. நீலகண்டர் எழுந்தருளிய இடைமருது என்று கூறுவர் நரைதிரை எய்தார்; மீட்டும் இவ்வுடலையும் எய்தார் என்கின்றது. பிறிது இரை பெறும் உடல் பெறுகுவது அரிது - வேறு உணவை உட்கொள்ளும் இந்த அன்னமயகோசத்தை அடைவது அரிது; பிறவியில்லை என்பதாம்.*

*3. இடைமருதை வலம்வர வினைகளால் உடல் நலிவு இல்லையாம் என்கின்றது. புனல் - கங்கை. நிலவிய - விளங்கிய. உளவினையால் உடல் நலிவு இலது என இயைக்க.*

விடையினர் வெளியதொர் தலைகல னெனநனி
கடைகடை தொறுபலி யிடுகென முடுகுவர்
இடைவிட லரியவ ரிடைமரு தெனுநகர்
உடையவ ரடியிணை தொழுவதெம் முயர்வே. 4

உரையரு முருவின ருணர்வரு வகையினர்
அரைபொரு புலியத ளுடையின ரதன்மிசை
இரைமரு மரவின ரிடைமரு தெனவுளம்
உரைகள துடையவர் புகழ்மிக வுளதே. 5

ஒழுகிய புனன்மதி யரவமொ டுறைதரும்
அழகிய முடியுடை யடிகள தறைகழல்
எழிலின ருறையிட மருதினை மலர்கொடு
தொழுதல்செய் தெழுமவர் துயருற விலரே. 6

கலைமலி விரலினர் கடியதொர் மழுவொடும்
நிலையினர் சலமக ளுலவிய சடையினர்
மலைமகள் முலையிணை மருவிய வடிவினர்
இலைமலி படையவ ரிடமிடை மருதே. 7

---

4. இடைமருதினை உடையவர் அடியிணை தொழுவது எம்முயர்வுக்கு வழியாம் என்கின்றது. வெளியது ஓர் தலை - பிரம கபாலம். கலன் - உண்கலன். முடுகுவர் - விரைவர். இடைவிடல் அரியவர் - ஆன்மாக்களால் இடைவிடாமல் எண்ணுதற்குரியவர் என்பது கருத்து.

5. சொல்லுதற்கரிய உருவினரும், உணர்தற்கரிய தன்மைகளை உடையவரும், புலித்தோலாடையினரும் ஆன இறைவனது இடைமருதென நினைக்கவும் பேசவும் வல்லவர்கட்குப் புகழ் மிக உளதாம் என்கின்றது. இரை மரும் அரவினர் - உணவை உட்கொள்ளும் பாம்பினையுடையவர். உளம் உடையவர், உரைகள்து உடையவர்(க்கு) புகழ் உளது என முடிக்க.

6. இடைமருதை மலர்கொண்டு தொழுவார் துயருறுதல் இலர் என்கின்றது. அடிகளது இடைமருது, அறைகழல் எழிலினர் உறை யிடைமருது எனத் தனித்தனி இயைக்க.

7. கங்கையுலாவிய சடையையும், உமாதேவியார் முலைத் தழும்பு சேர்ந்த வடிவினையும் உடையவர் இடம் இடைமருது

செருவடை யிலவல செயல்செயத் திறலொடும்
அருவரை யினிலொரு பதுமுடி நெரிதர
இருவகை விரனிறி யவரிடை மருதது
பரவுவ ரருவினை யொருவுதல் பெரிதே.

அரியொடு மலரவ னெனவிவ ரடிமுடி
தெரிவகை யரியவர் திருவடி தொழுதெழ
எரிதரு முருவர்த மிடைமரு தடைவுறல்
புரிதரு மனனவர் புகழ்மிக வுளதே.

குடைமயி லினதழை மருவிய வுருவினர்
உடைமரு துவரினர் பலசொல வுறவிலை
அடைமரு திருவினர் தொழுதெழு கழலவர்
இடைமரு தெனமன நினைவது மெழிலே. 10

---

என்கின்றது. வீணைவாயிலாக இசைக்கலையை வெளிப்படுத்து தலின் கலைமலி விரலினர் எனக் கூறப்பெற்றார்.

8. இடைமருதைப் பரவுவார்வினை நீங்குதல் பெரிதாமோ என்கின்றது. செருவு அடையில வல செயல் செய் அத்திற லொடும் - போரில் முறையற்ற வலிய செயல்களைச் செய்யும் அத்தகைய வலிமையோடும். இருவகை விரல் நிறியவர் - அவன் வலிமையும் முடியும் ஆகிய இரண்டும் நெரியும்படியான இருவகைத் திருவுள்ளக்குறிப்போடு விரலை ஊன்றியவர். அதாவது அவன் அழியப்படாது அடங்கவேண்டும் என்ற திருவுள்ளக்குறிப்புடன் என்பது கருத்து.

9. இடைமருதை எய்தவேண்டும் என்ற சித்தம் உடையார்க்குப் புகழ் உண்டாம் என்கின்றது. தெரிவகை - ஆராய்ந்து அறிவதற்கு.

10. புறச்சமயிகள் பல பேச அவற்றோடு நமக்கு உறவே யில்லை என்று அடைகின்ற சில புண்ணியசீலர்கள் வணங்கு கின்ற திருவடியையுடையார் இடைமருது என எண்ணுவதே அழகு என்கின்றது. குடை மயிலினதழை மருவிய உருவினர் - குடையையும் மயிற்பீலியையும் தழுவிய வடிவத்தையுடையவர் களாகிய சமணர்கள். துவர் - காவி. பல சொல என்றது அவற்றின் பொருளற்ற தன்மையையும் பொருந்தாக்கோளையும் புலப்படுக்க,

பொருகட லடைதரு புகலியர் தமிழொடு
விரகினன் விரிதரு பொழிலிடை மருதினைப்
பரவிய வொருபது பயிலவல் லவரிடர்
விரவிலர் வினையொடு வியனுல குறவே. 11

திருச்சிற்றம்பலம்

---

*11. திருஞானசம்பந்தப்பெருமான் இடைமருதைப் பரவிய இப்பாடல் பத்தும் பயிலவல்லார் வினையும் இலர்; அவற்றால் வரும் துன்பமும் இலர் எனப் பயன் விளக்கிற்று. வியன் உலகு -'அகன்ற சுவர்க்க பூமி.*

# திருவலிவலம்

**பதிகவரலாறு :**

திருவாரூரை யடைந்த பிள்ளையார் புற்றிடங்கொண்ட புனிதரை வழிபட்டு, பற்றும் அன்பொடு பணிந்து இசைப் பதிகங்கள்பாடி, அடியார் கூட்டத்தோடும் அங்கிருந்தும் புறப் பட்டு, வளம்நிறைந்த வலிவலத்தை யடைந்து, மனத்துணை நாதரை வழிபட்டனர். 'பூவியல் புரிகுழல்' என்னும் இப் பதிகத்தை யருளிச்செய்தனர்,

**பதிகம்** **திருவிராகம். பண் - வியாழக்குறிஞ்சி**

**எண் 123**

திருச்சிற்றம்பலம்

பூவியல் புரிகுழல் வரிசிலை நிகர்நுதல்
ஏவியல் கணைபிணை யெதிர்விழி யுமையவள்
மேவிய திருவுரு வுடையவன் விரைமலர்
மாவியல் பொழில்வலி வலமுறை யிறையே. 1

இட்டம தமர்பொடி யிசைதலி னசைபெறு
பட்டவிர் பவளநன் மணியென வணிபெறு
விட்டொளிர் திருவுரு வுடையவன் விரைமலர்
மட்டமர் பொழில்வலி வலமுறை யிறையே. 2

---

1. உமாதேவி விரும்பி எழுந்தருளிய திருமேனியுடைய வன், வலிவலம் உறை இறைவன் ஆவான் என்கின்றது. பூ இயல் புரிகுழல் - பூக்களையணிந்த பின்னப்பெற்ற கூந்தலையும், வரி சிலை நிகர் நுதல் - கட்டுக்களோடு கூடிய வில்லை யொத்த நெற்றியையும் உடைய உமையவள் எனத் தனித்தனிகொண்டு இயைக்க. ஏவு இயல் கணை - செலுத்தப்பெற்ற பாணம். இதனைக்கண்ணுக்கு ஒப்பாக்கியது கொன்று தைத்திடும் இயல்பு பற்றி. பிணை - பெண்மான்நோக்கு. ஆகுபெயர்; இதனைக் கூறியது மருட்சிபற்றி. மா இயல் பொழில் - மாமரங்கள் செறிந்த சோலை. வண்டு நிறைந்த சோலையுமாம்.

2. செம்மேனியில் திருநீறு அணியப் பெற்றமையால் பட்டோடு விளங்குகின்ற பவளமணிபோல ஒளிவிடுகின்ற

உருமலி கடல்கடை வுழியுல கமருயிர்
வெருவுறு வகையெழு விடம்வெளி மலையணி
கருமணி நிகர்கள முடையவன் மிடைதரு
மருமலி பொழில்வலி வலமுறை யிறையே. 3

அனனிகர் சடையழ லவியுற வெனவரு
புனனிகழ் வதுமதி நனைபொறி யரவமும்
எனநினை வொடுவரு மிதுமெல முடிமிசை
மனமுடை யவர்வலி வலமுறை யிறையே. 4

பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே. 5

---

திருவுருவுடையவர் இந்நகர் இறை என்கின்றது. இட்டம் - விருப்பம். நசை - விருப்பம். பட்டு அவிர் பவள நன்மணி என - பட்டோடு விளங்குகின்ற பவழமணி யென்றுசொல்ல.

3. பாற்கடலைக் கடைந்தகாலத்து, உலகத்து உயிர்கள் யாவும் அஞ்சும்படித் தோன்றிய விடத்தை அமுதுசெய்தமையால் வெள்ளிமலையணிந்த நீலமணியை ஒத்த கழுத்தையுடையவன் இந்நகர் இறை என்கின்றது. வெள்ளிமலை நீறுதோய்ந்த இறைவன் திருமேனிக்கும், நீலமணி அவன் கழுத்தில் விளங்கும் கறைக்கும் உவமை. மிடைதரு - நெருங்கிய. மரு - மணம்.

4. முடிமீது மனமுடையவர் வலிவலமுறை இறைவர் என்கின்றது. அதற்குரிய ஏது கங்கையோ செந்தழல்போன்ற சடையின் தீயை அவிக்க வருவதுபோலப் பெருகிக்கொண்டிருக்கிறது. அக்கங்கையில் நனைந்த அரவமும் நம்மால் விழுங்கத்தக்க மதி என நினைவொடும் வருகின்றது. ஆதலால் இவை தருக்கும் பகையுமாறித் தத்தம் எல்லையில் ஒடுங்க இறைவன் எப்போதும் தலைமேற் சிந்தையராக இருக்கின்றார் என்ற நயந்தோன்றக் கூறியது. அனல் நிகர் சடை அழல் அவியுற - நெருப்பை ஒத்த சடையின் தீயானது தணிய. நனை பொறி அரவம் - நனைந்த படப்புள்ளிகளோடு கூடிய பாம்பு. நனை - கூரிய என்றுமாம்.

5. உமாதேவி பெண்யானையின் வடிவுகொள்ள, ஆண் யானையின் வடிவத்தைத் தாம்கொண்டு விநாயகப்பெருமான்

தரைமுத லுலகினி லுயிர்புணர் தகைமிக
விரைமலி குழலுமை யொடுவிர வதுசெய்து
நரைதிரை கெடுதகை யதுவரு ளினனெழில்
வரைதிகழ் மதில்வலி வலமுறை யிறையே. 6

நலிதரு தரைவர நடைவரு மிடையவர்
பொலிதரு மடவர லியர்மனை யதுபுகு
பலிகொள வருபவ னெழின்மிகு தொழில்வளர்
வலிவரு மதில்வலி வலமுறை யிறையே. 7

இரவண னிருபது கரமெழின் மலைதனின்
இரவண நினைதர வவன்முடி பொடிசெய்து
இரவண மமர்பெய ரருளின னகநெதி
இரவண நிகர்வலி வலமுறை யிறையே. 8

---

அவதரிக்கத் திருவுள்ளம்பற்றிய இறைவன் வலிவலநகரான் என்கின்றது. பிடி - பெண்யானை. கரி - ஆண்யானை. வடிகொடு - வடிவத்தைக்கொண்டு. கடி கணபதி - தெய்வத்தன்மையுடைய விநாயகப்பெருமான். கொடைவடிவினர் - வள்ளற்பெருமக்கள்.

6. பிருதிவியண்டம் முதலான பல்வேறு அண்டங்களில் வாழும் உயிர்கள் யாவும் போகம் நுகரத் தாம் போகியாயிருந்து உமாதேவியோடு பொருந்துகின்ற இறைவன் இவர் என்கின்றது. என்றது சென்ற திருப்பாடலில் உமை பெண்யானையாக இவர் ஆண்யானையானார் என்ற வரலாற்றுக்கு ஏது கூறி ஐயம் அகற்றியது. புணர்தகை - புணர்ச்சியை எய்துவதற்காக. விரை - மணம். விரவது - கலத்தலை. தன்னை வழிபடுகின்ற அடியார்களுக்கு நரை திரை முதலியனகெட, என்றும் இளமையோடிருக்க அருளினன் என்பதாம்.

7. பூமியை மிதிப்பதற்கு அஞ்சும் மெல்லிய பாதமுடைய முனிபன்னியர் வீடுகள்தோறும் சென்று பலியேற்க வருபவன் வலவலம் உறை இறை என்கின்றது. தரை வர நலிதரும் நடைவரும் இடையவர் எனக்கொண்டு கூட்டுக. மடவரலியர் - பெண்கள்.

8. இராவணன் செருக்கடங்க, விரல் நுதியை யூன்றி அவன் இரக்க, மீட்டும் அருள் செய்தவன் இவன் என்கின்றது.

தேனமர் தருமல ரணைபவன் வலிமிகும்
ஏனம தாய்நில மக்ழுரி யடிமுடி
தானணை யாவுரு வுடையவன் மிடைகொடி
வானணை மதில்வலி வலமுறை யிறையே. 9

இலைமலி தரமிகு துவருடை யவர்களும்
நிலைமையி லுணலுடை யவர்களு நினைவது
தொலைவலி நெடுமறை தொடர்வகை யுருவினன்
மலைமலி மதில்வலி வலமுறை யிறையே. 10

மன்னிய வலிவல நகருறை யிறைவனை
இன்னியல் கழுமல நகரிறை யெழின்மறை
தன்னியல் கலைவல தமிழ்விர கனதுரை
உன்னிய வொருபது முயர்பொரு டருமே. 11

திருச்சிற்றம்பலம்

---

இரவணன் - இராவணன்; எதுகை நோக்கி இடைகுறுகிற்று. இராவண்ணம் - இருக்காத வண்ணம். இரவணம் அமர் - அவன் அழுதலைப் பொருந்த. இரவு அண்ண நிகர்...........இறை - அடியார்கள் தத்தம் குறைகளைச் சொல்லியாசிக்க அருளும் இறைவன்.

9. அயனும் மாலும் அறியாத வடிவுடையான் வலிவல நாதன் என்கின்றது. ஏனம் - பன்றி. மிடை - நெருங்கிய.

10. சமணர் புத்தர்களுடைய நினைப்புத்தொலைய, வேதம் தேடும் வடிவினன் வலிவலநாதன் என்கின்றது. இலை மலிதர மிகு துவர் உடையவர்கள் - வாயில் வெற்றிலை மிக, காவியுடுத்த புத்தர்கள். நிலைமையில் உணலுடையவர்கள் - நின்றபடியே விழுங்கும் தேரர்கள்.

11. வலிவல நாதனைக் கழுமலநாதனுகிய ஞானசம்பந்தன் சொல்லிய இந்தப் பத்து உரைகளும் உயர்ந்த பொருளைத்தரும் என்கின்றது. எழில்மறை தன்னியல் கலைவல தமிழ்விரகன் - அழகிய வேதத்தையும், கலைகளையும் ஓதாதே தன்னியலாலேயே திருவருள் துணைகொண்டு உணர்ந்த தமிழ் விரகன். உன்னிய - எண்ணிச்சொன்ன. உயர்பொருள் - வீடு.

# திருவீழிமிழலை

## திருவிராகம். பண் - வியாழக்குறிஞ்சி

பதிகம் : எண் 124

*திருச்சிற்றம்பலம்*

அலர்மகண் மலிதர வவனியி னிகழ்பவர்
மலர்மலி குழலுமை தனையிட மகிழ்பவர்
நலமலி யுருவுடை யவர்நகர் மிகுபுகழ்
நிலமலி மிழலையை நினையவ லவரே. 1

இருநில மிதன்மிசை யெழில்பெறு முருவினர்
கருமலி தருமிகு புவிமுத லுலகினில்
இருளறு மதியின ரிமையவர் தொழுதெழு
நிருபமன் மிழலையை நினையவ லவரே. 2

கலைமக டலைமக னிவனென வருபவர்
அலைமலி தருபுன லரவொடு நகுதலை
இலைமலி யிதழியு மிசைதரு சடையினர்
நிலைமலி மிழலையை நினையவ லவரே. 3

---

1. திருவீழிமிழலையை நினையவல்லவரே ஸ்ரீதேவி சிறக்க இப்பூமியில் வாழ்பவராவர் என்கின்றது. அலர்மகள் - லக்ஷ்மி. அவனி - பூமி. இடம் - இடப்பாகம். நலம் - அழகு. உமைதனை இடம் மகிழ்பவர் உருவுடையவர் நகராகிய வீழிமிழலையை நினைபவர் அலர்மகள் மலிதர அவனியில் நிகழ்ப்வர் எனக்கூட்டிப் பொருள் காண்க.

2. மண்முதலாகிய அண்டத்தில் மயக்கமலமற்ற உண்மை ஞானிகளும் தேவர்களும் தொழும் உவமனிலியாகிய இறைவன் மிழலையை நினைய வல்லவர்களே இவ்வுலகத்து அழகான உருவுடையவர்கள் என்கின்றது. எழில் - அழகு. கரு மலிதரு மிகு புவி - பிறவிமிக்க இப்பூமி. இருள் - ஆணவம். நிருபமன் - உவமம் இல்லாதவர். ஒப்பிலி என்பதாம்.

3. மிழலையை நினைவார் கலைமகள் கணவனுவார் என்கின்றது. நகுதலை - கபாலம். இலைமலி இதழி - இலைகளோடு நிறைந்த கொன்றை. இலை - இதழுமாம்; நிலை - நிலைபேறு; அழியாமை.

மாடமர் சனமகிழ் தருமன முடையவர்
காடமர் கழுதுக ளவைமுழ வொடுமிசை
பாடலி னவில்பவர் மிகுதரு முலகினில்
நீடமர் மிழலையை நினையவ லவரே. 4

புகழ்மக டுணையினர் புரிகுழ லுமைதனை
இகழ்வுசெய் தவனுடை யெழின்மறை வழிவளர்
முகமது சிதைதர முனிவுசெய் தவன்மிகு
நிகழ்தரு மிழலையை நினையவ லவரே. 5

அன்றின ரரியென வருபவ ரரிதினில்
ஒன்றிய திரிபுர மொருநொடி யினிலெரி
சென்றுகொள் வகைசிறு முறுவல்கொ டொளிபெற
நின்றவன் மிழலையை நினையவ் லவரே. 6

கரம்பயில் கொடையினர் கடிமல ரயனதோர்
சிரம்பயில் வறவெறி சிவனுறை செழுநகர்
வரம்பயில் கலைபல மறைமுறை யறநெறி
நிரம்பினர் மிழலையை நினையவ லவரே. 7

---

4. பேயோடாடும் பெம்மான், இவ்வுலகில் இனிதமரும் மிழலையை நினைபவர் சுற்றம் மகிழ இருப்பர் என்கின்றது. மாடு - பக்கம். மாடமர்சனம் - சுற்றம். காடு - சுடுகாடு. கழுது - பேய்.

5. உமாதேவியை இகழ்ந்த பிரமனது சிரத்தைக் கொய்த சிவபெருமான் எழுந்தருளிய இத்தலத்தை நினையவல்லவர் கீர்த்திமாதைப் பொருந்துவர் என்கின்றது. இகழ்வு செய்தவன் உடை எழில் மறைவழி வளர் முகம் - இகழ்ந்த பிரமனது அழகிய வேதநெறி வளரும் முகத்தை; என்றது வேதஞ் சொல்லும் வாயையுடைய தலையை என்பதாம்.

6. திரிபுரம் எரித்த சிவபெருமானுடைய இந்நகரை நினையவல்லவர் பகைவர்களாகிய யானைகட்குச் சிங்கம் போல்பவர் என்கின்றது அன்றினர் - பகைவர். அரி - சிங்கம். சிறு முறுவல் - புன்னகை.

7. மிழலை நினைவார் வள்ளலாவார் என்கிறது. கரம்பயில் கொடையினர் - கை பலகாலும் பயின்ற வள்ளன்மையை

ஒருக்கிய வுணர்வினொ டொளிநெறி செலுமவர்
அரக்கனன் மணிமுடி யொருபது மிருபது
கரக்கன நெரிதர மலரடி விரல்கொடு
நெருக்கினன் மிழலையை நினையவ லவரே. 8

அடியவர் குழுமிட வவனியி னிகழ்பவர்
கடிமல ரயனரி கருதரு வகைதழல்
வடிவுரு வியல்பினொ டுலகுக ணிறைதரு
நெடியவன் மிழலையை நினையவ் லவரே. 9

மன்மத னெனவொளி பெறுமவர் மருதமர்
வன்மலர் துவருடை யவர்களு மதியிலர்
துன்மதி யமணர்க டொடர்வரு மிகுபுகழ்
நின்மலன் மிழலையை நினையவ லவரே. 10

---

யுடையவராவர். கடிமலர் - மணமுள்ளமலர். பயில்வு அற எறி சிவன் எனப்பிரிக்க. வரம் - மேன்மை.

8. மிழலையை நினைவார் ஒன்றுபட்ட உணர்வோடு ஞான மார்க்கத்தை நாடுவர் என்கின்றது. ஒருக்கிய - ஒன்றுபட்ட. ஒளிநெறி - சிவஞானமார்க்கம். கரக்கனம் - கைகளாகிய கூட்டம்.

9. இந்நகரை நினைவார் அடியார் கூட்டத்தோடு அவனியில் நிகழ்பவர் என்கின்றது. குழுமிட - கூட. கருதருவகை - தியானிக்கமுடியாதவண்ணம். உலகுகள் நிறைதரு நெடியவன் என்றது திருமாலும் நெடியவனுயினும் அவன் நின்ற இடமும் காலமும் நீங்க ஏனைய இடத்தும் எக்காலத்தும் நிறைந்தான் அல்லன்; சிவன் என்றும் எங்கும் பேரொளியாய் நிறைந்தான் என்பது விளக்க வந்தது.

10. புத்தர்கள் மதியிலிகள்; சமணர்களோ துன்மதிகள்; இந்த இருவகையாராலும் தொடர்பரிய புகழுடைய இறைவன் மிழலையை நினையவல்லவர் மன்மதன்போல அழகு பெறுவர் என்கின்றது. மருது அமர் வன்மலர் துவர் உடையவர் - மருத மலரால் ஊட்டிய காவியாடையை யுடையவர்கள்.

நித்திலன் மிழலையை நிகரிலி புகலியுள்
வித்தக மறைமலி தமிழ்விர கனமொழி
பத்தியில் வருவன பத்திவை பயில்வொடு
கற்றுவல் லவருல கினிலடி யவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. அன்பால் விளைந்த இப்பாடல்கள் பத்தையும் வல்லவர் உலகில் சிறந்த அடியாராவர் என்கின்றது. நித்திலன் - முத்துப் போன்றவன். பத்தியில் வருவன என்பது பிறப்பால் விளைந்தன அன்று; அன்பால் வருவன என்றதாம். அடியவராதலைக்காட்டிலும் சிறந்தபேறு இல்லாமையால் ஒவ்வொரு பாடல்தோறும் ஒவ்வொரு பயன் கூறிவந்த சுவாமிகள் இப்பதிகப் பயனை அடியராவார் என்றார்கள்; இதனைக் காட்டிலும் சிறந்தபேறு இல்லை என்பதனைத் தெரிவிக்க.

# திருச்சிவபுரம்

**பதிகவரலாறு :** *(21-ம் பதிகம் பார்க்க)*

**பதிகம் :** **திருவிராகம். பண் - வியாழக்குறிஞ்சி**

**எண் 125**

*திருச்சிற்றம்பலம்*

கலைமலி யகலல்கு லரிவைத னுருவினன்
முலைமலி தருதிரு வுருவம துடையவன்
சிலைமலி மதில்பொதி சிவபுர நகர்தொழ
இலைநலி வினையிரு மையுமிடர் கெடுமே. 1

படரொளி சடையினன் விடையினன் மதிலவை
சுடரெரி கொளுவிய சிவனவ னுறைபதி
திடலிடு புனல்வயல் சிவபுர மடையநம்
இடர்கெடு முயர்கதி பெறுவது திடனே. 2

வரைதிரி தரவர வகடழ லெழவரு
நுரைதரு கடல்விட நுகர்பவ னெழிறிகழ்
திரைபொரு புனலரி சிலதடை சிவபுரம்
உரைதரு மடியவ ருயர்கதி யினரே. 3

---

1. தனது திருமேனியிலேயே உமையையும் உடையவன்; அதனால் ஒருபாகத்து முலைவிளங்கும் உருவமுடையவன்; அவனது சிவபுரநகரைத் தொழ வருத்தும்வினை இல்லை; இருமையும் இடர்கெடும் என்கின்றது. கலை - ஆடை, அரிவை - உமாதேவி. நலி வினை இலை இடர் இருமையும் கெடும் எனக் கூட்டுக.

2. ஒளிபொருந்திய சடையினன்; இடபத்தையுடையவன்; திரிபுரமெரித்த வீரன் உறைபதி சிவபுரம்; அதனையடைய நம் துன்பம் தொலையும்; உயர்கதி பெறுவது உறுதி என்கின்றது. திடல் - மேடு.

3. மந்தர மலை சுற்ற, வாசுகியின் உடல் அழலெழ வந்த நுரையோடு கூடிய விடத்தை நுகர்ந்தவனது சிவபுரத்தைப் புகழ்பவர் உயர்கதியினர் என்கின்றது. வரை - மந்தரமலை. வரை திரிதர அரவு அகடு அழல் எழ வரு நுரை தரு கடல் விடம் நுகர்பவன் எனவும், எழில் திகழ் திரைபொரு புனல் அரிசிலது அடை சிவபுரம் எனவும் பிரித்துப் பொருள் கொள்க.

துணிவுடை யவர்சுடு பொடியின ருடலடு
பிணியடை விலர்பிற வியுமற விசிறுவர்
தணிவுடை யவர்பயில் சிவபுர மருவிய
மணிமிட றனதடி யிணைதொழு மவரே. 4

மறையவன் மதியவன் மலையவ னிலையவன்
நிறையவ னுமையவன் மகிழ்நட நவில்பவன்
இறையவ னிமையவர் பணிகொடு சிவபுரம்
உறைவென வுடையவ னெமையுடை யவனே. 5

முதிர்சடை யிளமதி நதிபுனல் பதிவுசெய்
ததிர்கழ லொலிசெய வருநட நவில்பவன்
எதிர்பவர் புரமெய்த விணையிலி யணைபதி
சதிர்பெறு முளமுடை யவர்சிவ புரமே. 6

வடிவுடை மலைமகள் சலமக ளுடனமர்
பொடிபடு முழையதள் பொலிதிரு வுருவினன்
செடிபடு பலிதிரி சிவனுறை சிவபுரம்
அடைதரு மடியவ ரருவினை யிலரே. 7

---

*4. அடங்கிய மனத்து அடியவர்கள் பயில்கின்ற சிவபுரஞ் சேர்ந்த நீலகண்டப் பெருமானது திருவடியைத் தொழுபவர்கள் துணிவுடையர்; நீற்றினர்; பிணியிலர்; பிறவியும் அறப்பெறுவர் என்கின்றது. உடல் அடு பிணி - உடலில் வருத்துகின்ற நோய். விசிறுவர் - வீசுவர். தணிவு - பணிவு. மணி - நீலம்.*

*5. சிவபுரம் உறைபவன் எம்மையும் ஆளாக உடையவன் என்கின்றது. நிலை - அழியாமை. உறைவு - உறையும் இடம்.*

*6. முதிர் சடையிலே மதியையும் கங்கையையும் பதியச் செய்து நடம் செய்பவன்; திரிபுரம் எரித்த சிவன்; அவன் உறைபதி சிவபுரம் என்கின்றது. எதிர்பவர் - பகைவர். இணையிலி - ஒப்பற்றவன். சதிர் - சாமர்த்தியம்.*

*7. மலைமகளும் அலைமகளும் உடனுறையும் உருவுடையன்; பலிக்குத்திரிபவன் உறைபதி சிவபுரம்; அதனையடைபவர் வினையிலராவர் என்கின்றது. சலமகள் - கங்கை. உழை அதள் - மான்தோல். செடி படு பலி - முடைநாற்றம் கமழும் பிச்சை.*

கரமிரு பதுமுடி யொருபது முடையவன்
உரநெரி தரவரை யடர்வுசெய் தவனுறை
பரனென வடியவர் பணிதரு சிவபுர
நகரது புகுதனம் முயர்கதி யதுவே. 8

அன்றிய லுருவுகொ ளரியய னெனுமவர்
சென்றள விடலரி யவனுறை சிவபுரம்
என்றிரு பொழுதுமுன் வழிபடு மவர்துயர்
ஒன்றிலர் புகழொடு முடையரிவ் வுலகே. 9

புத்தரொ டமணர்க ளறவுரை புறவுரை
வித்தக மொழிகில விடையுடை யடிகடம்
இத்தவ முயல்வுறி லிறைவன சிவபுரம்
மெய்த்தக வழிபடல் விழுமிய குணமே. 10

புந்தியர் மறைநவில் புகலிமன் ஞானசம்
பந்தன தமிழ்கொடு சிவபுர நகருறை
எந்தையை யுரைசெய்த விசைமொழி பவர்வினை
சிந்திமு னுறவுயர் கதிபெறு வர்களே. 11

திருச்சிற்றம்பலம்

---

8. சிவபுரம் புகுதலே நமக்கு உயர்கதியாம் என்கின்றது. உரம் - மார்பு. அடர்வு - நெருக்குதல். சிவபுரநகர் அது புகுதல் நம் உயர்கதியதுவே எனப்பிரிக்க.

9. சிவபுரத்தை இருவேளையிலும் வழிபடுவார் துன்பஞ் சேரார்; இவ்வுலகிற் புகழொடும் பொருந்துவர் என்கின்றது. அன்று இயல் உருவு - கோபித்த இயல்பினையுடைய வடிவம், சென்று அளவிடல் அரியவன் உறை சிவபுரம் எனப்பிரிக்க.

10. புறச் சமயிகளுடைய புறவுரைகள் வித்தகம் ஒழியா; ஆதலால் சிவபுரத்தைத் தொழுதல் உங்கட்குச் சிறந்த குணமாம் என்கின்றது. அவர்களது அறவுரையாகத் தோன்றுவன யாவும் புறம்பான உரைகளாம்; அதுவேயும் அன்றிச் சதுரப்பாடு உடையனவும் அல்ல. மெய்த்தக - உண்மையாக.

11. திருஞானசம்பந்தப் பெருமான் சிவபுர நகருறை எந்தையைச் சொன்ன இப்பதிகத்தை இசையோடு மொழி பவர்கள் வினையைக் கெடுத்து உயர்கதி அடைவார்கள் என் கின்றது. புந்தியர் - புத்தியை யுடையவர்கள். சிந்தி - கெடுத்து.

# திருக்கழுமலம்

**பதிகவரலாறு:** (117-ம் பதிகம் பார்க்க)

**பதிகம்:** **திருத்தாளச்சதி. பண் - வியாழக்குறிஞ்சி** **எண் 126**

திருச்சிற்றம்பலம்

பந்தத்தால் வந்தெப்பால் பயின்றுநின்ற வும்பரப்
பாலேசேர்வா யேனோர்கான் பயில்கண முநிவர்களுஞ்
சிந்தித்தே வந்திப்பச் சிலம்பின்மங்கை தன்னொடுஞ்
சேர்வார்நாளு ணீள்கயிலைத் திகழ்தரு பரிசதெலாஞ்
சந்தித்தே யிந்தப்பார் சனங்கணின்று தங்கணாற்
றுமேகாணு வாழ்வாரத் தகவுசெய்த வனதிடங்
கந்தத்தா லெண்டிக்குங் கமழ்ந்திலங்கு சந்தனக்
காடார்பூவார் சீர்மேவுங் கழுமல வளநகரே. 1

பிச்சைக்கே யிச்சித்துப் பிசைந்தணிந்த வெண்பொடிப்
பீடார்நீடார் மாடாரும் பிறைநுத லரிவையொடும்
உச்சத்தா னச்சிப்போ ரொடர்ந்தடர்ந்த வெங்கணே
றூராவூரா நீள்வீதிப் பயில்வொடு மொலிசெயிசை

---

1. தேவர்களும் முனிவர்களும் தியானிக்க உமையோடு பொருந்தி, கைலையில் எழுந்தருயிருக்கின்ற காட்சியை இந்த மண்ணுலகத்தவர்களும் தம் கண்ணாலே கண்டு வாழ அருளிய வனது இடம் கழுமலவளநகர் என்கின்றது. பந்தத்தால் வந்து எப்பால் பயின்று நின்ற உம்பர் என்றது ஆணவமலக் கட்டினால் வந்து எவ்விடத்தும் உறைகின்ற தேவர்கள் வினையால் பந்திக்கப்பெற்ற இந்திரன் பிரமன் முதலியோர் கழுமலம் வந்து பூசித்தமைபோல்வன. அப்பாலே சேர்வாய் ஏனோர் - அப்பாலும் அடிசேர்ந்தார்களாய சிவஞானிகள். புறம்பான நெறிகளிற் சேர்ந்த பிறர் என்றுமாம். கான் பயில் கண முநிவர்கள் - காட்டுறை வாழ்க்கையையுடைய கூட்டமான முனிவர்கள். சிலம்பு - மலை. சுண்டு இமயம். நாள்நாள் நீள் கயிலைத்திகழ்தரு பரிசது எலாம் - நாள்தோறும் திருக்கயிலையில் வீற்றிருக்கும் திருவோலக்கச் சிறப்பெல்லாவற்றையும். பார் - பூமி. தாமே காணு - தாங்களே கண்டு; என்றது அவ்வளவு எளிமை காட்டி நின்றது. கந்தம் - மணம்.

வச்சத்தா னச்சுச்சேர் வடங்கொள்கொங்கை மங்கைமார்
வாராநேரே மாலாகும் வசிவல வவனதிடங்
கச்சத்தான் மெச்சிப்பூக் கலந்திலங்கு வண்டினங்
காரார்காரார் நீள்சோலைக் கழுமல வளநகரே. 2

திங்கட்கே தும்பைக்கே திகழ்ந்திலங்கு மத்தையின்
சேரேசேரே நீராகச் செறிதரு சுரநதியோ
டங்கைச்சேர் வின்றிக்கே யடைந்துடைந்த வெண்டலைப்
பாலேமேலே மாலேயப் படர்வுறு மவனிறகும்
பொங்கப்பேர் நஞ்சைச்சேர் புயங்கமங்கள் கொன்றையின்
போதார்தாரே தாமேவிப் புரிதரு சடையனிடங்
கங்கைக்கே யும்பொற்பார் கலந்துவந்த பொன்னியின்
காலேவாரா மேலேபாய் கழுமல வளநகரே. 3

---

2. பிச்சையை விரும்பி, நீரிற்குழைத்த நீற்றையணிந்து. உமாதேவியோடும் உச்சிப்போதில் விடையேறி, வீதியில் பாடிச் செல்லும் தமது இசையைக் கேட்ட மகளிர் மால் கொள்ளச் செய்பவனது இடம் கழுமலம் என்கின்றது. பீடு - பெருமை. நீடு ஆர் - புகழான் நீடுதலைப் பொருந்தும். மாடு ஆரும் - இடப் பக்கத்து இருக்கும். உச்சத்தான் நச்சி - உச்சிப்போதினுகை விரும்பி. போல்: அசை. ஊரா - ஊர்ந்து. ஊர் ஆம் நீள் வீதி - ஊரின்கண்ணதாகிய நீண்ட திருவீதியில். ஒலிசெய் இசை வச்சத்தால் - பாடலை வைத்ததால், மங்கைமார் - முனிபன்னியர். வாரா - வந்து. மாலாகும் - மயக்கமுறும்வண்ணம். வசி வலவன் - வசீகரிக்கும் வன்மையுடையவன். கார் ஆர் கார் ஆர் - கருமை நிறம் பொருந்திய மேகங்கள் படிந்த.

3. பிறை, தும்பை, ஊமத்தை இவைகள் சேர்ந்து சேர்ந்து, தேவகங்கையோடு, திருக்கரத்திற்சேராதே திருமுடியிற் சூடப் பெற்ற உடைந்த கபாலத்தின்பக்கல், அன்னத்தின் இறகையும், பாம்பையும், கொன்றை மாலையையும் அணிந்த புரிசடைப் பெருமானிடம் கழுமலம் என்கின்றது. திங்கட்கு தும்பைக்கு என்ற நான்கன் உருபுகள் ஏழாம் வேற்றுமைப் பொருளில் வந்தன. திங்களிலும் தும்பையிலும் ஊமத்தத்திலும் சேர்ந்து சேர்ந்து புனலாகப் பொருந்திய சுரநதி எனப் பொருள் முடிபு காண்க. மேலே மால் ஏயப் படர்வுறும் அவன் இறகும் - மேலே மயக்கம் பொருந்தப் பறந்து செல்லும் பிரமனாகிய

அண்டத்தா லெண்டிக்கு மமைந்தடங்கு மண்டலத்
　　தாறேவேறே வானுள்வா ரவரவ ரிடமதெலாம்
மண்டிப்போய் வென்றிப்போர் மலைந்தலைந்த வும்பரு
　　மாறேலாதார் தாமேவும் வலிமிகு புரமெரிய
முண்டத்தே வெந்திட்டே முடிந்திடிந்த விஞ்சிசூழ்
　　மூவாமூதூர் மூதூரா முனிவுசெய்த வனதிடங்
கண்டிட்டே செஞ்சொற்சேர் கவின்சிறந்த மந்திரக்
　　காலேயோவா தார்மேவுங் கழுமல வளநகரே. 4

திக்கிற்றே வற்றற்றே திகழ்ந்திலங்கு மண்டலச்
　　சீருர்வீருர் போரார்தா ரகனுட லவனெதிரே
புக்கிட்டே வெட்டிட்டே புகைந்தெழுந்த சண்டத்தீப்
　　போலேபூநீர் தீகான்மீப் புணர்தரு முயிர்கடிறஞ்

---

அன்னத்தின் இறகும். புயங்கமங்கள் - பாம்புகள். தார் - மாலை. கங்கைக்கு ஏயும் பொற்பு ஆர் கலந்து வந்த பொன்னி - கங்கைக்குப் பொருந்திய புனிதமாகிய அழகைப் பொருந்திக் கலந்து ஒழுகும் காவிரி. கால் - வாய்க்கால்.

4. இம்மண்ணுலகிலிருந்து, வானுள்வார் இடம் எல்லாம் போய்ச் சண்டைசெய்த தேவர்களும் மாறு ஏற்றுப் பொருத லாகாத திரிபுராதிகள் மேவிய முப்புரம் எரிய நெற்றிக் கண்ணால் எரித்து, மூதூர் மூதூராகா வண்ணம் முடிவு செய்தவன் இடம் கழுமலம் என்கின்றது. அண்டத்தால் எண் திக்கும் அமைந்து அடங்கும் மண் தலத்து ஆறே - இவ்வண்டத்தில் எட்டுத் திக்கும் பொருந்தி அடங்கிய பூமியின் வழியாக. வேறே வான் ஆள்வாரது இடம் எலாம் - தனித்த தேவர்களிடம் எல்லாவற்றையும். மண்டிப்போய் - நெருங்கிச்சென்று. உம்பரும் மாறு ஏலாதார் - தேவர்களாலும் எதிர்க்க இயலாத அசுரர்கள். வலிமிகுபுரம் - வரபலமிக்க முப்புரம். முண்டத்தே வெந்திட்டே முடிந்து இடிந்த - நெற்றியால் வெந்து அழிந்து இடிந்த. முண்டம் ஆகுபெயராக நெற்றிக்கண்ணையுணர்த்தியது. இஞ்சி - மதிள். மூவா மூதூர் மூதூரா முனிவு செய்தவனது இடம் - மூப்பையடையாத தொன்மையான நகர் இன்றும் தொன்மையானதாகாவண்ணம் கோபித்தவனது இடம். செஞ்சொல் - நேரே பொருள் பயக்கும் சொல்.

சொக்கத்தே நிர்த்தத்தே தொடர்ந்தமங்கை செங்கதத்
தோடேயாமே மாலோகத் துயர்களை பவனதிடங்
கைக்கப்போ் யுக்கத்தே கனன்றுமிண்டு தண்டலைக்
காடேயோடா வூரேசேர் கழுமல வளநகரே. 5

செற்றிட்டே வெற்றிச்சேர் திகழ்ந்ததும்பி மொய்ம்புறுஞ்
சேரேவாரா நீள்கோதைத் தெரியிழை பிடியதுவாய்
ஒற்றைச்சேர் முற்றற்கொம் புடைத்தடக்கை முக்கண்மிக்
கோவாதேபாய் மாதானத் துறுபுகர் முகவிறையைப்
பெற்றிட்டே மற்றிப்பார் பெருத்துமிக்க துக்கமும்
பேராநோய்தா மேயாமைப் பிரிவுசெய்த வனதிடங்
கற்றிட்டே யெட்டெட்டுக் கலைத்துறைக் கரைச்செலக்
காணுதாரே சேராமெய்க் கழுமல வளநகரே. 6

---

5. திக்குப்பாலகர்கள் அங்கங்கே விளங்க, இவ்வுலகத்துச் சீறி வந்த தாரகன் உடலை அவனெதிரிலேயே வெட்டி, விளைந்த ஊழித் தீயைப்போன்ற காளியின் கோபமானது ஐம்பூதச் சேர்க்கையாலான உலகத்துற்ற உயிர்களுக்குப் பொருந்தாதபடி உலகத்துயரைக் களைபவனது இடம் கழுமலநகர் என்கின்றது.

திக்கில் தேவு அற்று அற்றே திகழ்ந்திலங்கு மண்டலம் - திக்குப் பாலகர்கள் அங்கங்கே அத்தன்மையோடு விளங்குகின்ற உலகம். சீறு ஆர் - கோபித்தலைப் பொருந்திய. சீறு ஆர் முதலியவற்றைத் தனித்தனி தாரகனோடு ஒட்டுக. வீறு - தனித்திருத்தல். சண்டத்தீப்போலத் தொடர்ந்த மங்கையினது எனக் கூட்டுக. உயிர்கள் திறம் ஏயாமே துயர் களைபவன் என இயைக்க. சொக்கம்: சொர்க்கம் என்பதன் திரிபு. நிர்த்தத்தே தொடர்ந்த மங்கை - ஊர்த்துவதாண்டவத்தில் தோற்றுத் தொடர்ந்த காளி. செம்கதத்தோடு ஏயாமே - சிவந்தகோபத்தோடு பொருந்தாதபடி. கைக்க - வெறுக்க. பேர்யுக்கத்தே கனன்றும் - பெரிய ஊழித்தீயில் கனன்றும். மிண்டு தண்டலைக் காடே ஓடா - அழியாது மிண்டிய குளிர்ந்த காடுகள் அகலாத. இது நெருப்பூழியிலும் நிலைத்தநகரம் என்பதறிவித்தது.

6. உமாதேவி பெண்யானையின் வடிவாய், அசுரர்களைக் கொன்று வெற்றி சேர்ந்த ஆண் யானையினது தோள்களைச் சேர்ந்து ஒற்றைக்கொம்புடைய யானைமுகக் கடவுளைப் பெற்று இவ்வுலகம் துன்பம் எய்தாவகை பிரிவு செய்தவனது இடம் கழுமலவளநகர் என்கின்றது.

பத்திப்போர் வித்திட்டே பரந்தவைம் புலன்கள்வாய்ப்
பாலேபோகா மேகாவாப் பகையறும் வகைநினையா
முத்திக்கே விக்கத்தே முடிக்குமுக் குணங்கள்வாய்
மூடாவூடா நாலந்தக் கரணமு மொருநெறியாய்ச்
சித்திக்கே யுய்த்திட்டுத் திகழ்ந்தமெய்ப் பரம்பொருள்
சேர்வார்தாமே தானகச் செயுமவ னுறையுமிடங்
கத்திட்டோர் சட்டங்கங் கலந்திலங்கு நற்பொருள்
காலேயோவா தார்மேவுங் கழுமல வளநகரே. 7

---

*செற்றிட்டே வெற்றிச்சேர் திகழ்ந்த தும்பி - சலந்தரன், திரிபுராதிகள் முதலிய அசுரர்களைக் கொன்று வெற்றியடைந்து விளங்கிய ஆண்யானையினது. மொய்ம்புறும் சேரே வாரா - தோலைப் பொருந்தும் புணர்ச்சியில் வந்து, நீள் கோதைத் தெரியிழை - நீண்ட மாலையணிந்த உமாதேவியார். பிடியது வாய் - பெண்யானையின் வடிவாய். ஒற்றைச்சேர் முற்றல் கொம்புடைத் தடக்கை - ஒற்றையாகச் சேர்ந்த முற்றிய கொம்பினையுடைய துதிக்கையையும், மிக்கு ஓவாதேபாய் மாதானத்து உறு புகர் முக இறையைப் பெற்றிட்டு - மிகுந்து இடைவிடாது பாய்கின்ற பெரிய மதநீரோடு கூடிய யானைமுகக்கடவுளைப் பெற்று. இப்பார் பெருத்து மிக்க துக்கமும் - இவ்வுலகம் மிகப் பெரிய துக்கத்தையும். பேரா நோய் தாம் ஏயாமை - நீங்காத நோயையும் பொருந்தாதபடி. எட்டெட்டுக் கலைத்துறை கரை செலக் கற்றிட்டு - அறுபத்துநான்கு கலைகளையும் முடிவுபோகக் கற்று. காணுதார் - கற்றபடி நின்று ஒழுகாதார். சேரா - அடையாத.*

*7. அன்பாகிற விதையை இட்டு, புலன்வழி பொருந்தாது, பகையாறையும் கடிந்து, முத்திக்கு இடையூறுகிய சாத்விக இராஜஸ தாமஸங்களாகிய மூன்று குணங்கள் மூடாதபடி அந்தக்கரணம் ஒரு நெறிப்பட சிந்திக்க, மெய்ப்பொருளையே தியானிக்கின்ற சிவஞானிகளைச் சிவமாகவே செய்யும் சிவன் உறையும் இடம் கழுமலவளநகர் என்கின்றது.*

*பரந்த ஐம்புலன்கள்வாய்ப்பாலே போகாமேகாவா - எங்கும் பரவியுள்ள சுவை முதலாகிய ஐம்புலன்களிடம் சென்று பற்றுத படி காத்து, பகை அறும்வகை நினையா - காமமாதிய உட்பகை ஆறையும் நீங்கும்வகை நினைத்து. முத்திக்கே இக்கத்தே முடிக்கும் முக்குணங்கள் வாய்மூடா ஊடா - முத்திக்கு இடையூறுக*

செம்பைச்சே ரிஞ்சிச்சூழ் செறிந்திலங்கு பைம்பொழிற்
சேரேவாரா வாரீசத் திரையெறி நகரிறைவன்
இம்பர்க்கே தஞ்செய்திட் டிருந்தரன் பயின்றவெற்
பேரார்பூநே ரோர்பாதத் தெழில்விர லவணிறுவிட்
டம்பொற்பூண் வென்றித்தோ ளழிந்துவந்த னஞ்செய்தாற்
காரார்கூர்வாள் வாணாளன் றருள்புரி பவனதிடங்
கம்பத்தார் தும்பித்திண் கவுட்சொரிந்த மும்மதக்
காரார்சேறுர் மாவீதிக் கழுமல வள நகரே. 8

---

முடிக்கும் முக்குணங்களின் வழியை மூடிப் பிணங்கி. நால் அந்தக்கரணமும் ஒரு நெறியாய்ச் சித்திக்கே உய்த்திட்டு - மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் அந்தக் கரணங்கள் நான்கையும் ஒருநெறிப்படுத்திச் சிந்தனையில்செலுத்தி. திகழ்ந்த மெய்ப்பொருள் சேர்வார் - விளங்கிய சிவபரம்பொருளைத் தியானிப்பவர்கள். தாமே தானாகச்செயுமவன் - அவர்களனைவரையும் சிவமாகச் செய்யும் இறைவன். சட்டங்கம் கத்திட்டோர் கலந்திலங்கும் காலே ஓவாதார் - ஆறு வேதங்களையும் ஓதியுணர்ந்தோர்கள் ஒன்றி விளங்கும் சிவமாய நற்பொருளின் திருவடியை இடைவிடாது தியானிப்பவர்கள்.

8. செம்பினால் இயன்ற மதில் சூழ்ந்த, மிகச் செறிவாக விளங்கும் பசிய பொழில் சேர்ந்து வரும் கடற்றிரைவந்து மோதும் நகருக்குத் தலைவனாகிய இராவணன், இவ்வுலக மக்களுக்குத் துன்பம் விளைத்ததோடுமட்டுமன்றி. சிவனுறையும் கைலையையும் எடுத்தலைச்செய்ய, மலர்போன்ற திருவடியின் விரல் ஒன்றால் ஊன்றி, பொன்னணிகள்பூண்ட தோளை நெரியச் செய்து, அவன் வணங்க வாளும் வாழ்நாளும் அருள்செய்தவனது இடம் கழுமலம் என்கின்றது. செம்பைச் சேர் இஞ்சி - செப்புத் தகடு வேய்ந்த முகட்டினையுடைய மதில். வாரிசம் - கடல். இம்பர் - இவ்வுலகவர். ஏர் ஆர் - எழுச்சியை அடையச்செய்து; அதாவது எடுக்க என்பதாம். வந்தனம் செய்தாற்கு ஆர் ஆர் கூர்வாள் வாழ்நாள் அன்று அருள்புரிபவன் எனப் பிரிக்க. கம்பத்து ஆர் தும்பி திண் கவுள் சொரிந்த மும்மதக் கார் ஆர் சேறு ஆர் மாவீதி - கம்பத்திற்கட்டிய யானையினது திண்ணிய கன்னத்தினின்று சொரிந்த மும்மதத்தாலாகிய கரிய சேறு பொருந்திய பெரிய வீதி.

பன்றிக்கோ லங்கொண்டிப் படித்தடம் பயின்றிடப்
பானுமாரு னுமேயப் பறவையி னுருவுகொள
ஒன்றிட்டே யம்புச்சே ருயர்ந்தபங் கயத்தவ
னோதானோதா னஃதுணரா துருவின தடிமுடியுஞ்
சென்றிட்டே வந்திப்பத் திருக்களங்கொள் பைங்கணின்
றேசால்வேறோ ராகாரந் தெரிவுசெய் தவனதிடங்
கன்றுக்கே முன்றிற்கே கலந்திலந் நிறைக்கவுங்
காலேவாரா மேலேபாய் கழுமல வளநகரே. 9

தட்டிட்டே முட்டிக்கைத் தடுக்கிடுக்கி நின்றுணுத்
தாமேபேணு தேநாளுஞ் சமணொடு முழல்பவரும்
இட்டத்தா லத்தந்தா னிதன்றதென்று நின்றவர்க்
கேயாமேவா யேதுச்சொல் விலைமலி மருதம்பூப்
புட்டத்தே யட்டிட்டுப் புதைக்குமெய்க்கொள் புத்தரும்
போல்வார்தாமோ ராமேபோய்ப் புணர்வுசெய் தவனதிடங்
கட்டிக்கால் வெட்டித்தீங் கரும்புதந்த பைம்புனற்
காலேவாரா மேலேபாய் கழுமல வளநகரே. 10

---

*9. திருமால் பன்றியுருவெடுத்துப் பூமியைத் தோண்டியும், பங்கயத்தவன் அன்னமாய்ப் பறந்தும் அடிமுடி தேடியும் அறியாதே வணங்க, அக்கினிப்பிழம்பாகிய வேறோர்வடிவம் காட்டிய இறைவனிடம் கழுமலம் என்கின்றது. மால் தான் பன்றிக்கோலம் கொண்டு, இப் படித்தடம் பயின்று இடப்பான் ஆம் அம்புசேர் உயர்ந்த பங்கயத்தவனோ தான் மேய பறவை யின் உருவுகொள ஒன்றிட்டு உருவினது அடிமுடியும் அஃது உணராது சென்றிட்டே வந்திப்ப, திருக்களம்கொள் பைங்கண் நின்று ஏசால், வேறு ஓர் ஆகாரம் தெரிவு செய்தவனிடம் எனப் பிரித்துக் கூட்டிப் பொருள்கொள்க. படித்தடம் - பூமி. இடப் பானும் - தோண்டுவானும். மால் - திருமால். தான்மேய பறவை - தான் ஊர்தியாக விரும்பிய பறவை. அம்பு - நீர். தான் ஓதான் - தான் வேதங்களை ஓதியவனாக இருந்தும் அடிமுடியும் உணராது எனக் கூட்டுக. ஏசால் - வல்லமையால். ஆகாரம் - வடிவம். முன்றிற்கே கன்றுக்கே கலந்து இல்லம் நிறைக்கவும் - முன்றிலில் கன்று கலந்து வீட்டை வளத்தால் நிறைக்கவும், காலே வாரா மேலே பாய் - வாய்க்கால் வந்து மேலேறிப் பாயும் கழுமலம் என்க.*

*10. சமணரும் புத்தரும் போல்வார் தம்மை அறியா வண்ணம் மறைப்பித்த இறைவனிடம் இது என்கின்றது.*

கஞ்சத்தே னுண்டிட்டே களித்துவண்டு சண்பகக்
 கானேதேனே போராருங் கழுமல நகரிறையைத்
தஞ்சைச்சார் சண்பைக்கோன் சமைத்தநற் கலைத்துறை
 தாமேபோல்வார் தேனேரார் தமிழ்விர கனமொழிகள்
எஞ்சத்தேய் வின்றிக்கே யிமைத்திசைத்த மைத்தகொண்
 டேழேயேழே நாலேமூன் றியலிசை யிசையியல்பா
வஞ்சத்தேய் வின்றிக்கே மனங்கொளப் பயிற்றுவோர்
 மார்பேசேர்வாள் வானோர்சீர் மதிநுதன் மடவரலே. 11

திருச்சிற்றம்பலம்

---

தட்டு இட்டே, முட்டிக்கை தடுக்கு இடுக்கி நின்று உணா தாமே பேணாதே நாளும் சமணொடும் உழல்பவரும் - மண்டையை ஏந்தி கைமுட்டியில் தடுக்கை இடுக்கிக்கொண்டு, நின்றுகொண்டு உண்டு, தாம் ஒன்றையும் பேணாதவர்கள்போல நாளும் சமண் கொள்கையொடு சுற்றுபவர்களும். இட்டத்தால் அத்தம் தான் இது அன்று அது என்று நின்றவர்க்கு ஏயாமே வாய் ஏது சொல் - விருப்பப்படி பொருள் இது அன்று அதுதான் என்று கேட்பவர்க்குப் பொருந்தாமல் வாயில்வந்தபடி காரணம் சொல் லும் (புத்தர்). இலை மலி மருதம்பூப் புட்டத்தே அட்டு இட்டு புதைக்கும் மெய் கொள் புத்தர் - மருதோன்றி இலையை அரைத்து பின்பக்கத்துப் பூசி உடலை மறைக்கும் புத்தர்கள். ஓராமே - ஆராயாமல். புணர்வு - சூழ்ச்சி. கால் வெட்டி கட்டித் தீங்கரும்பு தந்த பைம்புனல் காலேவாரா மேலேயாய் - அடியை வெட்டிக் கட்டி இனிய கரும்புகள் தந்த சுவைநீர் கால்வழி வந்து மேலேறிப்பாயும் நகர் என்க.

**11.** கழுமல நகரிறையைத் திருஞானசம்பந்தன் சொன்ன மொழிகளை இசையோடு குறையின்றி மனங்கொளப் பயிற்று வோர் மார்பைத் திருமகள் சேர்வாள் எனப் பயன்கூறியது. கஞ்சத் தேன் உண்டிட்டு - தாமரையிலுள்ள தேனைக் குடித்து. சண்பகக் கானே தேனே போராரும் - சண்பகக் காட்டிலுள்ள வண்டோடு பொரும். தஞ்சை சார் - அடைக்கலமாகச் சாரு கின்ற. தேன் நேர் ஆர் தமிழ் விரகன மொழிகள் - தேனுக்கு ஒப்பான தமிழ் விரகருடைய சொற்கள். எஞ்ச தேய்வு இன்றி- குறைவின்றி. ஏழே ஏழே நாலே மூன்று இயல் இசை இசை இயல்பா - இருபத்தொரு பண் முறையால். வானோர் சீர் மதி நுதல் மடவரல் - தேவர்களது சிறப்போடுகூடிய மதிபோன்ற நெற்றியினையுடைய திருமகள்.

# திருப்பிரமபுரம்

**பதிகவரலாறு :** (117-ம் பதிகம் பார்க்க)

**பண் - வியாழக்குறிஞ்சி**

ஏகபாதம்

**என் 127**

**பதிகம் :**

திருச்சிற்றம்பலம்

பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான். 1

விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன்
விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன்
விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன்
விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன். 2

---

1. ஞானகாசமாகிய பராசத்தியான பரிபூரணத்தை மிகுதியாக வியந்து அந்தப் பராசத்திக்கு அதீதமாகிய சுகமே வடிவாய் முதல் நடு இறுதி காணப்படாத வஸ்து எந்தப் பெரியோன். மேல்நிலமாகிய ஆகாசத்தின்கண்ணே யோடா நின்ற கங்காதேவியை விரும்பித் திருமுடியிலே வைத்தவன், எம்மை நீங்காத நிலைமையையுடைய எமது உயிர். பிரமரூபத் திலே எண்ணப்பட்ட என்னை முத்தியிலேவிடுகைக்கு அமையாத விருப்பமுள்ளவனுய் என்னை ஒக்கவந்தவன். பிரமபுரம் என் கின்ற சீகாழிப்பதியிலே வீற்றிராநின்ற கர்த்தாவானவன் என்னுடைய சுவாமி. பெரியோனும் எனக்கு உயிரானவனும் என்னை யொக்கவந்தவனும் சீகாழிப்பதியில் வீற்றிருக்கும் கடவுள் எனக் கூட்டிப் பொருள்கொள்க.

2. அஷ்டகுல பர்வதங்களும், ஒலிசிறந்த தரிசுமணியாக வும், அகிலலோகங்களையும் உள்ளேயகப்படுத்தும் தன்மையவா யும், பெரிதாயும் உள்ள திருச்சிலம்பினைத் தரித்துள்ளவன். நூபுரம் எனற்பாலது நுபுரம் எனக் குறுகின்றது. விஷ்ணு வின் புறனுரையாகிய சிவதூஷணத்தை அரசமரத்தினீழலில் அவனுடன் இருந்து விரும்பியுள்ள முப்புரங்களைச் சங்கரித் துள்ளவன். அண்ணி எனற்பாலது அணி என இடைக்

புண்ட ரிகத்தவன் மேவிய புகலியே
புண்ட ரிகத்தவன் மேவிய புகலியே
புண்ட ரிகத்தவன் மேவிய புகலியே
புண்ட ரிகத்தவன் மேவிய புகலியே. 3

விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்
விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்
விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்
விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன். 4

---

குறையாய் நின்றது. தேவர்கள் கற்பகப் பூஞ்சோலை மலர்களால் அர்ச்சிக்கப்படுகின்ற தேவேந்திரனுடைய. எனு எனற்பாலது ஏனு என நீண்டது. புரந்தரன் எனற்பாலது புரத்தரன் என வலித்துநின்றது. இதழ்கள் விண்டு மலர்கின்ற சோலை சூழ்ந்த சீகாழிப்பதிக்குக் கர்த்தாவாயுள்ளவன். தேவேந்திரன் மூங்கில்வழியாகவந்து பூசித்ததால் வேணுபுரம் என்னும் பெயர்பெற்றது. சிலம்பினைத் தரித்துள்ளவரும், முப்புரத்தை எரித்தவரும், தேவேந்திரனுடைய சோலைசூழ்ந்த வேணுபுரத்தில் வீற்றிருக்கும் இறைவர் எனக் கூட்டி உரைத்துக்கொள்க

3. இதயகமலத்திலிருந்து இடையறாத ஆனந்தம் பொழியப்பட்டு என்னை மலபோதத்தில் தள்ளாமல் எனக்கு அடைக்கலப் பொருளாயுள்ளவன். ஆன்மாக்களுக்கு இரக்ஷையாக முண்டம்போலிருந்த திருநீற்றை அணியப்பட்ட மிக்க கருணையானவனே யான்பாடும் பாடலை உவந்துள்ளவன். புலிக்காலும் புலிக்கையும் பெற்றுள்ள வியாக்கிரபாத முனிவருக்கு ஞானானந்தமாகிய நாடகத்தைக் கனகசபையிலே ஆடல்செய்யும் பரத வித்தையைக் கற்றுள்ளான். வியம் எனற்பாலது விய எனக் கடைகுறைந்து நின்றது. கீழ்ச்சொன்ன லீலைகளெல்லாம் செய்கின்ற சிவன் தனது இச்சையால் பொருந்தியிருக்கும் ஊர் பிர்மா பூசித்த புகலி என்னும் திருப்பதி.

4. கன்று குணிலாக எறிந்து விளவின்கனியைக்கொண்ட நாரணனைப் பிரகாசஞ்செய்யப்பட்டு நின்மலமாயிருந்துள்ள தனது பெரிய திருமேனியிலே ஒன்று பாதியாக வைத்துள்ளான் என்க. தீ எனற்பாலது தி எனக் குறுகிநின்றது. கமூதரு எனற்பாலது கழ்தரு என நின்றது. மாறுபாடாய்க் கதறப்பட்ட பௌத்தனது தலையிலே அக்கினியைச் சொரிந்து மிக்க பயத்தோடும் விழுகின்ற இடியை விழும்படி ஏவிப் பௌத்தரை

சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்
சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்
சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்
சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன். 5

---

வேரறுத்தானும் தானேயன்றி யானன்ருகும். தீ எனற்பாலது தி எனவும், காழ்தரு எனற்பாலது கழ்தரு எனவும், ஏங்கு எனற்பாலது எங்கு எனவும் குறுகிநின்றன. தனது பரிபூரணத்திலே தன்னையிழந்து இரண்டாய் விசுவமுருகித் தான் விஷமாகத் தூஷணப்பட்டுநிற்கின்ற எனக்கும் குருமூர்த்தியாய் வந்து என் பிறவியை ஒழித்துத் தனது பேரின்பமாகிய பரிபூரணத்திலே எனது அடிமை குலையாமல் இரண்டறவைத்தவன். கீழ்ச்சொல்லிப்போந்த செய்திகளெல்லாமுடையன் எத்தன்மையனோ என்னில் எங்கும் பிரகாசியாநின்ற கீர்த்தியினுல் சிறக்கப்பட்டுள்ள இயமனுல் பூசிக்கப்பட்ட வெங்குரு என்னும் திருப்பதியை விரும்பியுள்ளான். வெங்குரு என்பதும் சீகாழி.

5. சுடுநிலமாகிய மயானத்தை நடமாடும் இடமாகக் கொண்டும், முப்புரங்களையும் நகைசெய்து சுடப்பட்ட வெற்றிப் போரையுடைய தும்பைமாலைக் கடவுள். சூடார் எனற்பாலது சுடர் எனவும், ஈமம் எனற்பாலது இம் எனவும் குறுகி நின்றன. துரோணம் எனற்பாலது தோணி என மருவிற்று. என் உச்சிக்குச் சூடாமணியுமாய் என்மேல்வைத்த மாலினையுடையனுமாய் யாகத்தின்கண்வந்த யானையை வடிவொழித்துப் போர்க்கும் தன்மையை உடையவன். சூடாமணி எனற்பாலது சுடர்மணி எனவும், மாலி எனற்பாலது மாளி எனவும், தோல் எனற்பாலது தோள் எனவும் நின்றன. மாலையுடையவன் - மாலி. தோல் - யானை. சூரியனுடைய களங்கத்தைக் கழுவப் பட்ட சமுத்திரம்போன்ற ஜெனனக் கடலிலே கீழ்ப்பட்டழுந்திக் கெடாநின்ற ஆன்மாக்களுக்குக் கைப்பற்றிக் கரையேறும் தெப்பமாகப் பிரணவம் என்கிற மந்திரத்தை அவரது செவியின் கண்ணே உண்டாக்காநின்றவன். மண்ணரி என்பது மணி என இடை குறைந்து நின்றது. புரந்தவன் எனற்பாலது புரத்தவன் என வலித்தல் விகாரமாயிற்று. விளக்கத்தையுடைய நவரத்தினங்களாலே அலங்கரிக்கப்பட்ட மாளிகை சூழ்ந்த திருத்தோணிபுரத்திலே வீற்றிருக்கும் சிவன் இத் தன்மையன்.

பூசுரர் சேர்பூந்த ராயவன் பொன்னடி
பூசுரர் சேர்பூந்த ராயவன் பொன்னடி
பூசுரர் சேர்பூந்த ராயவன் பொன்னடி
பூசுரர் சேர்பூந்த ராயவன் பொன்னடி. 6

செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில்
செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில்
செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில்
செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில். 7

---

6. பூமியிலுள்ளாரையும் தேவகணங்களாய் உள்ளாரையும் தனது நாபிக் கமலத்திலே தோற்றுவிக்கப்பட்ட பிரமா விஷ்ணுவினது போதத்திலே கண்ணாடியும் நிழலும் போலப் பிரதிவிம்பியாநின்றவன். ஆடி என்பது அடி எனக் குறுகி நின்றது. மலத்திரயங்களைக் கழுவப்பட்ட சிவஞானிகள் கூட்டம் பொலிவுபெறத்தக்க வனப்பையுடைய ஆனந்தநிருத்தம் செய்தருள்பவன். சர்வாங்கமும் உத்தூளம்பண்ணின மார்பை உடைய சிவஞானிகளும், புண்ணியபாவக்கட்டையரிந்து விசுவத்தைத் தள்ளப்பட்ட சிறப்பையுடையருமாயிராநின்றவர்களுக்கு மிகுதியான மூலமாயுள்ளவன். உந்தராய் என்பது, ஊந்தராயென நீண்டது. மறுவிலா மறையோர் வாழ்கின்ற திருப்பூந்தராய் என்னும் திருப்பதியின்கண் வீற்றிராநின்ற சிவனது அழகிய திருவடித்தாமரை என்னை ஆண்டிடுவதாக. பூந்தராய் என்பதும் சீகாழி.

7. தனது திருவடிப்பிரசாதமில்லாதார்க்கு மலமயக்கத்தின் மேலீட்டைக்கெடாத சிவனுக்கு விசுவாதீதமான இருப்பிடம் என்து சைதன்னியமே. சத்தாதிகளஞ்சும் சேரப்பட்ட உலகத்தைத் தன்வாயினிடமாகவுடைய விஷ்ணுவின் களேபரத்தைத் திருமேனியிலே தரித்துள்ளான். சேர் எனற்பாலது செர் எனவும், சீர் எனற்பாலது சிர் எனவும் குறுகிநின்றன. ஆத்தும விகாரமாகிய கர்மத்தினாலே இந்திரியங்களுக்கு விடயமாகிய சுவர்க்கத்திலிச்சையுடையானுக்கு அந்தச் சுவர்க்கம் மெய்யாக விசேடித்திருக்குமன்றோ. இந்திரியவன்மையாகிய யுத்தத்துக்கு இளையாமல் அந்த இந்திரியமாகிய பாணங்கள் தனது அறிவுக்குள் தைக்கப்படான். ஒருகால் சிரபுரம் என்று சொன்னவிடத்துப் பஞ்சேந்திரியங்களையும் அவியப்பொருது சிவனுடைய திருவடியிலே அடையாநிற்பன் என்பதாம்.

பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்
பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்
பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்
பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன். 8

தசமுக னெரிதர வூன்று சண்பையான்
தசமுக னெரிதர வூன்று சண்பையான்
தசமுக னெரிதர வூன்று சண்பையான்
தசமுக னெரிதர வூன்று சண்பையான். 9

---

8. பொலிவினையுடைய மாயாநிருத்தம் புரிகின்ற பத்திர காளியும் பூதபசாசும் பொருந்திய மயானமே திருக்கோயிலாக உள்ளவன். சுத்தமான வழியைத் தரப்பட்ட மகாரிஷிகள் திரண்டு தவம்பண்ணாநிற்கும் ஆரணியத்தில் தனித்துத் தவம் புரியாநிற்கும் தபோதனன். அழகிய ஆபரணங்களால் அலங் கரிக்கப்பட்டுள்ள இலக்குமியையொத்த இருடிபத்தினிகள் பிச்சையிடவந்து அணையுமிடத்துத் தனக்குள்ள நிருவாணத்தை அவர்களுக்குக் கொடுத்தவன். பொன்னாற்செய்யப்பட்ட பாடக நூபுராதிகளைப் பாதங்களிலேயணிந்துள்ள கன்னியர் திரண்டு விளையாடும் புறவம் என்னும் திருப்பதியில் வாழ்கின்ற சிவன். புறவம் என்பதும் சீகாழி.

9. ஆத்துமாக்களிடத்துக் கருணைபிறக்கும் இடமாயுள்ள வன். அக்கினி வீசப்பட்டுத் திருவரையிலே அழுந்தச் சாத்தி யுள்ள விரிந்த படத்தினையுடைய பாம்பை அரைஞாணாக வுடையான். எல்லாம் இறந்து அந்தமாயுள்ள சிவஞானிகள் குழாத்துக்கு நேரிதாகிய சூனியமாயுள்ள பொருளைத் தோற்று வித்துள்ளானுமாய்ப் புலியினது ஊன்பொருந்திய தோலாடை யைத் திருவரையிலே விரித்துடுத்தவன். நேரி எனற்பாலது நெரி எனக் குறுகிநின்றது. தரக்கு எனற்பாலது தர எனக் குறைந்தது. தூசு எனற்பாலது துசு எனக் குறுகிநின்றது. பாயான் எனற்பாலது பையானெனக்குறுகிப் போலியாயிற்று. ஆத்துமவிகாரமான அகங்காரம் போம்படி என்னறிவில் எதிர்ப் பட்டவன் கயிலாயமலையைத் திருவுள்ளத்தடைத்து எழுந்தருளி யிருந்து ஆத்துமாக்களை இரக்ஷியாநின்ற விசேஷத்தையுடையவ னென்றேத்தும் சட்சமயங்களுக்கும் அவரவர்கொண்ட பயனு யுள்ளவன். நேரி எனற்பாலது நெரி எனக் குறுகிநின்றது.

காழி யானய னுள்ளவா காண்பரே
காழி யானய னுள்ளவா காண்பரே
காழி யானய னுள்ளவா காண்பரே
காழி யானய னுள்ளவா காண்பரே. 10

கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே
கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே
கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே
கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே. 11

---

பத்துத்தலையுள்ள இராவணன் முறியும்படி திருவிரலாலடர்த்தவன் யாரென்னில், சண்பை என்னும் திருப்பதியிலே வீற்றிருக்கும் கடவுள்.

10. நிலைபெற்றுநின்ற நின்மலமாகிய சித்தத்தையுடைய பத்தரிடத்துச் சத்தியப்பொருள் விளையும்பொருட்டு ஞான நாட்டத்திலே அவர்களைக் கடாக்ஷிக்கின்றவன். திருமிடற்றில் களங்கமுடையானது கருணையை நினைத்து ஞானநாட்டத்தை யுடைய சிவஞானிகள் சிவனுக்கிச்சை தன்னடியார்க்கே ஆங்காரத்தைத் தடுக்குமதே பணியெனத் தமதறிவிலே கருதாநிற்பர். விஷ்ணுவும் பிரமாவும், திருமுடியும் திருவடியும் காணும் பொருட்டு வராகமும் அன்னமுமாகக் கருதி வடிவுகொண்டார். ஐயோ! உள்ளபடி கருதிச் சிவனைப்பெறுமல் அவர்கருதியதேது எனில், அன்னியமே கண்டனர். கண் எனற்பாலது காண் என நீண்டது. என்பொருட்டால் காழி என்னும் திருப்பதியைப் படைத்தானை, என் ஐயனை, எனது ஆசையை, கீழ்ச் சொன்ன இருவர்களும் தாங்கள் தேடும் தேட்டப்பிறிவில் மயக்கத்திலே தேட்டமழித்துத் தோன்று நிற்பவனைத் தேடி மறத்தலொழிந்து எவ்வாறு காண்பர்.

11. ஆணவமலத்தோடு கூடியுள்ள மயக்கத்துடன் மாறுபட்டோர்கள் மாயாதனுவாலும் மந்திரதனுவாலும் மறைக்கப் படார்கள். மூடார் எனற்பாலது மூடர் எனக் குறுகிநின்றது. புலால் நாற்றத்தைப் பொருந்திய அழுக்குமெய்யைப் பொய் யென்று மனங்கொள்ளமாட்டாமல் அதுவே தமது நிலைபெற்ற வுருவாக நினைத்துத் துவராடையாலே உடம்பைச் சூழப்பட்ட பௌத்தரும்,பேதைத்தன்மையையுடைய மச்சியகந்தியினுடைய நலத்தைக் கொள்ளும்பொருட்டு அவளது சரீரம் எல்லாம் சுகந்தமொய்க்கும்படி அவளுடனே பொருந்திய பராசரனுகிய

கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை. 12

திருச்சிற்றம்பலம்

---

மகாவிருடிவந்து சிவனைப் பொருந்தி அருச்சிக்கப்படுதலால். பராசரமுனிவரால் பூசிக்கப்பட்டு அவன்பெயரால் பெயர்பெற் றுள்ள கொச்சை நகரம் என்னும் திருப்பதியிலே எழுந்தருளி யிராநின்ற தலைமையோனை உள்ளபடி தரிசனம்பண்ணி வழிபட மாட்டார்களது நினைவு எவ்வாறிருக்கும் என்னில், மழைக்கா லிருளும் வெளிதென இருண்ட மயக்கத்தையுடைய ஆணவ போதமாயிருக்கும்.

12. மிகுதிப்பட்ட தோஷமாயுள்ள சுக்கில சுரோணித மாகிய இருவகை நீரின்கண்ணே சிரமுதலாகிய அவயவமாகத் தோன்றிப் பூமியின்கண் செனித்துப் பரிணமித்துப் பின்பு தேய்ந்து மரிக்கின்ற சென்மத்தையும். பரிணமித்தல் - வேறு படுதல். கீழ்ச்சொல்லிப்போந்த சென்மத்தையும் கழுவி மலத் திரயங்களையும் கழுவாநிற்கும். தனது பாதியாகிய திரு வருளினாலே என்னை அகப்படுத்திக் கவுளிகரித்துக்கொண்டு அந்த அருள்வழியாக எனதிடத்தில் இடையறாமல் வாழும் தன்னை எனக்குத்தந்த அடிமை குலையாமல் எக்கண்ணும் விட்டு விளங்கும் கர்த்தர். பாதி எனற்பாலது பதி எனக் குறுகி நின்றது. மாயா மயக்கத்தின்கண்ணே மயங்கி பெத்தமுத்தி இரண்டும் தெரியாமல் திண்டாடப்பட்ட மலபோதர்க்கு அமுதம்போன்று அரிதாயுள்ளவனுமாய் விட்டு விளங்கப்படா நின்ற பொன்னுருவையுடையவனைச் சிருஷ்டிக்குக் கர்த்தாவாகிய பிரமனது சிரக்கபாலத்திலே பிச்சைகொண்டு நுகரும் கருணை யாளனே! திருக்கழுமலம் என்னும் மூவாப் பழங்கிழமைப் பன்னிரு பெயர்பெற்ற அநாதிமூலமாகிய பதியிடத்துக் கவுணிய கோத்திரத்திலே தோன்றப்பட்ட யான் நிவேதிக்கப்படும் காட்டாகிய இப்பாடலைக் கீழ்ச்சொன்னவற்றிலும் மலத்திரயங் களிலும் அழுந்தாநின்ற ஒருத்தராகிலும் பலராகிலும் உரை செய்வார் உயர்ந்தாரேயாதலால் இப்பாடலை இடைவிடாமல் உரைசெய்வீராக. காட்டு என்பது கட்டு எனக் குறுகிநின்றது.

## திருப்பிரமபுரம்

***பதிகவரலாறு :*** (117-ம் பதிகம் பார்க்க)

திருவெழுகூற்றிருக்கை

**பண் - வியாழக்குறிஞ்சி**

**பதிகம் :** **எண் 128**

திருச்சிற்றம்பலம்

ஓருரு வாயினை மானாங் காரத்
ஈரியல் பாயொரு விண்முதல் பூதலம்
ஒன்றிய விருசுட ரும்பர்கள் பிறவும்
படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினை
இருவரோ டொருவ னாகி நின்றனை

---

ஓருருவாயினை - என்றது. எல்லாத்தத்துவங்களையுங்கடந்து வாக்குமனாதிகளுக்கு எட்டாமலிருந்துள்ள தற்சுருபந்தான் பஞ்சகிர்த்தியங்களையும் நிகழ்த்தவேண்டி நினது இச்சையால் எடுத்துக்கொண்டிருக்கும் திருமேனியை என்றவாறு.

மானாங்காரத்தீரியல்பாய் - என்றது. மானென்பது - சத்தி - ஆங்காரத்தீரியல்பாய் - தற்சத்தியைக் கொண்டு சர்வானுக்கிரகமான பஞ்சகிர்த்தியங்களை நடத்தவேண்டிச் சத்தி சிவமாகிய இரண்டு உருவாயினை எ - று.

ஒரு - என்றது. அந்தச் சத்தியுடனே கூடி யொன்றாகி நின்றனை எ - று.

விண்முதல் பூதலம் ஒன்றிய இருசுடர் உம்பர்கள் பிறவும் படைத்தளித்தழிப்ப மும்மூர்த்திகளாயினை - என்றது. ஆகாச முதலாகப் பூமியீறாகவுள்ள பஞ்சபூதங்களையும் சந்திராதித்தர்களையும் தேவர்களையும் மற்றுமுள்ள ஆத்மாக்களையும் படைக்கைக்கும், காக்கைக்கும், அழிக்கைக்கும், பிர்மா விஷ்ணு உருத்திரன் என்கின்ற திரிமூர்த்திகளுமாயினை எ - று.

இருவரோடு ஒருவனாகி நின்றனை - என்றது. பிர்மாவையும் விஷ்ணுவையும் இடத்தினும் வலத்தினும் அடக்கிக்கொண்டு ஏகமாய்த் திரிமூர்த்தியாகி நின்றனை எ - று.

ஓரா னீழ லொண்கழ லிரண்டும்
முப்பொழு தேத்திய நால்வர்க் கொளிநெறி
காட்டினை நாட்ட மூன்றாகக் கோட்டினை
இருநதி யரவமோ டொருமதி சூடினை
ஒருதா ளீரயின் மூவிலைச் சூலம்

---

ஓரால்நீழ லொண்கழல் இரண்டும் முப்பொழுது ஏத்திய நால்வர்க்கு ஒளி நெறிகாட்டினை-என்றது. விருக்ஷங்களுக்கு எல்லாந்தலைமையாய் இருப்பதொரு வடவிருக்ஷத்தின் நீழலிலே எழுந்தருளியிருந்து நின்னழகிய ஸ்ரீபாதங்களை உதயம் மத்தியானம் அத்தமனம் என்கின்ற மூன்றுகாலமும் தோத்திரம் செய்யாநின்ற அகஸ்தியன் புலத்தியன் ஜனகன் சனற்குமாரன் என்னும் நால்வகை இருடிகளுக்கும் தற்சுருபமான திருமேனியைக் காட்டி அருளினை எ - று.

நாட்டம் மூன்றாகக் கோட்டினை - என்றது. பிர்மா முதலாயிருந்துள்ள ஆத்மாக்கள் ரூபமென்னும் புலனாலே சர்வ பதார்த்தங்களையும் காணாதபடியாலே சந்திராதித்தர்களையும் அக்கினியையும் மூன்று கண்ணாகக் கொண்டருளி அந்தகாரமான இருளை ஓட்டினை எ - று.

இருநதி அரவமோடு ஒரு மதி சூடினை - என்றது. பெரிதாகிய கங்கையையும் ஒப்பில்லாத பாம்பினையும் ஒருகாலத்திலும் முதிராத பிறைக்கண்ணியையும் சூடியருளினை எ - று.

ஒருதாள் ஈரயின் மூவிலைச்சூலம் நாற்கான் மான்மறி ஐந்தலை அரவம் ஏந்தினை - என்றது. பிரணவமாயிருந்துள்ள ஒரு காம்பினையும், ஈருகின்ற கூர்மையினையும், பிர்மா விஷ்ணு ருத்திரனென்கின்ற மூன்று இலையினையும் உடையதொரு சூலத்தினையும், இருக்கு - யசுர் - சாமம் - அதர்வணம் என்கின்ற நாலுவேதங்களையும் நாலுகாலாயிருந்துள்ள ஒரு மான் கன்றினையும், ஸ்ரீபஞ்சாக்ஷரங்களையும், அஞ்சு தலையாகவுடையதொரு மகாநாகத்தினையும் அஸ்தங்களிலே தரித்தருளினை எ - று.

நாற்கான் மான்மறி யைந்தலை யரவம்
ஏந்தினை காய்ந்த நால்வாய் மும்மதத்
திருகோட் டொருகரி யீடழித் துரித்தனை
ஒருதனு விருகால் வளைய வாங்கி
முப்புரத் தோடு நானில மஞ்சக்
கொன்று தலத்துற வவுணரை யறுத்தனை
ஐம்புல னாலா மந்தக் கரணம்
முக்குண மிருவளி யொருங்கிய வானோர்
ஏத்த நின்றனை யொருங்கிய மனத்தோ
டிருபிறப் போர்ந்து முப்பொழுது குறைமுடித்து

---

காய்ந்த நால்வாய் மும்மதத்து இருகோட்டு ஒருகரி ஈடு அழித்து உரித்தனை - என்றது தன்னிழலைக் காயத்தக்க கோபத்தினையும் தொங்கும் வாயினையும் இரண்டு கொம்பினையும் உடையதொரு ஒப்பில்லாத ஆனையினுடைய பெலங்களையெல்லாம் கெடுத்து உரித்துப் போர்த்தனை எ - று.

ஒரு தனு இருகால் வளைய வாங்கி முப்புரத்தோடு நானிலம் அஞ்சக் கொன்று தலத்துறு அவுணரை அறுத்தனை - என்றது. ஒப்பில்லாத பொன்மலையாகிய வில்லை இருதலையும் வளைய வாங்கி அஸ்திரத்தைத் தொடுத்து, மூன்றுபுராதிகளாகிய அவுணரை அறுத்தனை எ - று.

ஐம்புலம் நாலாம் அந்தக்கரணம் முக்குணம் இருவளி ஒருங்கிய வானோர் ஏத்த நின்றனை-என்றது. சத்த-பரிச-ரூப-ரச கந்தம் எனப்பட்ட ஐம்புலங்களையும், மனம்-புத்தி-யாங்கார-சித்தம் என்கின்ற அந்தக்கரணங்கள் நான்கினையும், ராசத-தாமத-சாத்துவிதம் என்கின்ற மூன்று குணங்களையும், பிராணன்-அபானன் என்கின்ற இரண்டு வாயுவையும், மூலதாரத்திலே ஒடுக்கிக்கொண்டு ஏகாக்ரசித்தராயிருந்துள்ள தேவர்கள் ஏத்த நின்றனை எ - று.

ஒருங்கிய மனத்தோடு இருபிறப்பு ஓர்ந்து முப்பொழுது குறைமுடித்து நான்மறைஓதி ஐவகை வேள்வியமைத்து ஆறங்க முதலெழுத்தோதி வரன்முறை பயின்றெழு வான்றனைவளர்க்கும் பிரமபுரம் பேணினை - என்றது, ஆகாரம் - நித்திரை - பயம் - மைதுனம் இவற்றில் செல்லும் மனத்தைப் பரமேசுவர

நான்மறை யோதி யைவகை வேள்வி
அமைத்தா றங்க முதலெழுத் தோதி
வரன்முறை பயின்றெழு வான்றனை வளர்க்கும்
பிரமபுரம் பேணினை .
அறுபத முரலும் வேணுபுரம் விரும்பினை

---

*னுடைய ஸ்ரீபாதங்களிலே யொருக்கி முன்பு தாம் மாதாவின் உதரத்திலே பிறந்த பிறப்பும், உபநயநத்தின் பின்பு உண்டான பிறப்புமாகிய இரண்டையும் விசாரித்து மூன்று சந்தியும், செப தர்ப்பண - அனுட்டான - ஓமங்களையுமுடித்து, இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்கின்ற நாலு வேதங்களையும் ஓதி, சிவ பூசை - குருபூசை - மகேசுரபூசை - பிராமண போசனம் - அதிதி புசிப்பு என்கின்ற ஐந்து வேள்வியும் முடித்து. ஓதல் - ஓது வித்தல் - வேட்டல் . வேட்பித்தல் - ஈதல் - ஏற்றல் - என்னும் ஆறங்கங்களையும் நடத்தி இவைகளுக்கு முதலாயிருந்துள்ள பிரணவத்தையும் உச்சரித்துத் தேவலோகத்திலுள்ள தேவர் களுக்கும் அவிகொடுத்து மழையைப் பெய்விக்கும் பிராமண ராலே பூசிக்கப்பட்ட பிரபுரமே திருப்பதியாக எழுந்தருளியிருந் தனை என்றவாறு — ஆறங்கமாவன மந்திரம் - வியாகரணம் - நிகண்டு - சந்தோபிசிதம் - நிருத்தம் - சோதிடம் என இவ்வாறு வழங்கப்படுகின்ற முறையொன்று.*

*அறுபதமுரலும் வேணுபுரம் விரும்பினை - என்றது. அறு காலுடைய வண்டுகளிசைபாடும் பொழில்சூழ்ந்த வேணுபுரம் என்பதே திருப்பதியாக எழுந்தருளினை என்றவாறு—வேணு புரம் என்பதற்குக் காரணம்: வேணு என்பானொரு இந்திர னுடன் கெசமுகன் என்பானொரு அசுரன்வந்து யுத்தம்பண்ண அவனுடனே பொருது அபசெயப்பட்டுப் பிரமபுரமென்னு முன் சொன்ன பதியிலேவந்து பரமேசுவரன் திருவடிகளிலே 'தம்பி ரானே! அடியேனுக்கு அமைத்தருளின சுவர்க்கலோகத்தைக் கசமுகன் சங்கரிக்க, அவனுடன் யுத்தம்பண்ணி அபசெயப்பட் டுப் போந்தேன்' என்று விண்ணப்பஞ்செய்து பூசிக்கையாலே தம்பிரானும் கணேசுரனைத் திருவுளத்தடைத்து 'வாராய் கணே சுரனே! கசமுகன் வரப்பிரசாதமுடையவன்; ஒருவராலு மவனைச் செயிக்கப்போகாது; நீயும் அவன் வடிவாகச்சென்று உன் வலக் கொம்பை முறித்தெறிந்து அவனைக்கொன்றுவேணு என்கின்ற*

இகலிய மைந்துணர் புகலி யமர்ந்தனை
பொங்குநாற் கடல்சூழ் வெங்குரு விளங்கினை

---

இந்திரனைச் சுவர்க்கலோகத்திலே குடிபுகவிட்டுவா' என்று திருவுளம்பற்றக் கணேசுரனும் அவன்வடிவாகச்சென்று தன் வலக் கொம்பை முறித்தெறிந்து அவனையுங்கொன்று வேணு என்கின்ற இந்திரனையும் சுவர்க்கலோகத்திலே குடிபுகவிட உண்டானது என்க.

இகலியமைந்துணர் புகலி அமர்ந்தனை - என்றது. தேவர்கள் முன்பு புகலிடமென்று புகுதலால் திருப்புகலி என்பதே திருப்பதியாக எழுந்தருளி இருந்தனை என்றவாறு.—தேவலோகமான அமராபதியைச் சூரபத்மா என்பானொரு அசுரன்வந்து சங்காரம் பண்ண அவனுடனே தேவேந்திரன் முதலாயுள்ளார் பொருது அபசெயப்பட்டு யுத்தத்தையொழிந்து இனி நமக்குப் பரமேசுவரன் ஸ்ரீபாதமொழிய புகலிடமில்லை என்று வேணுபுரத்திலே வந்து பரமேசுவரனைத் தெண்டம்பண்ணி அவனாலுண்டான நலிகையை விண்ணப்பஞ்செய்து எங்களை ரக்ஷித்தருளவேண்டும் என்னப் பரமேசுவரனும் சுப்பிரமணியரைத் திருவுளத்து அடைத்து 'வாராய் சுப்பிரமணியனே! நீ ஆறுமுகமும் பன்னிரண்டு கையுமாகப்போய்ச் சூரபத்மாவையும் செயித்துத் தேவலோகத்திலே தேவர்களையும் குடிபுகுத விட்டுவா' என வருகை காரணம்.

பொங்கு நாற்கடல் சூழ் வெங்குரு விளங்கினை - என்றது. மிகவும் கோபிக்கப்பட்ட கடல்சூழ்ந்த வெங்குரு என்றதே திருப்பதியாக எழுந்தருளியிருந்தனை என்றவாறு.—லோகங்களுக்கெல்லாம் தேவகுருவாகிய பிரகஸ்பதிபகவான் என்னையொழிந்து கர்த்தாவுண்டோ என்று மனோகெர்வஞ் சொல்லுகையாலே பரமேசுவரனும் இவன் மகா கெர்வியாயிருந்தான் இவனுடைய கெர்வத்தை அடக்கவேண்டுமென்று திருவுளத்தடைத்தருளித் தேவர்க்குக் குருவாகிய அதிகாரத்தை மாற்றியருளப் பயப்பட்டுப் புகலி என்கின்ற திருப்பதியிலே போய்ப் பரமேசுவரனைத் தெண்டம்பண்ணி அடியேன்செய்த அபராதங்களைப் பொறுத்தருளி அடியேனை ரக்ஷித்தருளவேண்டும் என்று விண்ணப்பஞ்செய்யத், தம்பிரானும் நீ மகா வேகியாயிருந்தாய்

பாணிமூ வுலகும் புதையமேன் மிதந்த
தோணிபுரத் துறைந்தனை தொலையா விருநிதி
வாய்ந்த பூந்தரா யேய்ந்தனை
வரபுர மென்றுணர் சிரபுரத் துறைந்தனை

---

என்று திருவுள்ளமாய் முன்புபோல் தேவர்களுக்குக் குருவாகிய அதிகாரத்தையும் கொடுத்த காரணத்தால் வெங்குரு என்கின்ற பெயருண்டாயது.

பாணி மூவுலகும் புதைய மேல்மிதந்த தோணிபுரத்து உறைந்தனை - என்றது. பாணி என்கின்ற சலம் பிரளயமாய்ப் பூமி அந்தரம் சுவர்க்கம் மூன்று லோகங்களையும் புதைப்ப அதைச் சங்காரம்பண்ணியருளி அதின்மேலே தோணிபோல மிதந்த வெங்குருவாகிய தோணிபுரம் என்றதே திருப்பதியாக எழுந்தருளி யிருந்தனை எ - று.

தொலையா இருநிதிவாய்ந்த பூந்தராயேய்ந்தனை - என்றது. வேண்டினோர் வேண்டியது கொடுத்துத் தொலைவறச் சங்கநிதி பத்மநிதி என்று சொல்லப்பட்ட இரண்டு நிதிகளும் பூவும் தராயும் பூசிக்கையாலே திருப்பூந்தரா யென்னப்பட்ட திருப்பதியிலே எழுந்தருளி யிருந்தனை எ - று. ஒருகாலத்துத் தொலையாத வரத்தைப்பெறுவது காரணமாகத் திருத்தோணிபுரத்திலே வந்து தம்பிரானைப் பூசித்தளவில் 'உங்களுக்கு வேண்டுவதென்' என்று கேட்டருள, 'தம்பிரானே! அடியோங்களுக்கு எல்லாக் காலங்களுந்தொலையாமல் கொடுக்கத்தக்க வரத்தைப் பிரசாதித் தருளவேண்டும்' என்று விண்ணப்பஞ்செய்ய, அவ்வாறே தொலையாதவரத்தையும் கொடுத்தருளி மகாசங்காரத்தினுந் தம்முடைய ஸ்ரீ அஸ்தங்களிலே தரித்தருளும் வரப்பிரசாதமுங் கொடுத்தருளினதால் பூந்தராய் எனப் பெயருண்டாயது.

வரபுரமென்றுணர் சிரபுரத்துறைந்தனை - என்றது. வரத்தைத் தருவதான புரமென்றுணரத்தக்க சிரபுரமென்பதே திருப்பதியாக எழுந்தருளியிருந்தனை எ - று. தேவர்களும் பிர்மவிஷ்ணுக்களுமாகக்கூடி அமிர்தத்தை யுண்டாக்கித் தேவர்களை இருத்தி விஷ்ணுபகவான் அமிர்தம் படைத்துக்கொண்டு வருகிற வேளையில் ராகு கேது என்கிற இரண்டு பாம்புங்கூடிக் கரந்

ஒருமலை யெடுத்த விருதிற லரக்கன்
விறல்கெடுத் தருளினை புறவம் புரிந்தனை

---

திருந்து அமிர்தபானம் பண்ணுவதாக இருப்பதுகண்டு விஷ்ணு பகவான் அமிர்தம் படைத்துவருகின்ற சட்டுவத்தைக்கொண்டு தலையற வெட்டுகையால் உடலிழந்து நாகமிரண்டும் நம்முடல் தரக்கடவான் பரமேசுவரனொழிய வேறேயில்லை என்று திருப் பூந்தராயிலேவந்து பரமேசுவரனைநோக்கி இரண்டு சிரங்களும் பூசித்ததால் சிரபுரம் என்று பெயருண்டாயது.

ஒருமலை எடுத்த இருதிறலரக்கன் விறல்கெடுத்தருளினை - என்றது. பெருமையுள்ள கயிலாயம் என்னும் பேரையுடைத் தாய் உனக்கே ஆலயமாயிருப்பதொரு வெள்ளிமலையை எடுத்த பெரிய புசபலங்கொண்ட ராவணனுடைய கர்வத்தைக் கெடுத் தருளினை எ - று.

புறவம் புரிந்தனை - என்றது. பிரசாபதி என்கின்ற பிர்ம ரிஷி கௌதமரிஷியைநோக்கி நீ ஸ்திரீபோகத்தைக் கைவிடாம லிருக்கிறவனல்லவோ என்று தூஷணிக்கையாலே கவுதமரிஷி யும் பிரசாபதி பகவானைப்பார்த்து நீ புரு என்னும் ஒரு பக்ஷியாய் நரமாமிசம் புசிப்பாயாக என்று சபிக்கப் பிரசாபதியும் ஒரு புரு வாய்ப்போய்ப் பலவிடத்திலும் நரமாமிசம் புசிக்கையிலே, ஒரு நாள் மாமிசந்தேடிச் சோழவம்சத்திலே ஒரு ராசா தினசரிதனு யிருக்கிறவிடத்திலே இந்தப் புருவாகிய ரிஷியும்போய் ராசா வைப்பார்த்து எனக்கு அதிக தாகமாயிருக்கின்றது சற்று நர மாமிசம் இடவல்லையோ என்ன ராசாவும் உனக்கு எவ்வளவு மாமிசம் வேண்டும் எனப் புருவும் உன்சரீரத்திலே ஒன்று பாதி தரவேண்டும் என்ன ராசாவும் தன்சரீரத்திலே யொன்று பாதி அரிந்திடப் புருவுக்கு நிறையப் போதாமல் சர்வ மாமிசத்தையும் அரிந்திட்டு ராசாவும் சோர்ந்துவிழ இந்தப் புருவாகிய பக்ஷியும் தமக்குத் தன் சரீரத்தை அரிந்திட்டுப் பிழைப்பித்த ராசா சரீரம்பெறும்படி எங்ஙனே என்று விசாரிக்குமளவில் பரமே சுவரனொழிய வேறில்லை என்று சிரபுரத்திலேவந்து பரமேசு வரனை நோக்கி அர்ச்சிக்கப் பரமேசுவரனும் திருவுளத் தடைத் தருளத் 'தம்பிரானே அடியேன் தாகந்தீரத் தன் சரீரத்தை அரிந் திட்ட ராசாவுக்கு முன்போல உடலும் பிரசாதித்து அடியே

முந்நீர்த் துயின்றோ னன்முக னறியாப்
பண்பொடு நின்றனை சண்பை யமர்ந்தனை 35

னுக்கும் இந்தச் சாபதோஷம் நீக்கவேண்டும்' என்று விண்ணப்பஞ்செய்ய, ராசாவுக்குச் சரீரமும் கொடுத்துப் புருவுக்கு வேண்டும் வரப்பிரசாதங்களையும் பிரசாதித்துச் சாபதோஷமும் மாற்றியருளிப் புருவும் பூசிக்கையாலே புறவம் என்கின்றதே திருப்பதியாக எழுந்தருளி இருந்தனை எ - று.

முந்நீர்த் துயின்றோன் நான்முகன் அறியாப் பண்பொடு நின்றனை - என்றது. ஆற்றுநீர் வேற்றுநீர் ஊற்றுநீர் என்று சொல்லபட்ட முந்நீராகிய சமுத்திரத்திலே துயிலாநின்ற நாராயணனும் நான்முகத்தினையுடைய பிர்மாவும் அடியும் முடியும் தேடற்கு அரிதாய் நின்ற பண்பினையுடையையாய் எழுந்தருளியிருந்தனை எ - று.

சண்பை அமர்ந்தனை - என்றது. தூர்வாச மகரிஷியாமெப்ப மத்தே கிருஷ்ணவதாரத்திலுள்ள கோபாலப் பிள்ளைகளெல்லாமிந்த ரிஷியை அசங்கதித்துத் தங்களிலே ஒருவனைக் கெர்ப்பிணியாகப் பாவித்துச்சென்று இவள் பெறுவது ஆணோ பெண்ணோ என்று அந்த ரிஷியைக் கேட்கையாலே அவர் கோபித்து இவள் பெறுவது ஆணுமல்ல பெண்ணுமல்ல உங்கள் வமிசத்தாரையெல்லாஞ் சங்கரிக்கைக்கு ஒரு இருப்புலக்கை பிறக்கக் கடவதென்று சபிக்கையாலே அவன் வயிற்றிலிருந்து ஒரு இருப்புலக்கைவிழ அந்தச் சேதியைக் கிருஷ்ணன்கேட்டுத் தூர்வாச மகாரிஷி சாபங் கேவலமல்ல என்று அந்த இருப்புலக்கையைப் பொடியாக அராவி அந்தப் பொடியைச்சமுத்திரத்திலே போட, அராவுதலுக்குப் பிடிபடாத ஒரு வேப்பம்விதைப் பிரமாணமுள்ள இரும்பை ஒரு மீன் விழுங்கி ஒரு வலைக்காரன்கையிலே அகப்பட்டது. அதன் வயிற்றில்கிடந்த இரும்பைத் தன் அம்புத்தலையிலேவைத்தான். மற்றுஞ் சமுத்திரத்திற்போட்ட இரும்புப் பொடிகளெல்லாம் அலையுடனே வந்து கரைசேர்ந்து சண்பையாக முளைத்துக் கதிராய் நின்றவிடத்திலே கோபாலகுமாரர்கள் விளையாடி வருவோமென்று இரண்டுவகையாகப் பிரிந்துசென்று அந்தச் சண்பைக்கதிரைப் பிடுங்கி எறிந்துகொண்டு அதனாலே பட்டுவிழுந்தார்கள். இதைக் கிருஷ்ணன் கேட்டு இதனாலே

ஐயுறு மமணரு மறுவகைத் தேரரும்
ஊழியு முணராக் காழி யமர்ந்தனை
எச்சனே ழிசையோன் கொச்சையை மெச்சினை

---

நமக்கு மரணமாயிருக்குமென்று விசாரித்து ஆலின்மேலே ஒரு இலையிலே யோகாசனமாக ஒரு பாதத்தை மடித்து ஒரு பாதத்தைத் தூக்கி அமர்ந்திருக்கிற சமயத்திலே அந்த மீன்வேடன் பக்ஷி சாலங்களைத்தேடி வருகிறபோது தூக்கிய பாதத்தை ஒரு செம்பருந்து இருக்கிறதாகப்பாவித்து அம்பைத்தொடுத்தெய்யக் கிருஷ்ணனும்பட்டுப் பரமபதத்தை அடைந்தான். இந்தச் சாப தோஷம் தூர்வாச மகாரிஷியைச்சென்று நலிகையாலே இந்தச் தோஷத்தை நீக்கப் பரமேசுவரனைநோக்கி அர்ச்சிக்கப் பரமேசுவரனும் திருவுளத்தடைத்தருள ரிஷியும் தெண்டம்பண்ணித் 'தம்பிரானே! அடியேனுடைய சாபத்தாலே கிருஷ்ணனுடைய வமிசத்திலுள்ள கோபாலரெல்லாருஞ் சண்பைக் கதிர்களால் சங்காரப்படுகையாலே அந்தத்தோஷம் அடியேனைவந்து நலியாதபடி திருவுளத்தடைத்தருளி ரக்ஷிக்கவேண்டும்' என்று விண்ணப்பஞ்செய்யத் தூர்வாச மகாரிஷிக்குச் சண்பை சாபத்தினுள்ள தோஷத்தை நீக்கிச் சண்பைமுனி என்கின்ற நாமத்தையும் தரித்தருளிச் சண்பை என்கின்றதே திருப்பதியாக எழுந்தருளி யிருந்தனை எ - று.

ஐயுறும் அமணரும் அறுவகைத்தேரரும் ஊழியும் உணராக் காழியமர்ந்தனை - என்றது. வேதாகம புராண சாத்திரங்களிலுள்ள பலத்தை இல்லை என்று ஐயமுற்றிருக்கின்ற அமணரும் கைப்புப் - புளிப்புக் - கார்ப்புத் - துவர்ப்பு - கூர்ப்புத் - தித்திப்பு என்கின்ற அறுவகை ரசங்களையும் உச்சிக்குமுன்னே புசிக்கின்றதே பொருளென்றிருக்கின்ற புத்தரும் ஊழிக்காலத்தும் அறியாமல் மிகவும் காளிதமான விஷத்தையுடைய காளி என்கின்றநாகம் பூசிக்கையாலே சீகாழி என்கின்றதே திருப்பதியாக எழுந்தருளியிருந்தனை எ - று.

எச்சன் ஏழிசையோன் கொச்சையை மெச்சினை - என்றது. குரல் - துத்தம் - கைக்கிளை - உழை - இளி - விளரி - தாரம் என்பது ஏழிசை.—குரலாவது - சங்கத்தொனி, துத்தமாவது - ஆண்மீன்பிளிறு, கைக்கிளையாவது - குதிரையின்குரல், உழை

ஆறு பதமு மைந்தமர் கல்வியும்
மறைமுத னான்கும்
மூன்று காலமுந் தோன்ற நின்றனை
இருமையி னொருமையு மொருமையின் பெருமையும்

---

யாவது-மானின்குரல், இளியாவது - மயிலின்குரல், விளரியாவது-கடலோசை, தாரமாவது - காடையின்குரல் என்னும் நாதங்களையும் மெச்சினை, மகத்தான இருடிகள் எல்லாரினும் விருத்தராயுள்ள பராசரப் பிரமரிஷியானவர் மற்ற ரிஷிகளெல்லாரையும்நோக்கி நீங்கள் சமுசாரிகளொழிய விரதத்தை அனுஷ்டிப்பாரில்லையென்று அவர்களைத் தூஷிக்க அவர்களும் நீ மச்சகந்தியைப் புணர்ந்து மச்சகந்தமும் உன்னைப்பற்றிவிடாமல் அனுபவிப்பாயென்று சபிக்கையாலே அந்தச் சாபத்தின்படி போய் மச்சகந்தியைப் புணர்ந்து அந்தத் துர்க்கந்தம் இவரைப் பற்றி ஒரு யோசனை தூரம் துர்க்கந்தித்தபடியாலே இது போக்க வல்லார் பரமேசுவரனையொழிய இல்லை என்று சீகாழியிலே வந்து பரமேசுவரனை அர்ச்சிக்கப் பரமேசுவரன் உனக்கு வேண்டியது என்ன என்று கேட்க 'தம்பிரானே! அடியேனைப்பற்றின துர்க்கந்தத்தைவிடுவிக்கவேண்டும்' என்று விண்ணப்பஞ்செய்ய, தம்பிரானும் 'இவனென்ன கொச்சை முனியோ' என்று திருவுளமாய் இவன்மேற்பற்றின துர்க்கந்தத்தையும்போக்கிச் சுகந்தத்தையும் பிரசாதித்தருளிக் கொச்சை என்கின்ற சந்தான நாமத்தையுந் தரித்தருளிக் கொச்சை என்கின்றதே திருப்பதியாக எழுந்தருளி யிருந்தனை எ - று.

ஆறு பதமும் ஐந்தமர் கல்வியும் மறைமுதல் நான்கும் மூன்றுகாலமும் தோன்ற நின்றனை - என்றது. பிரத்தி-பிரத்தியாகாரம் - துல்லியம் - துல்லியாதீதம் - வித்தை - அவித்தை என்கின்ற ஆறுபதங்களும், ஆசு - மதுரம் - சித்திரம் - வித்தாரம் - விரையம் என்கின்ற ஐந்தும், இருக்கு - யசுர் - சாமம் - அதர்வணம் என்கின்ற நாலுவேதங்களும், செல்காலம் - வருங்காலம் - நிகழ்காலம் என்கின்ற மூன்றுகாலமும் தோன்றநின்ற திரிமூர்த்தியாயினை எ - று.

இருமையின் ஒருமையும் - என்றது. சத்திசிவங்களாயிருந்துள்ள இரண்டும்ஒன்றாய் அர்த்தநாரீசுவரவடிவமாய் இருந்துள்ளதை எ - று.

மறுவிலா மறையோர்
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணிய னறியும்
அனைய தன்மையை யாதலி னின்னை
நினைய வல்லவ ரில்லைநீ ணிலத்தே.

திருச்சிற்றம்பலம்

---

ஒருமையின் பெருமை - என்றது. தானே ஒரு எல்லையில்லாத சிவமாயிருந்துள்ளதை எ - று.

மறுவிலாமறையோர் கழுமலமுதுபதிக் கவுணியன்கட்டுரை கழுமலமுதுபதிக் கவுணியன் அறியும் - என்றது. மறுவற்ற பிர்ம வமிசத்தில் தோன்றித் தீக்கைகளாலே மலத்தைக் கழுவப்பட்ட கவுணியர் கோத்திரத்திலே வந்த சீகாழிப்பிள்ளை கட்டுரையை விரும்பிக் கழுமலம் என்கின்ற முதுபதியிலே எழுந்தருளினை. கம் என்கின்ற பிரமசிரசிலே உண்கின்றவனே அறியும் எ - று.

அனைய தன்மையை யாதலின்-என்றது. அத்தன்மையாகிய இயல்பினையுடையையாதலின் எ - று.

நின்னை நினைய வல்லவர் இல்லை நீணிலத்தே - என்றது. நின்னை நினைக்க வல்லார்களுக்குப் பிறப்பு இல்லை என்றவாறு.

# திருக்கழுமலம்

பண் - மேகராகக்குறிஞ்சி

பதிகம் : எண் 129

திருச்சிற்றம்பலம்

சேவுயருந் திண்கொடியான் றிருவடியே
சரணென்று சிறந்தவன்பால்
நாவியலு மங்கையொடு நான்முகன்ருன்
வழிபட்ட நலங்கொள்கோயில்
வாவிதொறும் வண்கமல முகங்காட்டச்
செங்குமுதம் வாய்கள்காட்டக்
காவியிருங் கருங்குவளை கருநெய்தல்
கண்காட்டுங் கழுமலமே. 1

பெருந்தடங்கண் செந்துவர்வாய்ப் பீடுடைய
மலைச்செல்வி பிரியாமேனி
அருந்தகைய சுண்ணவெண்ணீ றலங்கரித்தா
னமரர்தொழ வமருங்கோயில்
தருந்தடக்கை முத்தழலோர் மனைகடொறு
மிறைவனது தன்மைபாடிக்
கருந்தடங்கண் ணார்கழல்பந் தம்மானைப்
பாட்டயருங் கழுமலமே. 2

---

1. 'விடையுயர்த்த பெருமான் திருவடியே சரண்' என்று பிரமன் வழிபட்டகோயில், நீர்ப்பூக்கள் நேரிழையார் அவயவங்களைக் காட்டும் கழுமலம் என்கின்றது. சே - இடபம். நா இயலும் மங்கை - சரஸ்வதி.

2. பெரியநாயகி பிரியாத மேனியில் திருநீற்ருல் அலங்கரித்தான் கோயில் இது என்கின்றது. துவர் - பவழம். பீடு - பெருமை. தரும் தடக்கை - வழங்கும் விசாலமான கை. முத்தழலோர் - முத்தழல் ஓம்பும் அந்தணர். அந்தணர் வீட்டில் மகளிர் இறைவன் புகழைப்பாடி அம்மானை பந்து கழங்கு ஆடுகின்ருர்கள் என்பதாம்.

அலங்கன்மலி வானவருந் தானவரு
மலைகடலைக் கடையப்பூதங்
கலங்கவெழு கடுவிடமுண் டிருண்டமணி
கண்டத்தோன் கருதுங்கோயில்
விலங்கலமர் புயன்மறந்து மீன்சனிபுக்
கூன்சலிக்குங் காலந்தானுங்
கலங்கலிலா மனப்பெருவண் கையுடைய
மெய்யர்வாழ் கழுமலமே. 3

பாரிதனை நலிந்தமரர் பயமெய்தச்
சயமெய்தும் பரிசுவெம்மைப்
போரிசையும் புரமூன்றும் பொன்றவொரு
சிலைவளைத்தோன் பொருந்துங்கோயில்
வாரிசைமென் முலைமடவார் மாளிகையின்
சூளிகைமேன் மகப்பாராட்டக்
காரிசையும் விசும்பியங்குங் கணங்கேட்டு
மகிழ்வெய்துங் கழுமலமே. 4

ஊர்கின்ற வரவமொளி விடுதிங்க
ளொடுவன்னி மத்தமன்னும்
நீர்நின்ற கங்கைநகு வெண்டலைசேர்
செஞ்சடையா னிகழுங்கோயில்

---

3. தேவரும் அசுரரும் பாற்கடலைக் கடைய எழுந்த விடத்தை உண்டு கறுத்தகண்டன் உறைகோயில் இது என்கின்றது. அலங்கல் - மாலை. விலங்கல் - மலை. புயல் - மேகம். மீன் சனி புக்கு - மகர ராசியில் சனி புகுந்து. ஊன் சலிக்கும் காலம்தானும் - உடல் வாடிய காலத்திலும். பஞ்சகாலத்தும் கலங்காத வள்ளல்கள் வாழும் நகர் என்க.

4. உலகை வருத்தி, தேவர் அஞ்ச, வெல்லும் வகை வில்லை வளைத்து புரம்எரித்த இறைவன் கோயில் இது என்கின்றது. பார் - பூமி. நலிந்து - வருத்தி. வார் - கச்சு. சூளிகை - உச்சி. மகளிர் மாளிகையின்மேல் குழந்தைகளைத் தாலாட்ட அதனைத் தேவர் கேட்டு மகிழும் கழுமலம் என்க.

ஏர்தங்கி மலர்நிலவி யிசைவெள்ளி
மலையென்ன நிலவிநின்ற
கார்வண்டின் கணங்களாற் கவின்பெருகு
சுதைமாடக் கழுமலமே. 5

தருஞ்சரதந் தந்தருளென் றடிநினைந்து
தழலணைந்து தவங்கள்செய்த
பெருஞ்சதுரர் பெயலர்க்கும் பீடார்தோ
ழமையளித்த பெருமான்கோயில்
அரிந்தவய லரவிந்த மதுவுகுப்ப
வதுகுடித்துக் களித்துவாளை
கருஞ்சகட மிளகவளர் கரும்பிரிய
வகம்பாயுங் கழுமலமே. 6

புவிமுதலைம் பூதமாய்ப் புலனைந்தாய்
நிலனைந்தாய்க் கரணநான்காய்
அவையவைசேர் பயனுருவா யல்லவுரு
வாய்நின்று னமருங்கோயில்
தவமுயல்வோர் மலர்பறிப்பத் தாழவிடு
கொம்புதைப்பக் கொக்கின்காய்கள்
கவணெறிகற் போற்சுனையிற் கரைசேரப்
புள்ளிரியுங் கழுமலமே. 7

---

5. அரவம், மதி, வன்னி, ஊமத்தம், கங்கை, கபாலம் இவைபொருந்திய செஞ்சடையான் கோயில் கழுமலம் என்கின்றது. ஏர் - அழகு.

6. அருளுக என்று அடிநினைந்து, தீநடுவில் தவஞ்செய்யும் சதுரர்க்கும், தோழமை தந்த பெருமான் கோயில் இது என்கின்றது. சரதம் - துணிவு. பீடு - பெருமை. அரிந்த வயல் - அறுத்தவயலிலே. அரவிந்தம் - தாமரை. வாளைமீன் தாமரைத் தேனைக்குடித்துப் பெரிய வண்டி இளக, கருப்பங்காடு விலகப் பாயும் கழுமலம் என்க.

7. ஐம்பூதமாய், ஐம்புலனாய், ஐந்நிலமாய், நாற்கரணமாய், அவற்றின்பயனாய், உருவாய், அருவாய் நின்றான் அமரும் கோயில் இது என்கின்றது. நிலன் ஐந்து - குறிஞ்சி பாலை முல்லை மருதம் நெய்தல் என்பன. கரணம் நான்கு - மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்பன. அவை அவை சேர்பயன் உருவாய் - பூத முதலியவற்றைச் சேர்ந்தபயனே வடிவாய்; என்றது பூதப்பயனாய சுவை முதலியதன்மாத்திரை ஐந்தும், புலனைந்தின்

அலங்கன்மலி வானவருந் தானவரு
மலைகடலைக் கடையப்பூதங்
கலங்கவெழு கடுவிடமுண் டிருண்டமணி
கண்டத்தோன் கருதுங்கோயில்
விலங்கலமர் புயன்மறந்து மீன்சனிபுக்
கூன்சலிக்குங் காலந்தானுங்
கலங்கலிலா மனப்பெருவண் கையுடைய
மெய்யர்வாழ் கழுமலமே. 3

பாரிதனை நலிந்தமரர் பயமெய்தச்
சயமெய்தும் பரிசுவெம்மைப்
போரிசையும் புரமூன்றும் பொன்றவொரு
சிலைவளைத்தோன் பொருந்துங்கோயில்
வாரிசைமென் முலைமடவார் மாளிகையின்
சூளிகைமேன் மகப்பாராட்டக்
காரிசையும் விசும்பியங்குங் கணங்கேட்டு
மகிழ்வெய்துங் கழுமலமே. 4

ஊர்கின்ற வரவமொளி விடுதிங்க
ளொடுவன்னி மத்தமன்னும்
நீர்நின்ற கங்கைநகு வெண்டலைசேர்
செஞ்சடையா னிகழுங்கோயில்

---

3. தேவரும் அசுரரும் பாற்கடலைக் கடைய எழுந்த விடத்தை உண்டு கறுத்தகண்டன் உறைகோயில் இது என்கின்றது. அலங்கல் - மாலை. விலங்கல் - மலை. புயல் - மேகம். மீன் சனி புக்கு - மகர ராசியில் சனி புகுந்து. ஊன் சலிக்கும் காலம்தானும் - உடல் வாடிய காலத்திலும். பஞ்சகாலத்தும் கலங்காத வள்ளல்கள் வாழும் நகர் என்க.

4. உலகை வருத்தி, தேவர் அஞ்ச, வெல்லும் வகை வில்லை வளைத்து புரம்எரித்த இறைவன் கோயில் இது என்கின்றது. பார் - பூமி. நலிந்து - வருத்தி. வார் - கச்சு. சூளிகை - உச்சி. மகளிர் மாளிகையின்மேல் குழந்தைகளைத் தாலாட்ட அதனைத் தேவர் கேட்டு மகிழும் கழுமலம் என்க.

ஏர்தங்கி மலர்நிலவி யிசைவெள்ளி
மலையென்ன நிலவிநின்ற
கார்வண்டின் கணங்களாற் கவின்பெருகு
சுதைமாடக் கழுமலமே. 5

தருஞ்சரதந் தந்தருளென் றடிநினைந்து
தழலணைந்து தவங்கள்செய்த
பெருஞ்சதுரர் பெயலர்க்கும் பீடார்தோ
ழமையளித்த பெருமான்கோயில்
அரிந்தவய லரவிந்த மதுவுகுப்ப
வதுகுடித்துக் களித்துவாளை
கருஞ்சகட மிளகவளர் கரும்பிரிய
வகம்பாயுங் கழுமலமே. 6

புவிமுதலைம் பூதமாய்ப் புலனைந்தாய்
நிலனைந்தாய்க் கரணநான்காய்
அவையவைசேர் பயனுருவா யல்லவுரு
வாய்நின்று னமருங்கோயில்
தவமுயல்வோர் மலர்பறிப்பத் தாழவிடு
கொம்புதைப்பக் கொக்கின்காய்கள்
கவணெறிகற் போற்சுனையிற் கரைசேரப்
புள்ளிரியுங் கழுமலமே. 7

---

5. அரவம், மதி, வன்னி, ஊமத்தம், கங்கை, கபாலம் இவைபொருந்திய செஞ்சடையான் கோயில் கழுமலம் என்கின்றது. ஏர் - அழகு.

6. அருளுக என்று அடிநினைந்து, தீநடுவில் தவஞ் செய்யும் சதுரர்க்கும், தோழமை தந்த பெருமான் கோயில் இது என்கின்றது. சரதம் - துணிவு. பீடு - பெருமை. அரிந்த வயல் - அறுத்தவயலிலே. அரவிந்தம் - தாமரை. வாளைமீன் தாமரைத் தேனைக்குடித்துப் பெரிய வண்டி இளக, கருப்பங்காடு விலகப் பாயும் கழுமலம் என்க.

7. ஐம்பூதமாய், ஐம்புலனாய், ஐந்நிலமாய், நாற்கரண மாய், அவற்றின்பயனாய், உருவாய், அருவாய் நின்றான் அமரும் கோயில் இது என்கின்றது. நிலன் ஐந்து - குறிஞ்சி பாலை முல்லை மருதம் நெய்தல் என்பன. கரணம் நான்கு - மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்பன. அவை அவை சேர்பயன் உரு வாய் - பூத முதலியவற்றைச் சேர்ந்தபயனே வடிவாய்; என்றது பூதப்பயனாய சுவை முதலியதன்மாத்திரை ஐந்தும், புலனைந்தின்

அடல்வந்த வானவரை யழித்துலகு
 தெழித்துழலு மரக்கர்கோமான்
மிடல்வந்த விருபதுதோ ணெரியவிரற்
 பணிகொண்டோன் மேவுங்கோயில்
நடவந்த வுழவரிது நடவொணு
 வகைபரலாய்த் தென்றுதுன்று
கடல்வந்த சங்கீன்ற முத்துவயற்
 கரைகுவிக்குங் கழுமலமே. 8

பூமகடன் கோனயனும் புள்ளினொடு
 கேழலுரு வாகிப்புக்கிட்
டாமளவுஞ் சென்றுமுடி யடிகாணு
 வகைநின்ற வரனமருங்கோயில்
பாமருவுங் கலைப்புலவோர் பன்மலர்கள்
 கொண்டணிந்து பரிசினாலே
காமனைகள் பூரித்துக் களிகூர்ந்து
 நின்றேத்துங் கழுமலமே. 9

---

பயனுய பொறியின்பம் ஐந்தும், நிலைனந்தின் பயனுய புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல் ஊடல் என்ற ஒழுக்கம் ஐந்தும், கரணம் நான்கின் பயனுய நினைத்தலும் புத்தி பண்ணலும் சிந்தித்தலும் இது செய்வேன் என அகங்கரித்து எழுதலுமாகிய நான்கும் கொள்ளப்பெறும். அல்ல வுருவாய் - இவையல்லாத அருவாய ஞானமாய். பூப்பறிப்போர் விட்ட பூங்கொம்புகள் சென்று தாக்க மாங்காய்கள் கவண்கல்லைப் போலச் சுனைக் கரையில் விழப் பறவைகள் அஞ்சியகலும் நகர் என்க.

8. தேவர்களை யழித்து உலகை வருத்தி உழலும் இராவணனது இருபது தோள்களும் நெரிய விரலூன்றிய சிவபெருமான் உறையுங் கோயில் நாற்று நடவந்த உழவர்கள் பருக்கைக் கல்லாக இருக்கிறதென்று எண்ணி முத்துக்களை வரப்பில் குவிக்கும் கழுமலம் என்கின்றது. அடல் - வலிமையோடு. ஒழித்து - கொன்று. மிடல் - வலிமை. பரல் ஆய்த்து - பருக்கைக் கல்லாயிற்று. துன்று - நெருங்கிய. இது நெய்தலொடு தழீஇய மருதம் என்பதை விளக்கிற்று.

9. பிரமனும் திருமாலும் அன்னமாயும், பன்றியாயும் அடிமுடிகாணப் பெருதான் அமருங் கோயில் புலவர்கள் பூக்கொண்டு அணிந்து இஷ்டத்தை நிறைவேற்ற வழிபாடு

குணமின்றிப் புத்தர்களும் பொய்த்தவத்தை
மெய்த்தவமாய் நின்றுகையில்
உணன்மருவுஞ் சமணர்களு முணராத
வகைநின்று றுறையுங்கோயில்
மணமருவும் வதுவையொலி விழவிநெலி
யிவையிசைய மண்மேற்றேவர்
கணமருவு மறையிநெலி கீழ்ப்படுக்க
மேற்படுக்குங் கழுமலமே. 10

கற்றவர்கள் பணிந்தேத்துங் கழுமலத்து
ளீசன்றன் கழன்மேனல்லோர்
நற்றுணையாம் பெருந்தன்மை ஞானசம்
பந்தன்று னயந்துசொன்ன
சொற்றுணையோ ரைந்திநெடைந் திவைவல்லார்
தூமலரா டுணைவராகி
முற்றுலக மதுவாண்டு முக்கணு
னடிசேர முயல்கின்றுரே. 11

திருச்சிற்றம்பலம்

---

செய்யும் கழுமலம் என்கின்றது. பூமகள் தன் கோன் - இலக்குமி நாயகனுகிய திருமால். புள் - பறவை யாகிய அன்னம். கேழல் - பன்றி. ஆம் அளவும் - ஆணவத்தால்விளைந்த தற்போதம் கெடுமளவும். காமனே - விருப்பம்.

10. குணமில்லாமல் புத்தர்களும், பொய்த் தவத்தை மெய்த்தவமாக்காட்டி யொழுகும் சமணர்களும் உணராதவகை நின்றுன் கோயில் திருமணவொலியும், விழவொலியும், தம்முட் கலக்க, பூவுலகில் தேவர்கள் கூட்டம் சேருங்கால் உளதாகும் வேதவொலி அடங்க அவை மேற்பட ஒலிக்கும் கழுமலம் என்கின்றது. வதுவை - தாலிகட்டுங் கல்யாணம்.

11. கழுமலத்தீசன் திருவடிமேல், கற்றவர் நற்றுணை யாகிய ஞானசம்பந்தன் சொன்ன திருப்பாடல் பத்தும் வல்லார் திருமகள் கணவராகி உலகமுழுதாண்டு சிவபெருமான் திருவடி சேர முயல்கின்றுர் என்கின்றது. சொல்துணை - ஓதுவார்க்குத் துணையான சொல்.

# திருவையாறு

**பதிகவரலாறு :**

திருப்பழனத்தில் எழுந்தருளியிருக்கின்ற முக்கட் பரமேட்டியைத் தொழுது, அங்கிருந்து, பிள்ளையார் ஐயாறு சென்றடைந்தார்கள். ஐயாற்று அடியார்கள் அனைவரும் 'சிவஞானத் தெள்ளமுது உண்ட திருஞான சம்பந்தப் பிள்ளையார் எழுந்தருளினர்' என்று ஊரை அலங்கரித்தனர். மனக்களிப்போடு எதிர்கொண்டு அழைத்தனர். நந்தி அருள் பெற்ற நன்னகராகிய ஐயாற்றை முதற்கண் வணங்கிப் 'புலனைந்தும் நிலைகலங்குமிடத்து அஞ்சல் என்பார்தம் ஐயாறு என்று' சிறப்பிக்கும் இப்பதிகத்தைப் பாடியருளினர். இதனைச் சேக்கிழார் பெருமான் 'புந்திநிறை செந்தமிழின் சந்த இசை' என வாயாரப் போற்றுவார்கள்.

பண் - மேகராகக்குறிஞ்சி

**பதிகம்:** **எண் 130**

*திருச்சிற்றம்பலம்*

புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
　　யறிவழிந்திட் டைம்மேலுந்தி
அலமந்த போதாக வஞ்சேலென்
　　றருள்செய்வா னமருங்கோயில்
வலம்வந்த மடவார்க ணடமாட
　　முழவதிர மழையென்றஞ்சிச்
சிலமந்தி யலமந்து மரமேறி
　　முகில்பார்க்குந் திருவையாறே. 1

---

1. ஐம்புலன்களும் தத்தம் பொறிகளை விட்டு வழிமாறி அறிவழிந்து கபம் மேலிட்டுவருந்துங்காலத்து அபயப் பிரதானம் செய்பவன் கோயில், வலம்வரும் பெண்கள் நடனம் செய்ய, அதற்குப் பக்கவாத்தியமாக முழவு அதிர, அவ்வொலியை மேகத் திடியோசை யென மயங்கி மந்திகள் மரம் ஏறி முகில் பார்க்கும் ஐயாறு என்கின்றது. ஐ - கபம். அலமந்து - சுழன்று. முகில் - மேகம்.

விடலேறு படநாக மரைக்கசைத்து
வெற்பரையன் பாவையோடும்
அடலேறொன் றதுவேறி யஞ்சொலீர்
பலியென்னு மடிகள்கோயில்
கடலேறித் திரைமோதிக் காவிரியி
னுடன்வந்து கங்குல்வைகித்
திடலேறிச் சுரிசங்கஞ் செழுமுத்தங்
கீன்றலைக்குந் திருவையாறே. 2

கங்காளர் கயிலாய மலையாளர்
கானப்பே ராளர்மங்கை
பங்காளர் திரிசூலப் படையாளர்
விடையாளர் பயிலுங்கோயில்
கொங்காளப் பொழினுழைந்து கூர்வாயா
லிறகுலர்த்திக் கூதனீங்கிச்
செங்கானல் வெண்குருகு பைங்கான
லிரைதேருந் திருவையாறே. 3

ஊன்பாயு முடைதலைகொண் டூர்நரின்
பலிக்குழல்வா ருமையாள்பங்கர்
தான்பாயும் விடையேறுஞ் சங்கரனார்
தழலுருவர் தங்குங்கோயில்

---

2. பாம்பைத் திருவரையிற்கட்டி, மலையரசன் மகளோடும் விடையேறி, அம்மா பிச்சை யிடுங்கள் என்னும் அடிகள் கோயில், கடற்சங்கம் காவிரியோடு மேல் ஏறி வந்து முத்தம் ஈன்றலைக்கும் ஐயாறு என்கின்றது. விடல் - வலிமை. அஞ்சொலீர் - அழகிய சொற்களை யுடையவர்களே. கங்குல் - இரவு. திடல் - மேடு. சுரி சங்கம் - சுரிந்த மூக்கினையுடைய சங்குகள்.

3. கங்காளர் மங்கைபங்காளர் பயிலுங் கோயில் வெண் குருகு பொழிலில் நுழைந்து அலகால் சிறகைக் கோதி, உலர்த்தி, குளிர்நீங்கி இரைதேடும் ஐயாறு என்கின்றது. கொங்கு ஆள் அப்பொழில் - தேன் நிறைந்த அச்சோலை. கூதல் - குளிர். செங்கால் நல் வெண் குருகு எனப்பிரிக்க. கானல் - கடற்கரைச் சோலை. இது திணைமயக்கம் கூறியது.

மான்பாய வயலருகே மரமேறி
மந்திபாய் மடுக்கடோறும்
தேன்பாய மீன்பாயச் செழுங்கமல
மொட்டலருந் திருவையாறே. 4

நீரோடு கூவிளமு நிலாமதியும்
வெள்ளெருக்கு நிறைந்தகொன்றைத்
தாரோடு தண்கரந்தை சடைக்கணிந்த
தத்துவனூர் தங்குங்கோயில்
காரோடி விசும்பளந்து கடிநாறும்
பொழிலணைந்த கமழ்தார்வீதித்
தேரோடு மரங்கேறிச் சேயிழையார்
நடம்பயிலுந் திருவையாறே. 5

வேந்தாகி விண்ணவர்க்கு மண்ணவர்க்கு
நெறிகாட்டும் விகிர்தனாகிப்
பூந்தாம நறுங்கொன்றை சடைக்கணிந்த
புண்ணியனூர் நண்ணுங்கோயில்
காந்தார மிசையமைத்துக் காரிகையார்
பண்பாடக் கவினார்வீதித்
தேந்தாமென் றரங்கேறிச் சேயிழையார்
நடமாடுந் திருவையாறே. 6

---

4. பிரமகபாலத்தை ஏந்தி ஊர்தோறும் பலிக்கு உழல்வாராகிய தழல் உருவர் தங்கும் கோயில், மான்பாய, வயலருகே யுள்ள மரத்தில் ஏறி மந்திகள் மடுக்கள் தோறும் பாய்வதால் தேன் பாய, மீன்பாய, தாமரைகள்மலரும் ஐயாறு என்கின்றது. மான்: முல்லைக்கருப்பொருள்.

5. கங்கையோடு வில்வம் எருக்கம்பூ முதலியவற்றைச் சடையிலணிந்த தத்துவனூர் தங்கும் கோயில் மேகமண்டலத்தை யளாவி விண்ணையளந்த பொழில்கள் சேர்ந்துள்ள தேரோடும் வீதியிலே உள்ள அரங்குகளில் மகளிர் நடமாடும் ஐயாறு என்கின்றது. கூவிளம் - வில்வம். கார் ஓடி - மேகம் பரந்து.

6. அரசாகி, வழிகாட்டும் வள்ளலாகிய பூங்கொன்றை சடைக்கணிந்த புண்ணியர் கோயில் காந்தாரப்பண்ணமைத்து மகளிர் இசைபாட, சேயிழையார் சிலர் அரங்கேறி நடமாடும் ஐயாறு என்கின்றது. தாமம் - மாலை.

நின்றுலா நெடுவிசும்பி னெருக்கிவரு
புரமூன்று நீள்வாயம்பு
சென்றுலாம் படிதொட்ட சிலையாளி
மலையாளி சேருங்கோயில்
குன்றெலாங் குயில்கூவக் கொழும்பிரச
மலர்பாய்ந்து வாசமல்கு
தென்றலா ரடிவருடச் செழுங்கரும்பு
கண்வளருந் திருவையாறே. 7

அஞ்சாதே கயிலாய மலையெடுத்த
வரக்கர்கோன் றலைகள்பத்தும்
மஞ்சாடு தோணெரிய வடர்த்தவனுக்
கருள்புரிந்த மைந்தர்கோயில்
இஞ்சாய விளநீெதங்கின் பழம்வீழ
விளமேதி யிரிந்தங்கோடிச்
செஞ்சாலிக் கதிருழக்கிச் செழுங்கமல
வயல்படியுந் திருவையாறே. 8

மேலோடி விசும்பணவி வியனிலத்தை
மிகவகழ்ந்து மிக்குநாடும்
மாலோடு நான்முகனு மறியாத
வகைநின்றான் மன்னுங்கோயில்

---

7. வானவீதியில் நெருங்கிவரும் முப்புரங்களையும் அம்பு தைக்கும் வண்ணம் வளைத்த வில்லாளி, மலையில் குயில் கூவத் தேன்பாய்ந்து மணம் நிறைந்த தென்றற்காற்று அடிவருடக் கரும்புதூங்கும் ஐயாறு என்கின்றது. பிரசம் - தேன். இதனால் தென்றற்காற்றின் சௌரப்யம், மாந்தியம் என்ற இருகுணங் களும் கூறப்பட்டன.

8. சிறிதும் அஞ்சாது கயிலையைத் தூக்கிய இராவணன் தலைகள் பத்தையும் நெரித்து அவனுக்கு அருள்செய்த மைந்தர் கோயில், தேங்காய் நெற்று வீழ, எருமை பயந்தோடி நெல் வயலை மிதித்துத் தாமரை முளைத்திருக்கின்ற வயலிலே படியும் ஐயாறு என்கின்றது. மஞ்சு - வலிமை. மைந்து என்பதன் திரிபு. இன் சாயல் - இனிய நிழல். இஞ்சாயல் என ஆயிற்று எதுகைநோக்கி. இளமேதி - ஈனுக்கன்றாகிய எருமை. செஞ் சாலி - செந்நெல்.

கோலோடக் கோல்வளையார் கூத்தாடக்
குவிமுலையார் முகத்தினின்று
சேலோடச் சிலையாடச் சேயிழையார்
நடமாடுந் திருவையாறே. 9

குண்டாடு குற்றுடுக்கைச் சமணரொடு
சாக்கியருங் குணமொன்றில்லா
மிண்டாடு மிண்டருரை கேளாதே
யாளாமின் மேவித்தொண்டீர்
எண்டோளர் முக்கண்ண ரெம்மீச
ரிறைவரினி தமருங்கோயில்
செண்டாடு புனற்பொன்னிச் செழுமணிகள்
வந்தலைக்குந் திருவையாறே. 10

அன்னமலி பொழில்புடைசூ ழையாற்றெம்
பெருமானை யந்தண்காழி
மன்னியசீர் மறைநாவன் வளர்ஞான
சம்பந்தன் மருவுபாடல்
இன்னிசையா லிவைபத்து மிசையுங்கா
லீசனடி யேத்துவார்கள்
தன்னிசையோ டமருலகிற் றவநெறிசென்
றெய்துவார் தாழா தன்றே. 11

திருச்சிற்றம்பலம்

---

9. மேலே பறந்தும் நிலத்தைத் தோண்டியும் தேடிய அயனும் மாலும் அறியாதவண்ணம் அழலுருவானவன் அமருங் கோயில், ஐயாறு என்கின்றது. அணவி - கலந்து. கோல் - கூத்தர் கையிற் கொள்ளும் அவிநயக்கோல். கோல் வளை - திரண்டவளை.

10. தொண்டர்களே! புறச் சமயிகளின் மொழிகளைக் கேளாதே ஆட்படுங்கள்; எம் இறைவர் அமருங்கோயில் காவிரி மணிகளைக் கொணர்ந்து எற்றும் திருவையாறு என்கின்றது. குற்றுடுக்கை - சிற்றுடை. மிண்டு - குறும்பான உரை. மேவி - விரும்பி. செண்டு - பூஉருண்டை.

11. ஐயாற்றெம்பெருமானைச் சம்பந்த சுவாமிகள் பாடல்களால் தோத்திரிப்பவர்கள் புகழோடு தேவருலகிற் செல்வார்கள் என்கின்றது. இசையோடு அமர் உலகு - தேவருலகு. தாழாது - தாமதியாது.

# திருமுதுகுன்றம்

*பதிகவரலாறு: (12-ம் பதிகம் பார்க்க)*

பண் - மேகராகக்குறிஞ்சி

**பதிகம்:** **எண் 131**

*திருச்சிற்றம்பலம்*

மெய்த்தாறு சுவையு மேழிசையு
 மெண்குணங்களும் விரும்புநால்வே
தத்தாலு மறிவொண்ணு நடைதெளியப்
 பளிங்கேபோ லரிவைபாகம்
ஒத்தாறு சமயங்கட் கொருதலைவன்
 கருதுமூ ருலவுதெண்ணீர்
முத்தாறு வெதிருதிர நித்திலம்வா
 ரிக்கொழிக்கு முதுகுன்றமே. 1

வேரிமிகு குழலியொடு வேடுவனய்
 வெங்கானில் விசயன்மேவு
போரின்மிகு பொறையளந்து பாசுபதம்
 புரிந்தளித்த புராணர்கோயில்

---

*1. சுவைகளும், இசையும், எண்குணங்களும், வேதமும் அறியவொண்ணாத தலைவன் அகச்சமயமாறுக்கும் ஒரேதலைவன் திருவுளங்கொண்ட ஊர் மணிமுத்தாறு மூங்கில் உதிர்த்த முத்துக்களைக் கொழிக்கும் திருமுதுகுன்றமே என்கின்றது. மெய்த்து ஆறு சுவை - உடற்கண்ணதாகிய உப்பு, புளிப்பு, கார்ப்பு, கைப்பு, தித்திப்பு, துவர்ப்பு என்னும் ஆறுசுவைகள். சுவை, இசை, வேதம் முதலியன மாயா காரியங்கள் ஆதலின் அவற்றால் அறியப்பெறாதவன் ஆயினன் இறைவன். பளிங்கே போல் - வெண்பளிங்கு போல். "சுத்த ஸ்படிக சங்காசம்" என்று இறைவனுக்கு நிறம் கூறுகிறது சிவாகமம். வெதிர் - மூங்கில்.*

காரின்மலி கடிபொழில்கள் கனிகள்பல
மலருதிர்த்துக் கயமுயங்கி
மூரிவளங் கிளர்தென்ற றிருமுன்றிற்
புகுந்துலவு முதுகுன்றமே. 2

தக்கனது பெருவேள்விச் சந்திரனிந்
திரனெச்ச னருக்கனங்கி
மிக்கவிதா தாவினொடும் விதிவழியே
தண்டித்த விமலர்கோயில்
கொக்கினிய கொழும்வருக்கை கதலிகமு
குயர்தெங்கின் குவைகொள்சோலை
முக்கனியின் சாறொழுகிச் சேறுலரா
நீள்வயல்சூழ் முதுகுன்றமே. 3

வெம்மைமிகு புரவாணர் மிகைசெய்ய
விறலழிந்து விண்ணுளோர்கள்
செம்மலரோ னிந்திரன்மால் சென்றிரப்பத்
தேவர்களே தேரதாக
மைம்மருவு மேருவிலு மாசுணநா
ணரியெரிகால் வாளியாக
மும்மதிலு நொடியளவிற் பொடிசெய்த
முதல்வனிட முதுகுன்றமே. 4

---

2. விசயனது பொறுமையளந்து பாசுபதம் அருளிய பரமன் கோயில், தென்றற்காற்று பொழிலில் கனியுதிர்த்து, மலர்சிந்தி, முன்றிலில் உலாவும் முதுகுன்றம் என்கின்றது. வேரி - தேன். மலர் உதிர்த்து என்றது தென்றலின் மண முடைமையையும், கயம் முயங்கி என்பது குளிர்மையையும் உணர்த்தின. கயம் - குளம். மூரி - வலிமை.

3. சிவத்துரோகியான தக்கன் யாகத்திற்குச் சென்ற குற்றத்திற்காகச் சந்திரன் முதலியோரை முறைப்படி தண்டித்த இறைவன் கோயில் முக்கனியின் சாறொழுகிச் சேறுலரா வயல்சூழ்ந்த முதுகுன்றம் என்கின்றது. எச்சன் - யாகபுருஷன். அருக்கன் - சூரியன். அங்கி - அக்கினி. விதாதா - பிரமன். கொக்கு - மாமரம். வருக்கை - பலா. கதலி - வாழை.

4. முப்புராதிகள் தீங்கு செய்ய, தேவர்கள் வேண்டு கோளின் வண்ணம், அவர்களைத் தேர் முதலிய சாதனங்களாகக் கொண்டு எரித்த முதல்வனிடம் முதுகுன்றம் என்கின்றது.

இழைமேவு கலையல்கு லேந்திழையா
 ளொருபாலா யொருபாலெள்கா
துழைமேவு முரியுடுத்த வொருவனிருப்
 பிடமென்ப ரும்பரோங்கு
கழைமேவு மடமந்தி மழைகண்டு
 மகவினொடும் புகவொண்கல்லின்
முழைமேவு மால்யானை யிரைதேரும்
 வளர்சாரன் முதுகுன்றமே. 5

நகையார்வெண் டலைமாலை முடிக்கணிந்த
 நாதனிட நன்முத்தாறு
வகையாரும் வரைப்பண்டங் கொண்டிரண்டு
 கரையருகு மறியமோதித்
தகையாரும் வரம்பிடறிச் சாலிகழு
 நீர்குவளை சாயப்பாய்ந்து
முகையார்செந் தாமரைகண் முகமலர
 வயறழுவு முதுகுன்றமே. 6

---

விறல் - வலிமை. மாசுணம் - வாசுகியென்னும் பாம்பு. அரி, எரி, கால் வாளியாக - திருமாலும், அங்கியும், காற்றுமாகிய முத்தேவர்களும் அம்பாக.

5. ஒருபால் உமை விளங்க, ஒருபால் மான்தோலை யுடுத்திய ஒருவன் இருப்பிடம் மந்தி மழையைக் கண்டு குட்டியோடு குகையையடைய, யானை இரைதேடும் முதுகுன்றம் என்கின்றது. இழை - அணி. எள்காது - இகழாது. உழை மேவும் உரி - மானினது தோல். கழை - மூங்கில். மந்தி - பெண் குரங்கு. முழை - குகை.

6. தலைமாலையணிந்த தலைவனிடம், மணிமுத்தாறு மலைப் பண்டங்களைக் கொண்டு இருகரையிலும் எடுத்து எறிந்து, கரையை யுடைத்துக்கொண்டு, நெல்லும் கழுநீரும் குவளையும் சாயப்பாய்ந்து, தாமரை மலர வயலைத் தழுவும் முதுகுன்றம் என்கிறது. நகை - பல். வரைப்பண்டம் - மலைபடுதிரவியம்.

அறங்கிளரு நால்வேத மாலின்கீ
ழிருந்தருளி யமரர்வேண்ட
நிறங்கிளர்செந் தாமரையோன் சிரமைந்தி
னொன்றறுத்த நிமலர்கோயில்
திறங்கொண்மணித் தரளங்கள் வரத்திரண்டங்
கெழிற்குறவர் சிறுமிமார்கள்
முறங்களினாற் கொழித்துமணி செலவிலக்கி
முத்துலைப்பெய் முதுகுன்றமே. 7

கதிரொளிய நெடுமுடிபத் துடையகட
லிலங்கையர்கோன் கண்ணும்வாயும்
பிதிரொளிய கனல்பிறங்கப் பெருங்கயிலை
மலையைநிலை பெயர்த்தஞான்று
மதிலளகைக் கிறைமுரல மலரடியொன்
றூன்றிமறை பாடவாங்கே
முதிரொளிய சுடர்நெடுவாண் முன்னீந்தான்
வாய்ந்தபதி முதுகுன்றமே. 8

பூவார்பொற் றவிசின்மிசை யிருந்தவனும்
பூந்துழாய் புனைந்தமாலும்
ஓவாது கழுகேன மாயுயர்ந்தாழ்ந்
துறநாடி யுண்மைகாணாத்
தேவாருந் திருவுருவன் சேருமலை
செழுநிலத்தை மூடவந்த
மூவாத முழங்கொலிநீர் கீழ்தாழ
மேலுயர்ந்த முதுகுன்றமே. 9

---

*7. ஆலின் கீழிருந்து சனகாதியர்க்கு வேதப்பொருளை அருளிச்செய்து, தேவர் வேண்டுகோட்கிரங்கிப் பிரமன் சிரங் கொய்த நிமலர் கோயில், குறச்சிறுமியர் முறத்தால் முத்தைக் கொழித்துச் சிற்றுலையிற் கொட்டும் முதுகுன்றம் என்கின்றது. தரளம் - முத்து. மணி - மாணிக்கங்கள்.*

*8. இராவணனுக்கு மறக்கருணையும் அறக்கருணையும் காட்டி யாட்கொண்டவனிடம் முதுகுன்றம் என்கின்றது. அளகைக்கு இறை முரல - குபேரன் தன் பகைவனாகிப் புஷ்பக விமானத்தைக் கவர்ந்த இராவணன் ஒழிந்தான் என்று மகிழ்ச்சி ஒலிக்க.*

*9. அயனும் மாலும் ஆழ்ந்தும் உயர்ந்தும் தேடியும் அறியமுடியாத இறைவனிடம், ஊழியில் உயர்ந்த முதுகுன்றம்*

மேனியிற்சீ வரத்தாரும் விரிதருதட்
டுடையாரும் விரவலாகா
ஊனிகளா யுள்ளார்சொற் கொள்ளாது
முள்ளுணர்ந்தங் குய்மின்றொண்டீர்
ஞானிகளா யுள்ளார்க ணான்மறையை
முழுதுணர்ந்தைம் புலன்கள்செற்று
மோனிகளாய் முனிச்செல்வர் தனித்திருந்து
தவம்புரியு முதுகுன்றமே. 10

முழங்கொலிநீர் முத்தாறு வலஞ்செய்யு
முதுகுன்றத் திறையைமூவாப்
பழங்கிழமைப் பன்னிருபேர் படைத்துடைய
கழுமலமே பதியாக்கொண்டு
தழங்கெரிமூன் றோம்புதொழிற் றமிழ்ஞான
சம்பந்தன் சமைத்தபாடல்
வழங்குமிசை கூடும்வகை பாடுமவர்
நீடுலக மாள்வர்தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

என்கின்றது. தவிசு - ஆசனம். துழாய் - துளசி. ஓவாது - இடைவிடாது. கழுகு - பறவையின் பொதுப் பெயராய் அன்னத்தை யுணர்த்தியது. ஏனம் - பன்றி.

10. தொண்டர்களே! புத்தரும் சமணருமாகிய ஊனி களின் சொற்கொள்ளாது உள்ளுணர்ந்து உய்யுங்கள்! ஞானி கள்வேதத்தை யுணர்ந்து ஐம்புலன்களையும் அடக்கி, மோனி களாய்த் தனித்திருந்து தவம் புரியும் இடம் முதுகுன்றம் என்கின்றது. ஞானி - அறிவை வளர்ப்பவன். ஊனி - உடம்பை வளர்ப்பவன்.

11. முதுகுன்றநாதனைப் பன்னிருநாமம் படைத்த பழம் பதியாகிய காழியை யிடமாகக்கொண்ட, தழலோம்பு தொழி லுடைய தமிழ் ஞானசம்பந்தன் அமைத்த பாடல்களை இசை கூடும் வகை பாடுபவர்கள் உலகத்தை நெடுங்காலம் ஆள்வர் என்கின்றது தழங்கு - ஒலிக்கின்ற. எரிமூன்று - ஆகவனீயம், காருகபத்யம், தக்ஷிணாக்கினி என்பன.

# திருவீழிமிழலை

***பதிகவரலாறு :*** *(11-ம் பதிகம் பார்க்க)*

பண் - மேகராகக்குறிஞ்சி

**பதிகம் :** **எண் 132**

*திருச்சிற்றம்பலம்*

ஏரிசையும் வடவாலின் கீழிருந்தங்
கீரிருவர்க் கிரங்கிநின்று
நேரியநான் மறைப்பொருளை யுரைத்தொளிசேர்
நெறியளித்தோ னின்றகோயில்
பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும்
பயின்றோது மோசைகேட்டு
வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள்
பொருட்சொல்லு மிழலையாமே. 1

பொறியரவ மதுசுற்றிப் பொருப்பேமத்
தாகப்புத் தேளிர்கூடி
மறிகடலைக் கடைந்திட்ட விடமுண்ட
கண்டத்தோன் மன்னுங்கோயில்
செறியிதழ்த்தா மரைத்தவிசிற் றிகழ்ந்தோங்கு
மிலைக்குடைக்கீழ்ச் செய்யார் செந்நெல்
வெறிகதிர்ச்சா மரையிரட்ட விளவன்னம்
வீற்றிருக்கு மிழலையாமே. 2

---

*1. வடவாலமரத்தின்கீழ் நால்வர்க்கு அறம் உரைத்து ஒளிநெறியளித்த இறைவன்கோயில், பண்டிதர்கள் பலகாற் பயிலும் ஓசையைக்கேட்டு, கிளிகள் வேதப்பொருள் சொல்லும் திருவீழிமிழலையாம் என்கின்றது. ஏர் - அழகு. எழுச்சியுமாம். ஈரிருவர் - சனகர் முதலிய தேவமுனிவர் நால்வர். "நேரிய நான் மறைப்பொருள்" எனவே இங்ஙனம் இறைவன்முன் உணராத பரம்பரையினர் தற்போத முனைப்பால் நேர்மையற்ற பொருளுங் கொள்வர் என்பது அமைந்து கிடந்தது. ஒளிசேர் நெறி - சிவ ஞான நெறி. வேரி - தேன்.*

*2. வாசுகியை கடைகயிறாகச் சுற்றி, மந்தரமே மத்தாக, தேவர்கள்கூடி பாற்கடலைக் கடைந்தகாலத்து எழுந்த விடத்தை*

எழுந்துலகை நலிந்துழலு மவுணர்கடம்
புரமூன்று மெழிற்கணுடி
உழுந்துருளு மளவையினொள் ளெரிகொளவெஞ்
சிலைவளைத்தோ னுறையுங்கோயில்
கொழுந்தரள நகைகாட்டக் கோகநத
முகங்காட்டக் குதித்துநீர்மேல்
விழுந்தகயல் விழிகாட்ட விற்பவளம்
வாய்காட்டு மிழலையாமே. 3

உரைசேரு மெண்பத்து நான்குநூ
றுயிரமாம் யோனிபேத
நிரைசேரப் படைத்தவற்றி னுயிர்க்குயிரா
யங்கங்கே நின்றான்கோயில்
வரைசேரு முகின்முழவ மயில்கள்பல
நடமாட வண்டுபாட
விரைசேர்பொன் னிதழிதர மென்காந்தள்
கையேற்கு மிழலையாமே. 4

---

உண்ட கண்டன் மன்னுங்கோயில், தாமரையாசனத்தில் இலை குடையாக, செந்நெற்கற்றை சாமரையாக, இள அன்னம் வீற்றிருக்கும் மிழலையாம் என்கின்றது. பொறியரவம் - படப்பொறிகளோடு கூடிய வாசுகியென்னும் பாம்பு. மறி கடல் - அலைகள் மறிகின்ற கடல். செய் - வயல். வெறி - மணம்.

3. உலகை வருத்தும் அவுணர்தம் புரத்தை உழுந்துருளும் காலத்தில் எரித்த இறைவன்கோயில், முத்து மகளிர் பல்காட்ட, தாமரை முகங்காட்ட, துள்ளுங்கயல் விழிகாட்ட, பவளம் வாய்காட்டும் வீழிமிழலையாம் என்கின்றது. நலிந்து - வருத்தி. உழுந்து உருளும் அளவை - ஓர் உளுந்து உருளக்கூடிய காலச் சிறுமையில். தரளம் - முத்து. கோகநதம் - தாமரை. வில் - ஒளி.

4. எண்பத்து நான்கு லக்ஷம் யோனிபேதங்களையும் படைத்து, அவற்றின் உயிர்க்குயிராக நிற்கும் இறைவன் கோயில், முகிலாகிய முழவம் ஒலிக்க, மயில் நடமாட, வண்டு பாட, கொன்றைமரம் பொற்பரிசில் வழங்க, காந்தள் கையேற்று வாங்கும் மிழலையாம் என்கின்றது. உரைசேரும் - நூல்களில் உரைக்கப்பெறுகின்ற. முகில் - மேகம். விரை - மணம். இதழி - கொன்றை.

காணுமா றரியபெரு மானாகிக்
காலமாய்க் குணங்கண்மூன்றாய்ப்
பேணுமூன் றுருவாகிப் பேருலகம்
படைத்தளிக்கும் பெருமான்கோயில்
தாணுவாய் நின்றபர தத்துவனை
யுத்தமனை யிறைஞ்சீரென்று
வேணுவார் கொடிவிண்ணோர் தமைவிளிப்ப
போலோங்கு மிழலையாமே. 5

அகனமர்ந்த வன்பினரா யறுபகைசெற்
றைம்புலனு மடக்கிஞானம்
புகலுடையோர் தம்முள்ளப் புண்டரிகத்
துள்ளிருக்கும் புராணர்கோயில்
தகவுடைநீர் மணித்தலத்துச் சங்குளவர்க்
கந்திகழச் சலசத்தீயுள்
மிகவுடைய புன்குமலர்ப் பொரியட்ட
மணஞ்செய்யு மிழலையாமே. 6

---

5. காணுதற்கரிய கடவுளாகி, காலம் குணம் இவையுமாகி, எல்லாராலும் போற்றப்பெறும் பிரம விஷ்ணு ருத்ரனாகி, பெரிய உலகத்தைப் படைத்தும் அளிக்கும் பெருமான்கோயில், இறைவனை வணங்குங்கள் என்று கொடிகள் தேவரையழைக்கும் வீழிமிழலை என்கின்றது. காலமாய் - இறப்பு நிகழ்வு எதிர்வு என்ற மூன்றுகாலமாய்; என்றது எல்லாவற்றையும் அடக்கித் தம் எல்லைக்குள் இன்பத்துன்பங்களை எய்தி நடக்கச்செய்தலின். குணங்கள் மூன்றாய் - சாத்துவிகம் முதலிய குணங்கள் மூன்றாய். பேணும்-போற்றப்பெறுகின்ற. படைத்து அளித்து எனவே அழித்தலாகிய இவர்தொழில் சொல்லாமலே பெறப்பட்டது. தாணு - நிலைத்தபொருள். தூண் வடிவு என்றுமாம் வேணுவார்கொடி - மூங்கிற்றண்டில் கோக்கப்பெற்ற நீளமான கொடிகள். விண்ணோர்கள் போகத்தால் மோகித்து மறந்திருத்தலின் கொடிகள் நினைவூட்டி அழைக்க வேண்டியதாயிற்று.

6. உள்ளன்புடையாராக அரிஷட் வர்க்கங்களை அழித்து, ஐம்புலன்களையும் அடக்கிய சிவஞானச் சேர்க்கையுடையோர்களின் இதயத் தாமரையில் எழுந்தருளியிருக்கும் இறைவன் கோயில் அழகிய இடத்தில் சங்குகளாகிற சுற்றம்விளங்க

ஆருடு சடைமுடிய னனலாடு
மலர்க்கைய னிமயப்பாவை
கூருடு திருவுருவன் கூத்தாடுங்
குணமுடையோன் குளிருங்கோயில்
சேருடு செங்கழுநீர்த் தாதாடி
மதுவுண்டு சிவந்தவண்டு
வேருய வுருவாகிச் செவ்வழிநற்
பண்பாடு மிழலையாமே. 7

கருப்பமிகு முடலடர்த்துக் காலூன்றிக்
கைமறித்துக் கயிலையென்னும்
பொருப்பெடுக்க லுறுமரக்கன் பொன்முடிதோள்
நெரித்தவிரற் புனிதர்கோயில்
தருப்பமிகு சலந்தரன்ற னுடறடிந்த
சக்கரத்தை வேண்டியீண்டு
விருப்பொடுமால் வழிபாடு செய்யவிழி
விமானஞ்சேர் மிழலையாமே. 8

---

*தாமரையாகிய தீயில் புன்கம் பொரிதூவி மணங்களைச்செய்யும் மிழலைஎன்கின்றது. உள்ளப்புண்டரிகம்-இதயத்தாமரை. தகவு-தகுதி. நீர் மணித்தலத்து - நீரோட்டத்தோடு கூடிய இரத்தினங்கள் அழுத்தப்பெற்ற இடத்து. சங்கு உளவர்க்கம் திகழ - சங்குகளாகிய உள்ளசுற்றம் விளங்க. சலசத்தீயில் - தாமரைப் பூவாகிய தீயில். மலர்ந்த தாமரையைத் தீக்கு ஒப்பிடுவது மரபு. அட்ட மணம்செயும் - எண்வகை மணஞ்செய்யும் என்பாரும் உளர். காந்தருவம், இராக்கதம், பைசாசம், ஆசுரம் முதலியவற்றிற்குப் பொரிதூவலின்மை உணர்க.*

*7. ஆறுசேர் முடியன், அனல்சேர் கையன், உமையொரு கூறன், கூத்தன்கோயில், செங்கழுநீர்ப்பூவின் மகரந்தத்தில் ஆடி, தேன்குடித்துச் சிவந்த வண்டு வேற்றுவடிவுகொண்டு செவ்வழிப் பண்ணைப்பாடும் மிழலையாம் என்கின்றது. தாது - மகரந்தம்.*

*8. கைலையை எடுக்கலுற்ற இராவணனை நெரித்த விரலையுடைய பெருமான்கோயில், சலந்தரன் உடலையழித்த சக்கரத்தைத் திருமால் வழிபட்டுப்பெற்ற திருவீழிமிழலை என்கின்றது.*

செந்தளிர்மா மலரோனுந் திருமாலும்
    ஏனமோ டன்னமாகி
அந்தமடி காணாதே யவரேத்த
    வெளிப்பட்டோ னமருங்கோயில்
புந்தியினுன் மறைவழியே புற்பரப்பி
    நெய்சமிதை கையிற்கொண்டு
வெந்தழலின் வேட்டுலகின் மிகவளிப்போர்
    சேருமூர் மிழலையாமே. 9

எண்ணிறந்த வமணர்களு மிழிதொழில்சேர்
    சாக்கியரு மென்றுந்தன்னை
நண்ணரிய வகைமயக்கித் தன்னடியார்க்
    கருள்புரியு நாதன்கோயில்
பண்ணமரு மென்மொழியார் பாலகரைப்
    பாராட்டு மோசைகேட்டு
விண்ணவர்கள் வியப்பெய்தி விமானத்தோ
    டும்மிழியு மிழலையாமே. 10

---

*கருப்பமிகும் உடல் - கருப்பையில் இருந்து வளர்ந்துவந்த உடல். என்றது அப்பிராகிருதமான கைலையைத்தீண்டும் உரிமையுங் கூட பிராகிருதமேனிதாங்கிய இவற்கில்லை என்பது உணர்த்திய வாறு. தருப்பம் - கொழுப்பு; செருக்குமாம், மால் வழிபாடு செய்த வரலாறு இத்தலத்து நிகழ்ச்சி. இழிவிமானம் - விண்ணிழி விமானம். இது இத்தலத்து விமானம்.*

*9. அயனும் மாலும், அன்னமும் ஏனமுமாகித் தேடியறிய முடியாது வணங்க வெளிபட்ட இறைவன்கோயில், வேதவிதிப் படி தருப்பையைப்பரப்பி, நெய் சமித்து இவைகளைக்கொண்டு வேள்விசெய்து, உலகைக்காக்கும் அந்தணர் வாழும் மிழலையாம் என்கின்றது. அந்தம் - முடி. புந்தியினுல் - அறிவால். வேட்டு - வேள்விசெய்து.*

*10. புத்தரும் சமணரும் தம்மை அறியாவகையாக அவர் களை மயக்கித் தன் அடியார்க்கு அருள்புரியும் நாதன்கோயில், பண்மொழிப் பாவைமார்கள் பாலகரைப் பாராட்டும் ஓசை கேட்டு விண்ணவர்கள் விமானத்தோடு வந்திறங்கும் வீழிமிழலை என்கின்றது.*

மின்னியலு மணிமாட மிடைவீழி
மிழலையான் விரையார்பாதம்
சென்னிமிசைக் கொண்டொழுகுஞ் சிரபுரக்கோன்
செழுமறைகள் பயிலுநாவன்
பன்னியசீர் மிகுஞான சம்பந்தன்
பரிந்துரைத்த பத்துமேத்தி
இன்னிசையாற் பாடவல்லா ரிருநிலத்தி
லீசனெனு மியல்பினோரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*11. வீழிநாதன் திருவடியைச் சிரமேற்கொண்டு ஒழுகும் திருஞானசம்பந்தர் பரிந்துரைத்த பாடல் வல்லார் பெரியபூமியில் ஈசன் எனும் இயல்புடையோர் ஆவர் என்கின்றது. பரிந்து - அன்புகொண்டு.*

# திருக்கச்சியேகம்பம்

***பதிகவரலாறு :*** *(சந்தர்ப்பம் தெரியவில்லை.)*

**பண் - மேகராகக்குறிஞ்சி**

**பதிகம் :** **எண் 133**

*திருச்சிற்றம்பலம்*

வெந்தவெண் பொடிப்பூசு மார்பின்விரி நூலொருபால் பொருந்தக்
கந்தமல்கு குழலியோடுங் கடிபொழிற் கச்சி தன்னுள்
அந்தமில் குணத்தா ரவர்போற்ற வணங்கினொ டாடல்புரி
எந்தை மேவிய வேகம்பந் தொழுதேத்த விடர்கெடுமே. 1

வரந்திகழு மவுணர் மாநகர்மூன் றுடன்மாய்ந் தவியச்
சரந்துரந் தெரிசெய்த தாழ்சடைச் சங்கரன் மேயவிடம்
குருந்த மல்லிகை கோங்குமா தவிநல்ல குராமரவம்
திருந்துபைம் பொழிற்கச்சி யேகம்பஞ் சேர விடர்கெடுமே. 2

வண்ணவெண் பொடிப்பூசு மார்பின் வரியர வம்புனைந்து
பெண்ணமர்ந் தெரியாடல் பேணிய பிஞ்ஞகன் மேயவிடம்
விண்ணமர் நெடுமாட மோங்கி விளங்கிய கச்சிதன்னுள்
திண்ணமாம் பொழில்சூழ்ந்த வேகம்பஞ் சேர விடர்கெடுமே. 3

---

*1. திருநீறு பூசிய திருமார்பிற் பூணூல் கிடந்திலங்க, உமாதேவியோடு எழுந்தருளிய கச்சியுள் எல்லையற்ற குணங்களையுடைய அடியார்கள் போற்ற எந்தை மேவிய ஏகம்பம் தொழுதேத்த இடர்கெடும் என்கின்றது. அந்தம் - முடிவு. அணங்கினொடு - பார்வதியோடு.*

*2. திரிபுரம் எரியச் சரம்விட்ட சங்கரன்மேவிய இடமாகிய பொழில் சூழ்ந்த ஏகம்பம்சேர இடர்கெடும் என்கின்றது. துரந்து - செலுத்தி. மாதவி - குருக்கத்தி. மரவம் - வெண்கடம்பு.*

*3. திருநீறணிந்த மார்பில் அரவம் அணிந்து, பெண்ணை ஒருபால் விரும்பி, எரிக்கண் திருநடனத்தை விரும்பிய பிஞ்ஞகன் இடம், விண்ணளாவிய மாடமோங்கிய கச்சியுள் ஏகம்பம் ஆம்; அதனைச்சேர இடர்கெடும் என்கின்றது. பிஞ்ஞகன் - மயிற்பீலியை யுடையான்.*

தோலுநா லுந்துதைந்த வரைமார்பிற் சுடலைவெண் ணீறணிந்து
காலன்மாள் வுறக்காலாற் காய்ந்த கடவுள் கருதுமிடம்
மாலைவெண் மதிதோயு மாமதிற் கச்சி மாநகருள்
ஏலநாறிய சோலைசூ ழேகம்ப மேத்த விடர்கெடுமே. 4

தோடணிம் மலர்க்கொன்றை சேர்சடைத் தூமதி யம்புனைந்து
பாடலுன் மறையாகப் பல்கணப் பேய்க ளவைசூழ
வாடல்வெண் டலையோ டனலேந்தி மகிழ்ந்துட னுடல்புரி
சேடர்சேர் கலிக்கச்சி யேகம்பஞ் சேர விடர்கெடுமே. 5

சாகம்பொன் வரையாகத் தானவர் மும்மதில் சாயவெய்து
ஆகம்பெண் ணொருபாக மாக வரவொடு நூலணிந்து
மாகந்தோய் மணிமாட மாமதிற் கச்சி மாநகருள்
ஏகம்பத் துறையீசன் சேவடி யேத்த விடர்கெடுமே. 6

* * * * 7

வாணிலா மதிபுல்கு செஞ்சடை வாளர வம்மணிந்து
நாணிடத் தினில்வாழ்க்கை பேணி நகுதலையிற் பலிதேர்ந்
தேணிலா வரக்கன்ற னீண்முடி பத்து மிறுத்தவனூர்
சேணுலாம் பொழிற்கச்சி யேகம்பஞ் சேர விடர்கெடுமே. 8

---

*4. கரு மான் தோலும் பூணூலும் நெருங்கிய மார்பில் நீறணிந்து காலனைக் காய்ந்த கடவுள் கருதுமிடம், கச்சியுள் ஏகம்பம்; அதனை ஏத்த இடர்கெடும் என்கின்றது.*

*5. இதழோடு கூடிய அழகிய கொன்றைமலரை அணிந்த சடையிலே பிறைமதியைச் சூடி, நான்மறை பாடலாக, பேய்க்கணம் புடைசூழ, அனலேந்தி ஆடும் பெரியோன் சேரும் இடம் கச்சியுள் ஏகம்பம் என்கின்றது. சேடர் - உலகம் அழியத் தான் எஞ்சி நிற்பவர். சேர - தியானிக்க.*

*6. மேருமலை வில்லாக முப்புரம் எரித்து, உடலில் ஒரு பாகம் பெண்ணாக ஏற்று, அரவையும் நூலையும் அணிந்து கச்சி யேகம்பத்துள் அமர்ந்த ஈசன் திருவடி ஏத்த இடர்கெடும் என்கின்றது. சாகம் - வில். சாபம் எதுகை நோக்கிச் சாகம் ஆயிற்று. தானவர் - அசுரர். ஆகம் - உடல். மாகம் - ஆகாயம்.*

*8. பிறையணிந்த செஞ்சடையில் அரவத்தையும் அணிந்து, இடப்பாகத்து நாணோடு கூடிய இல்வாழ்க்கைக்குரிய உமா தேவியை வைத்து, மண்டையோட்டில் பிச்சை யேற்று,*

பிரமனுந் திருமாலுங் கைதொழப் பேரழ லாயபெம்மான்
அரவஞ் சேர்சடை யந்தண னணங்கினொ டமருமிடம்
கரவில்வண் கையினர்கள் வாழ்கலிக் கச்சி மாநகருள்
மரவஞ்சூழ் பொழிலேகம் பந்தொழ வல்வினை மாய்ந்தறுமே. 9

குண்டுபட் டமணா யவரொடுங் கூறைதம் மெய்போர்க்கும்
மிண்டர் கட்டிய கட்டுரை யவைகொண்டு விரும்பேன்மின்
விண்டவர் புரமூன்றும் வெங்கணை யொன்றினா லவியக்
கண்டவன் கலிக்கச்சி யேகம்பங் காண விடர்கெடுமே. 10

ஏரினார் பொழில்சூழ்ந்த கச்சி யேகம்ப மேயவனைக்
காரினார் மணிமாட மோங்கு கழுமல நன்னகருள்
பாரினார் தமிழ்ஞான சம்பந்தன் பரவிய பத்தும்வல்லார்
சீரினார் புகழோங்கி விண்ணவ ரோடுஞ் சேர்பவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*இராவணன் சிரம் பத்தும் இறுத்தவனூர் கச்சி ஏகம்பம் என்கின்றது. வாள் நிலா - ஒளிபொருந்திய நிலா. புல்கு - தழுவிய. இல்வாழ்க்கை - மனையில் வாழ்தலையுடையாளாகிய உமாதேவி; தொழிலாகுபெயர். ஏண் - உறுதி. சேண் - ஆகாயம்.*

*9. அயனும் மாலும் அடிவணங்க அழல்வண்ணமாகிய பெருமான் உமாதேவியோடு உறையுமிடம், வள்ளல்கள் வாழ்கின்ற கச்சியில் ஏகம்பமாம்; அதனைத்தொழ வல்வினையறும் என்கின்றது. கரவு - உள்ளதை மறைக்கும் வஞ்சம். மரவம் - மல்லிகை.*

*10. புறச்சமயிகள் கூறும் கட்டுரைகளை நம்பாதீர்கள்; அவை அவர்கள் கட்டிய கட்டுக்கள்; பகைவரது முப்புரங்களும் ஓரம்பினால் உடையச்செய்தவனூர் கச்சி ஏகம்பம் என்கின்றது. குண்டுபட்டு - உடல்பருத்து. கூறை - ஆடை. விண்டவர் - பகைவர்.*

*11. இப்பதிகம் வல்லவர்கள் புகழ் ஓங்கித் தேவர்களோடும் சேர்வர் என்கின்றது. ஏரின் ஆர் பொழில் - அழகு நிறைந்த சோலை. காரின் ஆர் - மேகங்கள் கவிந்த.*

# திருப்பறியலூர்வீரட்டம்

***பதிகவரலாறு :***

*திருச்செம்பொன்பள்ளி திருவிளநகர் முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு, பிள்ளையார் பரமர்தம் திருப்பறியலூரைப் பரவி, இப்பதிகத்தை அருளிச்செய்தார்கள்.*

**பண் - மேகராகக்குறிஞ்சி**

**பதிகம் :** **எண் 134**

*திருச்சிற்றம்பலம்*

கருத்தன் கடவுள் கனலேந் தியாடும்
நிருத்தன் சடைமே னிரம்பா மதியன்
திருத்த முடையார் திருப்பறி யலூரில்
விருத்தனெ னத்தகும் வீரட்டத் தானே. 1

மருந்த னமுதன் மயானத்துண் மைந்தன்
பெருந்தண் புனற்சென்னி வைத்த பெருமான்
திருந்து மறையோர் திருப்பறி யலூரில்
விரிந்த மலர்ச்சோலை வீரட்டத் தானே. 2

குளிர்ந்தார் சடையன் கொடுஞ்சிலை விற்காமன்
விளிந்தா னடங்க வீந்தெய்தச் செற்றான்
தெளிந்தார் மறையோர் திருப்பறி யலூரில்
மிளிர்ந்தார் மலர்ச்சோலை வீரட்டத் தானே. 3

---

*1. இப்பதிகம் முழுதும் எல்லாவுயிர்கட்குங் கருத்தனாய், கடவுளாய், விருத்தனாய் இருப்பவன் திருப்பறியலூர் வீரட்டத் தான் என இறைவனியல்பு அறிவிக்கின்றது. திருத்தம் உடையார் - பிழையொடு பொருந்தாதே திருந்திய மனமுடைய அடியார். விருத்தன் - தொன்மையானவன்.*

*2. மருந்தன் - பிணிதீர்க்கும் மருந்தானவன்.*

*3. கொடுஞ்சிலை - வளைந்த வில். விளிந்தான் - இறந்தான். வீந்து எய்த - இறந்து பின்னரும் வர. செற்றான் - கொன்றவன்.*

# திருக்கச்சியேகம்பம்

***பதிகவரலாறு:*** *(சந்தர்ப்பம் தெரியவில்லை.)*

**பண் - மேகராகக்குறிஞ்சி**

**பதிகம்:** **எண் 133**

*திருச்சிற்றம்பலம்*

வெந்தவெண் பொடிப்பூசு மார்பின்விரி நூலொருபால் பொருந்தக்
கந்தமல்கு குழலியோடுங் கடிபொழிற் கச்சி தன்னுள்
அந்தமில் குணத்தா ரவர்போற்ற வணங்கினொ டாடல்புரி
எந்தை மேவிய வேகம்பந் தொழுதேத்த விடர்கெடுமே. 1

வரந்திகழு மவுணர் மாநகர்மூன் றுடன்மாய்ந் தவியச்
சரந்துரந் தெரிசெய்த தாழ்சடைச் சங்கரன் மேயவிடம்
குருந்த மல்லிகை கோங்குமா தவிநல்ல குராமரவம்
திருந்துபைம் பொழிற்கச்சி யேகம்பஞ் சேர விடர்கெடுமே. 2

வண்ணவெண் பொடிப்பூசு மார்பின் வரியர வம்புனைந்து
பெண்ணமர்ந் தெரியாடல் பேணிய பிஞ்ஞகன் மேயவிடம்
விண்ணமர் நெடுமாட மோங்கி விளங்கிய கச்சிதன்னுள்
திண்ணமாம் பொழில்சூழ்ந்த வேகம்பஞ் சேர விடர்கெடுமே. 3

---

*1. திருநீறு பூசிய திருமார்பிற் பூணூல் கிடந்திலங்க, உமாதேவியோடு எழுந்தருளிய கச்சியுள் எல்லையற்ற குணங்களையுடைய அடியார்கள் போற்ற எந்தை மேவிய ஏகம்பம் தொழுதேத்த இடர்கெடும் என்கின்றது. அந்தம் - முடிவு. அணங்கினொடு - பார்வதியோடு.*

*2. திரிபுரம் எரியச் சரம்விட்ட சங்கரன்மேவிய இடமாகிய பொழில் சூழ்ந்த ஏகம்பம்சேர இடர்கெடும் என்கின்றது. துரந்து - செலுத்தி. மாதவி - குருக்கத்தி. மரவம் - வெண்கடம்பு.*

*3. திருநீறணிந்த மார்பில் அரவம் அணிந்து, பெண்ணை ஒருபால் விரும்பி, எரிக்கண் திருநடனத்தை விரும்பிய பிஞ்ஞகன் இடம், வீண்ணளாவிய மாடமோங்கிய கச்சியுள் ஏகம்பம் ஆம்; அதனைச்சேர இடர்கெடும் என்கின்றது. பிஞ்ஞகன் - மயிற்பீலியை யுடையான்.*

தோலுநூ லுந்துதைந்த வரைமார்பிற் சுடலைவெண் ணீறணிந்து
காலன்மாள் வுறக்காலாற் காய்ந்த கடவுள் கருதுமிடம்
மாலைவெண் மதிதோயு மாமதிற் கச்சி மாநகருள்
ஏலநாறிய சோலைசூ ழேகம்ப மேத்த விடர்கெடுமே. 4

தோடணிம் மலர்க்கொன்றை சேர்சடைத் தூமதி யம்புனைந்து
பாடலுன் மறையாகப் பல்கணப் பேய்க ளவைசூழ
வாடல்வெண் டலையோ டனலேந்தி மகிழ்ந்துட னுடல்புரி
சேடர்சேர் கலிக்கச்சி யேகம்பஞ் சேர விடர்கெடுமே. 5

சாகம்பொன் வரையாகத் தானவர் மும்மதில் சாயவெய்து
ஆகம்பெண் ணொருபாக மாக வரவொடு நூலணிந்து
மாகந்தோய் மணிமாட மாமதிற் கச்சி மாநகருள்
ஏகம்பத் துறையீசன் சேவடி யேத்த விடர்கெடுமே. 6

* * * * 7

வாணிலா மதிபுல்கு செஞ்சடை வாளர வம்மணிந்து
நாணிடத் தினில்வாழ்க்கை பேணி நகுதலையிற் பலிதேர்ந்
தேணிலா வரக்கன்ற னீண்முடி பத்து மிறுத்தவனூர்
சேணுலாம் பொழிற்கச்சி யேகம்பஞ் சேர விடர்கெடுமே. 8

---

*4. கரு மான்தோலும் பூணூலும் நெருங்கிய மார்பில் நீறணிந்து காலனைக் காய்ந்த கடவுள் கருதுமிடம், கச்சியுள் ஏகம்பம்; அதனை ஏத்த இடர்கெடும் என்கின்றது.*

*5. இதழோடு கூடிய அழகிய கொன்றைமலரை அணிந்த சடையிலே பிறைமதியைச் சூடி, நான்மறை பாடலாக, பேய்க்கணம் புடைசூழ, அனலேந்தி ஆடும் பெரியோன் சேரும் இடம் கச்சியுள் ஏகம்பம் என்கின்றது. சேடர் - உலகம் அழியத் தான் எஞ்சி நிற்பவர். சேர - தியானிக்க.*

*6. மேருமலை வில்லாக முப்புரம் எரித்து, உடலில் ஒரு பாகம் பெண்ணாக ஏற்று, அரவையும் நூலையும் அணிந்து கச்சி யேகம்பத்துள் அமர்ந்த ஈசன் திருவடி ஏத்த இடர்கெடும் என்கின்றது. சாகம் - வில். சாபம் எதுகை நோக்கிச் சாகம் ஆயிற்று. தானவர் - அசுரர். ஆகம் - உடல். மாகம் - ஆகாயம்.*

*8. பிறையணிந்த செஞ்சடையில் அரவத்தையும் அணிந்து, இடப்பாகத்து நாணோடு கூடிய இல்வாழ்க்கைக்குரிய உமா தேவியை வைத்து, மண்டையோட்டில் பிச்சை யேற்று,*

பிரமனுந் திருமா லுங் கைதொழப் பேரழ லாயபெம்மான்
அரவஞ் சேர்சடை யந்தண னணங்கினெ டமருமிடம்
கரவில்வண் கையினர்கள் வாழ்கலிக் கச்சி மா நகருள்
மரவஞ்சூழ் பொழிலேகம் பந்தொழ வல்வினை மாய்ந்தறுமே. 9

குண்டுபட் டமண யவரொடுங் கூறைதம் மெய்போர்க்கும்
மிண்டர் கட்டிய கட்டுரை யவைகொண்டு விரும்பேன்மின்
விண்டவர் புரமூன்றும் வெங்கணை யொன்றினு லவியக்
கண்டவன் கலிக்கச்சி யேகம்பங் காண விடர்கெடுமே. 10

ஏரினுர் பொழில்சூழ்ந்த கச்சி யேகம்ப மேயவனைக்
காரினுர் மணிமாட மோங்கு கழுமல நன்னகருள்
பாரினுர் தமிழ்ஞான சம்பந்தன் பரவிய பத்தும்வல்லார்
சீரினுர் புகழோங்கி விண்ணவ ரோடுஞ் சேர்பவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

*இராவணன் சிரம் பத்தும் இறுத்தவனூர் கச்சி ஏகம்பம் என்கின்றது. வாள் நிலா - ஒளிபொருந்திய நிலா. புல்கு - தழுவிய. இல்வாழ்க்கை - மனையில் வாழ்தலையுடையாளாகிய உமாதேவி; தொழிலாகுபெயர். ஏண் - உறுதி. சேண் - ஆகாயம்.*

*9. அயனும் மாலும் அடிவணங்க அழல்வண்ணமாகிய பெருமான் உமாதேவியோடு உறையுமிடம், வள்ளல்கள் வாழ்கின்ற கச்சியில் ஏகம்பமாம்; அதனைத்தொழ வல்வினையறும் என்கின்றது. கரவு - உள்ளதை மறைக்கும் வஞ்சம். மரவம் - மல்லிகை,*

*10. புறச்சமயிகள் கூறும் கட்டுரைகளை நம்பாதீர்கள்; அவை அவர்கள் கட்டிய கட்டுக்கள்; பகைவரது முப்புரங்களும் ஓரம்பினுல் உடையச்செய்தவனூர் கச்சி ஏகம்பம் என்கின்றது. குண்டுபட்டு - உடல்பருத்து. கூறை - ஆடை. விண்டவர் - பகைவர்.*

*11. இப்பதிகம் வல்லவர்கள் புகழ் ஓங்கித் தேவர்களோடும் சேர்வர் என்கின்றது. ஏரின் ஆர் பொழில் - அழகு நிறைந்த சோலை. காரின் ஆர் - மேகங்கள் கவிந்த.*

# திருப்பறியலூர்வீரட்டம்

**பதிகவரலாறு :**

*திருச்செம்பொன்பள்ளி திருவிளநகர் முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு, பிள்ளையார் பரமர்தம் திருப்பறியலூரைப் பரவி, இப்பதிகத்தை அருளிச்செய்தார்கள்.*

**பண் - மேகராகக்குறிஞ்சி**

**பதிகம் :** **எண் 134**

*திருச்சிற்றம்பலம்*

கருத்தன் கடவுள் கனலேந் தியாடும்
நிருத்தன் சடைமே னிரம்பா மதியன்
திருத்த முடையார் திருப்பறி யலூரில்
விருத்தனெ னத்தகும் வீரட்டத் தானே. 1

மருந்த னமுதன் மயானத்துண் மைந்தன்
பெருந்தண் புனற்சென்னி வைத்த பெருமான்
திருந்து மறையோர் திருப்பறி யலூரில்
விரிந்த மலர்ச்சோலை வீரட்டத் தானே. 2

குளிர்ந்தார் சடையன் கொடுஞ்சிலை விற்காமன்
விளிந்தா னடங்க வீந்தெய்தச் செற்றான்
தெளிந்தார் மறையோர் திருப்பறி யலூரில்
மிளிர்ந்தார் மலர்ச்சோலை வீரட்டத் தானே. 3

---

*1. இப்பதிகம் முழுதும் எல்லாவுயிர்கட்குங் கருத்தனாய், கடவுளாய், விருத்தனாய் இருப்பவன் திருப்பறியலூர் வீரட்டத் தான் என இறைவனியல்பு அறிவிக்கின்றது. திருத்தம் உடையார் - பிழையொடு பொருந்தாதே திருந்திய மனமுடைய அடியார். விருத்தன் - தொன்மையானவன்.*

*2. மருந்தன் - பிணிதீர்க்கும் மருந்தானவன்.*

*3. கொடுஞ்சிலை - வளைந்த வில். விளிந்தான் - இறந்தான். வீந்து எய்த - இறந்து பின்னரும் வர. செற்றான் - கொன்றவன்.*

பிறப்பாதி யில்லான் பிறப்பார் பிறப்புச்
செறப்பாதி யந்தஞ் செலச்செய்யுந் தேசன்
சிறப்பா டுடையார் திருப்பறி யலூரில்
விறற்பா ரிடஞ்சூழ வீரட்டத் தானே. 4

கரிந்தா ரிடுகாட்டி லாடுங்க பாலி
புரிந்தார் படுதம் புறங்காட் டிலாடும்
தெரிந்தார் மறையோர் திருப்பறி யலூரில்
விரிந்தார் மலர்ச்சோலை வீரட்டத் தானே. 5

அரவுற்ற நாணா வனலம்ப தாகச்
செருவுற் றவர்புரந் தீயெழச் செற்றான்
தெருவிற் கொடிசூழ் திருப்பறி யலூரில்
வெருவுற் றவர்தொழும் வீரட்டத் தானே. 6

நரையார் விடையா னலங்கொள் பெருமான்
அரையா ரரவம் மழகா வசைத்தான்
திரையார் புனல்சூழ் திருப்பறி யலூரில்
விரையார் மலர்ச்சோலை வீரட்டத் தானே. 7

---

*4. பிறப்பாதி எனவே இறப்புமில்லான் என்பதுணர்த் தியவாறு. பிறப்பார் பிறப்பு செறப்பு ஆதி அந்தம் செலச் செய்யுந் தேசன் - பிறவியெடுக்கும் உயிர்கள் எய்தும் பிறப்பிற் கும் சிறப்பிற்கும் முதலும் முடிவும் அடையச்செய்யும் ஒளிவடி வானவன். சிறப்பாடு - சிறப்பு. பாடு தொழிற்பெயர் விகுதி. விறல் பாரிடம் - வலிய பூதகணம்.*

*5. கரிந்தார் - இறந்தவர். புரிந்தார் - வினைகளைப் புரிந் தவர். படும் - இறந்த. புறங்காடு - சுடுகாடு. தெரிந்து ஆர் மறையோர் - ஆராய்ந்தறிந்த அந்தணர்.*

*6. அரவு உற்ற நாண(க) அனல் அம்பு அது ஆக செரு உற்றவர் புரம் தீ எழச் செற்றான் எனப்பிரிக்க. செரு - போர். வெருவுற்றவர் - அஞ்சியவர்.*

*7. நரை - வெண்மை.*

வளைக்கும் மெயிற்றின் னரக்கன் வரைக்கீழ்
இளைக்கும் படிதா னிருந்தேழை யன்னம்
திளைக்கும் படுகர்த் திருப்பறி யலூரில்
விளைக்கும் வயல்சூழ்ந்த வீரட்டத் தானே. 8

விளங்கொண் மலர்மே லயனோத வண்ணன்
துளங்கும் மனத்தார் தொழத்தழ லாய்நின்றான்
இளம்கொம் பனாளோ டிணைந்தும் பிணைந்தும்
விளங்குந் திருப்பறியல் வீரட்டத் தானே. 9

சடையன் பிறையன் சமண்சாக் கியரோ
டடையன் பிலாதா னடியார் பெருமான்
உடையன் புலியி னுரிதோ லரைமேல்
விடையன் றிருப்பறியல் வீரட்டத் தானே. 10

நறுநீ ருகுங்காழி ஞானசம் பந்தன்
வெறிநீர்த் திருப்பறியல் வீரட்டத் தானைப்
பொறிநீ டரவன் புனைபாடல் வல்லார்க்
கறுநீ டவல மறும்பிறப் புத்தானே. 11

திருச்சிற்றம்பலம்

---

*8. வளைக்கும் எயிறு - கோரப்பல். அரக்கன் என்றது இராவணனை. ஏழை அன்னம் திளைக்கும் படுகர் - பெண் ணன்னம் புணரும் ஆற்றுப்படுகர்.*

*9 விளங்கு ஒண்மலர் - விளங்குகின்ற ஒளிபொருந்திய தாமரைமலர். ஓதவண்ணன் - கடல்வண்ணனாகிய திருமால். துளங்கும் - நடுங்கும். மனத்தார் என்றது அயனையும் மாலையும். இணைந்து - ஒரு திருமேனிக்கண்ணே ஒன்றாய், பிணைந்து - இடப் பாகத்து உடனாய்க்கூடி.*

*11. நறுநீர் - நல்லநீர். வெறிநீர் - மணம்பொருந்திய தேன். நீடவல மறும்பிறப்பு அறும் எனக்கூட்டுக. மறும் பிறப்பு - மறுபிறப்பு. சந்தநோக்கி விரிந்தது.*

# திருப்பராய்த்துறை

**பதிகவரலாறு :**

*திருக்கருவூர் ஆனிலையைப்போற்றி, திருஞான சம்பந்தப் பிள்ளையார் திருப்பராய்த்துறையை யடைந்தார்கள். அங்கே நெற்றித் தனிக்கண்ணர் கோயிலை நண்ணிக் கும்பிட்டுக் கோதில் தமிழ்ச்சொல் மாலையாகிய 'நீறு சேர்வதொர்' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்கள்.*

பண் - மேகராகக்குறிஞ்சி

**பதிகம் :** **எண் 135**

*திருச்சிற்றம்பலம்*

நீறுசேர்வதொர் மேனியர்நேரிழை
கூறுசேர்வதொர் கோலமாய்ப்
பாறுசேர்தலைக் கையர்பராய்த்துறை
ஆறுசேர்சடை யண்ணலே. 1

கந்தமாமலர்க் கொன்றைகமழ்சடை
வந்தபூம்புனல் வைத்தவர்
பைந்தண்மாதவி சூழ்ந்தபராய்த்துறை
அந்தமில்ல வடிகளே. 2

வேதர்வேதமெல் லாமுறையால்விரித்
தோதநின்ற வொருவனார்
பாதிபெண்ணுரு வாவர்பராய்த்துறை
ஆதியாய வடிகளே. 3

---

*1. இப்பதிகம், திருப்பராய்த்துறைசேர் அண்ணல் நீறணிந்தவர், நேரிழைவைத்தவர், கொன்றையணிந்தவர், வேதர், வேதம் விரித்தவர் என அவரது பல இயல்புகளை எடுத்து விளக்குவது. கூறு - மேனியில் ஒருபாதி. பாறு - பருந்து.*

*2. அந்தமில்ல அடிகள் - தாம் எல்லாவற்றிற்கும் அந்தமாதலேயன்றித் தமக்கு அந்தம் இல்லாத அடிகள்.*

*3. முறையால் விரித்து - இன்ன வேதத்தின்பின் இன்னது என முறைப்படி விரித்து.*

தோலுந்தம்மரை யாடைசுடர்விடு
நூலுந்தாமணி மார்பினர்
பாலுநெய்பயின் ருடுபராய்த்துறை
ஆலநீழ லடிகளே. 4

விரவிநீறுமெய் பூசுவர்மேனிமேல்
இரவினின்றெரி யாடுவர்
பரவினரவர் வேதம்பராய்த்துறை
அரவமார்த்த வடிகளே. 5

மறையுமோதுவர் மான்மறிக்கையினர்
கறைகொள்கண்ட முடையவர்
பறையுஞ்சங்கு மொலிசெய்பராய்த்துறை
அறையநின்ற வடிகளே. 6

விடையுமேறுவர் வெண்பொடிப்பூசுவர்
சடையிற்கங்கை தரித்தவர்
படைகொள்வெண்மழு வாளர்பராய்த்துறை
அடையநின்ற வடிகளே. 7

தருக்கின்மிக்க தசக்கிரிவன்றனை
நெருக்கினர்விர லொன்றினல்
பருக்கிரைவர் போலும்பராய்த்துறை
அருக்கன்றன்னை யடிகளே. 8

---

*4. தோல் - புலித்தோல்.*

*5. அவர் வேதம் பரவினர் - அவர் வேதங்களாற் பரவப் பெற்றவர்.*

*6. மறி - குட்டி. கறை - விடம்.*

*7. அடைய - எங்குமாய்; பொருந்த என்றும் ஆம்.*

*8. தசக்கிரிவன் - இராவணன்.*

நாற்றமாமல ராநெடுமாலுமாய்த்
தோற்றமும்மறி யாதவர்
பாற்றினர்வினை யானபராய்த்துறை
ஆற்றன்மிக்க வடிகளே. 9

திருவிலிச்சில தேரமணாதர்கள்
உருவிலாவுரை கொள்ளேலும்
பருவிலாலெயி லெய்துபராய்த்துறை
மருவினொன்றனை வாழ்த்துமே. 10

செல்வமல்கிய செல்வர்பராய்த்துறைச்
செல்வர்மேற்சிதை யாதன
செல்வன்ஞானசம் பந்தன்செந்தமிழ்
செல்வமாமிவை செப்பவே. 11

திருச்சிற்றம்பலம்

---

*9. நாற்றம் - மணம். பாற்றினர் - சிதற அடித்தார்.*

*10. திரு - சிவஞானம். ஆதர் - கீழ்மக்கள். பரு வில் - மலையாகிய பெருத்த வில்.*

*11. சிதையாதன செந்தமிழ் இவை செப்பச் செல்வமாம் எனக்கூட்டுக.*

## திருத்தருமபுரம்

**பதிகவரலாறு :**

திருவேட்டக்குடியை வணங்கிய ஆளுடைய பிள்ளையார் திருத்தருமபுரத்தை அடைந்தபோது, திருநீலகண்ட யாழ்ப் பாணரது தாய்வழிச்சுற்றத்தார் அனைவரும் அவரை எதிர் கொண்டு வணங்கினார்கள். பாணனார் 'சுவாமிகள் திருப்பாடல் களை யாழிலிட்டு வாசிக்கும் புண்ணியப்பேறு பொருந்தினேன்' என்று புகன்றார். அவர்கள் நீர் யாழில் இட்டு வாசிப்பதால் தான் அப்பாடலின் சிறப்பு உலகத்தில் பரவுவதாயிற்றென்றார் கள். இதனைக்கேட்ட பாணர் மனம் நடுநடுங்கி அவர்கள் உண்மை உணர்ந்து உய்யவேண்டும் என்ற திருவுள்ளத்தால் சம்பந்த சுவாமிகளின் திருவடியைவணங்கி 'யாழில் அடங்காத திருப்பதிகம் ஒன்று அருளிச் செய்யவேண்டும்' என்று கேட்டுக் கொண்டார். பிள்ளையார் மக்களது கண்டத்திலும் யாழிலும் இசைநூலில் சொல்லப்பட்ட எல்லாமுயற்சியிலும் அடங்காத "மாதர் மடப்பிடி" என்னும் இப்பதிகத்தை அருளிச்செய்தார். பாணர் இதனை யாழிலிட்டு வாசிக்கத்தொடங்கி முடியாமை கண்டு, மனம் உளைந்து, "இக்கருவியன்றோ இவர்களுக்கு இத்தகைய எண்ணத்தை அளித்து என்னையும் ஈடழித்தது" என அதனை உடைக்கப்புக்கார். பிள்ளையார் அதனைத் தடுத்து 'ஐயரே! சிவசக்தியின் திருவிளையாட்டெல்லாம் இக்கருவியில் அமையுமோ? முடிந்த அளவு முயற்சித்தலே முறை' என்று அமைதிகூறி, யாழை அவர்கையில் தந்தார். அதனால் இப் பதிகம் யாழ்மூரியாயிற்று. (மூரி - வலிமை. யாழ்மூரி யாழைக் காட்டிலும் இசைவன்மை வாய்ந்தது என்பது பொருள்)

**பண் - யாழ்மூரி**

**பதிகம் :** **எண் 136**

*திருச்சிற்றம்பலம்*

மாதர்ம டப்பிடியும் மட வன்னமு மன்னதோர்
நடை யுடைம் மலை மக டுணையென மகிழ்வர்
பூதவி னப்படைநின் றிசைபாடவு மாடுவ
ரவர் படர் சடைந்நெடு முடியதொர் புனலர்

வேதமொ டேழிசைபா டுவ ராழ்கடல் வெண்டிரை
யிரைந் நுரை கரை பொரு துவிம்மிநின் றயலே
தாதவிழ் புன்னை தயங் குமலர்ச்சிறை வண்டறை
யெழில் பொழில் குயில் பயி றருமபு ரம்பதியே. 1

பொங்குந டைப்புகலில் விடை யாமவ ரூர்திவெண்
பொடி யணி தடங் கொண்மார் புபூணநூல் புரள
மங்குலி டைத்தவழும் மதி சூடுவ ராடுவர்
வளங் கிளர் புன லர வம்வைகிய சடையர்
சங்குக டற்றிரையா லுதை யுண்டுச ரிந்திரிந்
தொசிந் தசைந் திசைந் துசே ரும்வெண்மணற் குவைமேல்
தங்குக திர்ம்மணிநித் தில மெல்லிரு ளொல்கநின்
றிலங் கொளிந் நலங் கெழிற் றருமபு ரம்பதியே. 2

விண்ணுறு மால்வரைபோல் விடை யேறுவ ராறுசூ
டுவர் விரி சுரி யொளி கொடோடுநின் றிலங்கக்
கண்ணுற நின்றொளிருங் கதிர் வெண்மதிக் கண்ணியர்
கழிந் தவ ரிழிந் திடும் முடைதலை கலனுப்

---

1. மலைமகளைத் துணையாகக்கொண்டு மகிழ்ந்தவரும், பூதப்படை இசைபாட ஆடுபவரும், கங்கைச் சடையரும், வேதத்தையும் இசையையும் பாடுபவரும் ஆகிய இறைவர் இடம் தருமபுரம் என்கின்றது. பிடி - பெண் யானை. உமாதேவியின் பெருமித நடைக்குப் பெண்யானையும், நடையின் மென்மைக்கு அன்னமும் உவமமாயிற்று. தருமபுரம் நெய்தனிலச் சார்புடையதாதலின் புன்னை கூறப்பட்டது.

2. ஊர்தி விடையாம். நீறணிந்தமார்பில் பூணுநூல் புரள மதிசூடுவர், ஆடுவர், கங்கையும் அரவும் தங்கிய சடையர் பதி தருமபுரம் என்கின்றது. பொங்கிய நடையோடு, வேறு அடைக்கலத் தானமில்லாத விடையாம் அவர் வாகனம் என்பதாம். மங்குல் - ஆகாயம். சங்கு கடல் அலையால் மோதப்பெற்று மணற் குவியல்மேல் தங்கியதால் ஈனப்பெற்ற முத்துக்கள் இருளோட்டி விளங்கும் நலங்கெழுமும் தருமபுரம் என்க. சங்கு சரிந்து இரிந்து ஒசிந்து அசைந்து இசைந்துசேரும் மணல் எனக் கூட்டுக. இது மணல்மேட்டின்மேல் சங்கு ஏறிய அருமைப்பாட்டை அறிவிக்கின்றது.

பெண்ணுற நின்றவர் தம்முரு வம்மயன் மாலொடுமல்
வரி வையைப் பிணைந் திணைந் தணைந்ததும் பிரியார்
தண்ணிதழ் முல்லையொடெண் ணிதழ் மௌவன்ம ருங்கலர்
கருங் கழிந் நெருங் குநற் றருமபு ரம்பதியே. 3

வாருறு மென்முலைநன் னுத லேழையொ டாடுவர்
வளங் கிளர் விளங் குதிங் கள்வைகிய சடையர்
காருற நின்றலரும் மலர்க் கொன்றையங் கண்ணியர்
கடுவ் விடை கொடி வெடி கொள்காடுறை பதியர்
பாருற விண்ணுலகம் பர வப்படு வோரவர்
படு தலைப் பலி கொளல் பரிபவந் நினையார்
தாருறு நல்லரவம் மலர் துன்னிய தாதுதிர்
தழை பொழின் மழைந் நுழை தருமபு ரம்பதியே. 4

நேருமவர்க்குணரப் புகி லில்லைநெ டுஞ்சடைக்
கடும் புனல் படர்ந் திடம் படுவ்வதொர் நிலையர்
பேருமவர்க்கெனையா யிர முன்னைப்பி றப்பிறப்
பிலா தவ ருடற் றடர்த் தபெற்றியா ரறிவார்

---

3. விண்ணளாவிய மலைபோன்ற விடையை ஊர்தியாக ஏறுவர்; கங்கையைச் சூடுவர்; தோடு விளங்க, பிறைக்கண்ணி சூடுவர்; பிரமகபாலத்தை உண்கலனுகக் கொண்டு, பெண் பாதியாக நின்றவர்; தம் வடிவத்தை அயனும் மாலும் தொழ நின்றவர்; இவர் பதி தருமபுரம் என்கின்றது. மால் வரை - பெரிய மலை. கண்ணியர் - தலைமாலையை யுடையவர். கழிந்தவர் - இறந்தவர். மௌவல் - மல்லிகை. மல்லிகைக்கு எட்டிதழ் உண்மை உணர்த்தப் பெறுகின்றது.

4. பெண்ணெடு ஆடுவர், பிறை விளங்கு சடையர். கொன்றைமாலை அணிந்தவர். விடைக்கொடி யேந்தி இடுகாட்டைப் பதியாக்கொண்டவர். விண்ணும் மண்ணும் துதிக்கப் படுவர். மண்டையோட்டில் பிச்சையேற்றலை அவமானமாகக் கருதாதவர். இவர் பதி தருமபுரம் என்கின்றது. வார் - கச்சு. பதி - இடம். பரிபவம் - அவமானம்.

ஆரம வர்க்கழல்வா யதொர் நாகம முஃகுறவ்
வெழுஃ கொழும் மலர் கொள்பொன் னிதழிநல் லலங்கல்
தாரம வர்க்கிமவான் மக ளூர்வது போர்விடை
கடி படு செடி பொழிற் றருமபு ரம்பதியே. 5

கூழையங் கோதைகுலா யவ டம்பிணை புல்கமல்
குமென் முலைப் பொறி கொள்பொற் கொடியிடைத் துவர்வாய்
மாழையொண் கண்மடவா ளையொர் பாகம கிழ்ந்தவர் –
வலம் மலி படை விடை கொடிகொடும் மழுவ்வாள்
யாழையும் மெள்கிடவே ழிசை வண்டுமு ரன்றினந்
துவன் றிமென் சிறஃ கறை யுறந்நறவ்வி ரியுந்நல்
தாழையு ஞாழலுந்நீ டிய கானலி னள்ளலி
சைபுள்ளினந் துயில் பயி றருமபு ரம்பதியே. 6

தேமரு வார்குழலன் னந டைப்பெடை மான்விழித்
திருந் திழை பொருந் துமே னிசெங்கதிர் விரியத்
தூமரு செஞ்சடையிற் றுதை வெண்மதி துன்றுகொன்
றைதொல்புனல் சிரங் கரந் துரித்ததோ லுடையர்

---

*5. அவர்க்கு ஒப்பு ஆராயப்புகில் யாரும் இல்லை. கங்கை புகுந்தும் இடம்படும் சடையை யுடையவர். அவருக்குப் பேரும் ஆயிரம். பிறப்பு இறப்பு இல்லாதவர். இவரது மாறுபட்ட பகைவரைக் கொல்லும் வெற்றியை அறிவார் யார்? அவர்க்கு ஆரம் பாம்பு. அழகுற எழுந்த கொழுமலராகிய கொன்றையே மாலை. மனைவி மலைமகள். வாகனம் இடபம். தருமபுரம் பதி என்கின்றது. நேர் - ஒப்பு. இதழி - கொன்றை அலங்கல் - மாலை. தாரம் - மனைவி. கடி - மணம்.*

*6. உமையாளை ஓர் பாகம் மகிழ்ந்தவர்; அவர்க்குப் படை மழுவும் வாளும்; கொடி விடை; பதி தருமபுரம் என்கின்றது. கூழை - கூந்தல். துவர் வாய் - சிவந்தவாய். மாழை - மாவடு, படை கொடு மழு வாள் எனவும் விடை கொடி எனவும் இயைக்க. எள்கிட - இகழ. நற - மணம். ஞாழல் - புலிநகக் கொன்றை. அள்ளல் - சேறு.*

திருத்தருமபுரம்:



ஸ்ரீ யாழ்மூரிநாதர்.

திருப்புகலூரில் :




அப்பரும் — சம்பந்தரும்.

—பக்கம் 12.

காமரு தண்கழிநீ டிய கானல கண்டகங்
கடல் லடை கழி யிழி யமுண்டகத் தயலே
தாமரை சேர்குவளைப் படு கிற்கழு நீர்மலர்
வெறி கமழ் செறிவ் வயற் றருமபு ரம்பதியே. 7

தூவண நீறகலம் பொலி யவ்விரை புல்கமல்
குமென் மலர் வரை புரை திரள்புயம் மணிவர்
கோவண மும்முழையின் னத ளும்முடை யாடையர்
கொலேம் மலி படை யொர்கு லமேந்திய குழகர்
பாவண மாவலறத் தலை பத்துடை யவ்வரக்
கனவ் வலி யொர்கவ் வைசெய் தருள்புரி தலைவர்
தாவண வேறுடையெம் மடி கட்கிடம் வன்றடங்
கடல் விடுந் தடங் கரைத் தருமபு ரம்பதியே. 8

வார்மலி மென்முலைமா தொரு பாகம தாகுவர்
வளங் கிளர் மதி யர வம்வைகிய சடையர்
கூர்மலி சூலமும்வெண் மழு வும்மவர் வெல்படை
குனி சிலைதனிம் மலை யதேந்திய குழகர்

---

7. உமையுடன்கூடிய மேனி ஒளி விரிய, செஞ்சடையில் மதி கொன்றை கங்கை சிரம் இவற்றை மறைத்து, தோலையுடுத்தவரான இறைவன் பதி தருமபுரம் என்கின்றது. தேமரு - மணம் பொருந்திய, குழலையும், நடையையும், விழியையும் உடைய திருந்திழை என்க. துதை - செறிந்த. கரந்து - மறைய அணிந்து. கானல கண்டகம் - கடற்கரைச் சோலையிலுள்ள தாழை. முண்டகம் - கடல் முள்ளி. படுகு - மடு.

8. வெண்ணிறத் திருநீறு மார்பில் விளங்க, மணம் பொருந்திய மலரைப் புயத்து அணிவர்; கோவணமும், மான் தோலும் உடுப்பவர்; சூலமேந்திய இளையர்; இராவணற்குத் துன்பஞ் செய்து, பின் அருளும்செய் தலைவர்; தாவும் நிறம் பொருந்திய இடபத்தையுடைய எம்மடிகட்கு இடம் தருமபுரம் என்கின்றது. அகலம் - மார்பு, உழை - மான். அதள் - தோல். அரக்கன் வலி ஓர் கவ்வை செய்து (அவன்) பாவண்ணமா அலற அருள்புரி தலைவர் எனக்கூட்டுக. பாவண்ணமா - சாம கீதமாக. கவ்வை - துன்பம். தா வண்ண ஏறு - தாவிச்செல்லும் நிறம் பொருந்திய இடபம்.

ஆர்மலி யாழிகொள்செல் வனு மல்லிகொ டாமரைம்
மிசை யவன் னடிம் முடி யளவுதா மறியார்
தார்மலி கொன்றையலங் கலு கந்தவர் தங்கிடந்
தடங் கடல் விடுந் திரைத் தருமபு ரம்பதியே. 9

புத்தர்க டத்துவர்மொய்த் துறி புல்கிய கையர்பொய்ம்
மொழிந் தழி வில்பெற் றியுற் றநற்றவர் புலவோர்
பத்தர்க ளத்தவமெய்ப் பய னுக வுகந்தவர்
நிகழ்ந் தவர் சிவந் தவர் சுடலைப்பொடி யணிவர்
முத்தன வெண்ணகையொண் மலை மாதுமை பொன்னணி
புணர்ம் முலை யிணை துணை யணைவதும் பிரியார்
தத்தரு வித்திரளுந் திய மால்கட லோதம்வந்
தடர்ந் திடுந் தடம்பொழிற் றருமபு ரம்பதியே. 10

பொன்னெடு நன்மணிமா ளிகை சூழ்விழ வம்மலி
பொரும் புன றிரும் வமர் புகலியென் றுலகில்
தன்னொடு நேர்பிறவில் பதி ஞானசம் பந்தனஃ
துசெந் தமிழ்த் தடங் கடற் றருமபுரம் பதியைப்

---

9. மென்முலை மாதை ஓர் பாகங்கொண்டவர்; மதியும் அரவும் வைகிய சடையர்; மழுவும் சூலமும் அவர் படை; அவர் வில் மலை; அயனாலும் மாலாலும் அறியமுடியாதவர்; கொன்றை மாலையை விரும்பியவர்; இவர் தங்குமிடம் தருமபுரம் என்கின்றது. தனிமலை - ஒப்பற்ற மேருமலை. ஆர் மலி ஆழி - ஆரக்கால் நிறைந்த சக்கரம். ஆழிகொள் செல்வன் - திருமால். அல்லி - அகவிதழ். தார்மலி கொன்றை - மாலையாகப் பூக்கும் கொன்றை - அலங்கல் - மாலை.

10. புத்தரும் சமணரும் கூறும் பொய்யினின்றும் நீங்கி, அழிவில்லாத் தன்மைபெற்ற புலவர்கள் பத்தர்கள் தவத்தை மெய்ப்பயனாக உகந்தவரும், சுடலைப்பொடி யணிபவரும், உமையைக் கூடி, பிரிவதும் செய்யாதவரும் ஆகிய இறைவன் பதி தருமபுரம் என்கின்றது. கட துவர் மொய்த்து - கடுவிதையால் உண்டாக்கப் பெற்ற துவர் நெருங்கி. உறி புல்கிய கையர் - உறிதூக்கிய கையை யுடைய சமணர். உகந்தவர் - மகிழ்ந்தவர். தத்து அருவி - தாவிக் குதிக்கின்ற அருவி, மால்கடல் - பெரிய கடல். கருங்கடலுமாம்.

பின்னெடு வார்சடையிற் பிறை யும்மர வும்முடை
யவன் பிணை துணை கழல் கள்பேணுத லுரியார்
இன்னெடு நன்னுலகெய் துவ ரெய்திய போகமும்
முறு வர்கள் ளிடர் பிணி துயரணைவ் விலரே. 11

திருச்சிற்றம்பலம்

---

11. ஞானசம்பந்தப் பெருமான் செந்தமிழால் திருத் தரும புரப் பதியில் எழுந்தருளியிருக்கின்ற இறைவன் கழல்களைப் பேணுதல் உரியார் நல்லுலகம் எய்துவர்; போகம் பெறுவர்; இடரும் பிணியும் எய்தப்பெறுர் என்கின்றது. விழவம் மலி - விழாக்கள் நிறைந்த, பொரூஉ புனல் - கரையை மோதுகின்ற நீர். திரு திரூஉ ஆயிற்றுச் சந்தம் நோக்கி, புகல்லி - புகலி; விரித்தல் விகாரம். தன்னெடு நேர்பிற இல்பதி - தனக்குச் சமம் வேறில்லாத நகரம்; என்றது சீகாழியை, பேணுதல் - தியானித்தல். இப்பதிகத்தைச் சொல்லி இறைவனைத் தியானிப்பவர்கள் நல்லுலகம் எய்துவர்; போகம் பெறுவர்; அவர்களைப் பிணியும் துயரும் பொருந்தா; என்றும் இன்பம் பெறுவர்.

# பாட்டு முதற்குறிப்பகராதி.

# ஆதீன வெளியீடுகள்

| எண். | | வருஷம். |
|---|---|---|
| 1. | குருஞானசம்பந்த சுவாமிகள் தாலாட்டு சமூகமாலை முதலியன | 1924 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1944 |
| 2. | நித்திய கன்மநெறி (மூலம்) | 1927 |
| 3. | திருமுல்லைவாயிற்புராணம் | ,, |
| 4. | திரிபதார்த்தரூபாதி தசகாரிய அகவல் | ,, |
| 5. | சித்தாந்தநிச்சயம் | 1928 |
| 6. | சம்பிரதாயதீபம் | ,, |
| 7. | வருணாச்சிரம சந்திரிகை (வடமொழி) | 1930 |
| 8. | சிகாரத்தினமாலை | ,, |
| 9. | திருப்பதிகமும் பஞ்சரத்தினமும் | ,, |
| 10. | தசமணிமாலை | ,, |
| 11. | ஞானசம்பந்த குருராயவட்டகமும் சந்திரகலாமாலையும் | ,, |
| 12. | திருவையாற்றுப் புராணம் | ,, |
| 13. | சிவானந்தபோதசாரம் | 1931 |
| 14. | சோடசகலாப் பிராசாத சட்கம் | ,, |
| 15. | சைவசன்யாச பத்ததி (வடமொழி) | 1932 |
| 16. | சிவபோகசாரமும், சொக்கநாத வெண்பாவும் ஆங்கிலத்துடன் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1936 |
| | ,, (மூன்றாம் பதிப்பு) | 1950 |
| 17. | சிவப்பிரகாசக்கட்டளை ஆங்கிலத்துடன் | 1932 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1939 |
| 18. | 23-வது மகாசந்நிதானத்தின்மீது பலர் பாடிய தோத்திரப் பாடல்கள் | 1933 |
| 19. | திருத்துருத்திப் புராணம் மூலமும் வசனமும் | 1933 |
| 20. | ஞானசரிதை | 1934 |
| 21. | முத்திநிச்சயம் சிற்றுரையுடன் | ,, |
| 22. | அறிவானந்த சமுத்திரம் | ,, |
| 23. | பண்டாரமும்மணிக்கோவை குறிப்புரையுடன் | 1937 |
| 24. | இந்துமத பாலபாடம் | ,, |
| 25. | சிதம்பரச் செய்யுட்கோவை உரையுடன் | ,, |
| 26. | திருவையாற்றுத் தலமகிமைச் சுருக்கம் | ,, |

| எண். | | வருஷம். |
|---|---|---|
| 27. | கிளிவிடுதூது | 1937 |
| 28. | திருமுலைப்பால் சிறப்பு | 1939 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1941 |
| 29. | பதி பசு பாசத்தொகை | 1940 |
| 30. | ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிகர் நான்மணிமாலை | ,, |
| 31. | திருபுவனத் தலமகிமைச் சுருக்கம் | ,, |
| 32. | கீர்த்தித் திருவகவல் | 1941 |
| 33. | ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள் வரலாறும் பாசுரங்களும் | ,, |
| 34. | வைத்தீசுவரன்கோயில் தேவாரம்-திருப்புகழ் | ,, |
| 35. | திருத்தொண்டத் தொகையும் அசபாநடன பதிகமும் | ,, |
| 36. | குங்குலியக்கலய நாயனர் அன்பின் திறம் | ,, |
| 37. | திருக்கடவூர்த் தேவாரம் திருப்புகழ் | ,, |
| 38. | திருவையாற்றுத் தேவாரம் திருப்புகழ் | ,, |
| 39. | புள்ளிருக்குவேளூர்ப் புராணம் | ,, |
| 40. | சித்தாந்த சைவ வினவிடை | ,, |
| | (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 41. | நால்வர் சரித்திரமும் அற்புதத் தேவாரத் திரட்டும் | 1941 |
| 42. | ஆச்சாள்புரத் தலவரலாறு | 1941 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1943 |
| 43. | திருவையாற்றுத் தலவரலாறு | 1941 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1943 |
| | ,, (மூன்றும் பதிப்பு) | 1950 |
| 44. | சுப்பிரமணியர் திருவவதாரமும் கந்தர்கலி வெண்பாவும் | 1941 |
| 45. | தருமபுர ஆதீனம் மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு | ,, |
| 46. | சிவபூஜாவிதி | ,, |
| 47. | சைவானுட்டானவிதி | ,, |
| 48. | திருக்கடவூர் உலா குறிப்புரையுடன் | ,, |
| 49. | திருப்பாடல்கள் | 1942 |
| 50. | விநாயகர் அகவல்கள் | ,, |
| 51. | சீகாழித் தலவரலாறு | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1950 |

| எண். | | வருஷம். |
|---|---|---|
| 52. | மெய்கண்டசாத்திரம் மூலம் | 1942 |
| 53. | திருக்கற்குடித் தலவரலாறு | 1943 |
| 54. | நீதிநெறிவிளக்கம் உரைவளத்துடன் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1949 |
| 55. | திருவாரூர் நான்மணிமாலை மூலமும் வசனமும் | 1943 |
| 56. | சகலகலாவல்லிமாலை உரையுடன் | ,, |
| 57. | கந்தரனுபூதி | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1945 |
| 58. | குத்தாலத் தலவரலாறு | 1943 |
| 59. | குறுக்கைத் தலவரலாறு | ,, |
| 60. | திருபுவனத் தலவரலாறு | ,, |
| 61. | திருக்கடவூர்த் தலவரலாறு | ,, |
| 62. | புள்ளிருக்குவேளூர்த் தலவரலாறு | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1949 |
| 63. | திருப்பனந்தாள் தலவரலாறு | 1943 |
| 64. | 24-வது மகாசந்நிதானம் பத்தாண்டு ஆட்சிமலர் | ,, |
| 65. | அப்பர் சுவாமிகள் புராணம் C. K. S. விரிவுரையுடன் | 1944 |
| 66. | மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு திருமுறைத் திருநாள் நிகழ்ச்சிகள் | ,, |
| 67. | சிவஞானபோதச் சூத்திரக் கட்டுரை | ,, |
| 68. | ஞானசம்பந்தர் வழங்கிய ஞானவுரை | 1945 |
| 69. | சிவப்பிரகாசம் ஆங்கில மொழிபெயர்ப்புடன் | ,, |
| 70. | தருமபுர ஆதீன நூல்நிலையப் புத்தகப்பட்டி | ,, |
| 71. | புள்ளிருக்குவேளூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1946 |
| 72. | பஞ்சாவரணத் தோத்திரங்கள் | 1945 |
| 73. | சிதம்பரத்துத் திருப்பதிகங்கள் | ,, |
| 74. | தக்ஷிணாமூர்த்தி திருவருட்பா | ,, |
| 75. | திருவேட்களத் திருப்பதிகங்கள் | ,, |
| 76. | திருநெல்வாயில் திருப்பதிகம் | ,, |
| 77. | திருக்கழிப்பாலைத்திருப்பதிகங்கள் | ,, |
| 78. | திருநாரையூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 79. | தருமபுரஆதீன ஆவணிமூலத் திருநாள் | ,, |
| 80. | ஆச்சாள்புரத் திருப்பதிகம் | ,, |

| எண். | | வருஷம். |
|---|---|---|
| 81. | திருமயேந்திரப்பள்ளித் திருப்பதிகம் | 1945 |
| 82. | திருத்துருத்தித் திருப்பதிகங்கள் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1946 |
| 83. | திருமங்கலக்குடித் திருப்பதிகங்கள் | 1945 |
| 84. | திருக்கோளிலித் திருப்பதிகங்கள் | ,, |
| 85. | திருக்கடவூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| | ,, (இரண்டாம்பதிப்பு) | 1946 |
| 86. | சிவஞானபோதம் ஆங்கிலமொழிபெயர்ப்புடன் | 1945 |
| 87. | சோமவார விரதம் } முதற்பதிப்பு | 1945 |
| 88. | திருநீறு } இரண்டாம்பதிப்பு | 1949 |
| 89. | உருத்திராக்கம் } மூன்றாம்பதிப்பு | 1953 |
| 90. | ஐந்தெழுத்து } | |
| 91. | கந்தர்சட்டி விரதச்சிறப்பு திருமுருகாற்றுப்படையுடன் | 1946 |
| | ,, (இரண்டாம்பதிப்பு) | 1949 |
| 92. | திருவருட்பயன் ஆங்கில மொழிபெயர்ப்புடன் | 1946 |
| 93. | தென்திருமுல்லைவாயில் திருப்பதிகம் | ,, |
| 94. | ஸ்ரீ ஆண்டாள் திருப்பாவை | ,, |
| 95. | திருக்கலிக்காமூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 96. | தருமபுர ஆதீனப்பாடசாலைகளின் நிர்ணயவிதிகள் | ,, |
| 97. | திருநெல்வேலித் திருப்பதிகம் | ,, |
| 98. | திலகவதியார் (உரைநடை) | ,, |
| 99. | சீகாழித் திருப்பதிகங்கள் | ,, |
| | ,, (இரண்டாம்பதிப்பு) | 1948 |
| 100. | திருக்கோலக்கா திருப்பதிகம் | 1946 |
| 101. | திருக்குருகாவூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 102. | திருச்சாய்க்காட்டுத் திருப்பதிகம் | ,, |
| 103. | திரும்பல்லவனீச்சரத் திருப்பதிகம் | ,, |
| 104. | திருவெண்காட்டுத் திருப்பதிகங்கள் | ,, |
| 105. | கீழைத்திருக்காட்டுப்பள்ளித் திருப்பதிகம் | ,, |
| 106. | சித்தாந்தத்திரயம் ஆங்கில மொழிபெயர்ப்புடன் | ,, |
| 107. | ஸ்ரீகண்டன் ஓர் சிறு நாடகம் | ,, |
| 108. | திருமுலைப்பால் திருவிழாச் சிறப்பு | ,, |
| 109. | முத்தி நிச்சயப்பேருரை என்னும் வெள்ளியம்பலவாணமாபாடியம் | 1947 |

| எண். | | வருஷம். |
|---|---|---|
| 110. | மிருகேந்திரம் தமிழ் மொழிபெயர்ப்புடன் | 1946 |
| 111. | நடராஜ சதகம் | ,, |
| 112. | உண்மைவிளக்கம் ஆங்கில மொழிபெயர்ப்புடன் | ,, |
| 113. | திருக்கண்ணார்கோயில் திருப்பதிகம் | ,, |
| 114. | சுவாமிநாதசுவாமி தோத்திரங்கள் | ,, |
| 115. | திருநள்ளாற்றுத் திருப்பதிகங்கள் | ,, |
| 116. | திருக்கடைமுடித் திருப்பதிகம் | ,, |
| 117. | திருப்பறியலூர்த் திருப்பதிகம் | ,, |
| 118. | திருவிளநகர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 119. | திருநின்றியூர்த் திருப்பதிகம் | ,, |
| 120. | திருஆக்கூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 121. | திருக்கடவூர்மயானத் திருப்பதிகங்கள் | ,, |
| 122. | மாயூரத் திருப்பதிகங்கள் | ,, |
| 123. | திருநீடூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 124. | திருப்புன்கூர்த் திருப்பதிகங்கள் | 1947 |
| 125. | திருஅன்னியூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 126. | திருத்தருமபுரத் திருப்பதிகம் | ,, |
| 127. | ஆலயவழிபாடு: தோத்திரங்களுடன் | ,, |
| 128. | திருவேள்விக்குடித் திருப்பதிகங்கள் | ,, |
| 129. | திருஎதிர்கொள்பாடித் திருப்பதிகம் | ,, |
| 130. | திருமயிலாப்பூர்த் திருப்பதிகம் | ,, |
| 131. | திருஒற்றியூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 132. | திருஞானசம்பந்தர் புராணம் முதல் நூறுபாடல்கள் C. K. S. விரிவுரையுடன் | ,, |
| 133. | திருமணஞ்சேரித் திருப்பதிகங்கள் | ,, |
| 134. | இருபா இருபஃது ஆங்கில மொழிபெயர்ப்புடன் | ,, |
| 135. | திருக்குறுக்கைத் திருப்பதிகம் | ,, |
| 136. | தருமபுர ஆதீனப் பாடசாலை ஆறுவது ஆண்டு அறிக்கை | ,, |
| 137. | திருக்கருப்பறியலூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 138. | 25-வது மகாசந்நிதானம் முதலாண்டு ஆட்சி அறிக்கை | ,, |
| 139. | திருக்குரக்குக்காத் திருப்பதிகம் | ,, |
| 140. | திருஅஞ்சைக்களத் திருப்பதிகம் | ,, |
| 141. | திருப்பழமண்ணிப்படிக்கரைத் திருப்பதிகம் | ,, |

| எண். | | வருஷம். |
|---|---|---|
| 142. | திருவாழ்கொளிப்புத்தூர்த் திருப்பதிகங்கள் | 1947 |
| 143. | திருஓமாம்புலியூர்த் திருப்பதிகம் | ,, |
| 144. | சிவபோகசாரம் விரிவுரையுடனும் ஆங்கில மொழிபெயர்ப்புடனும் | ,, |
| 145. | திருக்கானாட்டுமுள்ளூர்த் திருப்பதிகம் | ,, |
| 146. | துள்ளி வருகுதுவேல் | ,, |
| 147. | திருக்கடம்பூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 148. | திருஅவிநாசித் திருப்பதிகம் | ,, |
| 149. | திருமுருகன்பூண்டித் திருப்பதிகம் | ,, |
| 150. | திருவெம்பாவைத் திருப்பதிகம் விளக்கத்துடன் | ,, |
| 151. | திருவலஞ்சுழித் திருப்பதிகங்கள் | ,, |
| 152. | 25-வது மகாசந்நிதானம் இரண்டாவதாண்டு ஆட்சி அறிக்கை | 1948 |
| 153. | திருப்பந்தணைநல்லூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 154. | திருக்கஞ்சனூர்த் திருப்பதிகம் | ,, |
| 155. | திருக்கோடிகாத் திருப்பதிகங்கள் | ,, |
| 156. | திருவாப்பாடித் திருப்பதிகம் | ,, |
| 157. | சிவஞானசித்தியார் சுபக்கம் ஆங்கில மொழிபெயர்ப்புடன் | ,, |
| 158. | அபிராமி அந்தாதி விரிவுரையுடன் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 159. | திருச்சேஞ்ஞலூர்த் திருப்பதிகம் | 1948 |
| 160. | தருமபுர ஆதீனப் பண்டாரசாத்திரம் முதல் தொகுதி | ,, |
| 161. | நல்வழி | ,, |
| 162. | சுவாமிநாதன் பிரபாவம் | ,, |
| 163. | திருந்துதேவன்குடித் திருப்பதிகம் | ,, |
| 164. | இன்பம் | ,, |
| 165. | அறுபத்துமூவர் | ,, |
| 166. | திருவியலூர்த் திருப்பதிகம் | ,, |
| 167. | மெய்கண்ட நூற்பொருட் சிறப்பு | ,, |
| 168. | திருக்கொட்டையூர்த் திருப்பதிகம் | ,, |
| 169. | திருஇன்னம்பர் திருப்பதிகம் | ,, |
| 170. | பழநி ஸ்ரீ தண்டாயுதபாணித் தோத்திரங்கள் | ,, |
| 171. | 25-வது மகாசந்நிதானம் மூன்றாவதாண்டு ஆட்சி அறிக்கை | ,, |

| எண். | | வருஷம். |
|---|---|---|
| 172. | திருப்பாதிரிப்புலியூர்த் திருப்பதிகம் | 1948 |
| 173. | திருப்புறம்பயத் திருப்பதிகம் | ,, |
| 174. | திருவிசயமங்கைத் திருப்பதிகம் | ,, |
| 175. | சைவத் திருமுறைகள் வசன நூல் | ,, |
| 176. | அமைதி | ,, |
| 177. | திருவைகாவூர்த் திருப்பதிகம் | ,, |
| 178. | திருச்சிவபுரத் திருப்பதிகம் | ,, |
| 179. | மதுரைத் திருப்பதிகம் தலவரலாற்றுடன் | ,, |
| 180. | திருப்பரங்குன்றத் திருப்பதிகம் | ,, |
| 181. | திருவடகுரங்காடுதுறைத் திருப்பதிகம் | ,, |
| 182. | திருப்பழனத் திருப்பதிகம் | 1949 |
| 183. | திருக்குறள் கதைக்ள் எண்பது | ,, |
| 184. | சிதம்பரம் பதிகங்களுடன் | ,, |
| 185. | திருப்பெரும்புலியூர்த் திருப்பதிகம் | ,, |
| 186. | 24-வது மகாசந்நிதானம் பத்தாண்டு விழா நிகழ்ச்சி | ,, |
| 187. | திருநெய்த்தானத் திருப்பதிகம் | ,, |
| 188. | திருக்கண்டியூர்த் திருப்பதிகம் | ,, |
| 189. | திருவாரூர் பதிகங்களுடன் ஆராய்ச்சிநூல் | ,, |
| 190. | திருவாலம்பொழில் திருப்பதிகம் | ,, |
| 191. | தாயுமானவர் மடல் குறிப்புரையுடன் | ,, |
| 192. | ஆதீனக்கோயில்கள் கல்வெட்டுக்களுடன் | ,, |
| 193. | திருத்தொண்டர் கீதம் | ,, |
| 194. | திருமழபாடித் திருப்பதிகங்கள் | ,, |
| 195. | திருமுருகாற்றுப்படையும் கோளறு திருப்பதிகமும் | ,, |
| 196. | ஆபதுத்தாரணர்மாலை அஷ்டோத்திர சததாமங்களுடன் | ,, |
| 197. | திருப்பழுவூர்த் திருப்பதிகம் | ,, |
| 198. | அபிராமி அந்தாதி மூலம் | ,, |
| 199. | திருக்கானூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 200. | திருஅன்பிலாலந்துறைத் திருப்பதிகம் | ,, |
| 201. | திருத்தினைநகர்த் திருப்பதிகம் | ,, |
| 202. | திருவாசகம் நூலாராய்ச்சி குறிப்புரைகளுடன் | ,, |
| 203. | தருமபுர ஆதீனப் பல்கலைக்கல்லூரி 3-வது ஆண்டு அறிக்கை | ,, |

| எண். | | வருஷம். |
|---|---|---|
| 204. | சிவாலய தத்துவமும் கும்பாபிஷேக மகத்துவமும் | 1949 |
| 205. | திருமாந்துறைத் திருப்பதிகம் | ,, |
| 206. | தருமபுர ஆதீனப் பிரசார அறிக்கை | ,, |
| 207. | வாரவழிபாடு | ,, |
| 208. | திருவானைக்காத் திருப்பதிகங்கள் | ,, |
| 209. | சைவம் : ஆங்கிலக் கட்டுரைகள் | ,, |
| 210. | திருவிடைமருதூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 211. | தமிழ் இசை | ,, |
| 212. | திருவாவடுதுறைத் திருப்பதிகங்கள் | ,, |
| 213. | திருவீழிமிழலைத் திருப்பதிகங்கள் | 1950 |
| 214. | சிவராஜ்யா : ஆங்கிலக் கட்டுரைகள் | ,, |
| 215. | திருச்செம்பொன்பள்ளித் திருப்பதிகம் | ,, |
| 216. | கும்பகோணம் திருப்பதிகங்களுடன் | ,, |
| 217. | திருவாரூர் மும்மணிக்கோவை C. K. C. விரிவுரையுடன் | ,, |
| 218. | திருக்கருகாவூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 219. | திருப்பாற்றுறைத் திருப்பதிகம் | ,, |
| 220. | முத்தமிழ் முழக்கம் : தமிழ்க்கட்டுரைகள் | ,, |
| 221. | திருப்பைஞ்ஞீலித் திருப்பதிகங்கள் | ,, |
| 222. | திருப்பாச்சிலாச்சிராமத் திருப்பதிகங்கள் | ,, |
| 223. | காசியாத்திரை | ,, |
| 224. | திருச்சிராப்பள்ளித் திருப்பதிகங்கள் | ,, |
| 225. | திருமூக்கீச்சரத் திருப்பதிகம் | ,, |
| 226. | திருஈங்கோய்மலைத் திருப்பதிகம் | ,, |
| 227. | திருவாட்போக்கித் திருப்பதிகம் | ,, |
| 228. | சைவத்தின் மறுமலர்ச்சி | ,, |
| 229. | திருக்கடம்பந்துறைத் திருப்பதிகம் | ,, |
| 230. | செந்தமிழ் முருகன் | ,, |
| 231. | திருப்பராய்த்துறைத் திருப்பதிகம் | ,, |
| 232. | 25-வது மகாசந்நிதானம் 4-வது ஆண்டு ஆட்சி அறிக்கை | ,, |
| 233. | திருக்கற்குடித் திருப்பதிகங்கள் | ,, |
| 234. | திருக்குறள்—அறத்துப்பால் உரைவளம் | ,, |
| 235. | திருஎறும்பியூர்த் திருப்பதிகங்கள் | ,, |

| எண். | | வருஷம். |
|---|---|---|
| 236. | 25-வது மகா சந்நிதானம் 5-வது ஆண்டு ஆட்சி அறிக்கை | 1950 |
| 237. | திருவெம்பாவையும் திருப்பள்ளியெழுச்சியும் | ,, |
| 238. | திருநெடுங்களத் திருப்பதிகம் | ,, |
| 239. | மேலைத் திருக்காட்டுப்பள்ளித் திருப்பதிகம் | 1951 |
| 240. | திருஇரும்பூளைத் திருப்பதிகம் | ,, |
| 241. | திருவேதிகுடித் திருப்பதிகங்கள் | ,, |
| 242. | திருத்தென்குடித்திட்டை திருப்பதிகம் | ,, |
| 243. | திருப்புள்ளமங்கைத் திருப்பதிகம் | ,, |
| 244. | திருக்கேதீச்சரம் : திருக்கோணமாமலைத் திருப்பதிகங்கள் | ,, |
| 245. | சச்சபுடவெண்பா (தாளசாத்திரம்) | ,, |
| 246. | திருச்சக்கரப்பள்ளித் திருப்பதிகம் | ,, |
| 247. | திருக்கோட்டூர்த் திருப்பதிகம் | ,, |
| 248. | திருப்பாலைத்துறைத் திருப்பதிகம் | ,, |
| 249. | தருமபுர ஆதீனம் 24-வது மகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக சுவாமிகள் மருத்துவ நிலயத் திறப்புவிழா நிகழ்ச்சி | ,, |
| 250. | அசபாநடனப் பதிகம் | ,, |
| 251. | திருச்சத்திமுற்றத் திருப்பதிகம் | ,, |
| 252. | திருப்பட்டீச்சரத் திருப்பதிகம் | ,, |
| 253. | திருச்சோற்றுத்துறைத் திருப்பதிகங்கள் | ,, |
| 254. | திருக்குறள் - பொருட்பால், உரைவளம் | ,, |
| 255. | திருஇராமேச்சரத் திருப்பதிகங்கள் | ,, |
| 256. | திருப்பூந்துருத்தித் திருப்பதிகள் | ,, |
| 257. | திருநாகேச்சரத் திருப்பதிகங்கள் | ,, |
| 258. | 25-வது மகா சந்நிதானம் 6-வது ஆண்டு ஆட்சி அறிக்கை | ,, |
| 259. | திருநல்லூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 260. | நித்தியபூசாலக்ஷண சங்கிரகம் | ,, |
| 261. | திருஆவூர்ப் பசுபதீச்சரத் திருப்பதிகம் | ,, |
| 262. | திருபழையாறைவடதளித் திருப்பதிகம் | 1952 |
| 263. | திருத்தென்குரங்காடுதுறைத் திருப்பதிகங்கள் | ,, |
| 264. | திருநீலக்குடித் திருப்பதிகம் | ,, |
| 265. | திருஞானசம்பந்தர் அற்புதங்கள் அஷ்டோத்திரங்களுடன் | ,, |

| எண். | | வருஷம் |
|---|---|---|
| 266. | திருவைகன்மாடக்கோயில் திருப்பதிகம் | 1952 |
| 267. | திருநல்லம் திருப்பதிகம் | ,, |
| 268. | திருக்குறள் — காமத்துப்பால் உரைவளம் | ,, |
| 269. | திருவழுந்தூர்த் திருப்பதிகம் | ,, |
| 270. | திருக்கோழம்பத் திருப்பதிகம் | ,, |
| 271. | இராமேசுவர யாத்திரை | ,, |
| 272. | திருநனிபள்ளித் திருப்பதிகம் | ,, |
| 273. | தேவிமான்மியம் | ,, |
| 274. | ஆதீனப் பிரசார அறிக்கை | ,, |
| 275. | திருவலம்புரத் திருப்பதிகம் | ,, |
| 276. | சிவஞானசித்தியார் சுபக்கம் (மூலம்) | ,, |
| 277. | திருத்தலைச்செங்காட்டுத் திருப்பதிகம் | ,, |
| 278. | திருவேட்டக்குடித் திருப்பதிகம் | ,, |
| 279. | திருக்கோட்டாற்றுத் திருப்பதிகம் | ,, |
| 280. | திருஅம்பர்பெருந்திருக்கோயில் திருப்பதிகம் | ,, |
| 281. | திருஅம்பர்மாகாளத் திருப்பதிகம் | ,, |
| 282. | திருமீயச்சூர்த் திருப்பதிகம் | ,, |
| 283. | திருமீயச்சூர்இளங்கோயில் திருப்பதிகங்கள் | ,, |
| 284. | 25-வது மகாசந்நிதானம் 7-வது ஆண்டு ஆட்சி அறிக்கை | ,, |
| 285. | திருத்திலதைப்பதித் திருப்பதிகம் | ,, |
| 286. | திருக்கருப்பறியலூர்த் தலபுராணச் சுருக்கம் | ,, |
| 287. | திருத்தெளிச்சேரித் திருப்பதிகம் | ,, |
| 288. | வேளூர் தேவஸ்தான அறிக்கை | ,, |
| 289. | திருப்பாம்புரத் திருப்பதிகம் | ,, |
| 290. | திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம் (முதல் திருமுறை) குறிப்புரையுடன் | 1953 |
| 291. | திருச்சிறுகுடித் திருப்பதிகம் | ,, |



# தருமபுர ஆதீனம்

## இயற்றிவரும் பணிகள்

1. தேவார பாடசாலை நிறுவித் தெய்வத் தமிழ் வளர்ப்பது.

2. சிவாகம பாடசாலை வைத்துத் திருக்கோயில் பூசை முறைகளைப் பயிற்றுவிப்பது.

3. சிவஞான நூல்களைத் தெளிவுற அச்சிட்டு வழங்குவது.

4. சமய நுணுக்கங்களை நூல்களாக வெளியிடுவது.

5. தலங்கள்தோறும் திருப்பதிகங்கள் உரையுடன் வெளியிடுவது.

6. அறிஞரைக்கொண்டு ஆலயம்தோறும் அறவுரை வழங்குவது.

7. பிரசார வாகனத்தின் மூலம் தமிழ்நாடெங்கும் சமயம் வளர்ப்பது.

8. ஆங்கிலக் கலாசாலையில் தமிழ்ப்பரிசு அமைப்பது.

9. ஆதீனக் கோயில்தோறும் பண்ணிசைத் தமிழ் வளர்ப்பது.

10. தமிழ்க் கல்லூரி நிறுவி வித்துவான் தேர்விற்கு அனுப்புவது.

11. வடமொழிக்கல்லூரிநிறுவி சிரோமணித்தேர்விற்கு அனுப்புவது.

12. ஏழிசையும் இனிதோங்க இசைப்பிரிவு அமைப்பது.

13. நூல் ஆராய்ச்சிகள் எழுதுவித்து வழங்குவது.

14. விஞ்ஞான மெய்ஞ்ஞான நூல்களை வெளியிட்டு வழங்குவது.

15. சமய நூல்களைத் தக்கமுறையில் வெளியிடுவது.

16. "ஞானசம்பந்தம்" என்னும் மாதப் பத்திரிகை வாயிலாகச் சமய உண்மைகளை அறிவுறுத்துவது.

17. சமயக் கூட்டங்களுக்குத் தக்கன செய்வது.

18. தமிழ்ப்பணி சமயப்பணி செய்பவர்க்கு உதவுவது.

19. தமிழ்நாட்டுத் தல வரலாறுகளை எழுதுவித்து வழங்குவது.

20. புத்தகசாலை அமைத்துப் பழந்தமிழ் நூல்களைப் பாதுகாப்பது.

21. நாடோறும் ஹரிஜன மாணவர்களுக்கு அன்னம் அளிப்பது.

22. பொருளும் புத்தகமும் அளித்து ஏழை மாணவர்களுக்கு உதவுவது.

23. மாயூரத்தில் பிரசவ ஆஸ்பத்திரி கட்டி உதவியது.

24. குடிமக்கட்கு அடிக்கடி எண்ணெய் முழுக்கும் அன்னமும் அளித்துவருவது.

25. காந்தி நிதி, ஹரிஜன பண்டு, அகதிகள் நிவாரண நிதி, காசநோய் ஆஸ்பத்திரி உதவிநிதி முதலிய பற்பல பொது ஸ்தாபனங்கட்குப் பெருந்தொகை அளிப்பது முதலியன.



26. கூட்டுறவுப் பண்டகசாலை அமைத்தது.

27. ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்நிலைத் தொடக்கப் பள்ளி அமைத்து அறிவுப்பணி செய்தல்.

28. அரசாங்கத்தாரின் புதிய கல்வித் திட்டத்தின்படி ஓரியண்டல் ஹைஸ்கூல் அமைத்தது.

29. இலவச இசைக் கல்லூரி அமைத்து, சென்னைப் பல்கலைக் கழகம் நடத்தும் (Diplomo) தேர்விற்கு அனுப்புவது.

30. இடங்கள்தோறும் திருநெறிய தெய்வத் தமிழ் மாநாட்டை நடத்திவருவது.

31. ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்தசுவாமிகள் திருவிழாவில் எல்லாச் சமயதத்துவங்களையும் எல்லோரும் எளிதில் உணர (Religious Congress) சமய மாநாடு நடத்துவது.

32. சேரிகளிலும், கிராமங்களிலும் சமயப்பிரசாரம் செய்வது. (Intensive Programme).

33. அனாதைச் சிறுவர்களுக்கு விடுதி அமைத்துப் பாதுகாத்துவருதல்.

---

## இந்நூல் கிடைக்குமிடம் :—

1. ஷராப்,

   தருமபுர ஆதீனம், தருமபுரம், மாயூரம்.

2. டிரஷரர்,

   வேளூர் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானம்.
   வைத்தீசுவரன்கோயில்.

3. ஷராப்,

   ஸ்ரீ சட்டைநாதசுவாமி தேவஸ்தானம்,
   சீகாழி.

4. ஷராப்,

   ஸ்ரீ அருணஜடேசுவரசுவாமி தேவஸ்தானம்,
   திருப்பனந்தாள்.

5. ஷராப்,

   ஸ்ரீ கம்பகரேசுவரசுவாமி தேவஸ்தானம்,
   திருபுவனம், திருவிடைமருதூர் போஸ்ட்.

6. ஷராப்,

   ஸ்ரீ பஞ்சநதீசுவரசுவாமி தேவஸ்தானம்,
   திருவையாறு.

### விலை விபரம் :—

| | | | |
|---|---|---|---|
| **ராப்பர் பைண்டு** | ரூ. | 3- | -0 |
| *ரிஜிஸ்டர் தபாற்செலவு வகையரா* | | 1 | - |
| **காலிகோ பைண்டு** | | | - |
| *ரிஜிஸ்டர் தபாற்செலவு வகையரா* | | | - |